# சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு வரலாறு (1881-1930)

முனைவர் பட்டத்திற்காக
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பட்ட ஆய்வேடு

ஆய்வாளர்
**ம. பிரபாகரன்,** எம்.ஏ., எம்.ஃபில்.

ஆய்வு நெறியாளர்
**பேரா. முனைவர் பு. ஜார்ஜ்**




**தமிழ்த்துறை**
**சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)**
**தாம்பரம் (கிழக்கு), சென்னை – 600 059.**

**நவம்பர் – 2012**

**முனைவர் பு. ஜார்ஜ்**
இணைப்பேராசிரியர்
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)
தாம்பரம் (கிழக்கு)
சென்னை – 600 059

# நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு வரலாறு (1881-1930)** என்னும் தலைப்பிலான இந்த ஆய்வு சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டம்பெறுவதற்காக என் மேற்பார்வையில் சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் ஆராய்ச்சி மாணவர் **திரு. ம. பிரபாகரன்** அவர்கள் 2009 முதல் 2012 வரையான காலகட்டத்தில் நிகழ்த்தியதாகும். இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு பட்டத்திற்கோ, ஆய்வு அரங்கிற்கோ வழங்கப் பெறவில்லை என்பதற்கும், இது இவருடைய சொந்த முயற்சியின் பயன் என்பதற்கும் சான்று அளிக்கிறேன்.

இடம்: சென்னை–59.
நாள்: 12.11.2012

**(பு. ஜார்ஜ்)**
நெறியாளர்

**ம. பிரபாகரன்,** எம்.ஏ., எம்.ஃபில்
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)
தாம்பரம் (கிழக்கு)
சென்னை – 600 059

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு வரலாறு (1881-1930)** என்னும் தலைப்பில் பேரா. முனைவர் **பு. ஜார்ஜ்** அவர்களின் மேற்பார்வையில் முனைவர் **(பிஎச்.டி.)** பட்டத்திற்காக எழுதப் பெற்ற இந்த ஆய்வேடு என் உழைப்பில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு எங்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை–59.
நாள்: 12.11.2012

**(ம. பிரபாகரன்)**
ஆய்வாளர்

# நன்றியுரை

1858 முதல் தமிழகத்தின் கல்வி வளர்ச்சியிலும் இந்தியாவின் கல்வி வளர்ச்சியிலும் பெரும் பங்காற்றி வரும் சென்னைப் பல்கலைக் கழகத்தின் கீழ் இம் முனைவர் பட்ட ஆய்வினைச் செய்ததில் மகிழ்வும் அனுமதி அளித்தமைக்கு நன்றிகளும். 1837இல் தொடங்கப்பட்டு இன்று வரையிலும் இயற்கை அழகையும் கல்வியால் எழும் மானுட சமூக அழகையும் பாதுகாத்து வளர்த்தெடுத்து வரும் தமிழகத்தின் வனக் கல்லூரியான சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறையில் இவ்வாய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்து நேரம் வாய்க்கும்பொழுதெல்லாம் ஊக்கப்படுத்தும் துறைத் தலைவர் **பேராசிரியர் முனைவர் மோசசு மைக்கேல் பாரடே** அவர்களுக்கு நன்றி.

2009 ஆகஸ்ட் முதல் என்னை ஆய்வு மாணவராக ஏற்று என் ஆர்வத்தின் வழியில் சுதந்திரமாகச் செல்ல அனுமதித்ததோடு, இவ்வாய்வு செம்மையுற எப்பொழுது ஆலோசனைக் கேட்டாலும் அப்பொழு தெல்லாம் தமிழ்த்துறைக்கும் வீட்டிற்கும் அழைத்துக் கலந்துரையாடி ஆய்வை வளர்த்தெடுத்த நெறியாளர் **பேராசிரியர் முனைவர் பு. ஜார்ஜ்** அவர்களுக்கும், அவரின் வீட்டிற்குச் செல்லும்பொழுதெல்லாம் அன்புடன் வரவேற்ற அவரின் குடும்பத்தினருக்கும் நன்றிகள்.

நெறியாளர் குழுவிலிருந்து, ஆய்வுச் செம்மையுற ஆலோசனைகள் வழங்கிய மாநிலக் கல்லூரி **பேரா. முனைவர் இரா. சீனிவாசன்** அவர்களுக்கும் தொலைபேசியில் தொடர்பு கொள்ளும் பொழுதெல்லாம்

ஆய்வை விரைந்து முடிக்குமாறு அன்பு செய்த **பேரா. மா.இரா. அரசு** அவர்களுக்கும் **பேரா. முனைவர் அமைதி அரசு** அவர்களுக்கும் **பேரா. முனைவர் க. ஜெயபாலன்** அவர்களுக்கும் **பேரா. முனைவர் அண்ணாதுரை** அவர்களுக்கும் நன்றிகள்.

ஆர்வத்தோடு அன்பு செய்து ஊக்கப்படுத்தும் சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் வணக்கங்களும் நன்றிகளும். ஆய்வு குறித்து அவ்வப்போது அன்புடன் விசாரித்த **பேரா. முனைவர் கு. அரசேந்திரன்** அவர்களுக்கும் **பேரா. முனைவர் சா. பாலுசாமி** அவர்களுக்கும் **பேரா. முனைவர் ப. டேவிட் பிரபாகர்** அவர்களுக்கும் என் நன்றிகள்.

பச்சையப்பன் கல்லூரியில் பயின்ற காலத்தில் என்மேல் அன்பு கொண்டு என் வளர்ச்சியில் அக்கறைக்காட்டி என்னைச் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் முனைவர் பட்டத்தைச் செய்யுமாறு திசைகாட்டிய **பேரா. புனிதவதி அம்மா** அவர்களுக்கும் அவரின் குடும்பத்தினருக்கும் நன்றிகள்.

இவ்வாய்வினைத் தொடங்கிய காலம் முதல் தேவையான தரவுகளைக் கண்டெடுத்ததில் பெரிதும் துணைபுரிந்து உதவிய **ஊ.வே. சாமிநாதையர் நூலகம், மறைமலை அடிகள் நூல்நிலையம், ரோஜாமுத்தையா ஆராய்ச்சி நூலகம், கன்னிமாரா நூலகம், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன நூலகம், அசோக்நகர் வட்டார நூலகம், அண்ணா நூற்றாண்டு நூலகம்** முதலிய நூலகங்களுக்கும் அவற்றில் பணிபுரியும் பெரியோர்களுக்கும் நன்றிகள்.

என்னுடைய பிஞ்சுகள் நாவலுக்கு அணிந்துரை எழுதியதோடு என்னுடைய வளர்ச்சியில் கவனம் செலுத்திவரும் செம்மொழி மத்திய நிறுவனத்தின் நூலகப் பொறுப்பாளர், **ஆய்வறிஞர் கு. சிவமணி** அவர்கள் என் ஆய்வேட்டின் மதிப்பீட்டுரையைப் படித்துப் பார்த்ததோடு நூலகத்தில்

கிடைக்கப்பெறும் சங்க இலக்கிய முதற் பதிப்புகளைப் பார்வையிடவும் புகைப்படம் எடுத்துக் கொள்ளவும் அனுமதியளித்து அன்பு செய்து பாராட்டினார். அவரின் நல் உள்ளத்திற்கு நன்றி. ஆய்வு முற்றுப்பெறும் நிலையில் தொலைப்பேசியின் வாயிலாக சில ஐயங்களைத் தெளிவுபடுத்திய **ஆய்வறிஞர் ப. மருதநாயகம்** அவர்களுக்கும் **புதுவை இராமசாமி** அவர்களுக்கும் **பேரா. முனைவர் ர. கண்ணன்** அவர்களுக்கும் நன்றிகள்.

இவ்வாய்வை செம்மையாக முடிக்க ஆர்வம் செய்யும் என் அன்பிற்கினிய நண்பர்களான **சி. இராமச்சந்திரன், பாவை இளங்கோ, கா. சின்னதுரை, கே. ஸ்ரீதர்** ஆகியோருக்கும், கிடைக்கப்பெற்ற முகப்புப் பக்கங்களையும் கட்டுரைகளையும் புகைப்படம் எடுத்துத்தந்த பள்ளிக்கூடத்து நண்பன் **வே. மனோஜ் குமாருக்கும்** நன்றிகள்.

என்னை இத்தனை தூரம் கல்வி பயில வைத்து கடமை புரிந்த என் உயிரின் உயிர்களான **பெற்றோர்களுக்கும் சகோதரிகளான ம. பிரமிளாமனோ, ம. பிரியாஸ்ரீதர், ம. பிரியதர்ஷினி, ம. பிரேமா** ஆகியோருக்கும் நன்றிகள்.

இவ்வாய்வேட்டினைத் தக்க முறையிலும் குறித்த நேரத்திலும் அச்சாக்கம் செய்து தந்த **டுடே கிராபிக்ஸ் நிறுவனர்,** என் இனிய நண்பர் **திருமிகு ரெ. பாபு** அவர்களுக்கும் அச்சாக்கப் பணியாளர்களுக்கும் நன்றிகள்.

# உள்ளடக்கம்

இந்திய மொழிகளிலும் உலக மொழிகளிலும் இலக்கியச் செழுமையோடு இலக்கண வளமையும் அமையப்பெற்று முழுமையுற்ற மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்றாகும். இத்தகைய மொழியின் தொடக்க இலக்கியங்களாகக் கிடைக்கப் பெற்றவை சங்க இலக்கிய நூல்கள். இந்நூல்களைப் பற்றிய ஆய்வுகளில் கி.பி.1881–க்கும் கி.பி.1930–க்கும் இடைப்பட்ட கால கட்டத்தில் நிகழ்ந்துள்ளவை குறிப்பிடத்தக்கவையாக உள்ளன. இவற்றின் விளைவாகவே தமிழ் இலக்கியங்களின் முறைப்படுத்தப்பட்ட முதல் இலக்கிய வரலாறு கி.பி.1930இல் கா.சு. பிள்ளையால் எழுதப்பட்டுள்ளது. மேற்குறிப்பிட்ட கால இடைவெளியில் நிகழ்த்தப்பட்ட சங்க இலக்கியம் குறித்த வரையறை மற்றும் கால ஆய்வுகள் இங்கு ஆய்வுப் பொருண்மைகளாக அமைகின்றன.

## ஆய்வு நோக்கம்

'பாட்டும் தொகையும்' என்று குறிக்கப்படும் சங்க இலக்கிய நூல்களைப் பதிப்பிக்கத் தொடங்கிய காலந்தொட்டே அவற்றைப் பல்வேறு அறிஞர்கள் படித்தும் புதுப்புது அணுகுமுறைகளில் ஆராய்ந்தும் வந்துள்ளனர். இத்தகைய ஆராய்ச்சியின் விளைவாய் அவற்றின் உரையும் பதிப்பும் பாட்டுகளின் கருத்துகளும் அக்கருத்துகளின் வழித் தமிழ்ச் சமுதாயத்தின் மரபும் நாகரிகத் தொன்மையும் வரலாறும் அறியப்பட்டன. இத்தன்மையின் இன்னுமொரு பரிமாணமாக இவ்விலக்கியங்களின் கால கட்டம் சார்ந்தும் ஆராயத் தொடங்கிய அறிஞர்கள் தத்தமக்குத் தெரியவந்த ஆய்வு முடிவுகளின் அடிப்படையில் சங்க நூல்களின் காலங்களை வரையறை செய்தனர்.

இவ்வரையறையில் பலவிதமான ஐயங்களும் விவாதங்களும் நிகழ்ந்த வண்ணமிருக்கின்றன.

சங்க நூல்களை ஆய்வு செய்த பலரும் பதிப்பிலும் உரையிலும் நூல்களின் வழி பாடபேத முறையிலும் கவனம் செலுத்திய அளவுக்குக் கால ஆராய்ச்சி வரலாற்றில் கவனம் செலுத்தவில்லை. சங்க நூல்களின் கால

ஆய்வும் வரையறையும் அந்நூல்களைப் பற்றின முழுப்புரிதலுக்கு இட்டுச் செல்வதோடு அப்புரிதலின் வழி அன்றைய காலத்துப் புலவர்களின் உள்ளத்து உணர்வுகளையும் சமுதாய நிலையினையும் தெரிந்து கொள்ளும் வகையில் முக்கியத்துவமடைகின்றன. இத்தனை முக்கியத்துவம் வாய்ந்த கால ஆய்வில் பலவிதமான முடிவுகளும் முரண்களும் நிலவுகின்றன.இவற்றுக்கான காரணங்களும் இக்காலகட்ட வரையறை முடிவுகளும் முடிவுகளுக்கான பின்புலங்களும் புரிந்து கொள்ளப்பட வேண்டிய அவசியத்தை நோக்கமாகக் கொண்டே இந்த ஆய்வு அமைந்துள்ளது.

### ஆய்வு எல்லை

கி.பி. **1881**–க்கும் **1930**–க்கும் இடைப்பட்ட கால கட்டத்தில் தமிழில் நிகழ்த்தப்பட்ட சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு வரலாற்றை ஆய்வதே ஆய்வின் எல்லையாக அமைகிறது.

### ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் வரலாற்று அணுகுமுறையில் சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வாளர்களின் பொருண்மைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

### ஆய்வுப் பகுப்பு

முன்னுரை, மதிப்பீட்டுரை நீங்கலாக, பின்வரும் இரண்டு இயல்களாக இவ்வாய்வு பகுக்கப்பட்டுள்ளது.

இயல் – ஒன்று: **சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வின் தொடக்க நிலை**

இயல் – இரண்டு: **சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுப் போக்குகள்**

## இயல் - ஒன்று : சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வின் தொடக்க நிலை

சங்க இலக்கியங்களின் வரையறையும் சங்க காலம் பற்றிய ஆய்வும் எக்காலத்தில் தொடங்கப்பட்டனவென்பதோடு, இத்தகைய சிந்தனைக்கான ஊற்று எப்படிப்பட்ட காலச்சூழலில் நிகழ்ந்தது? இம்முயற்சியில் ஈடுபட்ட அறிஞர்கள் யாவர்? பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்கு முன்பிருந்த சங்க இலக்கிய வரையறை மற்றும் காலப்புரிதல் எத்தகையன? முதலியவற்றை கவனத்திற்கொள்ளும் விதத்தில் அறிமுகவுரை அமைகிறது.

சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுக் கட்டமைப்பு என்பது இறையனார் அகப்பொருளுரையின் வழியே வெளிப்படுகிறது. இதனை மூலமாகக் கொண்டு ஆய்வைத் தொடங்கும் சி.வை.தாமோதரம் பிள்ளை அவ்வுரையினை உரக்கச்சொல்லி தமிழ் உலகத்திற்குச் சங்கத்தின் காலம்பற்றியும் சங்க இலக்கிய வரையறை குறித்தும் உணர்த்தத் தலைப்படுகிறார். சி.வை.தாமோதரம்பிள்ளையை அடியொற்றியே செயல்படத் தொடங்கும் ஆய்வாளர்கள் ஒரு புறம் செயல்பட்டுக் கொண்டிருந்தபோதே அவ்வாய்வினைக் கவனத்திற்குட்படுத்தும் வி.கனகசபைப்பிள்ளை வரலாற்று நூல்களின் வழி சங்க காலத்தை அடையாளம் காண்கிறார். இவ்விருவேறு நிலைகளிலிருந்து முற்றிலும் விலகி நிற்கும் து.அ.கோபிநாதராவ் தமிழ் வரிவடிவத்தின் வாயிலாகத் தமிழின் தொன்மைக்காலத்தை வெளிப் படுத்துகிறார். இவ்விருவகை ஆய்வுத் தளங்களே தொன்ம அடிப்படையிலான ஆய்வு என்றும் வரலாற்று அடிப்படையிலான ஆய்வு என்றும் அணுகப்பட்டுள்ளன.

## இயல் - இரண்டு : சங்க இலக்கிய கால மற்றும் வரையறை போக்குகள்

சங்க இலக்கியங்களின் வரையறையிலும், சங்க காலம் பற்றிய புரிதலிலும் நிகழ்ந்த ஆய்வுப் போக்குகளைத் தொட்டுக்காட்டுவதோடு தொன்ம அடிப்படையிலான சங்க கால ஆய்வுப் புரிதலிலிருந்து வரலாற்று அணுகுமுறைக்கும் வரலாற்று அணுகுமுறையிலிருந்து மீண்டும் தொன்ம அணுகுமுறைக்கும் ஆய்வாளர்கள் சென்ற போக்கினை இவ்விடத்து அறிமுகவுரை எடுத்துரைக்கிறது.

தொன்ம நம்பிக்கையின் அடிப்படையில் வரலாற்று ஆதார ஆய்வுகளின் மறுப்புப் போக்கும் வரலாற்று ஆதாரங்களின் அடிப்படையில் தொன்மப் புரிதலைக் கேள்விக்குட்படுத்தும் நோக்கும் சங்க இலக்கிய வரையறையும் கால ஆய்வும் தொடங்கிய நாள் தொட்டே நிகழ்ந்துள்ளன. இவற்றில் தொன்ம ஆய்வாளர்களின் கருத்துக்களை வரலாற்று ஆய்வாளர்களோ வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துக்களை தொன்ம ஆய்வாளர்களோ நேரடியாகச் சுட்டிக்காட்டி மறுக்கும் போக்கு தொடக்க காலத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் நிகழ்ந்திருக்கின்றன. கி.பி. 1908 முதல் கி.பி. 1930 வரையிலும் வரலாற்று ஆய்வார்கள் ஒரு திசையிலும் தொன்ம ஆய்வாளர்கள் ஒரு திசையிலும் தத்தமக்குத் தெரியவந்த ஆய்வுகளின் அடிப்படையில் தத்தமது கருத்துக்களைத் தெரிவித்து வந்தவண்ணம் இருந்துள்ளனர். இத்தகைய போக்குகளின் தரவுகளையும் அவற்றின் தன்மைகளையும் ஆய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

## மதிப்பீடு

கி.பி. 1856இல் கால்டுவெல்லின் மூலம் சற்று அழுத்தமாகக் கவனம் செலுத்தப்பட்ட தமிழ் மொழியின், தமிழ் நூல்களின் ஆய்வு கி.பி. 1881இல் சி.வை. தாமோதரம் பிள்ளை மூலம் தமிழ் இலக்கிய வரலாறு கட்டமைப்பின் வாயிலாக முன்னெடுக்கப்படுகிறது. சி.வை.தாவிடமிருந்து தொடங்கிப் பெரிதும் கவனம் செலுத்தப்படும் சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுச் சிந்தனை கி.பி. 1930இல் கா. சுப்பிரமணியப்பிள்ளை எழுதும் இலக்கிய வரலாறு முயற்சி வரையில் பல்வேறு அறிஞர்களால் இருவேறு கோணங்களில் அணுகப்பட்டுள்ளது. கி.பி. 1881 முதல் 1930 வரையில் தமிழ் அறிஞர்களுக்குள் நிகழ்ந்த சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுப் போக்குகளில் மிக முக்கியத்துவம் வாய்ந்த ஆய்வினைச் செய்துள்ள அறிஞர்களையும் அவர்களின் ஆய்வுத் தரவுகளின் தன்மைகளையும் உற்று நோக்கும் வகையில் மதிப்பீட்டுரை அமைகிறது.

## ஆதாரப்பட்டியல்

சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுப் பொருண்மையில் தமிழ் இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள் மற்றும் நூல்கள் ஆகியன முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டன.

இவ்வாய்விற்குப் பயன்பட்ட பிற நூல்கள் துணைமை ஆதாரங்களாகத் தரப்பட்டுள்ளன.

## பின்னிணைப்புகள்

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட இதழ்கள், நூல்கள் ஆகியவற்றில் கிடைக்கப்பெற்றவைகளின் முகப்புப் பக்கங்களும் இன்றியமையாத சில கட்டுரைகளும் பின்னிணைப்புகளாகத் தரப்பட்டுள்ளன.

### 1.1.தொன்ம அடிப்படையிலான வரையறையும் கால ஆய்வின் தொடக்கமும்

1.1.1.இறையனார் தொன்மம் வழி சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு

1.1.1.1.சி.வை. தாமோதரப்பிள்ளையும் இலக்கிய வரலாறு கட்டமைப்பும்

1.1.1.1.1.தமிழ் இலக்கியங்களின் தொடக்க காலமென்னும் அபோத காலம்

1.1.1.1.2.அகத்தியம் நிறைவேறிய காலமென்னும் அக்ஷர காலம்

1.1.1.1.3.சங்க காலத்தின் இலக்கண காலம்

1.1.1.1.4.மதுரை தமிழ்ச் சங்கத்தாரின் சமுதாய காலம்

1.1.1.1.1.5.அநாதர காலமென்னும் களப்பிரர் காலம்

1.1.1.1.1.6.சங்க கால சமணர் காலம்

1.1.1.2.வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியாரின் தொன்மப் புரிதலின்வழி உயர்தனிச் செம்மொழி

1.1.1.2.1.தமிழ்மொழி வரலாற்றுச் சிந்தனையும் சங்க கால புரிதலும்

1.1.1.3.இரா. இராகவையங்காரின் முச்சங்கப்புரிதல்

1.1.1.3.1.சங்க காலப் பெண்பாற்புலவர்களும் கால ஆய்வும்

1.1.1.3.2.நல்லிசைப் புலமை மெல்லியலார்களும் அவர்களின் காலவரையறையும்

1.1.1.4.வா. குலாம் காதிறு நாவலரின் சங்கம் பற்றிய புரிதல்

கி.பி.1856 இல் இராபர்ட் கால்டுவெல் என்னும் ஐரோப்பிய அறிஞர் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (A Comparative Study of Dravidian Language) என்னும் நூல், தமிழிலக்கிய இலக்கண ஆராய்ச்சி உலகத்தில் ஓர் மைல்கல்லாக இருப்பதைக் காண்கிறோம். இந்நூல் இந்திய வரலாற்றில் தென்னிந்தியப் பகுதியைக் கவனத்திற்குள்ளாக்கியதோடு, இத்திசையில் நிலவிவந்த மொழிகளுக்கெல்லாம் தொன்மை வாய்ந்த மூலமொழியாகத் தமிழ் மொழி இருந்து வருகிறது என்ற பேருண்மையையும் அறிஞர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தது. இத்தகைய ஒரு செயல்பாட்டின் மூலமாக சமஸ்கிருத மொழிக்கு நிகரானதொரு மொழி, தமிழ் மொழி என்ற சிந்தனையும் முதன் முதலாகத் தொடங்கி வைக்கப்பட்டது. இச்சிந்தனையின் ஊற்று. தமிழ் இலக்கியங்கள் சுவடியிருந்து தாளுக்குப் பதிப்பிக்கப்படாததோர் காலகட்டத்தில் நிகழ்ந்ததென்பதை அறியும் பொழுது, கால்டுவெல்லின் உண்மை கண்டறியும் போக்கும் அறிவுத்தளமும் விளங்க வருகிறது. ஆயினும் போதியத் தரவுகள் இன்றி ஆய்வினை மேற் கொண்டதாலும், தொன்மையான இலக்கண இலக்கியச் சான்றுகளைக் கண்டெடுக்காத நிலையில் தமிழ் இலக்கியங்கள் குறித்த கால கட்டமைப்பைச் செய்ததாலும் கி.பி.7 ஆம் நூற்றாண்டுக்கு முன் தமிழின் தொன்மை வாய்ந்த இலக்கிய இலக்கண உருவாக்கங்கள் நடைப்பெற்றிருக்க முடியாதென்ற பிழையான முடிவினை வலியுறுத்தியிருப்பதையும் பார்க்கிறோம். இப்பிழை, தமிழ் இலக்கண இலக்கியங்கள் பதிப்பாகாததோர் கால கட்டத்தில் நிகழ்ந்ததால் ஏற்கத்தக்கதே. எனினும் கிடைக்கப்பெற்றத் தரவுகளின் அடிப்படையில் தென்னிந்திய மொழிகளிலேயே தொன்மைமிக்கதும், வட இந்திய மொழிகளிலிருந்து பிரிந்து நின்று தனித்த மரபுகொண்டதுமாக இருக்கின்ற புரிதலை நிகழ்த்திப் போயிருப்பது தமிழ் மொழிக்கு இயல்பாய் அமைந்திருந்த நிலையைக் காட்டுவதாக உணர்கிறோம். இவ்வாய்வினை அடுத்து தமிழ் இலக்கியங்களின் காலப்புரிதலுக்கு முயன்ற முதல் தமிழ் முயற்சியாகக் கிடைக்கப்பெறுவது சி.வை.தாமோதரம் பிள்ளை என்பவரின் பதிப்புரையாகும். தமிழிலக்கியப் பதிப்பு வரலாறு கி.பி.1812 இல்

திருக்குறளினையும் நாலடியாரையும் பதிப்பித்ததன் வாயிலாகத் தொடங்குகின்றது. அதனையொட்டியே பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் சில பதிப்பிக்கபட்டவுடன் தொல்காப்பியம், சங்க இலக்கிய நூல்கள் என அடுத்தடுத்து பல்வேறு அறிஞர் பெருமக்களின் அரும்பெரும்முயற்சியினால் பதிப்பு முன்னெடுக்கப்படுகிறது.

தமிழ் இலக்கிய உரை வரலாறு கி.பி.8 ஆம் நூற்றாண்டில் எழுத்துப் பூர்வமான தொடக்கத்தை எடுத்துக் கொண்டதன் அடுத்த கட்டமாய், நூலாசிரியர்கள் தாம் இயற்றிய பாடல்களின் காலத்தை மன்னர்களின் பெயரைக் குறிப்பிடுவதன் மூலமே தெரிந்தும் தெரிவித்தும் சென்றுள்ளனர். எனவே, அக்காலத்தில் இன்றைக்கு இருக்கும் தன்மையில் காலக்கணிப்பைக் குறித்துவைக்க வேண்டிய கட்டாயமும் இல்லாதிருந்தது. அத்தகைய நிலையே தொடர்ச்சியாக இயங்கி வந்துள்ளதென்பதைத் தமிழ் பரப்பின் வரலாற்றுப்புரிதல் மெய்ப்பிக்கிறது. இதன் தொடர்ச்சியாகவே சங்கம் மருவிய காலத்தையும், பக்தி இலக்கிய காலத்தையும் காண்கிறோம். இலக்கிய ஆய்வில் நிகழ்ந்த சங்க காலம் குறித்தப் புரிதலை நோக்கி இனி தொழில் புரிவோம்.

## 1.1. தொன்ம அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறையும் கால ஆய்வின் தொடக்கமும்

தமிழ் இலக்கிய வடிவங்கள் உரைவடிவங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டிய கால நெருக்கடி, கி.பி.8ம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகச் சொல்லப்படும் இறையனார் அகப்பொருளுரையின் மூலமாகத் தெரியவருகிறது. இத்தகையதோர் காலச் சூழலிலும் தமிழ் இலக்கியங்களின் காலம் குறித்த தெளிவானதோர் பார்வை ஏற்படவில்லை. உரையாசிரியர்கள் மூலப்பிரதிகளின் சொல்லுக்குச் சொல்லும் எழுத்துக்கு எழுத்தும் ஆராய்ந்துப் பொருள் உரைப்பதையே தன் கடனாகக் கொண்டார்களேயொழிய அந்நூல்களின் காலம் குறித்தோ அப்பாடல்கள் எழுதிய புலவர்களின் காலம் குறித்தோ யாதொரு கவனமும் செலுத்த வேண்டிய தேவையின்மையை வெளிப்படுத்தியுள்ளதைப் பார்க்கிறோம். கி.பி.15, 16 ஆம் நூற்றாண்டில் விஜயநகர நாயக்க மன்னர்களின் காலமும் திப்பு சுல்தானியர்களின் காலமும் ஐரோப்பியர்களின் வருகையோடு மெல்ல முடிவெய்துகின்றன. கி.பி.16, 17 ஆம் நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்கும், ஐரோப்பிய பாதிரிமார்களும், அவர்களை ஒட்டி வந்த கிழக்கிந்திய கம்பெனிகளும், அவற்றின் ஊடாக வரத்தொடங்கிய நவீனகால சூழலின் வருகையும் அச்சுக் கலையைத் தோற்றி வைக்கின்றன. ஓலைச் சுவடிகளில் ஒரு குறிப்பிட்டசாரார்கள் மட்டுமே கற்றும் கற்பித்தும் வந்தநிலை, அச்சு இயந்திரத்தின் வாயிலாக

நூல்களாக்கப்பட்டு பரவலாக்கப்படும் நல்லதோர் சூழலாக மாறுகிறது. அப்போது விளங்கிய மதராஸப் பட்டிணம் என்னும் இன்றைய சென்னையில் இயங்கி வந்த மதராஸ் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத்தோடும் சமஸ்கிருதத்தோடும் தமிழின் ஒருசில அற இலக்கியங்கள் பாடமாக்கப்பட்டுக் கற்கும் சூழல் தொடங்குகிறது. எனினும் தமிழுக்குப் போதிய முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை.

இக்கால கட்டத்தில் ஓர் முக்கியமான விழிப்புணர்வும் அதனைஒட்டிய வாதவிவாதங்களும் நிகழத் தொடங்குகின்றன. அதாவது, வடமொழியான சமஸ்கிருதம் கல்வி நிலையங்களில் கற்கவும் கற்பிக்கவுமாக ஏற்ற அளவுக்குத் தமிழ் மதிக்கப்படாத சூழலில் இருந்ததைத் தமிழறிஞர்கள் உணரத் தொடங்குகின்றனர். ஒரு புறம் பதிப்பின் மூலம் தமிழ் இலக்கியங்கள் அச்சுப் பெற்றமை நிலவுவதும் மறுபுறம் ஐரோப்பிய கிறித்துவ கல்வி நிறுவனங்கள் தோன்றி மக்களுக்குக் கிறித்துவக் கல்வியறிவையும், மதமாற்றச் சூழலையும் நிறுவுவதும், மற்றொரு புறம் இந்தியருக்கும் தமிழர்களுக்குமான மரபார்ந்த தெய்வங்களைக் காக்கவும் அதனை நினைவுறுத்தவும் சமாஜங்களும் மிசனரி போன்ற அமைப்புகளும் தோன்றுவதும் பிரிதொரு புறம் இந்திய விடுதலைக்கான செயல்பாடுகளில் 1885 இல் காங்கிரஸ் இயக்கம் தொடங்கப்பட்டு போராட்டங்களை முன்னெடுப்பதும் வேறொரு புறம் இந்திய தேசிய எதிர்ப்பும் உள்நாட்டில் நிலவும் வரணாசரம கோட்பாட்டினைத் தகர்க்கும் நோக்கில் பார்ப்பனர் அல்லாதோர் தமக்கான போராட்டங்களை முன்னெடுப்பதும் எனப் பல்வேறு விதமான சமுதாய செயல்பாடுகளின் வீறுமிக்க காலப் பின்னணியிலேயே தமிழ் இலக்கியங்கள் வெளிப்படத்தொடங்கி அறிவுலகம் செயல்படத் தொடங்குகிறது. அதாவது, பதிப்பான நூல்களைக் கற்றலும், கற்றதனால் ஆய பயனாய் ஆராய்தலும் தொடங்குகிறது.

### 1.1.1. இறையனார் தோன்மம் வழி சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வு

களவு, கற்பு என்னும் இரு பெரும் பிரிவுகளை முறையே 33 நூற்பாக்களையும் 27 நூற்பாக்களையும் கொண்டதே இறையனார் களவியல் உரையாகும். இந்நூலை சிவபெருமான் இயற்றினார் என்று நம்பப்படுகிறது. இந்நூலுக்கு பலர் உரை கண்டுள்ளனர், எனினும் நமக்கு கிடைப்பது நக்கீரனார் உரையே. இதுவும் கடை சங்ககாலத்தில் உரைக்கப்பட்டு கர்ண பரம்பரை வழியாக வழங்கி ஒன்பது தலைமுறைகள் கடந்த பின்பே ஏட்டுவடிவு ஏய்திற்றென்று கருதப்படுகிறது. இவ்உரை முதன்முதலாகப் பாண்டியன் உக்கிரப்பெருவழுதியின் அவையில் உரைக்கப்பட்டதென்றும்

இவ்வுரையைக் கடைச்சங்ககாலத்தில் வாழ்ந்த உப்புரிகுடிக்கிழார் மகன் உருத்திர சன்மன் பெரிதும் பாராட்டினார் என்பதும் நம்பப்படுகிறது.

இந்நூலினை சி.வை. தாமோதரம்பிள்ளை **1883**இல் நக்கீரர் உரையோடு பதிப்பித்துள்ளார். **1881**க்கு முன்பே இறையனார் அகப்பொருள் சுவடியைப் பெற்றிருந்ததன் காரணத்தினாலேயே வீரசோழியப் பதிப்புரையில் இதன் முகவுரையில் சங்கங்கள் பற்றிய செய்திகளைத் தொகுத்தளித்து இலக்கிய வரலாற்று கட்டமைப்பு முயற்சியைச் செய்ய முடிந்திருக்கிறது. எனவே, பதிப்பாகும் முன்பே அதிலுள்ள முச்சங்கங்கள் குறித்த தகவல், பெரும் நம்பிக்கையோடு முதல் முறையாக முன்னெடுக்கப்படுவதும் இங்ஙனமாக இருப்பதை அறிய முடிகிறது. சி.வை. தா.விடம் தொடங்கும் இம்முச்சங்க நம்பிக்கை எவ்வாறு இருந்தது என்பதோடு சங்க இலக்கிய கால ஆய்வு வரலாற்றிலும் சங்க இலக்கிய வரையறை ஆய்வு வரலாற்றிலும் எவ்வாறெல்லாம் தூக்கிப் பிடிக்கப் பட்டுள்ளன என்பதையும் இவ்விடம் நோக்குவோம்.

### 1.1.1.1. சி.வை. தாமோதரம்பிள்ளையும் இலக்கிய வரலாறு கட்டமைப்பும்

கி.பி.1881 இல் சி.வை.தா.வின் வீரச்சோழியப் பதிப்பின் முகவுரை அக்காலத்தில் சமஸ்கிருதத்திற்கும் தமிழுக்கும் நிலவத் தொடங்கிய வாத விவாதங்களைப் பதிவுச் செய்திருக்கிறது. வடமொழியின் தொன்மைக் குறித்தும் தமிழின் புலமை தொன்மை பற்றியும் நிகழ்ந்த புரிதலை விவரிக்கத் தொடங்கும் இவ்வுரை இறுதியில் கீழ்வருமாறு அமைந்துள்ளது.

> அன்றியும் வடமொழியில் இல்லாத புணர்ச்சியிலக்கணங்களின் குறியீடுகளும் வினைத்தொகை குறிப்புவினை முதலிய சொல்லிலக் கணங்களும் உயர்திணை அஃறிணைக் கூறுபாடும் பால் விகுதிகளும் அகம் புறம் என்னும் பேதங்களும் ஐந்திணை யியல்புகளும் அவற்றின் துறைகளும் வெண்பா கலிப்பா கலித்துறை முதலிய செய்யுளிலக்கணங்களும் இவை போல்வன பிறவுங் காலத்திற்குக் காலம் பிற்றைநூலிற் தோன்றாது ஆதியிலக் கணமாகிய அகத்தியத்திலே முற்ற உரைக்கப் பட்டமையால் தமிழ் சமஸ்கிருதத்தினின்று பிறவாத தற்பாமைவு என்பது பசுமரத்தாணி போல் நாட்டப்படும்.
>
> (சி.வை. தாமோதரம் பிள்ளை, 1881;16)

என்று வடமொழியின் மூலத்தைக் கொண்டு தமிழ் மொழி தோன்றியதென்று முன் வைத்த வாதத்தை தகர்த்தெரிகிறார். பதிப்பிலக்கியச் செயல்பாடுகள் சி.வை.தா.விற்கு முன்பு தோன்றி அவரைக் கடந்து பெருமளவு

நடந்திருப்பினும், பதிப்புரை என்கிற பக்கங்களின் வழியாக மேற்கண்ட ஆய்வினைத் முன்னொடுத்தவர் சி.வை.தா. வாகத் தெரியவருகிறார். அதனை ஒட்டியே தமிழ் இலக்கியங்களைக் கட்டுக்குள் உட்படுத்தி பகுத்தளிக்கும் கால சிந்தனையும் வெளிப்படுத்துகிறார்.

1856 இல் இராபர்ட் கால்டுவெல் தமது திராவிட மொழிகளில் ஒப்பிலக்கணம் எனும் நூலில் இலக்கியங்களின் காலப்பகுப்பு முயற்சியினைச் செய்ததை அடுத்து குறிப்பிடத்தக்க முயற்சியாகத் தெரியவருவது சி.வை.தா.வின் முயற்சியாக இருக்கிறது. இவ்வாய்வுப் பதிப்புரையில் கவனிக்கத் தக்கதொரு விடயம் என்னவெனில், தமிழ் இலக்கிய ஆய்வுப் பரப்பில் இவரே முதன் முதலாகக் காலப்பகுப்புக் குறித்த சிந்தனையை செலுத்தியுள்ளார் என்பதாகும்.

அதிலும் பதிப்புரையின் வாயிலாக கால ஆராய்ச்சி வெளிக்குத் திறவுகோல் செய்திருப்பது இவருக்கு முன்பாகப் பதிப்பினைத் தொடங்கியவர்களும் இவரை அடுத்து தொடங்கியவர்களும் பல நூல்களைப் பதிப்பித்தவர்களும் ஈடுபடாத செயல்பாடாகத் தெரியவருவதோடு இவரின் தேர்ந்த அறிவு பரவலுக்குச் சான்றாகவும் இருக்கிறது. இவ்வீரச் சோழியப் பதிப்புரையில் தமிழ் இலக்கியங்களை வரன்முறைகளுக்குள் பகுத்திருக்கும் முறை கீழ்வருமாறு அமைந்திருக்கிறது.

1. அபோத காலம், 2. அக்ஷர காலம், 3. இலக்கண காலம், 4. சமுதாய காலம், 5. சமணர் காலம், 6. அநாதர காலம் 7. இதிகாச காலம், 8. ஆதீன காலம் என்பனவாகும். இவ்வாறு கால வரிசைப்படுத்தலை விளக்கிக் கூறும் சி.வை.தா. தாம் அக்காலத்தைப் பிரித்துணர்ந்து பெயரிட்டமையை விளக்கிக் கூறும் தன்மைகளை இனிக் காண்போம்.

### 1.1.1.1.1. தமிழ் இலக்கியங்களின் தொடக்க காலமென்னும் அபோத காலம்

> தமிழ்ப் பாஷையின் காலவருத்தமான அபோத காலம், அக்ஷரகாலம், இலக்கணகாலம், சமுதாயகாலம், அநாதர காலம், சமணகாலம், இதிகாசகாலம், ஆதீன காலமென எண் கூறுபடும்.
>
> (மேலது;11)

அபோத காலம் என்ற பெயரினைக் குறிப்பிட்டுக் காட்டி அவற்றிற்கு விளக்கம் தர முனைபவர்,

> வரிவடிவின்றி ஒலிவடிவு மாத்திரமாய் நிகழ்ந்த காலத்தை அபோத காலமென்றாம். அஃது அகத்தியர்க்கு முன் சென்ற காலமாகும். அகத்தியர் தமிழ் மொழியை அவலோகித முனிவர்பாற்

> கற்றுணர்ந்தாரென்னும் அருகர் மதமுஞ் சுவாரமியிடந் தமிழ் மொழியையுஞ் சுப்பிரமணியக் கடவுளிடம் அதன் இலக்கணத்தையும் ஓதியுணர்ந்தாரெனக் கூறுஞ் சைவர் மதமும் அகத்தியர்க்கு முன்னுந் தமிழுண்மைக்குச் சான்றாகும். சிலர் சுவடி எழுத்து நெடுங்கணக்கு முதலிய சொற்களை ஆதாரமாகக் கொண்டு ஒரு அளவுக்கு வரிவடிவும் எழுத்தும் முன்னர் இருத்தல் வேண்டும் எனக் கூறுவர்.

(மேலது;11)

இதன்மூலம் அபோத காலமென்பது ஒலிவடிவ மட்டுமிருந்த காலமென்பதை அகக்கண்முன் காட்சிப்படுத்துகிறார். இத்தகையதோர் தொன்மைக் காலத்தை மொழியின் வழியில் சிந்தனை செய்திருப்பதோடு. அகத்தியருக்கு முன்னரே தமிழின் வரிவடிவம் இருந்தது என்று கூறி புராண மத கருத்துகளின் அடிப்படைக்கு மட்டும் முக்கியத்துவம் தராமல் மொழியியல் ரீதியாகவும் ஆராய்ந்து கூறியுள்ளது நல்லதோர் ஆய்விற்கான அச்சாரமாக அமைந்துள்ளதைக் காண்கிறோம்.

மேலும், அகத்தியருக்கு முன் தமிழ் வரிவடிவம் பெற்று சிறந்து விளங்கியது என்ற கருத்துடையோர்களை எதிர்த்து சிவஞான முனிவர் எழுதிய “செந்தமிழ் நிலத்து மொழியோட முற்படத் தோன்றிய நூல்” என்பதையும், செந்தமிழ் நிலத்து மொழி தோன்றும் காலத்துடன் தோன்றிய நூல் என்பதாகக் கூறி இவ்வாறு மயங்குவாராயினர் என்று சொல்லியிருப்பதால், சிவஞான முனிவரின் அகத்தியர் பிடிப்பினைச் சுட்டிக் காட்டியிருப்பதோடு கீழ்வருமாறு அதற்கு விளக்கமும் அளிக்கிறார்.

> முந்து நூல் “முந்தை நூல்” என்பன முதனூற்குப் பெயர்களாகவும், இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் அவ்வாறே பொருள் கூறி “நிலத்தொடு” என்பதற்கும் செந்தமிழ் நிலத்து வழக்கோடு எனப் பொருளுரைத்திருப்பது கண்டாராகவும், நிலத்தையும் (அதாவது நிலத்தின் கண்ணுள்ள இயற்றமிழ் வழக்கையும்) முதனூலையுங் கண்டு எனச் செம்பாகமாகப் பொருள் வெட்ட வெளி போலக் கிடப்பதாகவும், இவர் உடனிகழ்ச்சிப் பொருள் கொடுத்து “முந்து” என்பதை வினைத்தொகையாக்கி, அறுகம்புல்லிற் அடக்கிய யானை போல, இவ்வாறு இடர்ப்பட்டது கால கதியோ அன்றேல் பிற ஆசிரியர் மதங்களை மறுத்தலும் ஆங்காங்குத் தமது நூதனத்தை நாட்டுதலுந் தமக்கு என்றும் இயல்பாயினமை பற்றியோ அறியேம்.

(மேலது;12)

என்று சிவஞானமுனிவரின் புரிதலை மறுத்து இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் சுட்டி தமிழ் தொண்மையை, அகத்தியர் வருவதற்கு முன்பே தமிழ் இயற்றமிழ் வடிவினைப் பெற்றிருந்தது என்ற இயல்பான உண்மையைப் புராணப் பொய்க்கதைகளிலிருந்து வேறுபடுத்திக் கால கட்டத்தை வரையறைப்படுத்தியதோடு அதில் நிலவிவந்த வாத விவாதங்களைச் சுட்டிக் காட்டி விளக்கம் அமைத்திருக்கும் ஆராய்ச்சி நிலையையும் பார்க்கிறோம்.

### 1.1.1.1.2. அகத்தியம் நிறைவேறிய காலமென்னும் அக்ஷரகாலம்

அடுத்து, இரண்டாவதான காலகட்டத்தைக் கீழ்வருமாறு பகுக்கிறார்.

> அகத்தியரால் நெடுங்கணக்கு ஏற்பட்டது முதல் அகத்தியம் நிறைவேறியது வரைக்குஞ் சென்ற காலத்தை அக்ஷரகால மென்றாம்.

(மேலது;12)

என்று கூறி இக்காலம் சிறிதுநேரமே நிகழ்ந்ததென்று காட்டி ஆயினும் இக்காலகட்டம் முக்கியமானதொரு இடத்திற்குரியது எனும் பொருளில் உணர்த்துகிறார். அதற்கு அவர் சுட்டவரும் காரணம், இதனை அடுத்து அடையாளம் காணப்பட்டது இலக்கண காலமாகும். எனவே, இலக்கணம் ஒரு மொழியில் நூலாக உருவெடுக்கிறதென்றால் நிரம்பிய இலக்கிய வளமை அமையப் பெற்றிருத்தல் வேண்டுமென்ற இயல்பான உண்மையை ஏற்றுக் கொள்வதோடு அதனையே குறிப்பிடவும் செய்கிறார். ஆயினும் இக்காலக்கட்டத்தின் அளவை அவர் குறிப்பிட்டிருப்பது ஏற்பதாகப் படவில்லை. அவரின் கணிப்புப்படி இக்காலம் ஒரு சிறு காலமாம், அதற்கு உவமைக் கையாளவந்தவர் கைக் குழந்தை மழலைபயின்று சிற்றில்கோலி விளையாடிய பருவம் போன்றதொரு காலமாக உருவகப் படுத்துகின்றார். இவ்விடம் சற்று இடர்ப் படக் காரணம், இலக்கண உருவாக்கம் நடைபெறுகிறதென்றால் அதற்கு மிகப்பெரும் தொன்மை இருந்திருக்க வேண்டுமென்பதோடு குறிப்பிட்டு பெருமைப்பட்டுக் கொள்ளுமளவுக்கும் பல்வேறு விதமான இலக்கிய உருவாக்கங்கள் வளமைப் பெற்று செம்மாந்த நிலையை எய்தியிருக்க வேண்டும், அல்லது, பல்வேறுவிதமான இலக்கியப் படைப்புகள் பல்கிப் பெருகியிருக்க வேண்டும். இப்படியானதொரு சூழல் பின்னணியிலேயே இலக்கண உருவாக்கமென்கின்ற சிந்தனை கிளர்ந்தெழுந்திருக்கும். ஆனால், சி.வை.தா குறிப்பிடுவதைப் போல் ஒரு குறுகிய சிறு காலக் கட்டத்திற்குள் இலக்கியம் உருவாகுமளவிற்கு

இலக்கணங்கள் தோன்றியிருக்க வாய்ப்பில்லை. சிறு காலமென்று சொல்லியிருந்தாலும் மேற்காட்டிய எண்ணம் அவருக்குத் தோன்றிய தாலேயே, இக்காலத்தில் உருபெற்ற இலக்கியங்கள் முற்காலத்தில் செவிவழியால் பயிலப் பட்டுவந்திருக்கும் என்று கூறும் திருவிளையாடற் புராணப் பாடலை அடிக்குறிப்பில் காட்டிச் சென்றுள்ளார். இக்கால கட்டத்தில் வடமொழி சார்ந்த அறிமுகமும் ஏற்பட்டிருக்கலாமென்றும் சிறிது காட்டுகின்றார்.

### 1.1.1.1.3. சங்க காலத்தின் இலக்கண காலம்

இதனையடுத்து குறிக்க வரும் காலபகுப்பினை இலக்கண காலம் என்று பெயரிடுகின்றார். இதற்கு விளக்கம் தரவருபவர்,

> இது தொல்காப்பியன் அதன் கோட்டாசான் துராலிங்கன் செம்பூட்சேய் வையாபிகன் வாய்ப்பியன், பனம்பாரன் கழாரம்பன் அவனியன் 'காக்கை பாடினியன் நற்றத்தன் வாமனன் என்னும் பன்னிரு சீஷமும் அகத்திய ரிஷியிடத்தில் அவர் செய்த பேரகத்தியஞ் சிற்றகத்தியம் இரண்டும் முற்றக் கற்றுத் தத்தம் பெயரால் வேறிலக்கணமும் அனைவரும் ஒருங்கு சேர்ந்து புறப் பொருட் பன்னிரு படலமும் எழுதிய காலமாம்.

(மேலது;13)

சி.வை.தா.வின் கணிப்புப் படி இக்காலம் மதுரைத் தமிழ்ச்சங்கங்கள் தொடங்கப்படுவதற்கும் முன் நிகழ்ந்ததென்கின்றார். முதற் தமிழ்ச் சங்கம் தொடங்கப் படுவதற்கும் முன்னாலே அகத்தியரிடம் பயின்ற பன்னிரு மாணவர்களும் கூடி புறப்பொருட் பன்னிரு படலம் இயற்றினார்களென்றும், இத்தகைய முயற்சிக்கு மூலமாக அகத்தியரால் எழுதப்பட்ட அகத்தியம் என்னும் இலக்கண நூல் அமைந்ததென்று கருதியிருப்பதும் கிடைக்கப்பெறுகின்றோம். இக்கூற்று பின்னர் அவரே நம்பும் இறையனார் அகப்பொருளுரைக் கூறும் முச்சங்க தரவிலிருந்து முரண்படுவதாக இருப்பதையும் காண்கிறோம். எவ்வகையில் இவ்விடத்து முரண் படுகின்றாரெனில், அகத்தியம் என்னும் இலக்கண நூல், தலைச்சங்க காலத்தே சிவபெருமான் முருகக்கடவுள், முன்னிலையில் அரங்கேற்றப் பட்டதென்று இறையனார் களவியலுரைக் கூறிட, இவரோ, இத்தலைச்சங்கம் தோன்றுவதற்கும் முன்பே அகத்தியம் தோன்றிவிட்டதென்றும் அதனை அடிப்படையாகக் கொண்டே புறப்பொருள் பன்னிருப் படலம் எழுதப்பட்டதென்னும் கொள்கையுடையவராக இருப்பதேயாகும். இச்சிந்தனைக்கு விளக்கமளிப்பது போலவே இதற்கடுத்து வரையறை செய்யும் சமுதாய காலத்தின் பின்னணியைச் சொல்லவருபவர் சங்கம்

தோன்றுவதற்கு முன்பே எழுதப்பட்டிருப்பினும் அகத்தியம் தவிர்த்து பன்னிருப்படலமும் பின்னர் எழுதப்பட்ட தொல்காப்பியமும் தலைச்சங்கத்தில் அரங்கேற்றப்பட்டதென்று கணிக்கிறார்.

### 1.1.1.1.4. மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரின் சமுதாய காலம்

சி.வை.தா தாம் குறிக்கவரும் நான்காவது நிலையை சமுதாய காலமென்றும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரின் காலமென்றும் அழைக்கிறார். இக்காலத்திலே தான் வடமொழி சமஸ்கிருதமும் தமிழும் உறவு மொழிகளாகக் கலந்தனவென்று குறிப்பிட்டு சொல்லத் தொடங்கும் கருத்துக்கள் கீழ்வருமாறு அமைந்திருக்கின்றன.

> இது தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென மூன்றாகும். இவற்றுள் முதற்சங்கத்தார் காலத்தே உற்பவித்து இடைச்சங்கத்தார் காலத்திற்கே உரியவாயினவெனவும் அகத்தியரோடு தொல்காப்பியரும் இடைச்சங்கத்தில் இருந்தனரெனவுங் கடைச் சங்கத்திலுந் தொல்காப்பியர் வீற்றிருந்தனரெனவுங் கூறுவாருமுளர். அது யுத்திக் கிசைந்த தன்று அவரவர் நூற்பெருமையான் வந்த உபகார வழக்காகக் கொள்ளலாம்.
>
> (மேலது;15)

என்று முச்சங்கத்து காலத்திலும் அகத்தியரும் அகத்தியரோடு தொல்காப்பியரும் வீற்றிருந்தார் என்னும் கூற்று மிகையாக உணர்த்துபவர் பின்னர் எவ்வாறு அகத்தியமும் தொல்காப்பியமும் பன்னிரு படலமும் விளங்கி இருக்குமென்று தெளிவுறுத்துகின்றார். சி.வை.தாவின் எண்ணப்படி இச்சங்க காலத்தின் சூழலில் அகத்தியமும் தொல்காப்பியமும் எவ்வாறு சிறப்புற்றிருந்தனவென்பதை அவர் கூற்றாலேயே காண்போம்.

> அகத்தியத்தோடு தொல்காப்பியராதியோர் நூல்களுந் தலைச்சங்கத்தார் காலத்து நிலவியும் அகத்தியத்தையே அஞ்ஞான்றார் ஆதாரமாகக் கொண்டாரென்றும் அகத்தியருடைய விரோதத்தினாற் தொல்காப்பியம் அப்போது தலையெடாமலிருந்த தென்றுந் தொல்காப்பியத்தின் சிறப்புத் தோன்றத் தோன்ற அஃது அகத்தியத்திற்குச் சாயாயெழுந்து இடைச் சங்கத்தாருக்கு இரண்டும் ஆதாரமாயின வென்றும் ஈற்றில் அகத்தியம் மகத்துவந்தாழத் தொல்காப்பியம் மேம்பட்டுக் கடைச் சங்கத்திற்றானே தனிநின்ற தென்றுங்கொள்வதே தகுதி.
>
> (மேலது;14)

என்று அகத்தியம் தோன்றிய சிறிது காலத்திற் கெல்லாம் தொல்காப்பியமும் இயற்றப்பட்டு விட்டதென்றும், அதுவும் தலைச்சங்கத்தார் காலத்திலேயே

தொல்காப்பியம் எழுதப்பட்டு அகத்தியத்தோடு ஒத்த மதிப்பினைப் பெறுமளவுக்குச் சிறந்து விளங்கும் நிலை இருந்ததென்றும் பின்னர் தொல்காப்பியத்திற்கு உள்ள சிறப்பின் காரணமாக அகத்தியத்தை மழுங்கச் செய்துவிட்டு நிலைப்பெற்றதென்றும் கூறியிருக்கும் கூற்றும் இறையனார் அகப்பொருளுரைக் கூறியிருக்கும் கருத்திலிருந்து சற்றே மாறியதாக இருப்பதைக் காண்கிறோம். இடைச்சங்கத்தில் எழுதப்பெற்று அரங்கேற்றம் கண்டதே தொல்காப்பியம் என்னும் வழக்கை கொண்டுள்ளதே அகப்பொருளுரை, ஆனால் சி.வை.தாவோ தலைச்சங்க காலத்திலேயே தொல்காப்பியம் இருந்தது என்று முடிவு செய்திருப்பதே இவ்விடம் முரண்படுகிறது. இறுதியாக இச்சூழலை முடிவுக்குக் கொண்டுவரும் சி.வை.தா. பனம்பாரணரின் "அரங்கோட்டாசாற் கரிறபத்தெரித்து" என்னும் கூற்றினைக் காட்டி தலைச்சங்கத்திற்கு முன்பே தோன்றி தலைச்சங்கக் காலத்தில் அரங்கேற்றம் கண்டது எனக் கொள்கிறார். மேலும் சங்க காலத்துப் புலவர்களைக் குறித்து சொல்லவரும் பொழுது காளமேகப் புலவர் எழுதிய 'நூலாரா லாயிர நா னூற்று நாற் பத்தொன்பான் / பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான் மேலாநாற் / பம்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்குங் / கத்தன் மதுரையிற்சொக் கன் என்னும் பாடலைக் காட்டி இதன் உதவியோடு சங்க காலப் புலவர்களை வரையறை செய்தால் பிழைப்பட்டதென்று சுட்டி, இறையனார் அகப்பொருளுரைக் காட்டும் வரையறையினை எடுத்தாண்டு இதுவே முடிவென உணர்க என்றுரைத்து செல்கின்றார். இறையனாரகப் பொருளுரையின் கூற்று மெய்வழிப் பட்டதென்பதை,

*ஏழே ழொ டைஞ்நூறு மேழே ழொடுபஃதும்*
*ஏழே ழுஞ் சங்க மிரீஇனார் - ஏழேழ்வேர்*
*நாற்பதினா னூறுமுப்பா னேழ் நூறு நானூற்று*
*நாற்பதினொன் பான்கவிஞர் நாடு*

(மேலது;16)

எனும் பாடலை சங்ககாலப் பாடலென்று ஆதாரமாக முன் வைத்து, இச்சங்கப் புலவர் பற்றினக் குறிப்பு திருவள்ளுவமாலையிலும் காணக் கிடைப்பதை அடிக்குறிப்பில் தந்து சங்க காலத்தின் நீட்சியைப் பொய்யென்றும் வெறும் புகழ்ச்சியென்றும் செப்புவோரைக் கருத்தில் கொண்டு கீழ்வரும் மற்றொரு அடிக்குறிப்பினையும் எழுதியுள்ளார்.

விவிலிய நூலோடோடி அதன் கதைகளையுங் கால நிரூபணங்களையும் நம்பியவர்களுக்கு இஃதோர் கட்டுக்கதை போற் தோற்றும் அவன் அறுபதினாயிரம் ஆண்டாண்டான் என்னுங்

கற்பனைகள் போலாகாது சங்கம் இரீஇய பாண்டியர்கள் பெயரும் முறையும் தொகையும் அகமப் பிரமாணமாக நமது கைக்கு வந்திருக்க, எவ்வெச்சாதியாரும் மனிதருக்குமிக நெடியவயது கூறிய பண்டைக்காலத்திற் சராசரி ஒரோரரசனுக்கு ஐம்பது வருடச் செங்கோன்மை வகுத்த இந்நிரூபணம் யாதாயினுமொரு சமுசயமுமின்றி முற்றவும் நம்பற்பாலதேயாம்.

(மேலது;16)

என்று கணக்கிட்டு இறையனார் அகப்பொருளுரையையும் கவனித்து எழுதியுள்ளது பின்னாலில் அதாவது கி.பி. 1902 க்கும் பிறகு பல நிலைகளில் சங்க மிருந்ததற்கான மறுப்பும் ஏற்பும் நிகழ்ந்த சூழலுக்கு அச்சாரமாக இவரின் கருத்துகளும் இருப்பதைப் பார்க்கிறோம். இத்தகைய வாதத்தை இவர் முன்வைக்கக் காரணம் தன்னால் கி.பி. 1883 இல் இறையனார் அகப்பொருள் பதிப்பிக்கப்பட்ட பின்பு சங்கம் இருந்ததற்கான வாதவிவாதங்கள் பெருமளவு எழக்கூடும் என்பதனைக் கருத்தில் கொண்டே எழுதியுள்ளார் என்று நினைக்கத் தோன்றுகிறது. அதுவும் கி.பி. 1881 இல் வீரசோழியம் முதன் முதலாகப் பதிப்பிக்கப்பட்டது. இறையனார் அகப்பொருளுரையைப் பதிப்பித்தது கி.பி. 1883 இல் எனவே, ஒன்பதாண்டுகளுக்குப் பிறகு செய்யவிருக்கும் பதிப்பினைக் கருத்தில் கொண்டும், அத்தகையதோர் பதிப்பு நிகழ்ந்தவுடன் ஆய்வுலகால் முன்னெடுக்கப்படும் முரண் தன்மைகள் குறித்தும் அறிந்திருக்க வாய்ப்புள்ளதென்றாலும், பதிப்பிற்கு முன்னே இக்கருத்தினை சி.வை.தா. வீரசோழியப் பதிப்பில் கொடுத்திருப்பது இறையனாரகப் பொருளுரைக்கூறும் சங்கக் கருத்தினை மறுத்துரைப்பவர்களைக் காட்டும் விதமாகவும் இவ்வாதம் அமைந்திருப்பதை உணர முடிகிறது.

இக்கருத்தினைத் தொடர்ந்து அவற்றுள் முதற்சங்கம் காய்சின வழுதி முதற் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர் பாண்டியரையும் இடைச்சங்கம் வெண்டேர்ச் செழியன் முதல் முடத்திருமானீறாக ஐம்பத்தொன்பதின்மர் பாண்டியரையும், கடைச்சங்கம் முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மர் பாண்டியரையுமுடையன என்று இறையனார் அகப்பொருளுரைக் கருத்தினைச் சொல்லத்தொடங்கி, முச்சங்கங்களும் நிகழ்ந்துவந்தப் பாங்கினை அகப்பொருளுரை உரைப்பதையே கொடுத்துள்ளார். கடல்கோள்களையும் குறிப்பிட்டுக் காட்டி, இவை அனைத்தும் ஏற்கத்தக்கவையே என்னும் வாதத்தையும் முன் வைக்கிறார்.

சங்கத்து இறுதி நிகழ்வினைக் கூறவருபவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு உக்கிரப் பெருவழுதி காலத்தின் சங்க நிறுவாகிகள் சங்கப் புலவர்களை அவமதித்ததாகக் கூறி இதனால் சினம் கொண்ட

திருவள்ளுவரும் ஔவையும் இடைக்காடனாரும் இச்சங்கத்தை முடிவுக்குக் கொண்டு வந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். சங்கத்தில் இறுதியாக அரங்கேற்றப்பட்டது திருக்குறளே என்பது இவரது கருத்தாக இருக்கிறது. இச்சிந்தனை இறையனார் அகப்பொருளுரையில் இல்லையென்பதை அறிவோம். அவ்வாறிருக்க, இது கிடைக்கப்பெற்ற இடம் குறித்தும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்ச்சங்கம் இருந்ததென்றும் கூறியிருக்கும் கூற்றிற்குச் சான்றாக, கீழ்வரும் நெடியக் செய்தியை அடிக்குறிப்பில் கொடுத்துள்ளார். இவ்வடிக்குறிப்பினை மொத்தமாய் தருவதற்குக் காரணம், சி.வை.தா.விற்கு முன்பாக எவரும் இவ்வாறு இரண்டாயிரம் ஆண்டு காலம் தொன்மையுற்ற சங்கத் தமிழ் என்ற கண்டறிதலைச் செய்ததாகத் தெரியவில்லை. சங்கத்தமிழ் இலக்கியங்களின் தொன்மையை இறையனார் அகப்பொருளுரையின் வாயிலாக அறிந்திருந்தாலும் இன்றைக்கும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றிய சங்கத்து நூல்களென்பதை கண்டறிந்து உரைத்திருப்பது இவரிடமே தொடங்குகிறதென்பதைக் கீழ்வரும் பத்தி நிறுவுகிறது.

> சங்கம் ஒழிந்தது சுத்த சந்திர வம்சத்திற் கடைசியாய் அரசு புரிந்த கூன்பாண்டியன் காலமென்று கொள்ளினும், அதன் பின் சோம சுந்தரன் முதற் பராக்கிரமன்வரைக்கும் நாற்பத்திரண்டு அனுலோம பாண்டியர்கள் அரசு செய்திருக்கின்றனராதலில், ஒவ்வோர் அரசனுக்குச் சராசரி இருபத்தைந்து வருடம் வைப்பினும் ஆயிரத்தைம் பதாகிறது. பராக்கிரம பாண்டியனை முறியடித்துத் துலுக்கர் முதன் முதல் மதுரையாண்டு எண்ணூற்றைப்பது வருடமென்பது இதிகாசரால் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆதலிற் கூன் பாண்டியன் காலமே இரண்டாயிரம் வருஷத்திற்கு முன்பின்னாயிற்றென்றறிக. அன்றியும் ஸ்ரீ இராமர் இலங்கைக்கு வந்தது அனந்த குண பாண்டியன் காலம். அவன் கூன் பாண்டியனுக்கு முன் அறுபத்து மூன்றாவது பாண்டியன் ஆதலாலும் இத்தொகை அதிகமல்ல வென்று காண்க. மேலும் இற்றைக்கு மூவாயிரத்தைந் நூறு வருஷத்தின்முன் இருந்த வியாசர் காலத்தனாகிய அர்ச்சுனனுக்குத் தன் மகளைக் கொடுத்த சித்திரவரகன் மதுரைக்குச் சமீபமான பூழி என்னும் மணலிபுரத்தில் அனந்தகுண பாண்டியனிலிருந்து பதினெட்டாவது பாண்டியனாகிய சித்திர விக்கிரம பாண்டியன் காலத்தில் சிற்றரசு புரிந்தவன். இதனாலும் இக்கால நிர்ணயத்தவரென்பது தெள்ளிதிற் புலப்படும், மேலும் கூன் பாண்டியன் காலத்து ஞானாசாரியராக எழுந்தருளிய திருஞானசம்பந்த மூர்த்திகள் மரபிற் தற்காலம் வரைக்கும்

ஆசாரியாபிஷேகம் பெற்றோர் நூற்றுப் பதினால்வர் இஃதொன்றே கூன் பாண்டியன் காலம் இற்றைக்கு ஈறாயிரம் வருஷத்தின் மேற்பட்டதென்பதை எட்டுணையும் ஐயமறக் காட்டும்.

(மேலது;17)

தமிழ் ஆய்வுலத்தில் இவரே முதன்முதலாக இரண்டாயிரத்துக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்கள் என்ற சொல்லாடலைச் செய்திருக்கிறார் என்பதை முன்பே குறிப்பிட்டோம். இக்கண்டறிதலுக்கு அவர் முன்வைக்கும் தரவுகளை இரண்டு நிலையில் விரித்துணர்வது விளங்கிக் கொள்ள வசதியாக இருக்கும்.

மூன்றாம் தமிழ்ச்சங்கம் முடிந்த காலந்தொட்டு பாண்டிய வம்சத்தினர் அவர்கள் முறையே சோம சுந்தரன் முதற் பராக்கிரமன் வரைக்கும் நாற்பத்திரண்டு அனுலோம பாண்டியர்கள் ஆட்சி செய்தார்கள் என்ற தரவினைப் பெரும் ஆதாரமாகக் கொண்டு ஒரு பாண்டியனுக்கு இருபத்தைந்தாண்டுகள் ஆட்சி என்று கணக்கிட்டு நாற்பத்து இரண்டு பேருக்கும் உரைக்கின்றார். (42 X25=1050) விடை ஆயிரத்தைம்பதையே கூறி பாண்டியர்களின் ஆட்சி முடிவு முதல் பாண்டியனின் இறுதி அரசனாகக் கொள்ளப்படும் பராமக்கிரம பாண்டியனை முறியடித்துக் துலுக்கர் முதன்முதலாக மதுரையை ஆளத்தொடங்கி பின்னர் முடிவுற்றது எண்ணூற்றைம்பது வருசமென்று கூட்டுகின்றார். ஆயிரத்தைம்பதுடன் எண்ணூற்றைம்பதைக் கூட்ட ஆயிரத்துத் தொள்ளாயிரமாண்டுகள் கிடைக்கின்றன. இக்காலக் கிடைத்தலைக் கொண்டே இரண்டாயிரம் என்று வரையறைப்படுத்தியிருப்பதை அறிகிறோம். துலுக்கரின் ஆட்சி காலம் ஐரோப்பியர் வருகையால் முடிவுக்கட்டப்பட்டிருப்பதைக் கூறாமல் உணர்த்தியுள்ளதையும் பார்க்கிறோம்.

இவ்வாய்வு முடிவை, அயலவர் வரலாற்றுக் குறிப்பு, இலங்கை வரலாற்று நூல், கல்வெட்டுச் சான்று என எந்த ஒன்றுமின்றி கண்டறிந்திருப்பதைக் காண்கிறோம். பின்னாளில் மேற்காட்டிய தரவுகளையெல்லாம் ஆதாரமாகக் கொண்டு கணித்திருப்பவர்களோடு பெரும்பாலும் ஒத்துக் போவதை இன்றைக்கு அறிகின்றோம். இதனை மேலும் உறுதிப்படுத்தவும் பாண்டிய வம்சத்தின் தொன்மையை இரண்டாவது முறைமையில் உணர்த்தவருபவர், கடைச்சங்கத்தின் இறுதி பாண்டிய மன்னனைக் கூன் பாண்டியன் காலத்திலிருந்து பின்னோக்கி நகர்த்துகிறார். இராமாயண சான்றுபடி கிடைக்கப்பெற்ற தரவு, இராமன் இலங்கை மீது போர்ப் புரியவந்தது பாண்டியன் மதுரையை ஆட்சிபுரிந்து வந்த (அனந்த குண பாண்டியன்) காலத்தைக் குறிப்பிட்டுக் காட்டி இவன் கூன்

பாண்டியனுக்கு முன் அறுபத்து மூன்றாவது மன்னனாக ஆட்சிக்கட்டிலேறியவன் என்பதைத் தருகின்றார். இதனை இவ்விடம் சுட்டக் காரணம், பாண்டிய மரபினர் சங்கத்தின் இறுதி தொட்டு நாற்பத்து இரண்டு தலைமுறைகள் ஆட்சிபுரிந்து வந்தனர் எனக் காட்டிய முடிவு ஐயத்திற்குறியதல்ல என்ற முடிவையும், இராமாயண கதையின் குறிப்புப் படியும் கூன் பாண்டியனுக்கு முன் அறுபத்து மூன்றாவதாய் ஆட்சி புரிந்தனரென்ற தெளிவையும் தருகின்றார்.

இராமாயண குறிப்போடு மேலும் தம்முடிவிற்கு வலுசேர்க்க எண்ணுபவர் மகாபாரதத்தில் பாண்டியர்களைப் பற்றிவரும் குறிப்பினுள் மூவாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதாக ஏற்கப்படும் வியாசர் காலத்தில் வாழ்ந்த அர்ச்சுனனுக்கு மணஞ் செய்து கொள்ள பெண் கொடுத்த சித்திர வாசன் என்பவன் மதுரைக்குப் பக்கத்தில் பூழி என்னும் மணலிபுரத்தில் சிற்றரசனாய் இருந்தவன் என்பதும் இவன் அனந்தகுண பாண்டியனிலிருந்து பதினெட்டாவது பாண்டியனான சித்திரவிக்கிரம பாண்டியன் காலத்தவனென்பதையும் எழுதுகிறார். இக்காலக்கணிப்பில் மன்னர்களை ஆராய்ந்த ஆராய்ச்சியாளர்களோடு ஒத்துப்போகும் பாங்கைக் கண்டாலும் தப்பானதோர் குறிப்பினையும் இணைத்துள்ளார் என்பதைச் சுட்டிக் காட்டாமலேயே தெரியவருகிறது. எனினும், கடைச்சங்கத்து இறுதி பாண்டியனான கூன் பாண்டியன் காலத்தில் திருஞான சம்பந்த மூர்த்தி எழுந்தருளினார் என்பதும் இதுமுதலே திருஞானசம்பந்தரின் மரபு தோற்றிவைக்கப்பட்டதென்பதும் கூறியுள்ளது பொருத்தமில்லா தென்பதை அறிவோம். இவரின் இக்குறிப்பிற்குப் பிறகே பேராசிரியர் சுந்தரம் பிள்ளை "Some mile stone's of Thiruganasammanda" எனும் திருஞானசம்பந்தர் கால ஆய்வு நூலை எழுதினார் என்பதும் எண்ணிப்பார்க்கத் தக்கதாகும். மேற்கண்ட குறிப்புகளோடும் செய்திகளோடும், சமுதாய காலம் என்னும் முச்சங்க கால வரையறையும் விளக்கமும் முடிகின்றன.

### 1.1.1.1.5. அநாதர காலமென்னும் களப்பிரர் காலம்

அடுத்து குறிப்பிடப்பட்ட காலம் 'அநாதரகாலம்' என்னும் பகுப்பாகும். இப்பகுப்பினைப் பின்னாளில் வந்த ஆய்வாளர்கள் 'களப்பிரர்காலம்' என்றும் இருண்ட காலமென்றும் அடையாளப் படுத்துகின்றனர். இக்காலத்தை அநாதர காலமென்பதற்கு விளக்கம் தரவருபவர்.

> சங்கத்துள் அரங்கேறினவற்றுட்தேவர் குறளே கடைசியானது. அதன் பின் ஏறக்குறைய இருநூறு வருஷஞ் சேர சோழ பாண்டியர் அவைக்களத்திற் தனக்குப் பேராதரவில்லாதிருந்துஞ் செந்தமிழ்ச் செல்வி தன் சிறப்புக் குறையாமல் உலாவிக் கொண்டிருந்தனள்.

> அக்காலத்தினையே ஐந்தாவதான அநாதரகாலமென்று குறிப்பித்தோம். அதனைப் புத்தர்கால மென்னும் இழுக்காதென்று கொள்க.
>
> (மேலது;18)

இக்கால கட்டத்தில் களப்பிரர் என்னும் வம்சத்தினர் பாண்டியரைப் போரில் வென்று தம் ஆட்சியை நிலைநாட்டினர் என்பதோடு புத்தர் காலமென்றும் அழைக்கலாம் என்றிருப்பது பௌத்தம் தமிழ் நாட்டிற்கு வந்து தன்னை நிலைப்படுத்திக் கொள்ள பெருமுயற்சி யெடுத்துக் கொண்ட காலமென்ற பொருளில் உரைத்திருப்பதும் கவனிக்கதக்கதாகும். இக்காலத்தில் எந்தப் படைப்பிலக்கிய முயற்சியும் தோன்றவில்லைமென்பதும் பொதுவான கருத்தாகும். எனவே தான் இருண்ட என்ற சொல்லை இவ்விடத்திற்குப் பயன்படுத்தினர். பௌத்தர் காலமென்றும் குறிப்பிடலாமென்றவர் பௌத்த இலக்கியமான மணிமேகலை குறித்து பேசாமைக்குக் காரணம் 1894இல் தான் முதன்முதலாக க. முருகேச செட்டியாரால் பதிப்பிக்கப்படுவதாக இருக்கலாம். அதுவரையிலும் காணாத ஒரு நூலைக் குறித்து இவர் கூறவில்லையென்று குறைபடுவதில் அர்த்தமில்லை. மேலும் பௌத்தர்காலம் என்றும் குறிப்பிடலாமென்பவர் அதற்கான காரணத்தைச் சொல்லாமலே அடுத்த சிந்தனைக்குச் சென்று விடுகின்றார்.

### 1.1.1.1.6. சங்க கால சமணர் காலம்

அநாதர காலத்தை அடுத்து சமணக்காலம் என்று குறிப்பிடுகின்றார். சமணர் பௌத்தத்திற்கும் முன்பு தோன்றினாலும் தமிழகத்தில் தனக்கான மறுமலர்ச்சியை ஏற்படுத்திக் கொண்டது பௌத்தக் காலத்திற்குப் பின்பே என்பது சி.வை.தாவின் கருத்தாக இருந்திருக்கிறது. எனவே தான் பௌத்தக் காலமென்று சுட்டிவிட்டு அதனையடுத்து சமணக் காலம் என்று பெயரமைக்கிறார். சமணர் காலத்தைக் குறிக்க வருகின்றவர்,

> தமிழில் மிக அருமையான இலக்கிய இலக்கண கலைஞான நூல்கள் அனேகஞ் சமண வித்துவான்களாற் செய்யப்பட்டிருக்கின்றன. சங்கத்தின் பிற்காலஞ் சமணர் தலைப்பட்டது. தாயிறந்த பெண்ணுக்கோர் சற்குண நிறைந்த சிற்றாத்தாள் வாய்ந்தது போலும் புத்த வைஷ்ண வித்துவான்கள் ஆண்டாண்டுத் தலைமை பெற்ற காலத்திற் தமது மதசார்பான சில நூல்கள் இயற்றினதன்றி சர்வசானேப காரமாகிய கிரந்தம் ஒன்றுஞ் செய்திலர். இது தமிழ் நம்பெயருக்கு மோனையாகாத கோபம் போலும். சமணரோ அங்ஙனமாகாது தமிழ் விருத்தியில் மிக முயன்றவர்கள் தமிழ் கற்கப் புகும் மாணாக்கர் பெரும்பான்மையும் படிக்கும் நிகண்டு நன்னூல் காரிகை நம்பியகப் பொருள் முதலிய சிறு கிரந்தங்கள் மாத்திரமல்ல,

புலவர் பெருமான்களாலுங் கல்வி வெல்ல அரசராதியோராலும் வியந்து துதிக்கப்படுஞ் சிந்தாமணி முதலிய பெருங்காப்பியங்களும் அனேகம் அவர்களாற் செய்யப்பட்டன. பெரியவுங் கடியவுஞ் சிறந்த நடையையுடையவுமாகிய பல கிரந்தங்களுக்கு மிக மாண்பு பொருந்திய உரைகளே எழுதி வைத்த நச்சினார்க்கினியாரும் பின்பு சைவமதத்தை அனுசரித்தவராயினும் முன்னர் சமணர் கூட்டத்தைச் சேர்ந்தவர். இதனால் மேற்கூறிய கிரந்தமெல்லாம் ஈண்டுவகுத்த சமண காலத்திற் செய்யப்பட்டன வென்று கொள்ளற்க. இவற்றுட் சில பின்வரும் இதிகாசாதீன காலங்களில் எழுதப்பட்டன. அவர்கள் தன்மை இன்னதென்று மெய்ப்பிப்பதற்கு எடுத்துக்காட்டாக இதனை ஈண்டுக் கூறினோம். இவர்கணூலுட் சிந்தாமணி யெழுதி இப்போது ஆயிரத்தெண்ணூறு வருஷமிருக்கலாம். இவர்களிடந் தமிழ் பரிபாலனம் பெற்றது ஒத்தேசம் முந்நூறு வருஷத்திற்குண்டு.

(மேலது;19)

என நீண்டுரைக்கின்றார். இதில் புத்த வைஷ்ண வித்துவான்கள் தலைமை பீடத்திலிருந்தபொழுது தமிழ் இலக்கிய இலக்கணத்திற்கு யாதொரு படைப்பினையும் செய்யாமல் தத்தம் மதம் சார்ந்த நூல்களை எழுதினர் என்று கூறிவிட்டு அடிக்குறிப்பில் பக்தி இலக்கிய காலமாக வரையறுத்திருக்கும் சூழலுக்குள் நிகழ்ந்த படைப்புகள் குறித்துக் காட்டுகின்றார். மேலும் விளங்க வேண்டுமென்றால், சைவ நாயன்மார்களையும் வைணவ ஆழ்வார்களையும் காட்டுகின்றார். இதனோடு கம்பருக்கு ஆழ்வார் பட்டம் சாட்டுமளவுக்கு வைணத்தின் சார்பை வலியுறுத்திய புலவர்களை அடையாளம் காண செய்கின்றார். இவ்வடிக்குறிப்பில் கவனிக்கத் தக்க தொன்று புத்தர் தம் மத நூலினைப் படைத்துக் கொண்டாரென்று வரிசைப் படுத்தியிருப்பது சைவ வைணத்திற்குச் சான்றுகள் காட்டியிருப்பதைப் போல பௌத்தர் குறித்த சிந்தனைக்கு ஒரு நூலையும் சான்றாகச் சொல்லவில்லை. எனவே, இதற்கும் முன்னே பௌத்தர் காலத்தில் மணிமேகலையைக் குறிப்பிடாமைக்கு, அதன் பதிப்பு வெளிப்படவில்லையென்று சுட்டிய கணிப்பு சரியானதாகவே இருப்பதை உணரலாம். சமணர்களின் இலக்கியமாக அடையாளப்படுத்துவது சீவக சிந்தாமணியை மட்டுமே. அதன் காலம் ஆயிரத்தெண்ணூறு வருஷமிருக்குமென்று சொல்லியிருப்பது, சங்க காலத்தை ஒட்டியே எழுதப்பட்டதென்ற கருத்தினை உடையவர் என்பதை அறிவிக்கிறது. சமணர்களின் காலமாகக் சுட்டி, அடுத்தடுத்து பக்தி இலக்கிய சைவ வைணவ இலக்கியம் குறித்துப் பேசியிருப்பினும், பொதுப்பட நின்று தமிழ் மொழிக்கான பங்களிப்பாக சமணர்கள் எழுதிய நிகண்டுகள் நன்னூல் காரிகை நம்பியகப்பொருள், சிந்தாமணி என்று வரிசைப்படுத்துகின்றார்.

இவ்வாறு பெருமளவு சமண இலக்கணங்களும் இலக்கியங்களும் மதத்தை முன்வைத்து வலியுறுத்தாமல் எழுதப்பட்டமையைக் குறித்துக் காட்டியிருப்பதையும் உணரமுடிகிறது, இவர்கள் காலத்தில் சமஸ்கிருத மொழி தமிழோடு கலந்து பெருமளவுப் பயன்பாட்டில் வந்ததென்பதையும் உணர்த்துவதோடு நச்சினார்க்கினியரைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். இவர் சைவ உரையாசிரியராக மாறிப் போயினும் அடிப்படையில் சமண மதத்திலிருந்து கிளர்ந்தெழுந்தவரென்பதையும் தருகிறார். இதற்கடுத்த காலமாகக் குறிப்படும் இதிகாச காலத்திலும் சமண இலக்கியங்களும் இலக்கணங்களும் தோன்றியதாகச் சுட்டிச் செல்கின்றார்.

### 1.1.1.2. வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியாரின் தொன்மப் புரிதலின்வழி உயர்தனிச்செம்மொழி

எனைத்தானும் நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்

என்னும் குறளை நெற்றியில் எழுதிக் கொண்டதைப்போல் அச்சடித்துக் கொண்டு 1902 கார்த்திகை மாதத்தில் (சுபகிருது ஆ) ரா. இராகவையங்காரை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப்பட்டதே 'செந்தமிழ்' என்னும் இலக்கிய ஆராய்ச்சி இதழாகும். இவ்விதழ் மதுரையில் பாண்டித்துரை என்னும் செல்வந்தரால் நிறுவப்பட்ட நான்காம் தமிழ்ச்சங்கம் என்னும் அமைப்பின் தமிழ் செயல்பாடுகளில் ஒரு பிரிவாகும்.

தமிழ் இலக்கியப் பரப்பின் புதிப்புச் செயல்பாடுகள் பெருமளவில் நிகழ்த்தப்பட்டதால் அந்நூலைக் கற்கும் சூழல் உருவானது. கசடற கற்கும் உளஇயல்பு கற்போரிடையே இருந்தமையால், ஆய்வு மனஉணர்வு வெகு இயல்பில் கிளர்ந்தெழுந்தது. இத்தகைய எழுதல் எழுதச் சொல்லி தூண்டியது. அதன் விளைவாகக் கட்டுரை முயற்சிகளும் நுண்மாண் நுழைபுலத்தோடு கூடிய நூலாக்கச் செயல்பாடுகளும் உருவாகத் தலைப்பட்டன. அச்சு இயந்திரத்தின் பசியை அறிஞர் பெருமக்களும் அறிஞர் பெருமக்களின் ஆய்வு பசியை அச்சு இயந்திரங்களும் போட்டிப் போட்டு கொண்டு பசியாறத் தொடங்கின. இத்தகைதோர் செயல்பாட்டின் ஒரு வெளிப்படலாக மதுரையின் நான்காம் தமிழ்ச் சங்கத்து சென்னை மாகாணக் கூட்டம் மதுரையில் கூடிய தருணத்தில் அறிஞர் பலரும் ஒன்றுகூடி தமிழ் வளர்ச்சிக்கான நடவடிக்கைகள் குறித்தும் அதற்காகக் செயல்பட வேண்டிய முறைமைகள் குறித்தும் அலோசித்தனர். அதன் விளைவாகத் தமிழ்க் கல்வி நிலையம் தோன்றுவதற்கும், அச்சில் வெளிவந்துள்ள பழந்தமிழ் நூல்களைப் பலரும் கற்றுணர ஏற்பாடுகள் செய்வதற்கும், இன்னும் அச்சுக்கு வராத இலக்கியங்களின் சுவடிகளைக் கண்டெடுத்து பதிப்பாக்கம் செய்வதற்கும்,

பிறமொழிப் படைப்பு இலக்கியங்களைத் தமிழில் மொழியாக்கம் செய்வதற்கும் ஆய்ந்தாய்ந்து கற்றோர்களைக் கொண்டு சொற்பொழிவு நிகழ்த்துவதற்குமான ஏராளமான திட்டங்கள் வகுக்கப்பட்டன. இவற்றின் அனைத்திற்குமான மையப்புள்ளியாக நான்காம் தமிழ்ச் சங்கமும், செந்தமிழ் இதழும் செயல்படத் தொடங்கின. இத்தகைய பெரும் நோக்கோடு 1902 இல் செயல்படத் தொடங்கிய இவ்விதழில் ஆய்வதற்கான, அறிவுப் புதையல்களும் பல்வேறு விதமான களங்களும் காட்சிகளும் கொட்டிக் குவிந்து கிடந்தாலும், இவ்வாய்வின் நோக்கத்தைக் கருத்தில் கொண்டு 1930 வரைக்கும் வெளிவந்துள்ள 'சங்க – கால' ஆய்வுப் போக்குகளை ஆராய்வோம்.

1902 இன் முதல் தொகுதியின் முதல் இதழின் முதல் கட்டுரை, ஆய்வு திறம் நிறைந்த வி.கனகசபைப் பிள்ளை எழுதிய சோழ சக்கரவர்த்திகள் என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. இக்கட்டுரையில் சங்க காலக் சோழர்கள் குறித்த கருத்துக்கள் கிடைக்கப் பெறுமென நோக்குகையில், கால ஆராய்ச்சி குறித்த சிந்தனை இனிவரும் காலங்களில் வரக்கூடும் என்பதற்கான அறிகுறிகள் தென்பட்டதை மட்டும் உணரமுடிந்தது. இவ்வுணர்தலுக்குச் கிடைக்கப்பெறும் சான்றுகளாக, வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் எழுதியிருக்கும் 'உயர்தனிச் செம்மொழி என்னும் கட்டுரையும் வி. கனகசபைப் பிள்ளையின் கட்டுரையோடு, கைக்கோர்த்துக் கொண்டுள்ளதைக் காணமுடிந்தது.

“உயர்தனிச் செம்மொழி” என்னும் தலைப்பில் அமைந்திருக்கும் வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் கட்டுரை, சங்க காலம் குறித்து வெளிப்படையான கருத்தினை முன் வைக்க வரவில்லையென்றாலும், தொன்மையான தன்மையைத் தமிழ்மொழிப் பெற்று வட இந்தியாவில் சமஸ்கிருதம் உணரப்படுவதைப் போல் தென்னிந்தியாவில், தமிழ்மொழி ஏற்கப்பட வேண்டும் என்பதோடு இந்தியா முழுமையும் இவ்வுண்மை உணரப்பட வேண்டும் என்பதை ஒங்கி ஒலிக்கிறது. அதாவது;

> தென்னாட்டின்கட் சிறந்தொளிராநின்ற நம் அமிழ்தினுமினிய தமிழ்மொழி எவ்வாற்றானாராய்ந்த வழியும் உயர்தனிச் செம்மொழியே யாமென்பது திண்ணம். இத்துணையுயர்வுஞ் சிறப்பும் வாய்ந்த நம் அருமைத் தமிழ் மொழியை உன்னாட்டுப் புன்மொழிகளோ டொருங்கெண்ணுதல் தவிர்த்து, வடநாட்டுயர் தனிச்செம்மொழி சமஸ்கிருதமெனக் கொண்டாற்போலத், தென்னாட்டுயர் தனிச் செம்மொழி தமிழெனக் கொண்டு விதிகள் வகுத்தலே ஏற்புடைத்தாம்,
>
> (வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, 1902;21)

என்று விரித்துரைக்கின்றார். இக்கூற்றால், சமஸ்கிருத மொழியின் தோற்றம் எவ்வாறு தொன்மை வாய்ந்தாக அறிஞர்களால் ஏற்கப்பட்டதோ, அவ்வாறே தமிழ் மொழியும், தொன்மையும் மரபும் மிக்கது என்பதை விளக்கிக் கூறியிருப்பதைக் காண்கிறோம். இத்தகைய செம்மொழிச் சிந்தனையை முதன் முதலில் வெளிப்படையாக வலியுறுத்திய தமிழறிஞர் இவராக இருப்பதையும் நினைவுறுத்திக் கொள்ளலாம். மேற்கண்ட இரு முயற்சிகளும் சங்ககாலம் குறித்த காலப்புரிதலை வெளிப்படையாய் செய்யவில்லையென்றாலும், பின்னாளில் நிகழ்ந்த கால ஆராய்ச்சிப் பற்றின தளத்திற்கு இட்டுச்செல்லும் ஏற்பாட்டினைச் செய்யும் விதத்தில் அமைந்துள்ளதை மறுப்பின்றி உணரமுடிகிறது. இதனையடுத்தே தமிழ் மொழியின் தொன்மை வரலாற்றைப் பறைசாற்றும் சங்க இலக்கியங்களின் கால ஆய்விற்கும் சென்றிருப்பதைப் பார்க்கமுடிகிறது.

### 1.1.1.2.1. தமிழ் மொழி வரலாற்றுச் சிந்தனையும் சங்க காலப் புரிதலும்

1903 இல் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியர் (பரிதிமாற்கலைஞர்) எழுதிய 'தமிழ் மொழி வரலாறு' என்னும் நூலில், எட்டாம் பகுதியில், தமிழ் இலக்கிய பரப்பினைக் கீழ்வருமாறு காலப்பகுப்புச் செய்கின்றார்.

> இனி I ஆதிகாலம் : II இடைச்சங்கம் : 1) முற்பகுதி, 2) பிற்பகுதி : III பிற்காலம் என வெவ்வேறு பாகுபாடு செய்து கொண்டு தமிழ் நூற்பரப்பை ஒராற்றான் ஆராய்வோம். I ஆதிகாலம் : கி.பி.100–க்கு முற்பட்ட காலம் II இடைக்காலம் : 1) முற்பகுதி : கி.பி.100 முதற் கி.பி.600 வரையிலுள்ள காலம் 2) பிற்பகுதி : கி.பி.600 முதற் கி.பி.1400 வரையிலுள்ள காலம் III பிற்காலம் : கி.பி.1400 முதல் இற்றை நாள் வரையிலுள்ள காலம்.
>
> (வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரி, 1927;85)

என்று வரையறைப்படுத்திக் கொண்டும் இவ்வாதிகாலமென்பது தமிழ்ச் சங்கங்களான தலை, இடை, கடை ஆகிய முச்சங்கங்களும் நிலவிய காலமென்றும் கூறத் தொடங்குகின்றார். இதற்கு ஆதாரமாக இறையனாரகப் பொருளுரையை அடிப்படையாகக் கொண்டிருந்தமை தெரியவருகிறது. இவ்விரையனார் அகப்பொருளுரைக் கூறும் தலைச்சங்கத்திலிருந்த (49) புலவர்களும் அது நிகழ்ந்த 4449 ஆண்டுகளும், அக்காலத்தில் இயற்றப்பட்ட நூல்களான பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரையும் குறிப்பிட்டு காய்சின வழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மரென்ப என்பதையும் தலைமையேற்றவர் அகத்திரெனினும் அவருக்கு ஆதார நூல் அகத்தியமென்பதுமாக, இறையனார் உரை உரைப்பதைத்

தொகுத்தளித்திருக்கிறார். மேலும் கடல் கோள் நடைபெற்று கபாடபுரத்திற்கு மாற்றப்பெற்றதும் பின்னர், தென் மதுரைக்குக் கொணரப்பட்டதையும் எடுத்துக் காட்டுகின்றார். இதனைக் கீழ்வருமாறு தருகிறார்.

> இனித் தலைச்சங்கமிகுந்த நாலாயிரத்து நானூற்று நாற்பது வருஷங்களும், இடைச்சங்கமிருந்த மூவாயிரத் தெழு நூறு, வருஷங்களும், கடைச்சங்க மிகுந்த ஆயிரத்தொண்ணூற்றைம்பது வருஷங்களுமாகக் கூறி ஒன்பதினாயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூறு வருஷங்களாகின்றன. இதனைக் கி.பி. முதல் நூற்றிலிருந்து பிற்கணக்கிட்டுச் சென்றால் தலைச்சங்கம் கி.மு. ஒன்பதினாயிரத்து தொள்ளாயிரத்துத் தொண்ணூறு வருஷங்கட்கு முன்னர் தாபிக்கப்பட்டிருந்தல் வேண்டும். தமிழ் மொழியின் தொன்மை மாட்சிகூறி வந்தவிடத்துக் கி.மு.8000 ஆண்டுகட்கு முற்பட்ட எழுத்துக்சாதனங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள தென்றமையால் அதனினும் ஏறக்குறைய பத்தொன்பது நூற்றாண்டுக்கு முன்னரே தலைச்சங்க மேற்பட்டுவிட்ட தென்றல் சாலாதென வாதித்தற்கும் இடமுண்டு, எனினும் காலாந்தரத்தில் ஆராய்ச்சிகளால் இவ்விடர்ப்பாடு களையப் பட்டு உண்மை வெளிப்பட்டு மேற்கூறிய கூற்றுக்கள் வலியுறினும் உறலாம்.

(மேலது;89)

என்று நடுவு நிலையோடு கூறியுள்ளார். ஆயினும் 8000 ஆண்டுகளுக்கு முற்பட்ட எழுத்துகள் கிடைத்திருக்கின்றன என்று கூறியிருப்பதற்கான சான்றினைக் காட்டவில்லை. மேலும், இம் முச்சங்க நூல்களையும் வரிசைப்படுத்திட இறையனார் களவியல் உரையினையே அடியொற்றி,

> தலைச்சங்கத்தார் காலத்துச் செய்யப்பட்ட 'அகத்தியம்' என்ற நூலின்கட் சில சூத்திரங்களும், இடைச்சங்கத்தார் காலத்துச் செய்யப்பட்ட 'தொல்காப்பியம்' என்ற இலக்கணநூலும் கடைச் சங்கத்தார் காலத்துச் செய்யப்பட்ட 'எட்டுத்தொகை' என்ற நூற்றொகையுள்ளடக்கிய எட்டு நூல்களும் 'பத்துப்பாட்டும்' 'பதினெண்கீழ்க்கணக்கு' மாம்

(மேலது;89)

என்று காட்டுகின்றார். இதற்கு ஆதாரமாக 'நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறுநூறு' என்ற பாடலையும் பதினெண்கீழ்கணக்கு நூல்களை விளக்க

> நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமும்
> பால்கடுகய் கோவை பழமொழி மாமூலர்
> இன்னியை காஞ்சியோ டேலாதி யென்பவே
> கைந்நிலை யொ டாங்கிழ்க் கணக்கு

(மேலது;89)

என்ற பாடலையும் தருகின்றார்.

அடுத்து இடைச்சங்க காலம் பற்றிக் கூறப் புகுபவர் முற்பகுதி என்று குறிப்பிட்டு,

> இது கடைச் சங்க பிற்காலமாம்; கி.பி. 100 முதற் கி.பி.600 வரையிலுள்ளது இக்காலத்திலே தான் ஐம்பெருங்காப்பியகளு மெழுந்தன. அவைதாம் சிந்தாமணி சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி, என்பன வாம். இவற்றுள் சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணிக்கு முன்னரேயாக்கப்பட்டிருத்தல் வேண்டும்.
>
> (மேலது;91)

என்ற தெளிவோடு, நீலகேசி, சூளாமணி, யசோதா காவியம், நாககுமார காவியம், உதயணன் கதை, எனும் ஐஞ்சிறு காப்பியங்களும், மணிவாசகர் எழுதிய திருவாசகமும், திருச்சிற்றம்பலக் கோவையும், மேருமந்தர புராணம் என்ற சைன நூலும், திவாகரம், பிங்கலம் என்ற நிகண்டுகளும் அனரியில் என்ற அலங்கார நூலும் முத்தொள்ளாயிரமும் ஆழ்வார்களின் படைப்புகள் சிலவும், என்று பொதுவாகக் கூறி, இவைகள் அனைத்தும் கடைச்சங்க காலத்தின் முடிவு வரை வந்தனயென்று முடிக்கிறார். இவரின் ஆய்வுப்போக்கு தொன்ம நம்பிக்கையின் அடிப்படையில் எழுதப்பட்டிருக்கும் இறையனார் களவியல் உரையை அடியொற்றி அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

### 1.1.1.3. ரா. இராகவையங்காரின் முச்சங்கப்புரிதல்

தமிழ் மொழியும் ஆரியர்களின் வடமொழியும் தொன்மை பெற்றுத் திகழ்கிறதென்று இம்முதல் இதழிலேயே சொல்லத் தொடங்கும், “தழற்புரை நிழற்கடவுடந்ததமிழ் தந்தான்” என்று ஆரணிய காண்டம் அகத்திய படலம் 4 அடியை எடுத்தாண்டதோடு,

> வண்புகழ் மூலர் தன் பொழில் வரைப்பி
> னுடபெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
> யாப்பின் வழியது

என்ற தொல்காப்பிய பொருளதிகாரத்தின் செய்யுளியல் 79 நூற்பாவை எடுத்துக் காட்டி இதற்குப் பொருளாக,

> சேர சோழ பாண்டியரான் ஆளப்பட்ட வேங்கடங் குமரி என்பவற்றிடைக் கிடந்த நிலவுலகில் அவர் பெருங்கொடையானே நல்லிசைப் புலவர்களாற் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்டு வந்தது.
>
> (மேலது;2)

எனத் தருகின்றார். இம்மூவேந்தரும் படைப்புகாலம் தொட்டே இந்நாட்டின் அரசுரிமைப் புரிந்தனரென்று காட்டுகின்றார். இக்கூற்றிற்குச் சான்றாக, வழங்குவதுள் வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி பண்பிற்றலைப் பிரிதலின்று (திருக்குறள் குடிமை 5) என்னும் குறளினைக் காட்டி, இதற்கு உரை வரைந்த பரிமேலழகர், பழங்குடி என்பதற்கு, சேர, சோழ, பாண்டியரை நினைவுறுத்தியிருப்பதாக நினைவுபடுத்தி இறுதியாக வான்மீகி எழுதிய இராமாயணத்தில், கிஷ்கிந்தா காண்டம் சருக்கத்தின் 12ம் சுலோகத்தில் சோழ, பாண்டிய, கேரள நாடுகளையும் காண்பீர் என்று குறிப்பிட்டிருப்பதும், அதே சருக்க சலோகத்தில் 18–19 ஆம் அடிகளில் ''பின்பு பொன்னிறைந்ததாயும் நகரத்து அரனோடு இணைக்கப்பட்டதாயும் உள்ள பாண்டியர் வாயிற்கதவை வானரர்காள்? போய்க் காண்பீர்'' என்று கூறியிருப்பதையும் சுட்டி தமிழ் நாட்டின் தொன்மையும், இவ்வேந்தர்களின் பழைமை வாய்ந்த ஆதாரத்தையும் தருகிறார். இத்தொன்மை புரிதலுக்குச் சான்றாக இறையனார் களவியலுரையை ஏற்றிருப்பதும் தெரியவருகிறது.

மேற்கண்ட தரவினையொட்டி பாண்டியர்கள் தமிழ்ச்சங்கம் நிறுவி தமிழ் படைப்பிலக்கியங்களை வளர்ந்தெடுத்தனர் என்பதையும் இப்பாண்டியர்களைத் தமிழ் நாடன் எனவும் இவராண்ட பகுதியைச் செந்தமிழ் நாடு எனவும் அழைக்கப்படுவதை நினைவுறுத்துகின்றார். ' தமிழ் கெழு கடல்'' என்ற (புறம் 58) பாடலின் ''தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ் நனை மருகின் மதுரை'' என்று சிறுபாணாற்றுப்படை 46, 47 பாடல்கள் தரும் குறிப்புகளையும் தருகின்றார். மேலும், திருக்கோவை, கலிங்கத்துப் பரணி முதலிய பிற்பட்ட நூலிலிருந்தும் குறிப்புகளைக் கையாண்டுள்ளார். நச்சினார்க்கினியர் தொல்காப்பிய மரபியலுரையில் (34) மூன்று வகை சங்கத்து நான்கு வருணத்தொடுபட்ட சான்றோரும் என்பதால் தமிழாராய்ந்த புலவர் நான்கு வருணத்தவருமாயின் என்பதையும் அடுத்தடுத்து அடுக்கடுக்காகக் கொடுத்து இவற்றின் மூலம், முச்சங்க வரலாறென்பது உண்மையே என்றுரைத்திருப்பதை அறிகின்றோம். தமது இந்நம்பிக்கைக்குக் காச்சின வழுதி என்னும் பாண்டிய மன்னர் அவைக் கூட்டியதாக வரும் பாண்டிய நெடுஞ்செழியன் பாடிய பாடலைக் கீழ்வருமாறு தருகிறார்.

*ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவ - னாக*
*வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்*
*புலவர் பாடாது வரைகவென் னிலவரை*

(மேலது;3)

என்று வெஞ்சினத்தோடு பாடிய புறப்பாடலும் சங்கம் இருந்தமைக்கும் தமிழ்ப்புலவர்கள் அவை அமைத்துப் பாடியமைக்கும் தக்க சான்றுகளென்று உரைக்கிறார்.

பாண்டியரைப் போலவே பிற மன்னர்களும் சங்கம் அமைத்து தமிழ்ப்புலவர்களையும், அவர்களின் கவியாக்க முயற்சிகளையும் ஆதரித்தனர் என்பதை எட்டுத்தொகையில் வரும் சேர, சோழ மன்னர்களைப் பற்றின பாடல்களால் காட்டுகின்றார். மேலும் பொய்கையார், கோவூர்கிழார், பாரி, கபிலர் போன்ற புலவர்கள் இயற்றிய பாடல்களின் வழியும் சொல்லும் ரா. இராகவையங்காரின், இம்முகவுரையிலிருந்து சங்க இலக்கியங்கள் குறித்தும் சங்க காலம் குறித்தும் அதன் தொன்மை பின்புலம் பற்றியும் ஆராய்ந்திருக்கிறாரென்பதைப் பார்க்கிறோம். சங்கம் பற்றியும் சங்க இலக்கியங்களின் காலம் குறித்தும் ஆய்வதற்கான தொடக்கப் புள்ளியாகவே இம்முகவுரையையும் சோழ சக்கரவர்த்திகள் என்ற தலைப்பிலான, வி. கனகசபைப் பிள்ளையின் கட்டுரையும் 'உயர்தனிச் செம்மொழி' என்னும் தலைப்பிலான வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியின் கட்டுரையும் கண்டோம். மொத்தத்தில் இம்மூன்று நிலைகளும் சங்க இலக்கியங்களின் காலம் குறித்த ஆராய்ச்சியையும் அதன் தொன்மை சார்ந்த புரிதலையும் நோக்கியப் பயணப்படுதலை அறிமுகம் செய்து வைப்பதைப் பார்க்கிறோம்.

### 1.1.1.3.1. சங்க காலப் பெண்பாற்புலவர்களும் கால ஆய்வும்

'நல்லிசைப்புலமை மெல்லியலார்கள்' என்னும் தலைப்பில் எழுதத்தொடங்கும் ரா. இராகவையங்கார், இக்கட்டுரையின் வாயிலாகத் தொல்காப்பியர் மரபியலிலும், களவியலிலும் மெய்ப்பாட்டியலிலும் கூறியுள்ள ஆண்,பெண் குறித்த இலக்கணத்தைச் சுட்டிக் காட்டி, ஆணின் அறிவுக்கும் பெருமைக்கும் நிகராகப் பெண்ணறிவும் போற்றப்பட்டுள்ளதாக உணர்த்தி தொடங்கும் கட்டுரை, சிற்சில இடங்களில் பெண்ணைத் தாழ்த்தியிருக்கும் மரபையும் பெண்பாற் புலவர்களின் அறிவு நுட்பத்தையும் படைப்பாற்றல் ஆளுமை திட்பத்தையும் கூறி, ஆதிமந்தியார், வெள்ளிவீதியார், ஔவையார், பாரிமகளிர், பூதப்பாண்டியதேவியார், குறமகள் இளவெயினி, பேய் மகள் இளவெயினி, காவற்பெண்டு காலைக்காற்பேயம்மையார், வில்லிபுத்தூர்க் கோதையார் முதலிய புலவர்களை வரிசைப்படுத்தி, மேலும் எழுத புகவிருக்கும் ஆய்வெண்ணத்தை வெளிபடுத்தி ஆதிமந்தியார் குறித்து முதலில் எழுதியுள்ளார்.

இவ்வாதிமந்தியாரை அறிமுகம் செய்ய வரும் இரா. இராகவையங்கார் தொல்காப்பியர் அகத்திணையியலில் கூறியுள்ள "மக்கனுதவிய

விசனைந்திணையுஞ், சுட்டியொருவர் பெயர்கொளப் பெறாஅர்'' என்னும் சூத்திரத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர்,

*மள்ளர் குழீஇய விழவி னானு*
*மகளிர் தழீஇய துணங்கை யானும்*
*யாண்டுங் காணேன் மாண்டக் கோனை*
*யானுமோ ராடுகள மகளே யென்கைக்*
*கோ டீ ரிலங்குபளை நெகிழ்த்த*
*நாடு கெழு குரிசிலு மாடுகள மகனே* (குறுந்தொகை;38)

(ரா. இராகவையங்கார், 1903–04;114)

என்னும் பாடலை எடுத்தாண்டுள்ளதை நினைவுப்படுத்தி, உரையைத் தெளிவிக்கும் பொருட்டு இப்பாடலை சுட்டியதோடு, ஆதிமந்தியரின் கவிப்புலமையை அறிமுகப் படுத்துகின்றார். இவ்வுரையில் ''இது காதலற் கெடுத்த ஆதிமந்திபாட்டு'' என்று குறிப்பிட்டுள்ளதற்கு நாயகனைக் காணப்பெறாத என்ற விளக்கத்தைச் சுட்டி உணர்த்தவரும் ரா. இராகவையங்கார், சிலப்பதிகாரத்தி (அந்தி) லும் மணிமேகலை (5) சிந்தாமணியிலும் (கன–34) இதே பொருளில் கையாளப்பட்டுள்ளதைத் தந்து இவர் புலமையை முன்னிறுத்தத் தலைப்பட்டுப் பின்னர், இவர் காலம் குறித்தச் சிந்தனைக்குச் சென்றுள்ளார். ஆதிமந்தியரின் காலம் எண்ணவாகயிருக்கும் என்ற கேள்வியை மனதில் கொண்டு, இவ்வாதிமந்தி திருமாவளவனென்றும் அழைக்கப்படும் கரிகாற்சோழனின் மகளென்று தனது ஆய்விற்கான அடியை எடுத்து வைத்திருக்கின்றார். இவன் காலத்தைக் கண்டறிந்து, அதன் வழியே இச்சோழனின் மகளான ஆதிமந்தியின் காலத்தை உணர்த்த வருகின்றார். இவ்வாதிமந்தி சேர நாட்டில் அக்காலத்தில் மன்னனாய் திகழ்ந்த ஆட்டனத்தியென்பவனை மணந்ததாகவும் இவ்விருவரும் கரிகாலனால், கழாஅர் என்னும் ஊரில் காவிரியின் கறையில் கொண்டாடப்பட்ட புதுப்புனல் விழாவிற்குச் சென்றதாகவும், அச்சமயத்தில் காவிரியின் நீரில் விளையாடிய சேரன் ஆட்டனத்தி அவ்வாற்றோடு சென்று விட்டதாகவும், அம்மன்னனை எங்குத்தேடியும் கிடைக்கப் பெறாமல் பெறும் துயருற்ற ஆதிமந்தி, மனத்தில் பெருக்கெடுத்தக் கண்ணீரோடு, தேடி அலைந்தாலென்றும் காவிரி கடலில் கலக்குமிடத்தில் நின்று கூவி அழைத்த ஆதிமந்திக்குக் கடலே ஆட்டனத்தியைக் கொண்டு வந்து தந்ததாகவும் சொல்லப்பட்டுவரும் செய்தியைத் தருகின்றார். நெடுங்தொகையும் (அகநானூறு) சிலப்பதிகாரமும் எடுத்துத் தரும் குறிப்புகளை ஆய்வுத் தன்மையோடு குறிப்பிட்டுள்ளார். மேலும் இக்கதை வழக்கு எடுத்தாளப்படும் நிலையைக் கூறவருபவர்,

இது பரணர் முதலிய நல்லிசைப்புலவரால் ஆங்காங்கெடுத்துப் பாராட்டப்படுவது. தலைவர் பிரிவுக்குத் தலைவியர் வருந்து மிடனெல்லாம் இவ்வாதிமந்தியார்க்கு நேர்ந்த பெருந்துயரே எடுத்துவமை கூறுப்படுவது.

(மேலது;115)

என்று கூறுவதிலிருந்து இக்கதைப் பல புலவர்களாலும் எடுத்தாளப் பட்டமைக்கானச் சான்று வெளிப்படுகிறது. மேலும் ஆதிமந்தி என்பவரை 'மந்தி' என்றும் 'அத்தி' என்றும் குறிக்கப்படுவதை நினைவுறுத்துகின்றார். இதற்கான நேரடியான ஆதாரமாக, அகநானூற்றில் வெள்ளிவீதியார் எழுதியுள்ள (45) பாடலைக் கீழ்வருமாறு எடுத்துத் தருகின்றார்.

காதலற்கெடுத்த சிறுமையொடு
நோய்கார்ந் தாதிமந்தி போலப்
பேதுற் றலந்தன னுழல்வேன் கொல்லோ''

(வெள்ளிவீதியார் அகம்;45)

என்றும், அகநானூற்றிலேயே வரும் பரணரின் (76, 222, 234) பாடல்களையும் சிலப்பதிகாரம் வஞ்சினமாலையில் வரும்,

............................................ உரைசான்ற
மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக்கோன்
றன்னைப் புனல்கொள்ளத் தான் புனலின் பின்சென்று
கன்னவி றோளாயோ வென்னக்கடல் வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்

(சிலப்பதிகாரம், வஞ்சின மாலை, அடி: 10–15)

என்னும் பாடலையும் பெரும் ஆதாரமாகத் தந்திருப்பதன் வாயிலாகக் கரிகாலன் காலத்தைக் கூறி ஆதிமந்தியின் காலத்தைத் தெளிவிக்க வருவதைப் பார்க்கிறோம். மேலும், சேரன் ஆட்டனத்தியைப் பற்றிப் கூறவருபவர், இவ்வத்தி என்றும் அழைக்கப்படும் மன்னனுக்கு நன்னன், ஏறை, நறும்பூணத்தி முதலிய சிலர் படைத்தலைவராகக் கூறப்படுதலால் இச்சேரனை வஞ்சிக்கோ என்றலும் ஏற்கத்தக்கதெனக் கூறுகின்றார். இத்தகவலோடு, கரிகால் வளவன் புதுப்புனல் விழா கொண்டாடியதையும் சுட்டி, கடலாடுகாதையில் பெறப்பட்டதென்பதையும் கூறி, கீழ்வருமாறு பெண்பாற் புலவர்களின் காலத்தையும் ஊகிக்கின்றார்.

அறிவாற் கலைமகளே எனச் சிறந்த ஔவையார் பாடியருளிய ''நெடுமலைச் சிலம்பின்'' என்னும் நெடுந்தொகையில் ''வெள்ளி வீதியைப் போல நன்றுஞ் செலவயர்ந்தினால் யானே'' என

வருதலானே, வெள்ளிவீதியார் ஔவையாரின் முன்பட்டவராதல் அறியப்படுகிறது. அவ்வெள்ளி வீதியார் 'ஆதிமந்தி போலப் பேதுற்றலந்தனெ னுழல்வேன் கொல்லோ'' (அகநானூறு (45) என்றமையானே இவ்வாதிமந்தியார் அவர்க்கும் முற்பட்டவராகவும் தெளியப்படும்.

(மேலது;117)

என்று கூறி சரியாக ஆதிமந்தியின் காலத்தைக் குறிப்பிடுவதற்குக் கரிகாலனின் காலம் கி.பி.55 முதல் 95 வரை யென்று வி.கனகசபைப் பிள்ளை தம்முடைய Tamils Eighteen Hundred years ago, (Madras Review, page.433) என்னும் இதழில் ஆராய்ந்துள்ளதைக் காட்டி, இவ்வாதிமந்தி இவனுக்கு மகளென்பதால் கரிகாலனின் காலமே இவரது காலமாகும் என்று முடிவுக் கட்டுகின்றார். இதனால், கிடைக்கப்பெற்ற தரவுகளின் அடிப்படையில் தமது காலப்புரிதலை நிறுவியுள்ளாரென்பது தெரியவருவதோடு, அவ்வையார், வெள்ளிவீதியார் ஆகியோரின் காலம் குறித்த ஊகித்தலையும் வெளிப்படுத்தியுள்ளதையும் காண்கிறோம். அவ்வாய்விற்கு பெரும் ஆதாரமாய் வி.கனகசபைப் பிள்ளையின் நூல் விளங்கியிருப்பதையும் காணமுடிகிறது. செந்தமிழ் இதழில் சங்க காலம் குறித்த ஆய்வு பாதையில் இதுவே முதலாக வெளிப்பட்டுள்ளதையும் இங்கு நினைவுபடுத்திக் கொள்வோம்.

பங்குனி மாத இதழின் முதல் பக்கத்தில் ரா.இராகவையங்காரின் 'வெள்ளிவீதியார்' என்னும் தலைப்பிட்ட கட்டுரை வெளிவந்துள்ளது. இக்கட்டுரையில் காதல் பிரிவின் பெருந்துயரை வெள்ளிவீதியார் பாடியுள்ளமை குறித்து எழுதிக்காட்டியிருப்பதோடு வெள்ளிவீதியாரின் தலைவன் பிரிந்து சென்ற வழியிலேயே அதாவது, காட்டையும் கடும் புதிர் மண்டிய வழியையும் பொருள் படுத்தாமல் சென்றவள் என்று காதல் வரலாற்றைக்கூறி இவர் காதல் திறனை அவ்வையார் அகப்பாட்டில் (147) கூறியுள்ளதையும் நினைவுறுத்தி அவர் காலம் பற்றிக்கூற வருகையில் சென்றக் கட்டுரையில் காட்டியுள்ளதையே இங்கும் குறிப்பிட்டுள்ளார். அதாவது,

இவர் காதலற் கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்த தாதி மந்தி போலப் பேதுற், றலந்தனெனுழல்வேன் கொல்லோ' (அகம் – 45) என்பதனால் இவர் ஆதிமந்தியார்க்குப் பிற்பட்ட காலத்தவர் என்பதும், ஔவையார் வெள்ளிவீதியைப் போல (அகம் 147) என்பதனால் ஔவையாருக்கு முற்பட்ட காலத்தவரென்பதும் நன்குணரத்தகும்.

(மேலது;153)

என்று கூறி அவர் வரலாற்றை உணர்த்தும் பாடல்களாக நற்றிணை (70)ஆம் பாடலும் குறுந்தொகையின் (27, 44, 57, 120, 146, 149, 289) ஆகிய பாடல்களையும் (57) (120) அகநானூற்றின் (45, 392) செய்யுள்களும், சான்று பகர்வதாக எடுத்துரைத்துள்ளார். இவற்றால், ஆதிமந்தியின் காலத்திற்குச் சற்று முன்பு இருந்தவர் வெள்ளிவீதியார் என்பதை நிறுவுகின்றார்.

சித்திரை மாத இதழின் (பகுதி 6) முதல் பக்கத்தில் ரா.இராகவையங்கார் ஔவையார் என்ற தலைப்பில் தமது நல்லிசைப் புலமை மெல்லியலார்என்ற கட்டுரைத் தொடரினைத் தொடர்ந்துள்ளார். ஔவையாரின் சமகாலத்தவர்களாகச் சுட்டவருபவர் "பாகொன்று சொல்லி" என்னுற் தொண்டை மண்டல சதகசெய்யுளின் துணைக் கொண்டு கபிலர் வாதவூரில் பிறந்து வளர்ந்து பாரியுடைய பரம்பின் கண் வாழ்ந்ததும், அதியமான் தகடூரிலும். வள்ளுவர் மயிலையிலும் கூடலிலும் ஔவையார் பெண்ணையாற்றங்கரையிணுள்ள புள்ளூரினும் வாழ்ந்தனரென்பதைக் குறிப்பிட்ட தோடு கீழ்வருமாறு நிறுவுகின்றார்.

> இடங்குடி முதலியவற்றான் இக்கபிலர் முதலாயோர் வேற்றுமை பெரிதுடையரேனும் நுணுகி நோக்கின் இவர்கள் ஒரு காலத்தவர்களாதல், தெளிவாம். அதியமானை ஔவையார் பாடிய பாடல்கள் அவ்விருவரும் ஒரு காலத்தரென்பதைத் தெரிவிக்கும் அவன் தகடூர் பொருது வீழ்ந்தபோது அவன் பிரிவாற்றாதுபாடிய அரிசில்கிழார் பேகனாற்றுறக்கப்பட்ட கண்ணகி என்பவளை அவன் பாற்சேர்த்தல் வேண்டி அப்பேகனைப் பாடினரென்பது (146) ஆம் புறப்பாட்டான் அறியப்படுவது. அக்கண்ணகி காரணமாகவே அப்பேகனையே கபிலர் பரணர் பெருங்குன்றூர்க்கிழார் என்னுமிவர்களும் பாடியுள்ளாராதலின் (புறம் 115, 144, 145, 147) அதியமான், ஔவையார், அரிசில்கிழார், கபிலர், பரணர், பெருங்குன்றூர்க்கிழார் இவர்களெல்லாம் ஒரு காலத்தவராதல் நன்கு தெளியலாகும். வள்ளுவர் திருக்குறள் அரங்கேற்றியபோது அதனைக் கபிலருங் கேட்டுச் சிறப்பித்துப் பாடியிருந்தலின் (திருவள்ளுவமாலை) இக்கபிலர் முதலிய நால்வரும் ஒருகாலத்தவரென்பது தெள்ளிது.
>
> (மேலது;194)

மேலும் சான்றாகத் திருவள்ளுவரின் குறளை அரங்கேற்றியபோது, அதனைக் கபிலருங்கேட்டுச் இன்புற்றாரென்று திருவள்ளுவமாலையில் குறிப்புக் கிடைக்கப் பெறுவதைச் சுட்டி அதியமான் ஔவையார் அரிசில்கிழார், கபிலர், பரணர் ஆகியோர் ஒரு காலத்தவர் என்பதை உணர்ந்துகின்றார்.

இவற்றால் இவர்களது காலம் இன்னது என்று எண்ணால் திட்டமாகக் காட்ட வில்லையெனினும், இவர்கள் அனைவரும் சமகாலத்தவரென்பதை, நிறுவியுள்ளதைக் காண்கிறோம். இங்கு நினைவுறுத்த வேண்டியது யாதெனில் ஔவையார், வெள்ளிவீதியாரை உவமித்து பாடல் எழுதியிருக்கிறார்.

வெள்ளிவீதியாரின் பிற்பட்டவர் அவ்வை என்றும், வெள்ளிவீதியார் ஆதிமந்தியைச் சுட்டி எழுதியிருப்பதால் வெள்ளிவீதியாருக்கும் முற்பட்டவர் ஆதிமந்தி என்று நிறுவி, இவ்வாதிமந்தி கரிகாலனின் மகளென்பதால் வி.கனகசபைப் பிள்ளைக் காட்டிய சான்றுகளின் அடிப்படையில் கரிகாலனின் காலமான கி.பி.55 முதல் 95 வரையே இவ்வாதிமந்தி என்று சொல்லி முடிவுக்கட்டியதை இவ்வாண்டின் மாசி மாத இதழில் காண்டோம். இதனை இவ்விடம் நினைவுறுத்திமைக்குக் காரணம், ஆதிமந்தி காலத்திற்குப் பிற்பட்டவர், வெள்ளிவீதியாரெனில் கி.பி.1 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு என்பது தெரியவருகிறது. இவ்வெள்ளிவீதியாருக்கும் பிற்பட்டவர் ஔவையாரும் அவர் சம காலப் புலவர்களாகச் சுட்டப்பட்டவர்களுமென்றால் கி.பி.2, 3 ஆம் நூற்றாண்டை சேர்ந்தவர்களாகச் சுட்ட வருவதைப் பார்க்கிறோம். கடைச்சங்க இறுதிகாலத்தில் வாழ்ந்தவராகத் திருவள்ளுவரின் காலத்தைக் கி.மு.31 என்று பின்னர் வந்த அறிஞர்கள் எழுதி நிறுவியுள்ளனர். எனவே இவர் திருவள்ளுவரின் காலத்தை என்னவாக எண்ணினாரென்பது தெளிவில்லை. திருவள்ளுவர் காலத்தோடு இம்முடிவு முரண்பட்டு நிற்பதைப் பார்க்கிறோம். ஆதிமந்தி காலம் முதல் ஔவையாரின் காலம் வரையான புரிதலுக்குள் திருவள்ளுவரின் காலமும் குறிக்கப்படுவதால், திருவள்ளுவர் கி.பி. 1,2 நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டவரென்ற கொள்கை உடையவரென்பதும் கிடைக்கிறது.

### 1.1.1.3.2. நல்லிசைப் புலமை மெல்லியலார்களும் அவர்களின் காலவரையறையும்

ஆடி மாத இதழில் (பகுதி 1) (தொகுதி 2) 'பூதப்பாண்டியன் தேவியார்' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார். இக்கட்டுரையில், பாண்டியர்கள் கல்வியில் சிறந்தோங்கி விளங்கியச் சிறப்பினைச் சொல்லத் தொடங்கி பூதப்பாண்டியன் தேவியார் கணவனை இழந்ததால் தீட்புகுந்த வரலாற்றினைக் கூறும் அகப்பாடலான (புறத்தில் அமைந்துள்ள) 'பல் சான்றீரே பல்சான்றிரே செல்கெனச் சொல்லா தொழிகென விளக்கும் பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே' என்பதனை எடுத்துரைக்கத் தொடங்குபவர்.

இறுதியாக, பூதப்பாண்டியன் காலம் இன்னவாக இருக்குமென கூறி அதன் வாயிலாகப் பூதப்பாண்டியன் தேவியாரின் காலத்தை உணர்த்தியுள்ளப் பாங்கை அறியமுடிகிறது. அகநானூற்றில் பூதப்பாண்டியன் பாடிய 'நெடுங்கரைக் கான்யாற்றுக்கரும்புனல்' என்னும் செய்யுளில், 'திதியனைப்பற்றிக் குறிப்புக் காணப்படுவதால், பொதியமலைப் பகுதியிலிருந்த இத்திதியன்' என்னும் குறுநில மன்னன், நெடுஞ்செழியனால் தலையாலங்காலத்தில், போரின் வாயிலாக வெல்லப்பட்ட எழுவருள் ஒருவன் என்ற தகவலை "பகுவாய்வரா அல்" என்னும் பாட்டிலும் மதுரைக் காஞ்சியில் கிடைக்கப்பெறும் குறிப்பாலும் நிறுவி, இதனால் நெடுஞ்செழியனுக்கும் திதியனுக்கும் பிற்பட்டவனாகக் பூதப்பாண்டியன் வாழ்ந்திருப்பதற்கான சான்றாகக் கருதி அதனையே தந்து முடிக்கின்றார். இதனால், பூதப்பாண்டியன் தேவியார் காலம் நெடுஞ்செழியனுக்குப் பிற்பட்டதென்பதை உணர்கிறோம்.

ஆவணி மாத (தொகுதி 1 பகுதி 10) இதழில் 'நல்லிசைப் புலமை மெல்லியலார்கள்' என்ற தலைப்பில் குறமகள் இளவெயினி பற்றி எழுதத் தொடங்குபவர், தாம் எடுத்துக் கொண்ட சங்க இலக்கியங்களின் பெண் பாற்புலவர்கள் பற்றின தொடர்க்கட்டுரை ஒட்டத்திற்கு முடிவு காண்கிறார். இத்தலைப்பு என்னவோ, பெண்பாற்புலவர்களென்றாலும் இதனுள் சங்க கால ஆண்பாற் புலவர்களின் காலத்தையும், மன்னர்களின் காலத்தையும் சுட்டியிருப்பதையும் கண்டோம். இவ்விறுதிப் பகுதியில் அவர் வரிசைப் படுத்தியுள்ள பெண்பாற் புலவர்கள் கீழ்வருமாறு அமைகின்றனர்.

குறமகள் இளவெயினி, குறமகள் குறியெயினி, பேய்மகள் இளவெயினி, காவற்பெண்டு. காக்கை பாடினியார், நச்செள்ளையார். ஒக்உர்மாசாத்தியர், குன்றியாள், வருமுலையாரித்தி, நெடும்பல்லியத்தை, கழார்க்கீரனெயிற்றியார், அள்ளூரர் நன்முல்லையார், நக்கண்ணையார், நன்னாகையார், கச்சிப்போட்டு நன்னாசையார், வெண்பூதி, மாறோகத்து நப்பசலையார், போந்தைப்பசலையார், குமிழி நாழானப் பசலையார், காமக்கணிப் பசலையார் ஆகியோரை வரிசைபடிக்கூறி, பூங்கண்ணுத்திரையார், நல்வெள்ளி, மதுவோலைக் கடையத்தார், நல்வெள்ளை, பொன்மணியார், மாற்சாத்தியார், முன்னியூர்ப்பூதியார், வெண்மணிப்பூதிலார், முதலியோரும் பெண்பாற் புலவர்களாக ஊகிக்க வாய்ப்பிருக்கிறதென்பதைக் குறிக்கின்றார். இதனைத் தொடர்ந்து கல்மொரு சிறு நுரையார், வில்லகவிரலினார், பழங்கயிற்றினார் முதலான பலரும் பாடியுள்ளதை அறிவிக்கின்றார். இறுதியாக இச்சங்கப்புலவர்களைப் பற்றி கீழ்வருமாறு முடிக்கின்றார்.

> இத்துணையும் கூறியவாற்றான் வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇய, துய்கச்செந்தமிழ்ச் சங்ககாலத்துத், தீதறவிளங்கிய மூதுணர்வுடைய பெண்பாற் கல்விபரப்பு ஒருவாறுணரப்படும்.
>
> (மேலது;338)

இவ்விறுதிப் பகுதியில் கூறப்பட்ட அனைத்துப் பெண்பாற் புலவர்களையும் குறிப்பிட்டு அவர்கள் எழுதியுள்ளப் பாடல்களையும் இடம் பெற்றிருக்கும் நூல்களையும் சுட்டி அவர்கள் குறித்த சிறு அறிமுகத்தைத் தந்திருப்பதையும் காணமுடிகிறது. இவர்களின் காலம் குறித்து தொடக்கத்தில் ஆதிமந்தியின் காலத்தைக் கரிகாலன் காலத்தோடு நிறுவியதைப் போல் திட்டவட்டமாக நிறுவாமல், இவர்கள் அனைவரும் சங்க காலத்துப் பெண்பாற் புலவர்கள் என்பதை மட்டுமே கூறியிருப்பதையும் காணமுடிகின்றது. இப்புரிதல் இறையனார் அகப்பொருளுரையின் அடிப்படையிலும் தொன்மநம்பிக்கையின் அடிப்படையிலும் இருப்பதைத் திருவள்ளுவரின் காலப்புரிதலைத் தருவதைப் பார்க்கிறோம்.

### 1.1.1.4. வா. குலாம் காதிறு நாவலரின் சங்கம் பற்றிய புரிதல்

வா. குலாம் காதிறு நாவலன் என்பவர் 'தமிழ்ச் சங்கம்' என்னும் தலைப்பிட்டு எழுதியுள்ளார். அக்கட்டுரையில் இடைச்சங்கம் குறித்து கீழ்வருமாறு தரும் தகவல்களைக் காண முடிந்தது.

> கபாடபுரத்தின் ஒரு தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டது. இதுவும் மூன்றற்கு மிடைக்கண்ணதாகலின், இதனை இடைச்சங்கமென்பர். இச்சங்கத்திலிருந்து தமிழாராய்ந்தார் ஆசிரியரகத்தியனாரும், அவர் மாணாக்கர் தொல்காப்பியரும், ஏனைப்பல்லோரும் இச்சங்கத்திற்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், தலைச்சங்கத் தரங்கேறியனெவுமே. இச்சங்கத்தின் கண்ணும் பல நூல்கள் அரங்கேறின. இச்சங்கத்துப் புலவர்களும் பல நூல்கள் செய்து வைத்தனர்.
>
> இவ்விடைச் சங்கமிருந்த கபாடபுரம் கடற் கோட்பட்டபின் அக்காலத்திருந்த முடத்திருமாறனென்னும் பாண்டியனாலே வடமதுரைக் கண் ஒரு சங்கம் நிறுவப்பட்டது. இச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியார், கபிலர், பரணர், நக்கீரர், கல்லாடராதிப் பல்லாசிரியர். இச்சங்கத்திற்கு நூல் தொல்காப்பிய மாதிப்பிற, இச்சங்கத்தின் கண் அரங்கேறிய நூல்கள் பல, அவற்றுள் திருவள்ளுவர் குறளே பிந்தியதாம். இச்சங்கத்து நல்லிசைப் புலவர் பலர் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கென்று

> சிறந்த இலக்கியங்களைச் செய்தருளினர். இச்சங்கத்தார் ஆண்டாண்டுச் சிதறி மறைந்து கிடந்த நூல்களை யொருங்கு சேர்த்துத் தமிழைப் பெரிதும் பரிபாலித்தனர். இச்சங்கம் உக்கிரப் பெருவழுதி காலம் வரையுமிருந்து, குறளரங்கேறுங்காற் கர்வங்குன்றி யொழிந்ததாம். இச்சங்க மொழிந்து இதுகாறும் ஈறாயிரம் யாண்டாயின. இவ்வீராயிரம் யாண்டியனும் பிறிதோர் சங்க முண்டுபடாமையான், இதுவே கடைச் சங்கமாயிற்று.
>
> (வ. குலாம் காதிறு நாவலர்,1902;178)

மேற்கண்ட புரிதல், இறையனார் அகப்பொருளுரையினை அடிப்படையாக அமைத்துக் கொண்டிருப்பதோடு, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் சங்க இலக்கியங்களாகக் குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கிறோம். மேலும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களையும் வரிசைப்படுத்தியிருப்பதைப் பார்க்கிறோம். இந்நூல்கள் குறித்தும் முச்சங்கம் நிலவியிருந்த தகவல்கள் பற்றியும் அச்சங்கத்தில் வீற்றிருந்த புலவர்களைப் பற்றியும் எழுதியுள்ளாரே யொழிய அச்சங்ககாலம் இன்ன ஆண்டு முதல் இந்த ஆண்டு வரையிலும் நடைபெற்றிருந்தது அல்லது நடைபெற்றிருக்கக் கூடும் என்ற எவ்விதமான கால வரையறைச் சிந்தனையையும் வெளிப்படுத்தவில்லை யென்பதும் கிடைக்கின்றது.

இக்கட்டுரையை முடிக்கும் நிலையில் பாண்டித்துரைத் தேவரவர்களால் நிறுவப்பட்ட நான்காம் தமிழ்ச்சங்கத்தையும் இணைத்துப் போற்ற வேண்டுமென்ற எண்ணத்தையும் வெளிப்படுத்தியுள்ளார்.

### 1.1.1.5. ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையின் தொன்ம அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறை

கோபகிருது வருடம் வைகாசி மாதம் இதழில் பகுதி (1903ல்) ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை எழுதிய "தமிழ் நாட்டின் பூர்வநிலை" என்னும் தலைப்பிலான கட்டுரையில்,

> அகஸ்தியர் இமயத்தினின்றும் தெற்கு நோக்கிப் புறப்பட்டுத் தொல்காப்பியரையும் அரச பதினெண்மரையும் பதினெண்கோடி ஜனங்களையும் அருவாளரையுமுடன் கொண்டு வந்து தண்டகவனம் புகுந்து காடுகெடுத்து நாடாக்கி, இடங்கள் தோறும் அவ்வரசரையும் குடிகளையுமிருத்திப் பொதியத்தைத் தமக்கு ஆக்கிரம கொண்டனர்.
>
> (ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, 1903;310)

இக்குறிப்பில் இதில் தமிழ் இலக்கண நூலின் தொண்மையைக் கீழ்வருமாறு உணர்த்தி செல்கின்றார்.

அகஸ்தியர் வருமுன்னும் தண்டகதேசத்திலே தமிழ் வழங்கிற்றென்பதும், அக்காலத்தில் அதற்கு இலக்கணம் குமரவேள் செய்த குமரம் என்னும் நூல் என்பதும், அகத்தியத்திற்கு அதுவுமோர் ஆதார நூலென்பதும் குமரக் கடவுளிடத்தே அகஸ்தியர் தமிழை ஓதியுணர்ந்தார் என்பதனால் நன்கு துணியப்படும்.

(ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, 1903;313)

என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு அகத்தியருக்கும் முன்னே தமிழ் இலக்கண நூல் உள்ளதென்று குறிப்பிட்டிருப்பது இன்னும் பன்னெடுங்காலத்திற்கும் முன்னரே இலக்கியவளமும் இருந்திருக்குமென்ற எண்ணத்தில் எழுதப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம்.

அடுத்து சோபகிருது வருடம் ஆடி மாதம் (பகுதி 1) மாத இதழில் 'செந்தமிழ்ச் சான்றோர் திருப்பெயர்' என்னும் தலைப்பில், எட்டுத் தொகை நூலில் பாடியுள்ள புலவர்களின் பெயர்களினால், அவர்களின் ஊர், குலம், நிலை, தொழில் ஆகியவை விளங்குவதாகக் கூறியுள்ளார், சான்றாக,

பிரமனார் – புறம் (357)

தாமோதரன் – புறம் (172)

உருத்திரனார் – குறுந்தொகை (274)

பெருங்காதனார் – குறுந்தொகை (234)

கண்ணனார் – அகம் (161)

இவை முதலியன அக்காலத்து வழங்கிய தெய்வப்பெயர்களாகும். இக்காலத்து மக்கள்பால் அறியவாய் இருடிகள் பெயர்கள் அக்காலத்துப் புலவர்க்கு வழங்கியதால்,

கபிலர் – புறம் (8)

கோதயனார் – புறம் (366)

மார்க்கண்டேயனார் – புறம் (365)

வான்மீகியார் – புறம் (358)

கோவிகனார் – புறம் (309)

கார்க்கியார் – குறுந்தொகை (55)

என வரும் பெயர்களால் அறியப்படுகின்றது.

(மேலது;388)

மேற்கண்டவாறு எடுத்துக்காட்டி குலபெயர், தொழிற்பெயர், நிலைப்பெயர் முதலியவற்றை அடையாளப்படுத்துகின்றார். முத்துத்தம்பிப் பிள்ளையின் இக்கட்டுரையில், ஊர், குலம், நிலை, தொழில் குறித்து அடிப்படையான தரவுகளைத் தந்தாலும், எட்டுத்தொகை நூல்களின் காலம்குறித்து எடுத்துரைக்கவில்லையென்பது தெரிகிறது. எனினும் இதன்மூலம் சங்க நூல்கள் இவை என்று சுட்டிக்காட்டுவதை உணரமுடிகிறது.

## 1.2. வரலாற்று அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறையும் கால ஆய்வும்

உ.வே.சா. வினால் அச்சேற்றப்பட்ட சிலப்பதிகார முகவுரையில் அதன் காலத்தை இலங்கை வரலாற்று நூல்களின் அடிப்படையில் முதலாம் கயவாகுவின் காலமான கி.பி. 2ம் நூற்றாண்டே சேரன் செங்குட்டுவன் காலம் என்று கூறி இது கடைசங்க கால நூலென்று சொல்லிச் செல்கிறார். இதனால் ஒரு வரலாற்று நூலினைத் துணைகொண்டு தமிழில் வரலாற்று ரீதியான ஆய்வுக்கீற்றை வெளிப்படுத்தியவர் உ.வே.சா. வாகவும் தெரியவருகிறது. எனினும் இவரின் கவனம் முழுவதும் பதிப்பிலும் பதிப்பித்த நூல்களின் பொருண்மையிலும் அமைந்து விடுவதாலும் தொன்ம நம்பிக்கையின் அடிப்படையில் சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுகள் குறித்து அமைந்து விடுவதாலும் வரலாற்று அடிப்படையான ஆய்வை முன்னெடுக்க தவறி விடுகிறார். எனவே வரலாற்று அடிப்படையிலான கால ஆய்வினை அழுத்தமாகவும் விரிவாகவும் முன்னெடுப்பவராக வி. கனகசபைபிள்ளைத் தெரியவருகிறார். இத்தகைய வரலாற்று அடிப்படையிலான ஆய்வில் சங்க இலக்கியங்களின் காலத்தையும் அக்கால நூல்களாக அடையாளம் காணப்பெறும் நூல்களையும் இவ்விடம் கவனத்தில் கொள்வோம்.

### 1.2.1. வி. கனகசபைப்பிள்ளையின்வரலாற்று அடிப்படையான சங்க கால ஆய்வு

சங்க இலக்கியங்களின் காலத்தையும் அக்காலத்தில் இயற்றப்பட்ட இலக்கியங்களையும் அடையாளம் காணமுயலும் வி.கனகசபைப்பிள்ளை வரலாற்ற அடிப்படையிலான ஆய்வினைப் பரவலான ஆதாரங்களோடு அமைத்துக் கொண்டுள்ளார். தமிழ் இலக்கிய ஆய்வுலகில் சங்ககால ஆய்வுக்குறித்தச் சிந்தனையை ரோம பேரரசின் வரலாற்றுத் தரவுகளின் பின்னணியோடும் சீன பேரரசின் வரலாற்று தரவுகளோடும் இலங்கை வரலாற்று நூல்களோடும், பிளினி, டாலமி போன்ற வெளிநாட்டார்களின் குறிப்புகளோடும் ஆய்வினைச் செம்மைச் செய்து வரலாற்று அடிப்படையான

ஆய்வினை மிகவும் அழுத்தமாகச் செய்திருக்கிறார். இத்தகையதோர் ஆய்விற்கு முதலும் முடிவுமான அடித்தளத்தை அமைத்துக் கொடுத்த வி.கனகசபைப்பிள்ளையின் ஆய்வினை இனிக்காண்போம்.

### 1.2.1.1. சங்க காலத்தை உணர்த்தும் வெளிநாட்டார் சான்றுகள்

> 1800 ஆண்டுகளுக்குமுன் உரோமகப் பேரரசே மனித உலகின் வல்லமைமிக்க நாகரீகப் பேரரசாய் அமைந்திருந்தது. பெருமை சான்ற உரோமக வெற்றி வேந்தரில் கடைசியானவர் திராஜன். அவர் காலத்தில் அப்பேரரசின் ஆற்றல் உச்சநிலை அடைந்திருந்தது. ஐரோப்பாவின் ஒரு பெரும்பகுதியும் நடு நிலக்கடல் சூழ்ந்த ஆசிய, ஆப்பிரிக்கப்பகுதிகளும் அதன் எல்லைக்கு உட்பட்டிருந்தன.
>
> (வி. கனகசபைப்பிள்ளை, 1904;11)

என்று தோற்றுவாயிலை அமைத்துக் கொள்பவர். இவ்வுரோமப் பேரரசுக்கு எதிராக சீன பேரரசு நிலவியதென்றும் இதன் விரிவு கிழக்குப் பசிபிக் மகாகடலிலிருந்து மேற்கே காஸ்பியன் கடல் வரையிலும் வடக்கே அட்லாஸ்மலைத் தொடரிலிருந்து தெற்கே இமயமலைத் தொடர் வரையிலும் நீண்டிருந்ததாகவும், இவ்விரு பெரும் பேரரசுகளின் இடைப்பட்ட இடத்தில் பார்த்திர அரசும், காந்தார அரசும் தமக்கான நில எல்லைக்குள் ஆட்சி புரிந்த வண்ணமிருந்ததென்றும் இவ்விருபெரும் அரசுகளுள் காந்தாரத்தின் அரசனாயிருந்தவன். 'கனிஷ்கன்' என்பதையும் சுட்டி தமிழ் இலக்கியத்தின் ஊடாகத் தமிழ்நாட்டு மன்னன் செங்குட்டுவன் குறித்தச் செய்தியை நினைவுறுத்துகிறார். பாக்டிரியாவிலிருந்து இமயமலையின் இனப்பகுதி வரையிலும் ஆக்கால் ஆற்றிலிருந்து யமுனை ஆறுவரையிலும் பரவியிருந்த பகுதிக்குள் ஆட்சி செய்த இக்கனிஷ்கன் என்ற மன்னனே சிலப்பதிகாரதில் கண்ணகி சிலையெடுக்க கல்லைச் சுமந்தவன் என்று வி. கனகசபைக் கூறவரும் செய்தியை, கா.அப்பாத்துரையவர்கள் அடிக்குறிப்பில் கீழ்வருமாறு தருகிறார். அதனைக் காண்போம்.

> 'Kanishka, King of Gandhara' சிலப்பதிகாரக் கதையில் கண்ணகிச் சிலையின் கல்லைச் சுமந்தவனாகக் குறிக்கப்பட்ட கனகன் இப்பேரரசனே என்று கூறப்படுகிறது. இதற்கேற்ப அயலினத்தானும் புத்த சமயத்தானுமாகிய இவன் பின்மரபினர் வலி குன்றியவராய் இந்திய சிவநெறிப் பெயர் தாங்கினர் என்று தெரியவருகிறது.
>
> (மேலது;12)

என்று கனகசபை உணர்த்த வருவதைப் பார்க்கிறோம். காந்தாரத்தின் கிழக்கு மகதப் பேரரசு நிலவியதையும் கூறி மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா,

ஆகிய ஆற்றுப்பகுதிகளும் இம்மகதப் பேரரசின் கட்டுக்குள்ளே இருந்ததையும் காட்டி இம்மகதப் பேரரசின் தென் எல்லையாகவே, தமிழகம் அக்காலத்தில் அமைந்திருந்ததைத் தெளிவுப் படுத்துபவர், இக்காலச் சூழலில், இந்தியா முழுவதும் பௌத்த மதமே பரவி செழிப்பானதோர் நிலையில் இருந்ததாகவும் கூறி ஆரிய இனத்தவர்கள் தன் பெருமைக்குன்றி இப்பார்ப்பன சமயம் துயர மிக்க நிலையில் இருந்துவந்ததாகக் காட்டுகின்றார். பின்னரே பார்ப்பனர்கள் மன்னர்களின் ஆதரவைப் பெற்றுப் பெருமளவு தன் நிலையை உயர்த்திக் கொண்டாரென்ற தகவலை அறியமுடிந்ததாகத் தருகின்றார்.

மேற்கூறிய ஆட்சிசூழலும் சமய சூழலும் கிடைக்கப்பெற்றதற்குச் சான்றாக, சமஸ்கிருத இலக்கியங்கள் விளங்குகின்றன என்பது கனகசபையின் கருத்தாகக் கிடைக்கிறது. இக்கருத்தினை ஏற்கும் பாங்கில் சைவ, வைணவ சமயங்களுக்கு முன்பாக, புத்த சமண சமயமே ஆரிய சமயமாக அதாவது பார்ப்பன சமயமாக ஏற்கப்பட்டிருந்ததாகவும் இதனை வேத வேள்வி சமயம் என்று வரலாற்றாசிரியர் அடையாளம் காட்டிருப்பதாகவும் கனகசபைத் தருகின்றார். இதனை அடுத்து அவர் தரும் குறிப்பே தமிழ் இலக்கியத்தின் தொன்மைகாலம் பற்றிய அவரின் புரிதலாகத் தெரியவருகின்றது.

> கி.பி. முதல் நூற்றாண்டில் சமஸ்கிரத மொழிக்கு இலக்கியமென்று எதுவும் கிடையாது. அதே சமயம் தமிழின் நிலைமைவியப்புக்குரிய முறையில் இதற்கு நேர்மாறானது. இக்காலத்துக்குரிய தமிழிலக்கியம் பேரளவிலும் குறைவான நிலையில் கிட்டதட்ட முழுவடிவிலேயும் நமக்கு வந்து எட்டியுள்ளது. அத்தமிழிலக்கியம் நமக்கு அத்தொல்பழங் காலத்தில் வாழ்ந்த தமிழரின் வாழ்க்கைச் சூழல்களை மட்டுமின்றி, இந்தியாவின் பிற பகுதிகளில் வாழ்ந்த மற்ற மக்களின் சூழ்நிலைகளையும் விளக்கமாக எடுத்துக் காட்டுகிறது.
>
> (மேலது;13)

என்பதிலிருந்து சமஸ்கிருத இலக்கியம் தோன்றாத காலத்திலேயே தமிழ் இலக்கியம் எழுதப்பட்டிருந்ததென்பதோடு அதன் காலம் கி.பி.1 ஆம் நூற்றாண்டு என்று சுட்டியிருப்பதையும் காண்கிறோம். இக்கருத்துள் கி.பி.1 ஆம் நூற்றாண்டிற்கு முன்பு சமஸ்கிருத இலக்கியங்கள் எந்தயொன்று மில்லையென்பது ஏற்க தக்கதல்ல என்பதை அறிவோம். ஆயினும், கி.பி.1 ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியங்களின் தொல் தொடக்க வளமை கூறியிருப்பது இராபர்ட் கால்டுவெல் போன்ற அறிஞர்களால் தமிழ்

இலக்கியங்களின் தொன்மை கி.பி.9 ஆம் நூற்றாண்டிற்கு முன்பு இருக்க முடியாதென்ற கருத்திலிருந்து விலகி நிற்கும் ஆய்வுப் போக்கினைப் கீழ்வரும் கூற்றால் விளங்கிக் கொள்ள முடிகிறது.

> கி.பி.9 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் எதுவுமில்லை என்பதே இன்று மேலை அறிஞரின் பொதுக் கருத்தாக இருந்து வருகிறது. ஆனால் உண்மை இதற்கு நேர்மாறானது தமிழிலக்கியத்தின் தலைசிறந்த, தற்பண்பு வாய்ந்த பகுதி முழுவதும் கி.பி.9 ஆம் நூற்றாண்டுக்கு முன் இயற்றப்பட்ட பகுதியே என்னலாம். அதற்குப் பின் வந்தவை மிகப் பெரும்பாலும் சமஸ்கிருத ஏடுகளைப் பின்பற்றி இயற்றப்பட்ட கீழ்த்தரமான போலிபசப்புகளாகவோ, மொழிப் பெயர்ப்புகளாகவோ மட்டுமே கொள்ளத்தக்கதாகவே உள்ளன. பண்டைத் தமிழ் இலக்கிய ஏடுகளை நான் கூர்ந்து ஆராய்ந்த போது, எனக்கு ஏற்பட்ட கருத்து, ஒன்றே ஒன்றுதான் அவற்றுள் பெரும்பகுதி இரண்டாயிர ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது என்பதில் சிறிதும் ஐயம் ஏற்பட வழி இல்லை.

(மேலது;15)

என்று அறுதியிட்டு கூறுகின்றார். இக்கருத்திற்கு அவர் முன் வைக்கும் வலுவானப் புறச்சான்று தமிழர்களோடு அயல்நாட்டார் கொண்டிருந்த வாணிகத் தொடர்பாகும். திருக்கருடனும் உரோமருடனும் ஏற்பட்ட தொழில் ரீதியான தொடர்பு பெரும் செல்வ வளத்தை நமக்குக் காட்டுவதாகவும் இச்செல்வவளத்தால் பெரும் இலக்கிய உருவாக்கங்கள் நிகழ்த்திருக்கும் என்பதும் இவரின் கணிப்பாகயிருக்கிறது. இத்தகைய அயல்நாட்டு வணிக குறிப்புகள் சங்கப்பாடல்களில் காண கிடைப்பதைத் தக்கச் சான்றுகளாகப் பார்க்கிறோம். இத்தகைய கணிப்பினை அடுத்து அவர் உணர்ந்தவருவது, சங்கம் அமைத்து கவிதைகள் பாடியதைப்பற்றியாகும். அதாவது சங்க இலக்கியம் குறித்தும் சங்கம் குறித்தும் அவருக்கு ஏற்பட்டிருந்த கருத்தாகும். இதனை,

> தமிழ்ப்புலவர் சங்கங்களிலே கடைசியாகக் கூறப்படும் சங்கம் அந்நாளிலேயே உக்கிர பாண்டியன் என்ற உருத்தகு பாண்டியன் காலத்தில் மதுரையில் நடைபெற்றது. இச்சங்கத்திலிருந்து ஏடுகள் இயற்றிய ஆசிரியப் பெரும் புலவர்களில் ஐம்பதின்மருக்குக் குறையாதவர்களுடைய இலக்கியக் கைவண்ணங்கள் இன்று நம் கைக்கு வந்தெட்டியுள்ளன.

(மேலது;15)

உரோமப் பேரரசன் அகஸ்டஸ் காலம் அந்நாட்டின் இலக்கியபொற்காலம் என்பதைப்போல சங்க சான்றோர்களின் காலத்தைப் பொற்காலம் என்று நாம்

அழைக்க வேண்டுமென்ற புரிதலை முதன் முதலாக முன்வைப்பவராகவும் கனகசபைத் தெரியவருகிறார். இங்கு கவனிக்கத் தக்கது உரோமில் ஆட்சிபுரிந்த அகஸ்டஸ்காலமும் உக்கிர பாண்டியன் காலமும் கி.பி.1 ஆம் நூற்றாண்டு என்று அடையாளம் கண்டிருப்பதாகும். இதற்கான நூலாதாரத்தை எடுத்து மேற்கோளாகவோ, அடிக்குறிப்பாகவோ தரவில்லையெனினும் அகஸ்டஸ் காலம் பொற்காலமாக உலக வழக்கில் நிலைபெற்றக் கருத்தினை நினைவுறுத்துவதே போதுமானதாகக் கருதியிருப்பதைப் பார்க்கிறோம்.

இனி சங்க இலக்கிய காலமாக அவர் வரையறுப்பதையும் அவ்வாறு அவர் வரையறுத்து முன் வைக்கும் ஆதாரங்களையும் காண்போம்,

> இப்பேரிலக்கியம் கி.பி.முதல் ஒன்றிரண்டு நூற்றாண்டுகளுக்கே உரியது என்று வரையறுக்க நமக்குப் புறச்சான்றுகளின் உதவி கூட எதுவும் தேவையில்லை. அகச் சான்றுகளே அவ்வாறு மிகுதியாய் உள்ளன.
>
> (மேலது;16)

இவ்வகச் சான்றுகளாக இவர் முன்வைப்பது, அப்பாடல் வழியாக அறியவரும் சமயநிலை, சமுதாய பழக்க வழக்க நிலைகளாகத் தெரியவருகின்றன. இவ்விரு அடிப்படையான நிலையின் ஊடக மேலும் பலத்தரவுகளைக் காட்டுகின்றார். அஃதாவது வெளிநாட்டு அறிஞர்கள் தரும் குறிப்புகளாகும். இத்தரவுகளோடு சங்க இலக்கிய மன்னர்கள் சார்ந்த செய்திகளையும் வரலாற்று ஆதாரங்களையும் குறிப்பிடுகின்றார்.

சங்க காலப் புலவர்கள் பல்வேறு பிறப்பினரென்று கூறி அவர்களை நிகண்ட வாதிகள் (ராத்திகர்) புத்தர், சிலபார்ப்பனர், அரசர், குருமார், வணிகர், மருத்துவர், உழவர், கலைத்தொழிலாளர் என வகைப்படுத்துகின்றவர் இவர்களின் பாடல்களில், குறிக்கப்பட்டதாகத் தெரியவரும் சமுதாய அமைப்பு புறத் தோற்றங்கள், மக்களின் மன இயல்புகள் இவைகளைத் தாண்டி தலைமைப் பேரூர்கள், துறைமுக நகரங்கள் வெளிநாட்டார் இறக்குமதி பொருட்கள் என அனைத்துக் குறிப்புகளும், கிரேக்க அறிஞர்களான பிளினி, டாலமி, ஆகியவர்கள் தந்திருக்கும் குறிப்புகளோட ஒத்துப்போவதாகக் கூறி, மேலும் கிரேக்க நாட்டின் நூலான ''செங்கடல் பயணவிவரத் தொகுதி'' யிலும் இதற்கான சான்றிருப்பதை ஒப்புக் நோக்கி சுட்டிக் காட்டுகின்றார். இத்தகவலோடு, இச்செங்கடல் பயண விவரத் தொகுதி நூலின் ஆசிரியர் இன்னாரென்று அறியாத நிலையையும் நினைவுறுத்துகின்றார். மேற்கண்ட அறிஞர்களின் காலத்தைக் கண்டறிவதன் வாயிலாக இவர்களால் குறிப்பிடப்படும் தமிழ் சமுதாயத்தின் அக்காலத்தையும், இத்தரவுகளைத்

தன்னகத்தே கொண்டிருக்கும் இலக்கியங்களின் காலமும், சங்கம் அமைந்திருந்த காலமும் பிடிப்படுமென்று கருதி அவர்களின் காலநிலைகளைக் கீழ்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

இவர்களில் பிளினி என்பர் கி.பி.79 வரை வாழ்ந்தவர். அவர் மறைவுக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே அவர் தம் இயல் வரலாற்றை (Natural History என்ற நூல்) எழுதி முடித்துவிட்டார். செங்கடற் பயண விவரத்தின் ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை. ஆனால் அவர் எகிப்து நாட்டவரென்றும், அவர் நூல் அஸ்டஸ்ஸீன் காலத்துப்பின், ஆனால் நபாத்தியர் அரசு உரோமயர்களால் முறியடிக்கப்படும்முன் எழுதப்பட்ட தென்றும் தெரியவருகிறது. ஆக்ஸீமித்தேப் பகுதியில் (Auxumitae) அவர் காலத்தில் ஜாஸ்கலிஸ் (Zoskalas அல்லது Zathakle, King of Abyssemir 77-89AD) ஆண்டதாகத் தெரியவருவதிலிருந்து அவர் காலத்தை இன்னும் திட்டமாகக் கூற முடிகிறது. இவர் உண்மையில் கி.பி.77 முதல் 89 வரை அபிளினியாவை ஆண்ட ஜா–ஹக்கேலேயாவர் என்று கருதப்படுகிறது. ஆகவே, 'செங்கடற் பயணம்' பிளினியின் மறைவுக்குச் சற்றுப் பிற்பட்டு கி.பி.80–க்கும் 89 க்கும் இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாம் என்று நாம் முடிவு செய்யக் கூடும் (மக்கிரின்டலின்) (MccRindalin) மொழிபெயர்ப்பு செங்கடற்பயண விவரங்கள் (Periplus Maris Erythrali, Page No.5)

பொதுவாக டாலமி என்று குறிக்கப்படுபவர் கிளாடியஸ் டாலமியிஸ் என்பவரேயாவர். இவர் அலெக்ஸாண்டிரியா நகரில், பேரரசர் அன்டோனினஸ் பியஸ் ஆட்சியில் கி.பி.2 ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்தவர் ஆவர். அவர் மறைவுற்ற ஆண்டு கி.பி.163.

(மேலது;18)

மேற்கண்டதில் அலெக்சாண்டிரியா குறிந்த அடிக்குறிப்பில் எகிப்தில் நீல ஆற்றுப் பூமுகத்தில் அமைந்துள்ள நகரமென்றும் இது கி.மு. 4ஆம் நூற்றாண்டில் அலெக்சாண்டரால் நிறுவப்பட்டதென்றும் கிரேக்கத்தின் பண்பாட்டு கலைவிவரம் இந்நகரில் புதுமலர்ச்சியோடு நிலவியதோடு, கி.பி. 3ஆம் நூற்றாண்டில் முடிவெய்தியது என்றும் காட்டப்பட்டுள்ளது. மேலும், கிளாபியஸ் மலமியஸ் மறைவுற்ற ஆண்டிற்குச் சான்றாகயிருப்பது இந்தியா, தென் ஆசியாவின் நிலநூல், டாலமி, மக்கிரின்டில் மொழிபெயர்ப்புக் பக்கம் 1இல் கிடைக்கப்பெறுவதோடு, இதே தகவல் டாக்டர் பாண்டர்கர் என்பவர் எழுதிய தக்கணத்தின் முற்கால வரலாறு என்னும் நூலின் இருபதாம் பக்கத்தில் கிடைக்கப் பெறுவதையும் சுட்டிக்காட்டப்பட்டிருப்பதும்,

வெளிநாட்டு அறிஞர்கள், தமிழக மக்களைக் குறித்தும் வெளிநாட்டு வாணிகர் தொடர்புகள் குறித்தும் கூறிருப்பதும் சங்க இலக்கியத்துள் குறிக்கப்படும் கடலை அடுத்த நகரங்களையும் உள்நாட்டு நகரங்களையும் அடையாளம் கண்டு கொள்வதற்கும் பொருத்தமாக இருப்பதாகப் புரிந்து கொள்கின்றார். இவ்வரிஞர்களுள் டாலமி கடற்கரையிலிருந்து விலகி இருக்கும் நகரங்களைக் குறிக்கின்ற பொழுது போதிய தெளிவின்மை நிலவுவதையும் அதில் அவரின் கற்பனை சற்றுக்கலக்கப்பட்டிருப்பதையும் இடித்துரைப்பதோடு அவரின் பெரும்முயற்சியும் உழைப்பும் பெரிதும் மரியாதை செலுத்தப் தக்கதென்று வலியுறுத்துகின்றார்.

### 1.2.1.2. சங்க காலப் புரிதலுக்குத் துணை நிற்கும் தமிழ் நூல் வரலாற்றுத் தரவுகள்

அடுத்து இவர் குறிப்பிடவரும் தரவுகள் தமிழ் நூல் சான்றுகளாகும். உக்கிர பாண்டியன் கடைச்சங்கப் புலவர்களுள் மிகமிக முற்பட்டவன் என்பதனைக் குறிப்பிட்டு இதன் ஆசிரியர் முசிறியைச் சார்ந்த நீலகண்டன் என்று கூறி இவ்வுரையாசிரியர் காலத்தைக் கி.பி.8 ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிடுகின்றார். இக்கால வரையறைக்கு ஆதாரமாக இருப்பதாக, நீலகண்டனார் தம் உரையின் விளக்கத்தில் பாண்டியன் நெடுமாறன் பாடலைத் தந்திருப்பதைக் காட்டி இவனுக்கு நெல்வேலிப் போர் வென்ற அரிகேசரி என்ற பட்டப்பெயர் உள்ளதையும் சுட்டி, இந்த நெல்வேலி போரை நந்திவர்ம பல்லவமல்லன் உதயேந்திரப் பட்டயத்தில் குறிப்பிட்டுள்ளதை நினைவுறுத்தி, இப்பல்லவனின் காலம் மேலைச் சாளுக்கிய அரசனான இரண்டாம் விக்கிரமாதித்தன் காலம் என்று தருகின்றார். இச்சாளுக்கிய நாட்டில் கிடைக்கப்பட்ட கல்வெட்டில் இவ்விக்கிரமாதித்தன் காலம் கி.பி.733 முதல் கி.பி.747 வரை ஆண்டுள்ளதால் இவ்வுரையாசிரியர் காலமும் நெல்வேலி போரில் வென்ற நெடுஞ்செழியன் காலமே என்பதை நிறுவுகின்றார். இவ்வுரைசிரியர் சங்க நூல்களுள் அகம், நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம் முதலியவற்றிலிருந்து மேற்கோள் காட்டி உரை அமைந்திருப்பதைச் சுட்டுவதன் வாயிலாக இவர் சங்க இலக்கியங்களாகக் காட்டும் நூல்களின் வரிசைப் புலப்படுவதைக் காண்கிறோம். இதனை மேலும் விளக்கிக் கொள்ள கீழ்வரும் பத்தியை நோக்குவோம்.

> அகம் 401 தனித்தனிப்பாடல்கள் அடங்கியது. அவை 200 க்கும் மேற்பட்ட புலவர்களால் வெவ்வேறு காலச் சூழல்களில் இயற்றுப்பட்டவை. குறுந்தொகை இதுபோலவே 205 புலவர்களின் பாடல் திரட்டு, நற்றிணை 200 க்குக் குறையாத புலவர்கள் பாடிய 401

பாடல்களுடையது, பதிற்றுப்பத்து வெவ்வேறான பத்துப்புலவர்கள் பாடிய பத்துப்பாடல்கள் அடங்கியது. இத்தொகை நூல்கள் எல்லாவற்றையும் சேர்த்துப் புலவர்களை எண்ணியதில் 514 புலவரின் பெயர்கள் கிடைத்தன, புலவர்களின் இப்பெருந்தொகையை நோக்க, அவர்களில் மிகப்பழமையானவை நீலகண்டன் காலத்துக்குக் குறைந்தது ஆறு அல்லது ஏழு நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவராயிருந்திருக்க வேண்டும் என்று இழுக்குறாமல் கூறலாம்.

(மேலது;20)

இதன் மூலம் சங்க காலம் கி.பி.முதல் நூற்றாண்டு என்று முன்பு கூறியதற்குத் தக்கச் சான்றுகளைக் காட்டுவதாகவே இத்தனைத் தரவுகளையும் அமைந்திருப்பதைப் பார்க்கிறோம்.

### 1.2.1.3. சங்க காலமும் சேரன் செங்குட்டுவனும்

அகப்பாடல்களுள் கரிகால சோழனை 55 ஆம் பாடலும், சேரன் ஆதனை 124–ஆம் பாடலும் சேரன் செங்குட்டுவனை 306 ஆம் பாடலும் புகழ்வதன் மூலமும் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தில் பரணர் செங்குட்டுவனைப் பாடியுள்ளதையும் தந்து இச்செங்குட்டுவன் இலங்கை வரலாற்று நூலான மகாவம்சோ தீபவம்சோவில் குறிக்கப்பட்டுள்ளவனான முதல் கயவாகு கி.பி.2 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தவன் எனறும் இவனே செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் அமைக்கையில் இலங்கையிலிருந்து வந்தவன் என்றும் திட்டவட்டமாகக் கூறுவதைத்தந்து, மேலும் இம்முதல் கயவாகுவின் காலத்தைச் சார்ந்தவனே இச்சேரன் செங்குட்டுவன் என்பதைச் சொல்லி சேரன் செங்குட்டுவன் கங்கை கரையிலுள்ள மகத நாட்டின் அரசனோடு நட்பு கொண்டிருந்த செய்தி சிலப்பதிகாரத்தில் கிடைக்கப் பெறுவதையும் அம்மகத மன்னன் நூற்றவர் கன்னர் என வழங்கப்படுவதால் இந்த நூற்றவர் கன்னர் ஆந்திர மரபைச் சேர்ந்த 'சதகர்ணி' என்பவரைக் குறிப்பிடுகிறதென்பதற்கு நாணயங்களும் கல்வெட்டுக்களும் சான்றாக அமைவதை நிலைநிறுத்தி இந்த மகதபேரரசின் ஆட்சி வரலாற்றை வாயுபுராணம், விஷ்ணுபுராணம், மதீஸ்ய புராணம், பாகவதபுராணம் ஆகிய புராணங்கள் தரும் தரவுகளின் அடிப்படையில் கீழ்வருமாறு கயவாகுவின் காலத்தையும் மகத நாட்டு அரசனின் காலத்தையும் ஒரு புள்ளியில் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

மகதத்தை ஆண்ட முற்காலப் பேரரசர்களின் வரலாற்றிலே, ஐயத்துக்கிடமின்றி உறுதியாகக் கொள்ளத்தக்க கால எல்லை சந்திரகுப்தனுடையது. (சந்திரகுப்த மௌரியன், மௌரிய மரபின் முதலரசன்) அவன் செலியூக்கஸ் நிக்கடோரின் சமகாலத்தவன்.

ஸெலியூக்கஸ் கி.மு.310 இல் ஆட்சி தொடங்கினான். கி.மு.305 இல் அவன் சந்திரகுப்தனுடன் உடன்படிக்கை செய்து கொண்டிருந்தான். சந்திரகுப்தன் ஆட்சித் தொடக்கம் ஸெலியூக்கஸ் முடியேற்புக்கு இரண்டாண்டுகட்குமுன் அதாவது கி.மு.312–இல் என்று வரையறுக்கலாம். இதிலிருந்து தொடங்கி கி.பி.133 இல் முடிவுற்ற தென்று கொள்ள வேண்டும். மத்ஸ்புராணம் தரும் தகவல்களை அடிப்படையாகக் கொண்டு, இக்கணக்குக் கீழே தரப்படுகிறது.

10 மோரியர்கள் : 137 ஆண்டுகள் : கி.மு.312 – கி.மு.175. 10 சுங்கர்கள் : 112 ஆண்டுகள் : கி.மு.175 – கி.மு.63. 4 கண்வாயனர் : 45 ஆண்டுகள் : கி.மு.63 – கி.மு.18.

ஆந்திரர் முப்பதின்மரில் முதல் அறுவர் கணக்கு வருமாறு :– சிசுகன் : 23 ஆண்டுகள் : கி.மு.18 – கி.பி.5 கிருஷ்ணன் : 18 ஆண்டுகள் : கி.பி.5 – கி.பி.23 சீமலகர்ணி : 18 ஆண்டுகள் : கி.பி.23 – கி.பி.41 பூர்ணோச்சுங்கன் : 18 ஆண்டுகள் : கி.பி.41 – கி.பி.59 சிரீவஸ்வாமி : 18 ஆண்டுகள் : கி.பி.59 – கி.பி.77 சதகர்ணி : 56 ஆண்டுகள் : கி.பி.77 – கி.பி.133

இந்தச் சதகர்ணியின் ஆட்சிக்காலம் இலங்கையரசன் கயவாகுவின் ஆட்சிக்காலத்துடன் முழு அளவிலும் பொருந்துகிறது. மகாவம்சசோவின் படி, அவ்விலங்கையரசன் ஆட்சிக்காலம் கி.பி.113 முதல் 125 வரை ஆகும். ஆகவே, மத்ஸ்யபுராணத்தில் கண்ட பெயர்ப்பட்டியலின் படி, கி.பி.77 முதல் 133 வரை ஆண்டதாகத் தெரிகிற இந்த முதல் சதகர்ணியே, சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவன் சேரன் கயவாகு ஆகியவர்களுடன் சமகாலத்தவனாகக் குறிக்கப்பட்ட மகதப் பேரரசன் சதகர்ணி என்பதற்கு ஐயமில்லை.

(மேலது;24)

மேற்காட்டிய மேற்கோளில் ஸெலியூக்கஸ் நிக்கடோரின் என்னும் பேரரசன் அலெக்லாண்டரின் படைத்தலைவன் என்பதும் இவனுக்குப்பின் ஸிரியலில் இவன் மரபினராய் இருந்து சந்திரகுப்த மௌரியன் காலத்தில் மகதத்தின் மீது படையெடுத்து தோற்றி பின்னர் மகதத்திற்குப் பெண் கொடுத்து உறவு பூண்டான் என்பதையும் கூறி இந்திய வரலாற்றினை எழுதிய மெகஸ்தனிஸ் ஸெலியூக்கஸ் அனுப்பிய தூதனென்பதைச் சொல்லி இவன் மகத நாட்டிலிருந்தே இந்திய வரலாறை எழுதிய வரலாற்றினை அடிக்குறிப்பில் தருகிறார்.

இறுதியாக இக்காலத்தை உறுதிப்படுத்திட அவர் சுட்டவரும் செய்தி கரிகால சோழனை முன் வைத்தாகும். இச்சோழன் இலங்கை மீது படையெடுத்து வென்று அங்கிருந்து பல்லாயிரக்கணக்கான மக்களைச்

சிறைபடுத்தி அழைத்து வந்து கல்லணைக் கட்டப் பயன்படுத்தினான் என்பதை இலங்கை வரலாற்று நூல் வழியும் அங்கு நிலவிவரும் கதை வழியும், கலிங்கத்துப் பரணி என்னும் தமிழ் நூல் வழியும் 'லெஸ்டன் பட்டயம்' என்ற கல்வெட்டு வழியும் உறுதிப்படுத்துகின்றார். மேலும் இச்செயலுக்கு எதிர்ச் செயலாகக் கயவாகு கி.பி.113 இல் பட்டத்துக்கு வந்தவுடன் சோழன் மீது படையெடுத்தானென்று குறிப்பிடும் இலங்கை வரலாற்று நூல் செய்திகளையும் தருகின்றார்.

இங்கு நமக்கு இயல்பாய் எழும் கேள்வி யொன்றை தவிர்க்க முடியவில்லை. இந்நூலின் 21 ஆம் பக்கத்தில், கீழ்வருமாறு வருவதைப் பாருங்கள்.

> கடைச்சங்க காலத்தை இன்னும் திருத்தமாக வரையறுக்கத் தக்க நேரடியான தகவல்கள் உண்டு. அவையே சோழ அரசன் கரிகாலன் காலத்திலும், அவன் மருமகன் சேரன் ஆதன் காலத்திலும், ஆதன் புதல்வன் செங்குட்டுவன் சேரன் அல்லது இமயவரப்பன் காலத்திலும் இயற்றப்பட்ட பாடல்களில் வரும் வரலாற்றுப் பெயர்க் குறிப்புகள் ஆகும்.

(மேலது;21)

இக்கூற்றில் சோழன் கரிகாலனுக்கு மருமகன் சேரன் ஆதன் என்கிறார். இச்சேரன் ஆதனக்குப் பிறந்தவன் சேரன் செங்குட்டுவன் என்பவனும் இவனுக்கு இளவளே இளங்கோவடிகள் என்பதையும் சுட்டித் தருகின்றார். இக்கூற்றில் கூட இமயவரம்பன் என்ற தொடர் சேரன் ஆதவனையே குறிப்பிடுவதாக மொழி பெயர்ப்பாளர் கா.அப்பாதுரையாரும் சுட்டிக் காட்டுகின்றார். இவ்விடம் எழும் கேள்வி யென்று சொன்னது யாதெனில், கரிகாலன் இலங்கை மீது படையெடுத்து வென்று அம்மக்களுள் பல்லாயிரக்கணக்கான மக்களை அணைக்கட்டுவதற்குக் கைதிகளாய் கொண்டுவந்தான் என்பது வரலாற்று நிகழ்வாக, அசைக்க முடியாத அளவுக்கு ஏற்கப்படுகிறது. பின்னர் கி.பி.113 இல் கயவாகு ஆட்சிப் பீடத்தில் ஏறியவுடன் பதிலுக்குச் சோழன் மீது படையெடுத்துப் போர் செய்து வென்று சோழர்களுள் பல்லாயிரம் பேரை இலங்கைக்குக் கொண்டு சென்றான் என்பதும் உறுதியாகவே நம்பப்படுகின்றது. இதே கயவாகுதான் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் எடுப்பித்தபோது செங்குட்டுவனோடு இருந்து மகிழ்ந்து அக்கண்ணகியைத் தெய்வமாய் வணங்கி இவ்வழிப்பாட்டை இலங்கைக்கும், எடுத்துச் சென்றதாகச் சொல்லப்படுவது இந்நாள்வரையிலும் ஏற்கப்படுகிறது.

சேரன் செங்குட்டுவனின் பாட்டன் கரிகால் சோழன், இவனுக்கும் கயவாகுவின் தந்தைக்கும் போர் நிகழ்ந்து அந்நாட்டு மக்களைச்

சிறைபடுத்திக் கொண்டுவந்தான். கயவாகு ஆட்சிக்கு வந்தபோது கரிகாலனை வென்று சோழர்களைக் கைதிகளாக்கி இலங்கைக்கு அழைத்துச் சென்றான். இந்தப் போர்ச்சுவடுகள் மறைவதற்கு முன்னே சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோட்டம் எடுத்த போது கயவாகு வந்தானென்றால் பகையுணர்வு சோழனுக்கு இருந்திருக்காதா? அல்லது தன் தாத்தன் மீது படையெடுத்து வென்றவனென்று சேரனுக்கு இருந்திருக்காதா? சேரனுக்குப் பகைவுணர்வே இல்லையென்றால் சோழ வம்சத்தவர் கயவாகு இங்கு வந்து சென்றதை அனுமதித்திருப்பார்களா? என்று சிற்சில கேள்விகள் எழுந்து இவ்வரலாற்று முடிச்சுக்குள்ளிருக்கும் முரண்களைத் தொட்டுக் காட்டுகின்றன.

### 1.2.2. து.அ. கோபிநாதராவின் தமிழிலக்க ஆய்வும் சங்க கால நம்பிக்கையில் குறுக்கு வெட்டும்

இதனை அடுத்து து.அ.கோபிநாதராவ் அவர்கள், 'தமிழிலக்க வரலாறு' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார். இதில் மாசி மாத இதழில் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை எழுதிய தமிழே அநேகப் பாஷைகளுக்கு இலக்கங்கொடுத்தது என்ற கட்டுரையில், தமிழ் மொழியின் வரிவடிவமே பெரும்பாலான மொழிகளுக்கு வடிவம் வழங்கியது என்னும் கருத்தினை வெளிப்படுத்தியுள்ளார். இக்கருத்தினை மறுத்து து.அ.கோபிநாதராவ் இவ்விடத்தில், எழுத்துக்களின் தோற்றமும் அதன் வடிவ மாற்றமும் ஒரு பக்க அளவில் பட்டியல் அமைத்திருக்கின்றார். து.சு.கோபிநாதராவின் மறுப்பும் நிறுவமுனையும் கருத்தும் கால ஆய்வு வரலாற்றில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கண்டெடுக்கப்பட வேண்டியவையாகும். சான்றாகக் கீழ்வரும் கூற்றை நோக்குவோம்.

> சென்ற மாசி மாதம் வெளிவந்த 'செந்தமிழ்' ல் ஸ்ரீமது ஆ.முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் எழுதிய "தமிழே அநேக பாஷைகளுக்கு இலக்கங் கொடுத்தது" என்னும் வியாசத்தை வாசித்தவளவில், பிள்ளையவர்கள் கூறும் கூற்றுக்களுக்காதார மென்னை யென்று வியாசமுழுமையுந் தேடியுங் காணப்படவில்லை,
>
> (து.அ. கோபிநாதராவ், 1904;417)

என்று தொடங்குபவர் ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை தம் கருத்திற்குச் சான்றுகள் ஏதும் காட்டவில்லையென்று கூறி, இறுதியாக ஒப்புக்கு கால்டுவெல் கருத்துகளை தம் கருத்திற்கான ஆதாரம் போன்று எடுத்தாண்டுள்ளதைப் பொருத்தமில்லை என்னும் பொருளில் எழுதி, தம் கருத்தினைக் கீழ்வருமாறு கூறத் தலைப்படுகின்றார்.

இதுகாறும் நம்மிந்திய நாட்டில் நாம் கண்ட சாசனங்களின் பழமையுடையது பௌத்த சக்கரவர்த்தியாகிய அசோக மகாராஜாவின் சிலாலிகிதங்களே. அவற்றின் பிற்பட்ட வெழுத்துக்கள் பம்பாய்ப் பிராந்தியத்துள்ள கற்கோயில்களிற் காணப்படுவன. 'தமிழ்' என்று சித்தமாய் வழங்கக் கூடிய சாசனங்களில் ஆதிபுராதனமானது இவ்வருஷம் யான் செஞ்சிக்கடுத்த திருநாதர் குன்றிற் கண்டதோர் சிறுசாசனம். இதன் எழுத்துக்கள் பம்பாய்க்கற் கோயிலெழுத்துக்களின் காலத்திற்குச் சிறிது பிற்பட்டும், அக்காலத்துக்குச் சற்று பிந்திய காலத்தாண்ட பல்லவ அரசர்களது சாசனங்களின் எழுத்துக்களுக்குச் சிறிது முற்பட்டும் அமைந்தவை. மேற்கூறிய பல்லவ ராஜாக்கள் காலம் அடுத்தது. அதன் பின்பு அரசாண்டவர்கள் சோழ சக்கரவர்த்திகள் இச்சோழர்கள் கி.பி.13ஆம் நூற்றாண்டிற் சிறிது தளர்வடையப் பாண்டியர்கள் தலையெடுத்தார்கள், அவர்கள் காலமானவுடன் இப்பொழுது ஆனேகுந்தி சமஸ்தானம்' என்று பெயர் கூறப்பட்ட விந்தியா நகரராஜாக்கள் காலமாம். இவ்வெவ்வேறு காலங்கள் தோறும் இலக்கங்கள் எவ்வாறு மாறி வந்தன என்பதை முறைமுறையே அடுத்த பக்கத்திற் காட்டிய படத்தால் தெள்ளிதாலறிலாம்.

(மேலது;417)

மேற்கோளை எடுத்துக் காட்டியமைக்குக் காரணம், பின்னாளில் அறிஞர்களும், தொல்லியல், கல்வெட்டியல் துறை சார்ந்த அறிஞர்களும், அசோக பிராமி எழுத்திலிருந்தே தமிழ் எழுத்துக்கள் வடிவம் பெற்றுக் கொண்டன என்ற கருத்தினை முன் வைத்து தமிழின் தொன்மையான இலக்கண இலக்கிய கால கட்டங்களை வரையறுத்து நிறுவினர். இவ்வாறு நிறுவியதற்கான தொடக்கமாக , து.அ.கோபிநாதராவ்வின் இக்கட்டுரையே என்பதை இவ்விடம் நினைவில் நிறுத்த வேண்டும். இங்கு மற்றொருக் கருத்தினையும் ஒப்பு நோக்கி எண்ணிப்பார்க்க வேண்டிய கட்டாயமிருக்கிறது. அதாவது, சங்க இலக்கியங்களின் காலப்புரிதல் குறித்து அறிய முற்படும் ஒவ்வொரு அறிஞர்களும் இறையனார் களவியல் உரைக் கூறும் முச்சங்கங்களின் காலம் குறித்த நீண்ட நெடிய பரப்பை ஏற்று தொல்காப்பியமும் அதனை அடுத்த நூல்களின் தொன்மையையும், கி.மு.4000 என்றும், பாரதப் போர்க்குறிப்பு புறநானூற்றில் வருவதால் பாரதப்போரின் காலமான கி.மு.12 ஆம் நூற்றாண்டு என்றும் கூறிவந்து இதுவே இடைச்சங்க காலமென்றெல்லாம் உணர்த்தி வந்த அறிஞர்களுக்கு மத்தியில், து.அ. கோபிநாத ராவ், முதல் குறுக்குச்சால் ஓட்டுவதைப் போல, 1904 இல்

இத்தகைய சிந்தனையை முன் வைத்திருப்பது, தமிழகத்தின் அக்கால சமுதாயப் பின்னணியை எண்ணிப்பார்க்கவும் எடுத்துக்காட்டவும் தூண்டுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் விளிம்பில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பயிற்றுவிக்கும் பாடமாக வடமொழியான சமஸ்கிருதமும், அதன் இலக்கியங்களும் இருந்ததும், தமிழ் உள்ளூர் மொழி என்று ஒதுக்கப்பட்டதும், மொழி உயர்வின் அடிப்படையில் தம் இன உணர்வினை உயர்த்தி வந்துள்ள வரலாற்று நடைப்பியலைத் தமிழ் அறிஞர்கள் உணரத் தலைப்பட்டு பார்ப்பனர் அல்லாத இயக்கம் உருவாக்கினர் என்பதும் அவ்வாறே திராவிட மகா சபை, போன்று தத்தம் சூழலுக்கு ஏற்றவாறு, அமைப்புகளை உருவாக்கினர் என்பதும் தமிழக நிகழ்வுகளின் சுவடுகளாயிருப்பதைப் பார்க்கின்றோம். இந்திய தேசிய சிந்தனையை ஒரு புறமும் அதன் வாயிலாக இந்திய விடுதலை உணர்வு ஒருபுறமும் செயல்பட்டுக் கொண்டிருந்த சூழலின் மற்றுமொரு அங்கமாகப் பார்ப்பனர் ஆதிக்கமும், அவ்வாதிக்கத்தை எதிர்த்து பார்ப்பனர் அல்லாத அமைப்புகளும் உருவெடுத்ததையும் அறிவோம். இத்தகைய, செயல்பாடுகளின் தொடக்க நிலையில் தான் சங்க இலக்கியங்கள் குறித்தும் அதன் தொன்மைக் குறித்தும் இறையனார் களவியல் உரையின் துணையோடு சங்க காலத்தைக் கண்டறிய முனையும் வெளிப்பாடுகளும் நிகழ்ந்துள்ளன. இத்தகைய சூழலின் பின்னணியில்தான், து.அ. கோபிநாதராவ் இவ்வாறு தமிழ் மொழியின் எழுத்துரு அசோக பிராமி எழுத்திலிருந்தே வடிவம் வாங்கிக் கொண்டதென்ற கருத்தினைத் தொடங்கி வைத்திருக்கின்றார் என்பது தெரியவருகிறது. இதன் அடிக்குறிப்பில்

இந்தியாவில் வழங்கும் எல்லா அசரங்களும் அசோகராஜாவின் காலத்து வழங்கிய அசரங்களின் திரிபு என்னும் சித்தாந்தத்தைக் குறித்து ஒரு வியாசம் விரைந்து எழுதக் கருதியுள்ளோம் என்று குறிப்பினையும் தந்திருக்கின்றார். து.அ.கோபிநாதநாவ் தந்திருக்கும் தமிழிலக்க வரலாறு காட்டப்பட்ட படம் கீழ்வருமாறு அட்டவணைப் படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

(மேலது;417)

இப்பட்டியல் து.அ.கோபிநாதராவால் தரப்பட்டுள்ளது. இப்பட்டியலில் எழும் கேள்வி, அசோக எண்களின் வழியே, இவ்விலக்க எண்களின் வடிவம் அமைந்ததென்றால், இப்பட்டியில் தந்துள்ள அசோக எண்கள் + என்ற ஒன்றும், ஜீஜீ என்ற ஆறும் ஆகும். இவ்விரு எழுத்துக்களே இந்திய மொழிகளுள் தொன்மையான எழுத்துருவம் என்பது அவர் கருத்து. மேற்கண்ட பட்டியலில் ஒன்றுக்கும் ஆறுக்கும் மட்டும் எழுத்துரு கொடுத்திருப்பவர் மற்ற எண்களுக்கு எழுத்துருவம் கொடுக்காமல் விட்டிருப்பதால், அசோக பிராமியில் மற்ற எழுத்துருவங்கள் இல்லையா என்று கேள்வியெழுகிறது. மேலும், கற்கோயில் எண் வடிவமுறையும் பல்லவ எண்களின் வடிவ முறையும் அசோக பிராமி எழுத்துக்களான ஒன்றிலிருந்தும் ஆறிலிருந்தும் மாறுபட்டிருப்பதைக் காண்கிறோம்.

சேரர்களின் ஆட்சியில் பயன்படுத்தப்பட்ட எண்களின் வடிவோடு இவ்விரு எண்களின் வடிவம் (அதிலும் பொருந்தவில்லை) ஓரளவு ஒத்திருப்பதே யொழிய பெருமளவு ஒத்துப்போக வில்லையென்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அத்தோடு கற்கோயில் எண்கள் மூன்றுவரையில் படுத்த உருவிலிருப்பதும், பல்லவ எண்கள் படுத்திரத்தவை எழுந்தது போன்றிருப்பதுமாகக் காணப்படுவதைப் பார்க்கிறோம். இப்வெழுத்துருக்கள் எவ்வாறு அசோக எழுத்துரு எண்களோடு பொருந்தி வருமென்பது து.அ. கோபிநாதராவுக்கு மட்டுமே தெரிந்ததாகயிருக்கின்றது. விஜயநகர காலத்து

எண்ணுருவாகவும், தற்காலத்து எண்ணுருவாகவும் குறிக்கப்பட்டிருக்கும் எண்களுள், ஒன்று என்ற எண்ணின் அசோக எண்ணோடு பொருந்துவதற்கு அமைப்பிருக்கிறதென்பதையும் காணமுடிகிறது.

இங்ஙனம் மீண்டும் நினைவுறுத்த வேண்டிய கேள்வி, அசோக எண்கள், ஒன்றும் ஆறும் மட்டும் ஏன் தரப்பட்டிருக்கிறது. (இக்கட்டுரையினை (4–10–1904இல்) நீலகிரியிலிருந்து எழுதியுள்ளரென்பது தெரியவருகிறது). இக்கட்டுரை சங்க கால இலக்கியம் குறித்து எழுதப்பட வில்லையெனினும் தமிழறிஞர்கள் வரையறுக்க முயன்ற சங்க கால புரிதலுக்கு முற்றிலும் முரணான முடிவினை வலியுறுத்தி இறையனார் களவியல் கூறும் தொன்மம் சார்ந்த அணுகு முறையிலிருந்தும் வரலாற்று ரீதியான ஆய்வு முறையின் முடிவுகளிலிருந்தும் முழுவதும் வேறுபட்டதோர் நிலையில் நின்று செயல்பட்டுள்ளதைப் பார்க்கிறோம்.

## 2.1.வரலாற்று அடிப்படையிலான சங்க கால ஆய்வின் தொடக்கமும்தொன்ம அடிப்படையிலான ஆய்வுகளுக்கு மறுப்பும்

2.1.1.த.சரவணமுத்துப்பிள்ளையின் தொன்ம மறுப்பு அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறை

2.1.2.து.அ.கோபிநாதராவின் கல்வெட்டு அடிப்படையிலான வரலாற்று ஆய்வும் தொன்ம மறுப்பும்

2.1.2.1.பாரதம் பாடிய பெருந்தேவனாரின் காலம்

2.1.2.2.இறையனார் அகப்பொருளுரையின் காலம்

2.1.2.3.பாண்டியர்கள் மற்றும் தமிழ்ப் புலவர்களின் காலம்

2.1.3.க.வி.ஸி மணியத்தின் வரலாற்று நோக்கிலான திருக்குறள் மற்றும் சிலப்பதிகாரத்தின் காலப்புரிதல்

2.1.4.அயோத்திதாசரின் சிந்தனையில் முச்சங்கமும் திருவள்ளுவர் காலமும்

2.1.5.தி.வை. சதாசிவப்பண்டாரத்தாரின் சங்க இலக்கியச் சான்றுகளின் அடிப்படையிலான கரிகாற் சோழன் பற்றிய கால ஆய்வு

2.1.5.1.தி.வை.சதாசிவப்பண்டாரத்தார் தரும் சங்ககால மன்னர்களும் புலவர்களும்

2.1.6.மு.இராகவையங்காரின் கல்வெட்டு மற்றும் இலக்கியச் சான்றுகளின் அடிப்படையிலான சங்க கால ஆய்வு

2.1.6.1.தொன்மப் புரிதலிலிருந்து விலகிய வரலாற்று அணுகுமுறையிலான சங்க கால ஆய்வு

2.3.21.உ.வே.சாமிநாதையர் குறிக்கும் சங்க இலக்கிய வரையறை

2.3.22.மறைமலையடிகளின் தனித்தமிழ்ச் சிந்தனையும் சங்க இலக்கிய மற்றும் கால வரையறையும்

2.3.23.கா.சுப்பிரமணியப்பிள்ளையின் தொன்ம நம்பிக்கையும் வரலாற்று ஆய்வுகளை மறுத்த சங்கம் குறித்தக் கட்டமைப்பும்

சங்க காலத்தைக் குறிக்கவரும் பெரும்பாலான இலக்கிய வரலாற்று நூல்கள் கி.மு.3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.3 ஆம் நூற்றாண்டு வரை என வரையறுப்படுத்துகின்றன. இக்கால கட்டத்திற்குள் எழுதப்பட்ட சங்க இலக்கியங்களாகத் தமிழ்ப் பயிலும் ஒவ்வொருவரும் இன்று வரையிலும் பயின்று வருவது, பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமேயாகும். இருப்பினும் திருக்குறளின் காலத்தை கி.மு.31 என்றும், கி.பி.1 ஆம் நூற்றாண்டு என்றும் இருவேறு புரிதலில் குறித்துள்ளதையும் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய காப்பியங்களின் காலத்தை, கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று அவ்விலக்கிய வரலாறு நூல்கள் கற்பித்து வருவதையும் பார்க்கிறோம்.

திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் சங்க காலமாக ஏற்கப்படும், கி.மு.3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.3 ஆம் நூற்றாண்டு வரையிலான காலக்கட்டத்திற்குள் இருந்தாலும், திருக்குறளைச் சங்க மருவிய கால நூலாகவும், சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகியவற்றை கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று கால நிர்ணயம் மட்டும் செய்து அவைகளைச் சங்க கால இலக்கியங்களின் வரிசையில் கொள்ளப்படாமல், காப்பிய வகைமைக்குள் கூறுவதையும் பார்க்கிறோம். இத்தகைய சூழலுக்குச் காரணமான, தமிழ் இலக்கிய வரலாற்றின் கட்டமைப்பு வரையறையும் அத்தகைய வரையறைக்கு முன்பு நிகழ்ந்ததாகத் தெரியவரும் கால ஆராய்ச்சிப் புரிதல்களையும் இவைகளைப் பற்றிய ஆய்வுப் போக்குகளையும் கவனத்தில் கொள்வோம்.

## பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்னும் வழக்கின் தொடக்கம்

மயிலையாருக்குப் பின்னரே 'பத்துப்பாட்டு' என்ற சொல் பிறந்திருக்கிறதென்பது ஆய்வாளர்களின் முடிவாக இருக்கிறது. இங்கு எழும் கேள்வி யாதெனில் தொகை நூல்களையும் பாட்டு நூல்களையும் தொகுத்த காலம் எதுவாக இருக்கும் என்பதும் சங்கம் மருவிய காலத்தின் தொடக்கத்தில் இத்தொகுத்தளிக்கும் பணி நடைப்பெற்றிருந்தால் கிட்டதட்ட ஏழெட்டு நூற்றாண்டுகளாக 'பத்துப்பாட்டு' என்று அழைக்கும் சிந்தனை இல்லாமலிந்திருக்குமா? என்பதுமாகும்.

பழம்பாடல்கள் தொகுக்கப்பட்ட காலத்திற்கும், உரையாசிரியர் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் இவ்விலக்கியங்கள் என்ன பெயரில் வழங்கப்பட்டிருக்கும் என்ற எண்ணமும் இவ்விலக்கியங்களைத் தொகுத்தளித்தவர்கள் எவ்வாறு அழைத்திருப்பார்களென்ற வினாவும் தொக்கி நிற்கின்றன. இதில் கவனிக்க வேண்டியது எட்டுத்தொகை என்று கூறப்படும் பெயர் வைப்பு எப்பொழுது வந்தென்பது எவ்விடத்திலும் யாரும் குறித்ததாகத் தெரியவில்லை. ஆனால் பத்துப்பாட்டு என்ற தொடரை மட்டும் கவனித்து வந்திருக்கிறார்கள். இதற்குக் காரணம், தொகை நூல்கள் தனித்தனியே பாடலின் தன்மைக்கேற்ப புறம் என்றும் அகம் என்றும் எண்ணிக்கைக்கு ஏற்ப நானூறு என்றும் ஐநூறு என்றும் வடிவத்திற்கு ஏற்ப ஐங்குறுநூறு குறுந்தொகை என்றும் வழங்கப்பட்டு வந்துள்ளதைக் பார்க்கிறோம். அவ்வாறே, ஆற்றுப்படை நூல்கள் என்றும் நெடுநல் வாடை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை, மதுரைக்காஞ்சி என்றும் தனித்தனியே அழைக்கப்பட்டு வந்திருப்பதும் இவைகள் அனைத்தையும் ஒன்றிணைத்துப் பத்துப்பாட்டு என அழைக்க நேர்ந்திருப்பதையும், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்று தனிப்பாடல்களைத் தொகுத்து நானூறு ஐநூறு என்று வகைப்படுத்தியும், அடி அளவிலும் பொருண்மை அடிப்படையிலுமான பாடல்களை ஒன்றிணைத்து அகம் புறம் என்று பெயரிட்டிருப்பதும் மிகவும் கூர்ந்து கவனிக்கத் தக்க இடங்களாகும். ஏனெனில், இதனுள் இரண்டு வகையான தொகுப்பும், பகுப்பும் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. அதாவது, தனிப்பாடல்களைத் தொகுத்தளித்திருக்கும் முறை ஒரு நிலை என்றால் அவ்வாறு தொகுத்த எட்டு நூல்களையெல்லாம் எடுத்து எட்டுத்தொகை என்று கட்டமைத்திருப்பது இரண்டாவது நிலையாகும்.

பத்துப்பாட்டிலும் அவ்வாறே இருப்பதைக் காண்கிறோம். அதிலும் ஆற்றுப்படை நூல்கள் ஒரு புறம் தனித்த இலக்கண கட்டுக்குள் இயங்க மன்னர்களையும் ஊர்களையும் மலைகளையும் புகழ்ந்து அமைந்த நெடியப் பாடல்கள் இன்னொரு திசையிலிருந்து இயங்கயிருக்கின்றன.இவ்விரு வேறு சூழல்களையும் ஒன்றாக்கி பத்துப்பாட்டு என்று பெயரிட்டிருப்பதும் எண்ணிப் பார்க்கத் தக்கதாகயிருக்கிறது. சங்க கால சமுதாயத்தை அடுத்து ஏற்பட்ட மாற்றங்களும், அம்மாற்றங்களால் இலக்கிய உருவாக்கத்தில் நிகழ்ந்த மாற்றங்களும் பழம் மரபிலிருந்து சற்றே விலகியிருப்பதை உணர்ந்து கொண்டதாலேயே பத்து நூல்களையும் ஒன்றாக்கி பத்துப்பாட்டு என்று பெயரிட்டிருப்பதும் எட்டு நூல்களையும் ஒன்றாக்கி எட்டுத்தொகை என்று

பெயரிட்டிருப்பதும் நிகழ்ந்திருக்க வேண்டும். காரணம், திருக்குறளில் காணப்படும் சமுதாய அரசியல் மாறுதல்களும், மக்களிடையே பெருவழக்கிலிருக்கும் பழக்க வழக்க மாறுதல்களும் வெவ்வேறானவை என்பதை உணர்ந்ததாலும், உணர்ந்ததை வலியுறுத்தவும் இக்கட்டமைப்பு நடந்திருப்பதை உணரமுடிகிறது. மேலும், சங்க கால சமுதாய, மத, அரசியல் நிலைவேறு திருவள்ளுவர் காலத்தில் நிலவத்தொடங்கிய சமய, சமுதாய, அரசியல் நிலை வேறு என்பது பொருத்தமாகயிருக்மெனப்படுகிறது. திருமுருகாற்றுப்படையும், பரிபாடலும் சங்ககாலம் என்று வரையறுத்திருக்கும் கி.பி.2 ஆம் நூற்றாண்டிற்கு உள்ளாக அடங்கவில்லை என்றும் அது கி.பி.6 ஆம் நூற்றாண்டை ஒட்டிய இலக்கியங்களென்றும் பின்னர் வந்த அறிஞர்கள் வெளிப்படுத்தி வந்திருப்பதையும் பார்க்கிறோம். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் திருமுருகாற்றுப்படை தனித்த ஆற்றுப்படைத் தன்மையைக் கொண்டு விளங்குகிறது. இந்நூலும் பத்துப்பாட்டின் வரிசையில் இடம் பிடித்துள்ளதென்பதால், பத்துப்பாட்டு என்ற கட்டமைப்பு, கட்டாயமாகத் திருமுருகாற்றுப்படை இயற்றிய பின்பே நிகழ்ந்திருக்க வாய்ப்பிருக்கிறது. கி.பி.8 ஆம் நூற்றண்டில் இறையனார் அகப்பொருளுரை எழுதப்பட்டதாகக் கொள்ளப்படுகிறது. 8ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற இறையனார் களவியல் உரையில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்ற சொல்லாட்சி கிடைக்கப்பெறவில்லை. இன்னும் சொல்லப்போனால் பத்துப்பாட்டுள் ஒரு நூலின் பெயரும் குறிக்கப்படவில்லை. எனவே பழைய நூல்களுக்கு உரை எழுத வேண்டிய நெருக்கடி ஏற்பட்ட காலத்தில் பாடல்களைத் தொகுத்துப்பார்க்கும் வேளை நிகழ்ந்திருக்கும். அவ்வாறு, தொகுத்தளிக்கும் நேரத்தில் தான் நூலின் உள் கட்டமைப்புகளின் அடிப்படையிலும், பாடுபொருள்களின் அடிப்படையிலும் வகைத் தொகைப்படுத்தியிருப்பார்கள், இக்காலக் கட்டத்தில்தான் பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்கின்ற வழக்கு தொடங்கியிருக்குமென்பது பொருத்தமாகப்படுகிறது. இத்தகைய புரிதலின் அடிப்படையிலேயே அவர்கள் தொன்மை இலக்கியம், அற இலக்கியம், பக்தி இலக்கியம் என்று இனம் கண்டு பிரிந்தரிய நேர்ந்திருக்கும். அவ்வாறெனில் அப்பழம் பாடல்களின் காலம் என்ன?

## உரையாசிரியர்களுக்கு முன்பிருந்த காலச்சிந்தனைப் புரிதல்

இலக்கியங்களின் காலத்தைக் கி.மு., கி.பி. என்று வகைப்படுத்தும் சிந்தனையும் பதிப்பும் பதிப்பை ஒட்டிய ஆய்வும் ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்பே தொடங்கிருந்தாலும் இலக்கியங்களின் பொருண்மையின் அடிப்படையில் வகைப்படுத்தும் முறைமை உரையாசிரியர்களின் காலத்திலேயே நிகழ்ந்திருக்க வாய்பிருந்ததை அறிந்தோம். அத்தோடு உரையாசிரியர்களின்

காலத்திலும், இலக்கியங்களின் காலப்புரிதலென்பது ஆட்சிப் புரிந்த மன்னர்களின் பெயரை இட்டு வழங்குவதாக இருந்திருப்பதையும் பார்க்கிறோம். எனவே, ஐரோப்பியர்களின் வருகைக்கு முற்பட்ட காலப் புரிதலாக, இலக்கியங்களிலும், செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலுமாகக் கிடைக்கப் பெறுவதெல்லாம் மன்னர்களின் காலத்தினைக் குறிப்பிடுவதன் வாயிலாகவே இலக்கியங்களின் காலம் அடையாளம் காணப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

## 1930 - முன்னும் 1881க்குப் பின்னும்

கா. சுப்பிரமணியப் பிள்ளை இலக்கிய வரலாற்றினை எழுதி வெளியிடுவதற்கு முன் குறிப்பிடத்தக்க இலக்கிய வரலாறு முயற்சிகளும் கால ஆராய்ச்சி சிந்தனையின் ஆழமும் நிகழ்ந்துள்ளன. அவர்களின் புரிதலில் சங்க இலக்கியங்கள் குறித்த வரையறைகளைக் கவனிப்பது பொருத்தமுடையதாகப் படுகிறது. இனி அவற்றினைக் காண்போம்.

## 2.1. வரலாற்று அடிப்படையிலான சங்க கால ஆய்வின் தொடக்கமும் தொன்ம அடிப்படையிலான ஆய்வு மறுப்பும்

1894–ல் சிலப்பதிகாரத்தின் பதிப்புரையில் அதன் காலம் குறித்து குறிப்பிடும் ஊ.வே.சா, இலங்கையின் வரலாற்று நூல்களில் குறிக்கப்படும் முதல் கயவாகுவின் காலமே சிலப்பதிகார காப்பியத்தில் வரும் சேரன் செங்குட்டுவனின் காலம். எனவே, இக்காப்பியத்தின் காலத்தைக் கி.பி. 2ம் நூற்றாண்டெனத் தொட்டுக்காட்டிச் சென்றுள்ளார். இத்தகைய தரவுகளைக் கொண்டு ஆராயப்படும் ஆய்வுகளையே வரலாற்று அடிப்படையிலான ஆய்வுகள் என அடையாளப்படுத்தலாம். இத்தகைய ஆய்விற்குச் சான்றாகக் கிடைக்கப்பெறுவது, வி. கனகசபைபிள்ளையின் ஆய்வாகும். வரலாற்று தரவுகளின் அடிப்படையில் விரிவாகவும் அழுத்தமாகவும் வெளிப்பட்டது வி. கனகசபைப்பிள்ளையின் ஆய்வு எனினும், இவை போன்ற தரவுகளைப் பயன்படுத்தாமல் முழுவதும் வேறுவிதமான அணுகுமுறையோடும் பார்வையோடும் ஆய்வினைத் தொடங்கிவைத்தவர், து.அ. கோபிநாதராவ் என்பதைக் கண்டோம். தமிழ் ஆய்வுப் பரப்பில் சங்க இலக்கிய வரையறை ஆய்விலும் கால ஆய்விலும் அதிர்ச்சித்தரதக்க ஆய்வு போக்கினைக் கைகொண்டு வாத விவாதங்களைத் தொடங்கி வைத்தவர் து.அ. கோபிநாதராவாகத் தெரியவருகிறார். எனவே, தொன்மத்தை மறுக்கும்போக்கு இவரிடம் இருந்து தொடங்கியதாக அடையாளம் காணலாம். இவரோடு இச்சிந்தனையை முன்னெடுத்தவர்களையும் இனிக் காண்போம்.

## 2.1. த. சரவண முத்துப்பிள்ளையின் தொன்ம மறுப்பு அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறை

விவேக சிந்தாமணி என்னும் இதழ் 1892 மே மாதம் தொடக்கப்பட்டுள்ளது. 'அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிக்கை' என்று தன்னை அறிமுகம் செய்து கொள்கிறது. எஸ். நாராயணசாமி ஐயர் என்பவர் இவ்விவேக வித்தாமணி என்னும் இதழின் ஆசிரியராக இருந்திருக்கிறார்.

1892 சூன் மாத (தொகுதி 1 – இயக்கம் பகுதி 2) இதழில், "தமிழ்ப்பாஷை' என்று தலைப்பிட்டு, தமிழ்ப்பாஷையிலுள்ள இலக்கியங்கள் என்னும் துணைத் தலைப்பில் த. சரவண முத்துப்பிள்ளை பி.ஏ. இவர்கள் எழுதியுள்ளார்.

இக்கட்டுரையினைக் கீழ்வருமாறு தொடங்குகின்றார்.

> தமிழ்ப் பழையினாதி யாவர்க்குந் தெரியாதது போலவே தமிழிலே முதன் முதலெழுதப்பட்ட நூல்கள் யாவை, அவையெவரா லெழுதப்பட்டன, எக்காலத்தெழுதப்பட்டன இவையாவும் யாவர்க்கும் தெரிவதரிதாயிருக்கின்றது. தேச சரிந்திரங்கள் இல்லாமையானும், முற்காலத்தைய நூல்களில்லாமையானும், பிற்காலத்து நூலாசிரியரும் முற்காலத்தைப் பற்றி யெழுதாமையானும், தமிழ்ப் பாஷையின் பூர்வசரித்திரம் பேரிருட்டாயிருக்கின்றது.
>
> (த. சரவணமுத்துப்பிள்ளை, 1892;55)

என்று கால ஆய்வுக் குறித்த சிந்தனையின் தொடக்க நிலையில் தமிழிலக்கிய ஆராய்ச்சி உலகம் இருள் சூழ்ந்து கிடப்பதைப் படம் பிடித்துக் காட்டுவதோடு அத்தகைய சூழலைக் களைவதற்கான ஒரு தீக்குச்சியையும் அமைத்துக் கொண்டுள்ளார். அதாவது,

'அகத்தியம்' தமிழ் மொழியின் முதல் நூல் என்ற கருத்தினைக் கீழ்வருமாறு அணுகியிருப்பதைக் காணமுடிகிறது.

> அகத்தியரியற்றிய அகத்தியம் என்னும் பேரிலக்கணமே தமிழின் முதன்முதலெழுதப்பட்ட நூலென்பர் அனேகர். அகத்தியம் பன்னீராயிரஞ் சூத்திரங்கொண்ட தென்றும், இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்க்கு மிலக்கணங் கூறிய தென்றும் கூறுகின்றனர். தமிழ்ப்பாஷை தொடங்கியவுடன் ஒரு பேரிலக்கணந்தமிழிலெழுந்திய விந்தை நம் பண்டிதர்மார்க்கே புலப்படும். யாதொரு சிறு காரியத்திற்கும் சூத்திரமெடுத்துக் காட்டும் பண்டிதர் வித்துவான்கள் முதலியோர் "இலக்கியம் கண்டதற் இலக்கணமியம்பலில்" என்னுஞ்

> சிறுநன்னூற் சூத்திரத்தை மறந்து தமிழிலக்கிய முண்டுபடுதற்கு முன்னேயே அகத்தியர் தமிழிலேயொரு பேரிலக்கண மெழுதினாரெனக் கூறலும் ஒரு பெரும் விந்தையே.
>
> (மேலது;55)

என்று இறையனார் களவியலுரைக் கூறும் சங்க இலக்கியங்கள் குறித்த தொடக்கச் செய்தியைக் கேள்விக்கு உட்படுத்துகிறார். இதனோடு, இறையருள் வாய்க்கப்பெற்ற அகத்தியருக்கு இலக்கியமின்றியே இலக்கணம் செய்வதற்கு இயலும்மென்று வாதிடும் கருத்தையும் நினைவுக்கூர்ந்து தொல்காப்பியர் குறித்தும், இவர் காலத்தில் உடன் பயின்ற பன்னிருவர் குறித்தும் இவர்கள் இயற்றியதாகக் கூறப்படும் ‘பன்னிருபடலம்’ பற்றியும் தொட்டுக் காட்டி, இத்தொல்காப்பியத்தின் ஐம்பகுப்புகளை அறிமுகம் செய்கிறார். இவ்விலக்கணத்தின் உரையாசிரியர்களையும் வரிசைப்படுத்தி யிருக்கின்றார். இதனைப்பதிப்பித்த சி.வை. தாமோதரம் பிள்ளையையும் நினைவு கூறுகிறார்.

அடுத்து, ‘தமிழ்ச் சங்க மிருந்த காலம்’ என்ற உட்தலைப்பினை அமைத்துக்கொண்டு கீழ்வருமாறு தொகுத்துத் தருகின்றார்.

> இக்காலத்திலேயே முத்தமிழ்ச் சங்க மிருந்ததாகக் கூறுகின்றனர். முதற் சங்கம் கடல் கொள்ளப்பட்ட மதுரையிலிருந்த தெனவும், சங்க மிருந்தார் ஐந்நூற்று நாற்பத்தொன்பதின்மர் எனவும், நாலாயிரத்து நாநூற்று நாற்பத்தொன்பதிர்மர் பாடினாரெனவும், பாடப்பட்டவை வேத்துணையோர் பரிபாடலும், முதுநாரையம், முது குருகும், களரியாவிரையுமென இத்தொடக்கத்தனவெனவும், இடைச்சங்கம் காபாடபுரத்திலிருந்த தெனவும், சங்க மிகுந்தார் ஐந்நூற்றென்பதின்மரெனவும், மூவாயிரத்தெழுநூற்றுவர் பாடினாரெனவும், பாடப்பட்டவை கலியுங்குருகும், வெண்டாளியும், வியாழமாலை யகமளுமென இத்தொடகத்தன எனவும், கடைச்சங்கம் வடமதுரையலிருந்த தெனவும், நானூற்று நாற்பத்தொன்மதின்மர் பாடினாரெனவும், பாடப்பட்டவை எட்டுத் தொகையும், பேரிசையுந், சிற்றிசையுமென்றித் தொடக்கத்தன வெனவும் வித்துவான்கள் கூறுவர்.
>
> (மேலது;56)

என்று இறையனார் களவியல் கருத்தினைத் தொகுத்தளித்து இக்கட்டமைப்புக் குறித்து கருத்துரைக்க வருபவர்,

> ஆயின் உள்ளதையுள்ளபடி கூறல் தமிழ்ப்பண்டிதர் குணமின்மையின் உண்மையும் அவர்வாயில் வரும்பொழுது உண்மை

நிறம் மாறிப் பொய்யாகின்றது. ஆகவே சங்கங்களைப் பற்றிக் கூறுவனவற்றுள் உண்மையெவ்வளவு, பொய்புளுகு எவ்வளவெனக் கண்டுபிடிக்க தொடங்கப் பகீரதப் பிரயத்தனமாகும். இச்சங்கங்களுள் ஒவ்வொன்று பல்லாயிரவருடெமிருந்ததாகவும், இச்சங்கத்தில் சிவன், சுப்பிரமணியர் முதலிய கடவுளர் சங்கத்தவராய் வீற்றிருந்தனரெனவும், இச்சங்கங்களுக்குத் தெய்வீகமான சங்கப் பலகை யொன்றிருந்ததாகவும் இவ்வித பலகதைகளைக் கூறுவதனால் உள்ள உண்மையும் மறைந்து போகின்றது. கடைச்சங்கத் திலியற்றப்பட்டனவாகக் கூறப்பட்டவற்றுட் சிலவே தற்காலத்து வழங்கும் நூல்களுட் பழையன

(மேலது;56)

முச்சங்கம் பற்றி உரைக்கப்படும் செய்திகளில் கற்பனை மிகுந்திருப்பதைச் சுட்டிக் காட்டி இயல்பான நடைமுறைக்கு முரண்பட்டு நிற்பதால் இதற்குள்ளிருக்கும் உண்மையும் மறைந்து போகின்றதென்பதை ஆய்வு ரீதியாக மறுத்துள்ளதைக் காண்கின்றோம். மேலும், இச்சங்க காலங்கள் நிகழ்ந்ததாகக் குறிக்கப்படும் கால நீட்டிப்பும் மிகவும் கற்பனை நிறைந்த கட்டமைப்பு என்பதையும் உணர்த்திச் செல்வதைப் பார்க்க முடிகிறது.

இச்சங்க காலம் குறித்து மேற்கண்ட செய்திகளைக் கூறி இக்காலத்தில் இயற்றப்பட்ட காவியங்கள் ஐந்தென்றும் அவை முறையே சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி முதலியவையென்றும், அந்நூல்களின் பதிப்புப் பற்றியும் அந்நூல்களின் கதை களம் பற்றியும் ஒருவரிகளுக்குள் சொல்லி அறிமுகம் செய்கிறார். இறையனார் களவியலுரை இக்காவியங்கள் குறித்து ஒன்றும் சொல்லவில்லை யென்றாலும் இவ்வைந்து நூல்களும் சமகாலத்தவன என்று காட்டியிருப்பது இக்கதை கருவில் அமைந்துள்ள தொன்மையும், சங்க இலக்கிய பதிப்புகளோடு எண்ணத்தக்க அளவில் குறிக்கப்பட்டிருக்கும் மன்னர்களையும் ஒப்பு நோக்கி செய்த முடிவாகயிருக்கமென எண்ணத் தோன்றுகிறது.

மேற்குறிப்பிட்ட நூல்களோடு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய எட்டுத்தொகை நூல்களும், திருமுருகாற்றுப்படை, பொருநாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய பத்துப்பாட்டும், நாலடி நான்மணி போன்ற பதினெண் கீழ்க்கணக்கும் சங்க காலத்தைச் சேர்ந்த நூல்களாகப் புரிந்து கொள்ளப்பட்டுவந்த புரிதலைத் தொகுத்தளித்து, இம்முதல் கட்டுரையை முடித்து, அடுத்த இதழில் இதன் தொடர்ச்சியைக் காணலாமென்பதைக்

காட்டுகின்றார். இதுவரை பெறப்பட்ட இத்தரவிலிருந்து விவேகசிந்தாமணி இதழில் முதன் முதலாக சங்க இலக்கியங்களின் கால ஆராய்ச்சி குறித்த சிந்தனையைத் தொடங்கி வைத்தவர் த. சரவண முத்துப்பிள்ளை என்பதைப் பெற்றோம்.

மேற்கண்டதன் தொடர்ச்சி சூலை மாத இதழில் (1892– இலக்கம்3) வெளிவந்துள்ளது. இதில் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் பற்றி எழுதியுள்ளார். இத்திருக்குறள் சங்க இலக்கிய நூலாகக் குறிப்பிடாமல், இற்றைக்காயிர வருடங்கட்கு முன் தோன்றிய நூலாகச் சுட்டி, இந்நூலின் ஒப்புயர்வற்ற பெருமையை நினைவுகூர்ந்து இச்சம காலத்தில் திவாகரம், பிங்கலத்தை, சூடாமணி முதலிய நிகண்டுகளும், பவணந்தியர் இயற்றிய நன்னூலும் தோன்றியதாகத் தருவதிலிருந்து திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றென்ற புரிதலில்லாமலும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றியதாகக் கூறியிருப்பதும் பதிப்பினை ஒட்டிய அக்கால ஆய்வுச் சிந்தனையின் தொடக்க நிலை இவ்வாறுதான் இருந்திருக்கிறதென்பதை உணர்த்துவதைக் காண்கிறோம். அடுத்து கம்பராமாயணம் பற்றி கூறி, 'ஔவையார்' என்ற உட்தலைப்பு வரிசையை தொடர்கிறார். இதில் 'ஔவையார்' எட்டுத்தொகை, பத்துப்பாட்டின் காலத்தில் வாழ்ந்தவரென்றும் இவர், ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் முதலியவை இயற்றியவரென்றும் கூறுகின்றார். சரவணமுத்துப்பிள்ளை எழுதிய இச்சமயத்தில் ஔவையார் என்பவர் ஒருவரே என்ற சிந்தனை இருந்துள்ளதைப் பார்க்கிறோம். இவ்விரு பகுதியோடு இத்தொடர் முடிவுற்றதையும் காணமுடிகிறது. இவர் தெளிந்த ஆய்வைச் செய்யவில்லை என்றாலும், சங்கத்தைக் கூறும் தொன்ம கதையை மறுத்திருப்பதைக் கண்டோம்.

### 2.1.1.2. து.அ. கோபிநாதராவின் கல்வெட்டு அடிப்படையிலான வரலாற்று ஆய்வும் தொன்ம மறுப்பும்

சி.வை. தாமோதரம் பிள்ளை, தமிழ் இலக்கிய கட்டமைப்பினையும் இறையனார் அகப்பொருளுரையின் வழி சங்க கால மற்றும் இலக்கியங்களின் வரையறை ஆய்வினையும் தொடங்கியவர். வரலாற்று அடிப்படையிலான சங்க கால ஆய்வினை வெளிப்படுத்தியவர் வி. கனகசபைப்பிள்ளை. இவ்விருபெரும் ஆய்வாளர்களின் ஆய்வு புரிதலிலிருந்தும் ஆய்வு போக்கிலிருந்தும் வேறுபட்டதோர் பார்வையோடு தமிழ்மொழியின் தொன்மைக்குறித்த சிந்தனையைச் கேள்விக்குட்படுத்தியவர் து.அ. கோபிநாதராவ். இவரின் ஆய்வுப் பாதை வடஇந்தியாவின் அசோக சக்ரவர்த்தியிடமிருந்து தொடங்கியிருக்கிறது. இத்தகையதோர் பார்வையும்

பதிவும் அதுவரை நிகழ்ந்துவந்த சங்க கால ஆய்வாளர்களின் ஆய்விலிருந்து முற்றிலும் வேறுபட்டதோர் அணுகுமுறையில் அமைகின்றன. இவரின் இத்தகைய ஆய்விற்கான தரவுகளையும் அதன் தன்மைகளையும் நோக்குவோம்.

### 2.1.2.1. பாரதம் பாடிய பெருந்தேவனாரின் காலம்

மார்கழி மாத இதழில் (பகுதி 2) து.அ.கோபிநாதராவ் அவர்கள் 'பாரதம் பாடிய பெருந்தேவனார், என்று தலைப்பமைத்து கட்டுரை வெளியிட்டுள்ளார். இக்கட்டுரையின் ஆய்வு கவனிக்கத்தக்கதாக உள்ளது. இக்கட்டுரைப் பின்வருமாறு தொடங்குகிறது.

கடைச்சங்கப் புலவரென்று புகழ்பெற்ற பாரதம்பாடிய பெருந்தேவனார் தம் உத்தியோகப் பருவத்து முதலில்,

வண்மையாற் கல்வியான் மாபலத்தலாள் வினையால்
உண்மையாற் பாராளு ரிமையாற் – றிண்மையால்
தேர் வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றாளே
டியார் வேந்த ரேற்பா ரெதிர்

(து.அ. கோபிநாதராவ், 1908;61)

என்ற பாரதம் பாடிய பெருந்தேவனாரின் பாடலையும் அப்பாடலில் குறிக்கப்பட்டிருக்கும் வேந்தன் யாரென்று கண்டறிவதன் மூலம் பெருந்தேவனாரின் காலத்தை அறிந்து கொள்ளமுடியுமென்றும் சொல்லத் தொடங்கி, அவ்வாறு கண்டறிவதற்குச் சிலாசாசனத்தின் துணையோடும் நந்திக்கலம்பகத்தின் உதவியோடும் முயலுகின்றார். இம்முயற்சியை முன்னெடுக்க நந்திகலம்பகத்தில் பாடப்பெற்றிருக்கும் அரசன் நந்திவர்மனென்றும், அவன் பல்லவர் வம்சத்தவனென்பதையும் நிறுவ,

*மல்லை வேந்தன் மயிலை காவலன்*
*பல்லவர் தோன்றல் பைந்தார் நந்தி (பா.1)*

என்றும்,

*பல்லவர் கோனந்தி (பா.15)*

என்றும்,

*.................புகட்பல்லவ*
*னமரர் கோமா னடுபோர்நந்தி (பா-23)*

என்றும்,

*பைந்தார் நந்திப் பல்லவர் கோன் (பா.35)*

(மேலது;63)

என்றும் கிடைக்கப் பெறும் அடிகளை ஆதாரமாகத் தருகிறார். மேலும் இந்நந்திவர்மனுக்கும் இவனது தம்பிக்கும் போர் ஏற்பட்டதையும், அதில் இவனுக்கெதிராகச் செம்பியர், தென்னர், சேரன் மூவரும் கூனரென்றும் எழுதுகின்றார். இந்நந்திந்திவர்மன் சோணாடு, கொங்கு, வேங்கடம், தொண்டை முதலிய பகுதிகளைத் தனது ஆட்சியின் கீழ்செயல்பட்டானென்று கிடைக்கப்பெறுவதையும் தருகின்றார். மேலும், மைலாப்பூரும் மாபலிபுரமும் இவனது முக்கிய நகரங்களாக அமைத்து கொண்டிருந்ததையும் சுட்டி இவன்மேல் பாடப்பெற்றிருக்கும் கோவையையும் சொல்லி இந்நூல்களின் வாயிலாக உறுதிபடுத்திக்கொண்டு, சிலாசாஸனங்களில் கிடைக்க வரும் தரவுகளைக் காட்டத் துவங்குகிறார். அதாவது,

> சிலாசாஸனங்களில் நந்திவர்ம்மன் நந்திவர்ம மகாராஜா, கோவி சைய நந்திவிக்கிரமவர்மன், நந்திப் போதத்தரசர் தெள்ளாற்றெறிந்த நந்திப் போத்தரசர் எனப்பல வாறாய்ப் புகழப்படும் பல்லவ சக்கரவர்த்தி யொருவனுளான் கலம்பகத்திற் குறிக்கப்பட்டுள்ள அவன் நாராயணனென்னும் பெயருமிவனுக்குள்ள தென்பது இவன் மகன் நிருபதுங்கவர்ம்மன் காலத்ததும் அதற்கும் பிற்பட்டசோழர்கள் காலத்ததுமாகிய சாஸனங்களில், இவன் காலம் வரை காவதிப்பாக்க மென்னு மட்டுமே பெயர் கூறப்பட்டிருந்த காவேரிப்பாக்கமானது, அவனி நாராயணச் சதுர்வேதி மங்கலமாகிய காவதிப்பாக்கமெனப் பெயரடைந்ததால் ஏற்படும்.

(மேலது;63)

என்று குறிப்பிட்டு, நார்த்தாமலை என்னுமிடத்தில் கிடைக்கப் பெற்ற சாஸனத்தில் விடேல்விடுகு முத்தரையன் மகனாகிய சாத்தன் பழியிலி என்பவன் அவ்வூரின் மலையில் சிவக்கிரகம் ஒன்று கல்லில் செய்து வைத்தானென்ற தகவலைக் காட்டி, நிருபதுங்கன் தந்தை நந்திவர்ம்மன் காலத்தானாதல் வேண்டுமென்று கூறி, நந்திக்கு விடேல் விடுகென்னும் பெயரிருந்ததென்பதைச் சொல்லி, இந்நந்திவர்ம்மனையே தெள்ளாற்றில் வென்றானென்று பெருந்தேவனார் குறிப்பிட்டிருக்கிறார் என்ற முடிவுக்கு வருகிறார். இம்முடிவினைக் கொண்டு காலத்தைக் கணிக்க முயலுகின்றவர். பின்வருமாறு முடிவுக்கட்டுகிறார்.

> இவ்வரசன் தந்தையாகிய தந்திவர்ம்ம னென்பான் இரட்டவம் சத்தானாகிய மூன்றாம் கோவிந்ததெனன் பவனுக்குப் பகைவனாயிருந்து (கி.பி.804) பிறகு இவ்வரசன் பேரத்தியாகிய (அமோகவர்ஷன் மகள்) சங்கர தேவியைத் தன் மகன் நந்திக்கு மணம் புரிவித்து வைத்தானென்பது சரித்திரசித்தம் ஆகவே தந்திமகன் நந்தி கி.பி.804 க்குப் பிற்பட்டவன்; முதல் அமோகவர்ஷன்

காலமாகிய கி.பி.814–876 ல் இருந்திருக்க வேண்டும். இவ்வரசன் 62 வருஷ மரசாண்டான். ஆதலால் இவன் கீழ் வாணவம்சத்தார் மூன்று தலைமுறையாண்டார்கள். இவ்வரசன் காலத்தார், கங்கவரசனாகிய முதல் பிருதிவிபதியும், பாண்டியன் வரகுணனுமாவார். நிருபதுங்கனை எதிர்த்து வந்த பாண்டியன் வரகுணன் மேற்படையெடுத்துக்திருப்புறம் பியத்திற் பொருது உயிர் மாண்டவன். மேற்கூறிய பிருதிவிபதியே, இக்குறித்த விஷயங்களைக் கொண்டு இவ்வரசன் உத்தேசம் கிபி.815 முதல் 870 வரை யாண்டவனென்று கொள்ளலாம். இவனுடனெதிர்த்த மன்னருட் பாண்டியன் வரகுண னெருவனென்று முன்னரே சொன்னோம். சோழர்களில் முதல் ஆதித்தனாக வேண்டும். மேற்கூறியவற்றால் பாரதம் பாடிய பெருந்தேவனார் 9 ம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியைச் சேர்ந்தவரென்னலாம்.

(மேலது;64)

என முடிக்கிறார். இங்கு கவனிக்கத்தக்கது யாதெனில், கட்டுரையின் தொடக்கத்தில் கடைச்சங்கப் புலவரென்று புகழ்பெற்ற பாரதம் பாடிய பெருந்தேவனாரென்று தொடங்குபவர், பல்லவ மன்னனான நந்திவர்ம்மனின் காலத்தைக் கண்டறிந்து இப்பாரதம் பாடியப் பெருந்தேவனாரும் அக்காலமான கி.பி.9 ஆம் நூற்றாண்டினர் என்று குறிப்பிட்டிருப்பது கடைச் சங்கப் புலவரென்று சொல்லப்பட்டுள்ளதை ஏற்றுக் கொண்டுள்ளாரா அல்லது கடைச்சங்க காலத்தை கி.பி.9 ஆம் நூற்றாண்டு வரை கொண்டு வந்திருக்கின்றாரா என்பது தெளிவில்லாமலிருப்பதைக் காண்கிறோம்.

### 2.1.2.2. இறையனார் அகப்பொருளுரையின் காலம்

'அமுத சூத்திரம் அறுபதாய்ச் சமை நூல்' என்று கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒட்டக்கூத்தர் முதல் 'தெளிந்த இனிய மிடுக்குடைய நடை முதலிரண்டு மூன்று சூத்திர உரைகள் இன்றுவரை உரைநடை நூல்களிலேயே இதனைச் சிறந்ததாக்கி விட்டன. மூலம் அகப்பொருளைப் பேசுகின்றது. உரை வீடுபேற்றை அதனில் இணைக்கிறது'. என்று தற்கால மு.கோவிந்தசாமி வரையிலும் போற்றும் இவ்வகப்பொருளுரை உரைநடை இலக்கியத்தின் தோற்றுவாயில், இலக்கணத்தை இலக்கியச்சுவை சொட்டச்சொட்ட எடுத்துரைக்கும் இன்பத்துப்பால். இத்தகைய பாராட்டுக்குறிய இந்நூல் எக்காலத்தில் தோற்றம் பெற்றது என்பதை து.அ. கோபிநாதராவின் வழி இங்ஙனம் கவனத்தில் கொள்வோம்.

மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனால் தம் மகனார் கீரன் கொற்றனாருக்கு உரைத்தார். அவர் தேனூர்கிழார்க்கு உரைத்தார் அவர் படியங்கொற்றனாருக்கு உரைத்தார். அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனாருக்கு

உரைத்தார். அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனாருக்கு உரைத்தார். அவர் செல்லூர் ஆசிரியர் ஆண்டைப் பெரும் குமாரனார்க்கு உரைத்தார், அவர் திருக்குன்றத்தாசிரியருக்கு உரைத்தார் அவர் மாதளவானர் இளநாகனாருக்கு உரைத்தார், அவர் முசிறியாசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார் இங்ஙனம் வருகின்றது உரை. கர்ணபரம்பரயாக வழங்கி வந்த மேற்கண்ட முறையைப் பெற்றாலும், இவ்வுரையினை முதன் முதலாக உரைத்த நக்கீரர் கடைச்சங்க காலத்து நக்கீரர் தானா? என்ற வினாவினை இவ்வுரையில் கிடைக்கப்பெறும் சுவர்க்கம் (ப.16) வாசகம் (ப.59) எனும் வடமொழிச்சொற்கள் பின்னர் வந்த ஆய்வாளர்களை கேள்வி எழுப்பச்செய்து இன்று வரையிலும் இந்நூலின் காலம்குறித்து எட்டாம் நூற்றாண்டா அல்லது பத்தாம் நூற்றாண்டா என்னும் சர்ச்சை தீர்ந்ததாகத் தெரியவில்லை. இது ஒரு புறம்நிற்க, இந்நூலின் காலம்குறித்து 1908இல் து.அ. கோபிநாதராவின் ஆய்வு முடிவினை இவ்விடம் காண்போம்.

செந்தமிழ் 6ஆம் தொகுதியில் இறையனாரகப் பொருளுரை, என்னும் தலைப்பில் து.அ. கோபிநாதராவ் கட்டுரை வெளியிட்டுள்ளார். இதில் தமிழகம் தொகுதியில் இதே தலைப்பில் வெளியிட்ட குறிப்பினை அடிக்குறிப்பில் காட்டியுள்ளார். ஆயினும், இந்நூலின் காலம் குறித்து தெளிந்த முடிவினை உரைக்கும் பொருட்டு இவ்விதழ் வெளியிடுவதாகத் தருகின்றார்.

பெரியகுளமென்னும் பகுதியின் சின்னமனூரென்னுமிடத்தில் கிடைக்கப்பெற்ற சாஸனத்தில் பழைய பாண்டிய வம்சத்தின் சில அரசர்களின் பெயர்கள் கிடைக்கப்பெற்றதைப் பின்வருமாறு தருகிறார்.

**(Ep. An. Rep. For the year 1906-07)**

1. ஜயந்தவர்ம்மன் இவன் மகன்
2. மாறவர்ம்மன், பாராங்குசன், அரிகேவரி, அஸமஸமன், அலங்கிய விக்கிரமன், அகாலகாலன், சங்கர மங்கையில் பல்லவனை வென்றவன் இவன் மகன்.
3. ஜடிலவர்ம்மன் பராந்தகன் I

   இவன் மகன்
4. இராஜசிம்மன் I

   இவன் மகன்

5. வரகுணமகாராஜன் I

இவன் மகன்

(து.அ. கோபிநாதராவ், 1908;58)

என்று காட்டியதோடு 9 இராஜசிம்மன் 2 அபிமாநமேரு, மந்த, கௌரவன், மாறவர்மன் வரையில் தந்து இதில் ஜடிலவர்ம்மனாகிய பராந்தகன் என்பவனின் காலம் ஆனைமலைசாஸனத்தால் கி.பி.770 என்று அறியவருவதைச் சுட்டி இவன் தந்தை பராங்குசனாகிய அரிகேசரி மாறவர்ம்மனின் காலமும் கி.பி. 770 என்பதறிந்து தருகின்றார். இம்முடிவைக் கி.பி. 8 ஆம் நூற்றாண்டென்பதை நினைவுறுத்திக் கொண்டு இறையனார் அகப்பொருளுரையின் காலம் குறித்த ஆய்விற்குப் பின்வருமாறு செல்கின்றார்.

இறையனாரகப் பொருளுரையில் உதகரிக்கப்பட்டு எண்களிட்ட முந்நூற்றுச் சில்லறைப்பாட்டுக்களும் ஒரு கோவையைச் சேர்ந்ததாகவும், அக்கோவை நெடுமானென்னுமோர் அரசன் மேற்பாடப்பட்ட தென்றும் விளங்குகிறது. இந்நெடுமாறன் கோவையில் வரசன் பற்பல விடங்களில் சண்டை செய்ததாகக் கூறப்படுகிறது. அவைகளில் சங்கமங்கை நெல்வேலிகளும் காணப்படுகின்றன. (சங்கமங்கை என்பது– இது காஞ்சிபுரத்துப் பக்கத்திலிருக்கிறது. இது சாக்கிய நாயனார் பிறந்தவிடம். பெரிய புராணம் சாக்கியநாயனார் புராணத்திற் காண்க.)

(இறையனரகப் பொருளுரை 106–145 யிடம் உதாரணச் செய்யுள்களில் நெய்வேலியும், 202–266–ம் பாடல்களில் சங்கர மங்கையும் கூறப்படுவதில் காண்க) என்றியும் இவ்வரசனுக்கு அரிகேசரி, பராங்குசன் என்னும் பெயர்களும் உளவென்பதும் மேற்படி) கோவையின் சிலபாட்டுக்களால் தெரியவருகிறது. இவன் இப்பெயர்களைத் தரித்திடுத்தல், சங்கமங்கை, நெல்வேலி முதலியவிடங்களில் பொருதிருத்தல் முதலிய விஷயங்கள் சின்னமனூர்ச் சாஸனத்தில் கூறிய விஷயங்களோடு ஒத்திருத்தலால், அகப் பொருளிற் கூறப்பட்டுள்ளவனும், சாஸனத்தில் கூறப்பட்டுள்ளவனுமாகிய மாறவர்ம்மர்களுளொருவனே என்பது தோன்றும் இவன் காலம் முன்னமேயே, 8 ஆம் நூற்றாண்டின் இடைப் பாகமென்றும், இவன் நந்திவர்ம்மன் பல்லவமல்லனோடு சங்ககாலத்தானென்றும் சொன்னோம்.

(மேலது;58)

அக்கோவையில் நெடுமாறனைப் பற்றிக் கூறுவதால் அது கி.பி. 760 குப் பிறகுதான் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்ற முடிவினை இறையனார் அகப்பொருள் உரைக்காரர் நிலையிறுத்தியிருப்பதால், இவரின் காலம், கி.பி. 760க்குப் பிறகென்பது விளங்குவதாகச் சொல்லி, இவ்வுரைக்காரர் நக்கீரென்றால் இது சங்க இலக்கிய காலத்திற்கு வெகு பின்னர் வருவதால் முடிவு முரண்படுகிறதென்பதைச் சுட்டிக்காட்டிப் பின்னர், இவ்வுரையினைக் (உதகரித்தவர்) சுவடியில் அச்சேற்றியவர் முசிரியாசிரியர் நீலகண்டனாரோ அல்லது அவரின் மாணவரோ என்பது தெரியவருவதாகக் குறிப்பிட்டு, உரையில் நக்கீரருக்குப் பின் பத்துப் பேரைச் சொல்லியிருப்பதால், முசிரியாசிரியர் காலத்தில் சுவடியில் எழுதப்பட்டாலும் அதுவரை வாய்வழி உரையாக வந்திருக்கிறதென்று நிறுத்தி அவ்வாறாயின் நக்கீரர் காலம் குறித்துப் பின்வருமாறு ஆராயப் புகுகின்றார்.

> புத்திர பௌத்திர பாரம்பரியமாய் வரும் வமிசங்களில் தலைமுறைக்கு 30 வருஷமென்று கொண்டு காலங்கணிப்பது வழக்கம்; இவ்வாறு கணித்தல் மிகச்சரியான காலத்தைத் தெரிவிக்கிறது என்பது பல வகையாலும் அறிந்து கொண்ட விஷயம். நக்கீரரும், அவரை அடுத்து வந்த பத்துப் பெயரும் வெவ்வேறு தலைமுறையாரென்று கொள்ளினும், நீலகண்டருக்குமுன் பத்தாம் தலைமுறையினரான நக்கீரர் சுமார் கி.பி. 470 ல் இருந்தவரென்ன வேண்டும். (கி.பி. 760–300, 460 கி.பி) அதாவது நக்கீரர் கி.பி. 460 க்கு முற்பட்ட காலத்தவராகக் கொள்ள இடமில்லை. மேற்கூறிய பதின்பர் வெவ்வேறு தலைமுறையல்லர், சிற்சிலர் காலத்தாரெனின், நக்கீரர் காலம் இன்னும் கி.பி. 760 பக்கம் நெருக்கம். வெவ்வேறு தலைமுறையினர், அல்லது ஏககாத்தார் என்பது ஒன்றும் விலங்காதவரையில், நக்கீரர் கி.பி. 460 முதல் 760 வரைப்பட்ட காலத்திலிருந்தாரென்றும், 460 கி.பி.க்கு முன்பு எவ்வாற்றானும் இருந்திருக்க முடியாதென்றும் சொல்ல வேண்டும்.

(மேலது;59)

மேற்கண்டதில் கி.பி. 460 க்கு முன் கடைச்சங்கப் புலவரான நக்கீரரின் காலம் இருப்பதற்கு வாய்ப்பில்லை என்று உறுதிபட கூறியிருப்பது சங்க காலத்தின் பின்னல்லையாக இவர் கொண்டிருக்கும் கணிப்பு பளீச்சென வெளிப்படுவதைப் பார்க்கிறோம் இதனோடு இறையனார் அகப்பொருளுரை வாய்மொழி வழக்கிலிருந்து எழுத்துவழக்குப் பெற்றது முசிறி நீலகண்டரின் காலமான எட்டாம் நூற்றாண்டு என்று முடிவு கட்டியிருப்பதையும் காண்கின்றோம்.

## 2.1.2.3. பாண்டியர்கள் மற்றும் தமிழ்ப்புலவர்களின் காலம்

இவ்வாறாம் தொகுதியின் ஆவணிமாத இதழில் (பகுதி 10) து.அ. கோவிநாதராவ் "பாண்டியர்களும் தமிழ்ப்புலவர்களும்" என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். அதில்,

> இன்னவிடத்திற் கிடைத்ததென்று விளங்காத் தாமிரசாஸன மொன்றன் காகிதப் பிரிதியினின்றும், ஸ்ரீ மாந் – வெங்கையரவர்கள் பாண்டியவமிச விருத்தாந்தங்களை விரிவாக எழுதியதில் அச்சாஸநம், வேள்விக்குடி என்னும் கிராமமானது வெகுகாலமாய் கொற்கைகிழான் நற்கொற்றனென்பவன் வர்க்கத்தாரால னுபவிக்கப்பட்டுப் பின்பு ஒருகாலத்து அவர்களைவிட்டுநழுவி இராஜாங்கத்தாராற் கைப்பற்றப்பட்ட தென்றும், அச்சந்ததியானும் கூடல் நாயகர் முன் பண்பாடுபவனுமான ஒருவன், அன்றாளும் அரையனாகிய நெடுஞ்சடையனென் பானிடம் முறையிட்டுத் தனக்குள்ள ஆதாரங்களைக் காட்டி, மறுபடியும் பெற்றானென்றும் கூறுவதாகத் தெரியவருகிறது. (An. Rep. For 1907-8 pp.68)
>
> (மேலது;434)

என்று கூறத்தொடங்கி இச்சாசனம் கிரந்த முறையிலான சமஸ்கிருதத்திலும் வட்டெழுத்திலும் காணப்படுவதாகத் தந்து சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டவற்றின் பொருளாய் கீழ்வருவனவற்றை விளக்கி எழுதியுள்ளார்.

> சமஸ்கிருதபாகத்தில் நெடுஞ்சடையன் முன்னோர்களில் அவன் தந்தை, பாட்டன், முப்பாட்டன் என்னும் மூன்று தலைமுறையார்களை மட்டும் குறித்திருக்கிறது. இப்பாகத்தின் முதலில், பாண்டியவமிசத்துக்கு ஆதியில் ஆசாரியஸ்தானம் வகித்தவர் அகஸ்திய மகரியென்றும், யுகாந்தரத்தால் மூன்று லோகங்களும் பிரளயத் திலழிந்தகாலத்தும் பாண்டிய வரசன் அழிந்து ஒழியவில்லையென்றும், பிறகு பிரமன் சிருஷ்டியாரம்பஞ் செய்கையில், தன்னால் உண்டாக்கப்பட்ட பிரஜைகளை ரசிக்கும்படி பாண்டியனை ஏற்படுத்த அவன் புதன் என்னும் பெயரால் சந்திரன் மகனானானென்றும் கூறப்பட்டுள்ளது. இவன்மகன் புரூரவஸ். பிறகு மேருவில் கயல்பொறித்ததும், இந்திரனுடன் அவனாசனத்திலிருந்து, அவன் மாலையையணிந்து உடனாண்டதும் தைத்தியராஜனைச் சயித்ததும், தேவர்கட்காகத் தூது சென்றதும் திருப்பாற்கடலைக் கடைந்ததும் என்னும் பாண்டியவமிச சம்பந்தமான கதைகளையும் விஸ்தரிக்கின்றது.
>
> (மேலது;434)

எனத் தந்து அதனை விளக்கி எழுதி ஸ்ரீமாந் வெங்கையரவர்கள் மேற்கண்டதரவுகளின் அடிப்படையில் பின்வருமாறு வரிசைப் படுத்தியிருப்பதைத் தந்திருக்கிறார்.

பாண்டியாதிராஜன் பரமேசுவரன் பல்யாகமுதுகுடுமிப் பெருவழுதி களப்பிர அரசன் ஆக்கிரமித்தது.

1. கடுங்கோன் பாண்டியாதிராஜன்
2. அதிராஜன் மாறவர்ம்மன் அவனிசூளாமணி
3. செழியன் சேந்தன்
4. மாறவர்மன், அரிகேசரி, அஸமஸமன்; நெல்வேலியில் வில்வெலியை வென்றவன்.
5. கோச்சடையின் ரணதீரன்; மருலூர்ப் போர்வென்றவன், மகாரதனை மங்கலபுரத்தில் ஜெயித்தவன்
6. அரிகேசரி பராய்குசன், மாறவர்ம்மன், தேர்மாறன், பல்லவனைக்குக் குழும்பூரில் வென்றவன்; பல்லவர்களைக் சங்கர மங்கையில் தோற்கடித்தவன்; ராஜசிம்மன்; பல்லவமல்லனை அபஜயப் படத்தியவன், கூடல், வஞ்சி, தோழி என்னுமிராஜதானிகளின் சுவர்களைப் பதிப்பித்தவன்.
7. ஜடிலவர்ம்மன், நெடுஞ்சடையன் பராந்தகன்; சடாவனைப் பெண்ணாகடத்தில் முறியடித்தவன். (வேள் விஸனகுடிசாஸனத்தில் கூறப்பட்டுள்ளவை) கி.பி. 769–70.
8. ராஜசிம்மன்
9. வர குணமகாராஜன் ஜயந்தவர்ம்மன்?
10. ஸ்ரீமாறன், ஸ்ரீ வல்லவன், ஏகவீரன், பரசக்கிர கோலாகலன்; மாயபாண்டியனையும், கேரளனையும், பல்லவனையும், வல்லபனையும், ஜயித்தவன்; பல்லவபஞ்சனன்.
11. வரகுணவர்ம்மன் பட்டந்தரித்தது. கி.பி. 862 –3
12. பராந்தகன், வீரநராயணன், சடையின், கரிகிரியில் செருச்செய்தவன், பெண்ணா கடந்தையழித்தவன்; வானவன் மகாதேவியை மணந்தவன்; சடிலன், நெடுஞ்சடையன் (மதுராஸ்காட்சிச் சாலையிலுள்ள தாமிர சாஸனத்திலும், சின்னமனூர்ச் சாஸனத்திலும் கூறப்பட்டுள்ளவன்)
13. ராஜசிம்மன் (3) மந்தரகௌரவன், அபிமானமேரு.

மேற்கண்டவற்றுள் பலமுரண்கள் இருப்பதாகச் சொல்லி வெங்கையரவர்களின் இத்தகைய புரிதலுக்கு வேள்விகுடிச் சாஸனத்தையும் சின்னமனூர்ச் சாஸனத்தையும் நன்கு தெளிவுபடுத்திக் கொள்ளுமளவு எழுதிச்செல்கின்றார். கி.பி. **6,7** நூற்றாண்டுகளுக்குப் பிறபட்ட பாண்டியர்களைக் குறித்து பெரிதும் பேசப்படும் இக்கட்டுரையை எடுத்துக் காட்டியமைக்கும் சங்க இலக்கிய கால ஆய்வுக்கும் என்னதொடர்பென்று தோன்றலாம். மேற்கண்டவாறு சொல்லிக் கொண்டுவரும், து.அ. கோபிநாதராவ் பின்வருமாறு கடைச்சங்க கால ஆய்விற்குத் தாவுகின்றார். அதாவது,

> நாம், இச்சாசனத்திலுள்ள சிற்சில விசயங்களை ஆராய்வோம். இறையனாரகப் பொருளின் பாயிரத்தில் கடைசங்கத்தைப் பரிபாலித்த அரசர்களிற் கடைசியானவன் கடுங்கோன் என்று கூறியிருக்கிறது. இவ்வரசனே இச்சாசனத்தில் முதன் முதலில் கூறப்பட்டவனென்பது நிச்சயம். இவன் காலம் உத்தேசம் 7–ம் நூற்றாண்டின் முற்பாதியாகும். இவனுக்கு முன்னர்ப் பாண்டிநாடு களப்பிரவம்சத்தரசன் ஒருவனால் கவர்ந்து கொள்ளப்பட்டது. இதனையேதான் திருவிளையாடற் சரித்திரத்தில், துன்னு சேனையிற் றுளங்கிய வொருகருநாட மன்னனான நாள் வந்தருட்டென்னையோட்டிக் கன்னிமண்டலந் கொண்டமண்கையர் கைவிழுந்து முன்ன நீடிய வைதிக முறையையும் மொழித்தான்.
>
> **(மேலது;434)**

என்றும், பெரிய புராணத்தில் மூர்த்திநாயனார் சரித்திரத்தில்,

> கானக்கடி சூழ்வடுக்கத்கரு நாடர்க்காவன் மானப்படை மன்னன் வலிந்து நிலங்கொள்வானாய் யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திண்டேர் சேனைக்கடலுங் கொடுதென்றிசை நோக்கி வந்தான். வந்துள்ள பெரும்படை மண்புதையப் பரப்பிச் அந்தப் பொதியிற்றமிழ் நாடுடை மன்னன் வீரம் சிந்தச் செருவென்று தன்னானைச் செலுத்துமாற்றந் கந்தப் பொழில் சூழ் மதுராபுரி காவல் கொண்டான் என்றும் தெரிவித்துள்ள கன்னடமன்னனோ வென்று ஐயரவர்கள் நினைக்கிறார்கள். அதாவது எமக்கும் சரியென்று தோற்றுகிறது. இது நிச்சயமானால் மூர்த்தியாருடைய காலமும் தெளிவாகிறது. களப்பிர ஆக்கிரமத்துக்கு முன்பு பாண்டிநாட்டையாண்டு வந்தவரசன் பாண்டியாதிராஜன் பரமேஸ்வரன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியென்பான். இவன் மதுரைக் காஞ்சியின்,

*பல்சாலை முதுகுடுமியி*
*னல் வேள்வித் துறைபோகிய*
*தொல்லாணை நல்லாசிரியர்*
*புணர்கூட்டுண்ட புகழ்நூல் சிறப்பி*
*னிலந்தரு திருவினெடியோன் போல.*

என்னும் பாடலின் உரையில்,

புகழ்ச்சியமைந்த தலைமையினுடைய பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றுங் கூறப்பட்டவனென்பதில் ஐயம் யாது. இவ்வரசன் களப்பிர ஆக்கிரமத்துக்கு முந்தியிருந்தானெனின் இவன் காலம் சற்றேறக்குறைய 6–ம் நூற்றாண்டின் இடைப்பாகமாகும். ஆதலால் இவனைப் பாடிய காரிகிழார், நெட்டியமையார், நெடும்பல்லியத்தனார் என்னம் புலவர்களும் இக்காலத்தாரதால் வேண்டும்.

எனவே, பல்யாகசாலை முதுகுடுமிவம்சத்திற் பிறந்தோனாகிய தலையாலங்கானத்துச் செருவென்ற (5) பாண்டியன் நெடுஞ்செழியன், முதுகுடுமியினும் பிற்பட்டவனெனவும் வேண்டுமோ? ஆதலால் நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடி மருதனாரும், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் 7 ம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தவர்களல்லரோ? நெடுஞ்செழியன் காலத்தானும், அவனாற் பிணிப்புண்ட யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறையும், இவையனோடிய குறுங்கோழியூர் கிழாரும் இக்காலத்தாரே. இவனையேபாடிய குடபுலவியனார், கல்லாடனார், மாங்குடி கிழார் (இவர் மாங்குடி மருதனாரேயோ?) இடைக்குன்றூர் கிழார், முதலியவரும் இவர்காலத்தாரே. இவனால் வெல்லப்பட்ட வேள் எவ்வியும், இவனைப்பாடினோராகிய மாங்குடி கிழார், கபிலர், வெள்ளெருக்கிலையார் முதலியோரும் ஒரு காலத்தார்.

(மேலது;442)

என சங்க இலக்கியப் புறபாடல்களுள் நெடுஞ்செழியனைப் பாடிய புலவர்கள் அனையன் கி.பி. 7 ஆம் நூற்றாண்டினன் என்றும் இந்நெடுஞ்செழியன் காலத்தில்வாழ்ந்த தம் புலவர்களும் சமகாலத்தவரென்றும் முடிவுகட்டி, பாண்டியன் நெடுஞ்செழியன் முதுகுடுமியினுள் பிற்பட்டவனென்பதை நிறுவிட அடிக்குறிப்பில் பின்வருமாறு எழுதுகிறார்.

மதுரைக் காஞ்சியின் நாயகன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனென்பது எல்லாருக்குந் தெரிந்த விஷயம். இப்பாட்டில் இவன் முன்னோர்களிலொருவன்

முதுகுடுமி என்று சொல்லியிருப்பதால் நெடுஞ்செழியனை 7 – ஆம் நூற்றாண்டிலிருந்தவனென்று கொள்ளப்பட்டது. இக்குடுமியின் பெயரானோ புதுக்கோட்டைக்கடுத்த குடுமியான் மலை மிகப் பெயர் பெற்றது? அப்படியன்று. இவ்வரசன் இவ்வூர் மகாதேவிபெயரைப் பெற்றானென் பார்க்குச் சமாதானம் கூறக் காரணம் பலவுள. இவ்வூர்க் கோயிலிற் பழமையானது குடைவரைக் கோயிலே. ஆக்கோயிலிலமர்ந்துள்ள ஈசுவரனே மூலஸ்தானத்துப் பரமஸ்வாமிகள் என்றழைக்கப்படுகிறார். இப்போது சிகாநாதர் என்று பெயர்படைத்த ஈஸ்வரன் எழுந்தருளியிருக்கும் கோயில் குடைவரைக் கோயிலுக்குப் பிற்பட்டது. இக்குடவரைக் கோயிலிலும், திரு மெய்யத்துக் கோயிலுக்குப் பிற்பட்டதென்றும், அவ்வாறு செய்யப்பட்டது சுமார் கி.பி. 7 வது நூற்றாண்டு எனவும் கொள்ள இடமிருக்கிறது. ஆதலால் இவ்வூர்க் குடுமிநாதஸ்வாமி கோயில் கி.பி. 7க்குப் பின்னுண்டான பல்யாக சாலைமுதுகுடுமி தெய்வப் பெயரால் பெயர் பெற்றானென்பது இயலாது. ஆதலால் இவ்வூர் மலைக்கு முதன்முதல் குடுமியான் மலையென்று அவ்வரசன் பெயரிருந்திருக்கலாம். இம்மலையின் ஊருக்கே குடிமியின் மலையென்று பெயருண்டாயிருக்க வேண்டும் திருவெள்ளரையிருக்கும் ஊர் திருவெள்ளறை யென்றானாற்போல, பிறகு குடுமியான் மலையிலிருக்கும் ஈசனுக்கு குடுமியான், சிகாநாதர் என்னும் பெயர்கள் வழங்கத் தலைப்பட்டிருக்க வேண்டுமென்பது திண்ணம்

(மேலது;441)

எனத் தந்துள்ளதால், முதுகுடுமியென்பான் நெடுஞ்செழியனுக்கு முன்னோன் என்பதும், குடுமியான் மலையின் வரலாறும் ஒருவாறு தெரியவருகின்றது. இத்தனை உறுதியாக முதுகுடுமியின் காலத்தைக் கி.பி. 7 ஆம் நூற்றாண்டு என்றுரைப்பவர், இதற்கு மேலும் ஆதாரமாக இத்தொகுதியின் மார்கழி இதழில், இறையனார் களவியலுரைக் காலமும், அதனை வாய்மொழி மரபோடு தொடங்கி வைத்தக் காலமும் கி.பி. 460க்கு முன்னிருக்காது என்று முடிவுக் கட்டியதையும் எடுத்துத் தந்து வேறு தரவுகள் கிடைக்கும் வரையில் இவை ஏற்கத் தக்க முடிவாக இருக்கலாமென்று எழுதிச் செல்கிறவர், இந்நெடுஞ்செழியன் இன்னாரென்று உறுதியாகக் கூற முடியவில்லை யென்பதையும் தந்துள்ளது உறுதி குலைந்து போக வாய்ப்புள்ளதை ஒத்துக் கொள்ளும் விதத்தில் இருப்பதை உணர்த்துகிறது. இக்கட்டுரையின் இறுதிபத்திப் பின்வருமாறு அமைந்துள்ளது.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை, தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

> காலதானென்று முன்னரே சொன்னோம். இச்சேரன் இராசசூயம் வேட்டபெருநற் கிள்ளியோடு போர் செய்தவன். ஆகவே இக்கிள்ளியும், சேரனைப் பாடிய பொருந்திலிளங்கீரனார், வடவண்ணக்கன் சாத்தனார்; நற்கிள்ளியைப் பாடிய பாண்டரங்கண்ணனார், ஔவையார், உலோச்சனாரும் நெடுஞ்செழியனைப் பாடிய கபிலராற் பாடப்பட்ட வேள்பாரியும், விச்சிக்கோ, இளங்கோவேள், செல்வக்கடுங்கோவாழியாதன் அகுதை, மலையமான் திருமுடிக்காரி, வையாவிக் கோப் பெரும் பேகன் கல்லாடரால் பாடப்பட்ட அம்பர் கிழானருவந்தை, பொறையாற்றுக் கிழான்; மாங்குடி மருதனரால் பாடப்பட்ட வாட்டாற்று எழினியாதன்; என்னுமிப்பாவலர்களும் மற்றும் புறநானூற்றில் கூறப்பட்டுள்ள புலவர்களுள் பெரும்பாலரும் சமகாலத்தாரென்றும், அவர்களால் பாடப்பட்டோர்கள், ஒன்றிரண்டு தலைமுறையைச் சேர்ந்தவர்களென்றும் தோன்றுகிறது.

(மேலது;370)

மேற்கண்டவற்றால் புறநானூற்றில் கூறப்பட்டுள்ள பெரும்பாலான புலவர்கள் கி.பி. 7 ஆம் நூற்றாண்டென்று முடிவு செய்திருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.1.3. க.வி.ஸி. மணியத்தின் வரலாற்று நோக்கிலான திருக்குறள் மற்றும் சிலப்பதிகாரத்தின் காலப்புரிதல்

சிலப்பதிகாரக்கால ஆராய்ச்சி என்னும் தலைப்பில், விவேக போதினி இரண்டாம் தொகுதியின் (12 பாகம்) இதழில் க.வி. ஸீ. மணியம் என்பவர் எழுதியுள்ளார். இக்கட்டுரையில், கால ஆய்வு தொடங்கிய காலச்சூழலையும் மேற்நாட்டாரும் நம்மவரும் பங்கெடுத்து வருவதையும் தொட்டுக்காட்டி, சிலப்பதிகாரக் காலச் சிந்தனையை அறிய முயல ஜி.யு. போப்பையர் (Rev. G.V. Pope) அவர்கள், முதன் முதலாகத் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிப்பெயர்க்கையில், அவர் திருக்குறளின் காலத்தைப் பின்வருமாறு குறிப்பிட்டிருப்பதை நினைவு கூர்ந்து சில தரவுகளைத் தருகிறார்.

> “நம் ஆசிரியர் காலத்தைத் திண்ணமாய் வரையறுக்கப் போதுமான சாதனங்களில்லை. ஆயினும், கி.பி. 800 முதல் கி.பி. 1000 க்குள் இருக்குமென வெண்ணுகிறேன். இவருக்கு வெகு நாளைக்குப் பிறகு மற்றுமொருவித்வான், தாமியற்றிய தமிழ் கட்டுரை (Essay of Tamil) என்னும் நூலில் “குறளாசிரியர் திருவள்ளுவனார் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இவ்விரண்டின் நூலாசிரியர்கள் காலத்திற்கு முற்பட்டவர், சுமார் ஒரு நூற்றாண்டிற்கு முன்னாவதிருக்க வேண்டும் என்று எழுதியுள்ளார்,

ஆனால் அன்னவர் தம் நூன்முகத்தில் 5 வது பக்கத்தில் "குறளாசிரியர் திருவள்ளுவர் கி.பி. இரண்டாமாண்டில் இருந்தவர். ஸிம்மளத்தரசன் முதல் கயவாகுவின் காலத்தவர்" என்று கூறியுள்ளார்.

*(க.வி.ஸி.மணியம்;370)*

என்று ஜி.யு.போப் குறித்த காலத்தையும் (Essay on Tamil) தமிழ்க்கட்டுரை என்னும் நூலாசிரியர் குறிப்பிடும் பெயரையும் காலத்தையும் குறிப்பிட்டு சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சமகாலத்தவன் என்பதற்குக் கதைத் தொடர்பும் இருநூலின் ஆசிரியர்களின் தொடர்பும் உணர்த்துவதாகக் கூறி, அக்காலத்து வாழ்ந்த சேர, சோழ, பாண்டிய ஆசிரியர்கள் முறையே செங்குட்டுவன், கரிகாலன், நெடுஞ்செழியன் என்று குறிப்பிட்டு இலங்கையில் அரசுபுரிந்த கயவாகுவையும் நினைவு கூறுகிறார்.




இதனோடு கி.பி. 3 ஆம் நூற்றாண்டில் புத்தமதம் தமிழகத்தில் எப்பொழுது நுழைந்தது என்பதைப் பற்றி ஆராயவிருப்பதாகக் கூறியிருக்கிறார்.

சிலப்பதிகார நூலாசிரியரின் காலத்தை அறிவதற்கு உதவியாக வி. கனகசபைபிள்ளையின் "The Tamil's Eighteen Hundred Years Ago" என்ற நூலில், கி.பி. முதல் இரண்டாம் நூற்றாண்டில், வாழ்ந்த பாண்டிய அரசர்களை வரிசைப்படுத்தியிருப்பதை நெடுஞ்செழியன் I– கி.பி 50–75 வெற்றிவேற் செழியன், கி.பி. 75–90, நெடுஞ்செழியன் II கி.பி. 90–128 உக்ரப்பெருவழுதி கி.பி. 128–140, நன்மாறன் கி.பி. 140–150 என எடுத்துத் தந்து, கீழ்வருமாறு ஆராயத் தொடங்குகின்றார்.

மேற்கூறியவற்றினின்றும் நெடுஞ்செழியன் என்னும் பெயருடைய இருவரில் எவர் நம் நூலாசிரியர் காலத்தவர் என்றறிய வேண்டும். (மணிமேகலையாசிரியர் தாம் மதுரையில் கோவலன் கொலையுண்டதும் கண்ணகி மதுரையையெரித்ததும் நேரிற் கண்டதாகவும் நமக்கு ஓர் ஆதாரமிருக்கிறது. ஆகவே நூலாசிரியர் காலமும் நூலிலுள்ள விஷயம் நடந்த காலமும் ஒன்றாகும்) மதுரை டிஸ்டிரிக்ட் கெஜட்டீயரில் (Madurai District Gazetteers, Vol. I. Page 27) "கி.பி. 50 75 அரசாண்ட நெடுஞ்செழியன் I என்னும் பாண்டியவரசன் கோவலனை முன்பின் யோசிக்காமல் கொலை செய்தான் எனக் கூறப்படுகிறது என்ற விஷயம், பின்னர் கூறும் ஆதாரத்தால் பிசகெனவே கூறப்படவேண்டும்.

(மேலது;371)

இதில் ஏற்பட்டிருக்கும் முரண் யாதெனில், பாண்டிய முதலாம் நெடுஞ்செழியன் காலத்தவன் கயவாகு என்பது பொருத்தமில்லாமல் போவதுதான். காரணம், "Leybon by an officer late of the laylon Rifles" (vol-I page 27) நூலில் கூறப்படும் இரண்டு கயவாகுவில் முதலாம் கயவாகு கி.பி.113 இல் அரசு புரிய ஆரம்பித்ததாகவும், இரண்டாம் கயவாகு கி.பி.1127இல் அரசு புரிந்ததாகவுமிருப்பதால், முதல் நெடுஞ்செழியன் காலமாக இலங்கை வரலாற்று நூற்களின் அடிப்படையில் வி. கனகசபைப் பிள்ளைக் காட்டியிருக்கும் கி.பி. 50–75 வரை என்ற காலத்தோடு ஒத்துப்போகும், Madurai District Gazetter's (Vol.I, Page 27), என்ற நூலில் குறிக்கும் முதல் நெடுஞ்செழியன் காலத்தில் கோவலன் விசாரணையின்றி கொலை செய்யப்பட்டானென்பது பொருத்தமாக இல்லாததால், இரண்டாம் நெடுஞ்செழியன் காலத்தில் வாழ்ந்து இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதே சிலப்பதிகாரம் என்ற முடிவிற்கு வருகிறார். மேற்கண்டவற்றை உணர்த்தி பின்வருமாறு முடிக்கிறார்.

சிலப்பதிகாரமும், மணிமேகலையும் கி.பி. 128 க்குமேல் கி.பி. 130க்குள்ளாகவே யெழுதப்பட்டிருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது.

(மேலது;371)

என்பதிலிருந்து, சிலப்பதிகார காலம் கி.பி.2–ஆம் நூற்றாண்டென்பது தெரியவருகிறது.

## 2.1.4. அயோத்தியதாசரின் சிந்தனையில் முச்சங்கமும் திருவள்ளுவர் காலமும்

அயோத்திதாசர், சனவரி 18, 1910–இல் தமது ஒரு பைசா தமிழன் இதழில் முச்சங்கங்கள் என்ற பொருண்மையில் தமது சிந்தனையைச் செலுத்தியுள்ளார். இச்சிந்தனைக்குத் தூண்டுகோலாகக் கீழ்வரும் கேள்வி அமைந்துள்ளது.

> வினா: ஐயா நமது தென்னிந்தியாவிலுள்ள மதுரையில் முதற்சங்க மென்றும் நடுச்சங்கமென்றும், கடைச்சங்க மென்றும் மூன்று சங்கங்கள் இருந்தனவென்று கூறுகின்றார்களே அதன் காரணமென்னை. அவ்வகையாகவே தமிழ்ச் சங்களிலிருந்திருக்கு மாயின் பௌத்த சங்கத்தோர்களாரும் சமண முனிவர்கள் இயற்றியுள்ள இலக்கிய நூல்களும், இலக்கண நூற்களும், கலை நூற்களும் கணித நூற்களும் இருக்கின்றவேயன்றி முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கம் என்னும் சங்கத்தோர் இயற்றியுள்ள நூற்கள் யாதோ விளங்கவில்லை. (ப. கோபால், தஞ்சை)
>
> (அயோத்திதாசர், 1910;538)

என்று கேட்கப்பட்டக் கேள்விக்குக் கீழ்வருமாறு பதிலளிக்கிறார்.

> அன்பரே, தாம் வினவியுள்ள சங்கங்களின் பெயர்களைக் கொண்டே அவைகளிருந்தன என்பதும், இல்லை என்பதும் தாமே உணர்ந்துக் கொள்ளலாம். ஈதன்றி மதுரையில் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட புத்தகங்கள் இருந்தனவென்று சிலா சாசனங்களாலும், செப்பேடுகளாலும் கண்டறிந்த (ஆர்ச்சலாஜிக்கல் சர்வேயர்கள்) தெளிவாக வரைந்து வைத்திருக்கின்றார்கள். அவற்றினுள் முதற்சங்கம் இருந்ததென்றாயினும் ஓர் குறிப்புங்கிடையாது. அச்சங்கங்கள் இன்ன மதத்தினரைச் சார்ந்ததென்று திடம்படக் கூற யாதோர் ஆதரவுங் கிடையாது.
>
> (மேலது;538)

என்று கூறுபவர், பத்தாயிரத்திற்கு மேற்பட்ட புத்தகங்கள் இருந்ததை ஒத்துக்கொள்பவர், மூன்று சங்கங்கள் இருந்தன என்பதை மட்டும் ஏற்றுக்கொள்ள மறுக்கிறார். அதிலும், முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்று வழங்கப்பட்டிருக்கும் என்பதில் கொஞ்சமும் உடன்பட மறுக்கிறார். மாறாக இம்முச்சங்களைப் பற்றிப் பின்வருமாறு எழுதிச் செல்கிறார்.

> தமிழ் பாஷையினை ஈன்று வளர்த்தவர்களும், சத்திய தன்மத்தைப் பரவச் செய்தவர்களும், சமண முனிவர்களாதலின்

அவர்களால் கொண்டாடி வந்த புத்த, தன்மத் சங்கமென்னும் முத்திர மணிகளை முச்சங்கங்களென மாற்றி விட்டார்கள். அதாவது, ஏக காலத்தில் முதலாகத் தோன்றியவர் புத்தர், நடுவாகத் தோன்றியது தன்மம், கடையாகத் தோன்றியது சங்கம். இவற்றையே முத நடு கடைச் சங்கமென வழங்கி வந்தார்கள். மற்றும் முறையே என்றுமழியா பதுமநிதி என்றும், தன்மநிதி என்றும், சங்கநிதி என்றும் கொண்டாடி வந்தார்கள்.

இத்தகைய மெய்க்குருக்களின் போதனைகளையும், செயல்களையும், மாறுபடுத்தி மதக்கடை வைத்து சீவிக்க முயன்ற பொய்க்குருக்கள் தங்களது முதற்சங்கம் நாலாயிரத்தி ஐந்நூறு வருடம் இருந்ததென்றும், கடைச்சங்கம் இரண்டாயிர வருடம் இருந்ததென்றும், நடுச்சங்கம் மூவாயிரத்தைந்நூறு வருடம் இருந்ததென்றும் பத்தாயிர வருட கணக்கை பரக்க எழுதி வைத்திருக்கின்றார்கள்.

(மேலது;538)

என்று சொல்லிச் செல்பவர் கீழ்வரும் வினாவினையும் எழுப்புகின்றார்.

நூறு வருட கணக்கை நுட்பமாக எடுத்து வரையறுத்துக்கூற வகையற்றவர்கள் பத்தாயிர வருட கணக்கை எந்த அரசாங்க பதிவில் பதிந்து வைத்திருந்தனரோ விளங்கவில்லை,

(மேலது;539)

என்பதோடு நிறுத்தாமல்,

தமிழ் பாஷையும், தமிழிலக்கியங்களும் அசோகவரசன் காலத்தில் மதுரையிற் பிரபலப்பட்டதா அன்று அசோகவரசன் காலங்களுக்கு முன்பு பிரபலப்பட்டதா என்பதை சிலாசாசனங்களினாலும், செப்பேடுகளினாலும் ஆராய்ச்சி செய்வார்களாயின் பத்தாயிர வருட கணக்குப் பரக்க விளங்கும்.

(மேலது;539)

என்று பௌத்த பிடிப்புடனும், இதே சமகாலத்தில் நிகழ்ந்த இத்தகைய ஆய்வுப் போக்கின் இன்னுமொரு வழியாகத் தமது கருத்தினை வெளிப்படுத்துகிறார். இறுதியாக இச்சிந்தனைக்கு முடிவுக்கட்ட நினைப்பவர்,

ஒரு சங்கம் 4,500 வருடம் இருந்ததென்றும் மறுசங்கம் 3,500 – வருடம் இருந்ததென்றும், இன்னொரு சங்கம் 2000 – வருடம் இருந்ததென்றும் வரையறுத்து வெளியிட்டுள்ள கணிதத்தின்படி முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்றும் பெயர் தோன்றுமா,

கடைச்சங்கமென்றும் பெயரைக் கொடுத்தோர்கள் சங்கத்தோரா, குடிகளா, மதுராபுரியில் இச்சங்கங்கள் எங்கு ஸ்தாபிக்கப்பட்டிருந்தது

(மேலது;540)

என்று, கொஞ்சமும் ஏற்க மறுப்பவர், முடிவாக,

ஞான நூற்களில் தோன்றிய முச்சங்கங்கள் யாதென்பீரேல், ஓர் குழந்தைப் பிறந்தபோது அமுதூட்டி அன்னமளிக்குங்கால் ஓர் கூட்டங்கூடுவது முதற்சங்கமென்னப்படும். இரண்டாவது, விவாகத்திற்காகக் கூடுவது நடுச்சங்கம் என்னப்படும். மூன்றாவது, இறந்தப்பின் கூடுவது கடைச்சங்கம் என்னப்படும். இத்தகையச் செயல்களுக்கும் முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்று கூறுவர்.

(மேலது;540)

என்று தமிழ் முச்சங்கங்கள் இல்லையென்பதை நிறுவ முயன்று முடிக்கின்றார். இவரின் இவ்வாய்வுப் போக்கிலிருந்து ஒரு வேளை அத்தகையச் சங்கங்கள் இருந்திருக்குமேயாயின் அவை, புத்த சங்கங்களே என்று கூறியுள்ளது, து.ஆ. கோபிநாதராவ் போன்றோரின் ஆய்வு நீட்சியாகப் படுகிறது. இதன் தொடர்ச்சியாக, வீ. தணிகாசலம் என்பவர் இரங்கூனிலிருந்து அயோத்தியதாசரிடம், கீழ்வரும் வினாவினை வினவுகின்றார்.

நல்கூர் வேள்வியார் பாட்டில் வடதிசையை நோக்கி நப்பின்னை பிராட்டியை மணந்த கண்ணபிரானை உத்தர மதுரைக்கு அச்சு (ஆதாரம்) என்றும், தெய்வப்புலவர் கடைச்சங்கத்தார் காலத்துக்கு இருநூறு முந்நூறாண்டுகட்கு முன்னவராக நிறுத்தலே பொருத்தமாகத் தோன்றுகிறதென்றும் நம் காலத்துள்ள பெரிய புலவரொருவர் வாக்கை இராமர் காலத்தில் இருந்த ஒருவர் கூற்றாக வைத்துப் பொய்யிற் புலவன் பொருளுரை தேறாய் எனின் அது சிறவாதென்பது பிரசித்தியட்சமாமென்றும், திருவள்ளுவனார் தம் நூலை வியாழம் வெள்ளி இவர்களின் நூலாதாரங்கொண்டு செய்துள்ளது போற் போக்குக் காட்டி வரைந்துள்ளது கண்டு யாதார்த்த சரித்திரத்தைப் பொருந்துமா பொருந்தாவா என்பதை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

(மேலது;542)

இக்கேள்வி 66 மாதம் 2ல் சுதேசமித்திரன் பத்திரிக்கையில் (ஐந்தாம் பாரம் இரண்டாவது கலம்) வந்த குறிப்புகளை வைத்து எழுப்பப்பட்டிருக்கிறது. இக்கேள்விற்கு விடைப்பகர எத்தனிப்பவர்,

இத்தேசத்துள் கண்ணபிரானென்று ஒருவர் பிறந்திருந்தார் என்னும் சரித்திராதாரங்களேனும், செப்பேடுகளேனும், சிலாசாசனங்களேனும் ஒன்றூங் கிடையாது. ஆதலின் திருவள்ளுவர் மாலையிலுள்ள நல்கூர் வேள்வியார் பாடலைக் கொண்டேனும் ஓர் நூலாதாரத் தேடிக் கொள்ளும் வழி திறந்திருக்கிறார்கள். ஆயினும் மயிலையிற் பிறந்தனரென்பதை மாற்றி மதுரையிற் பிறந்தார் என்பதும் ஓர் சார்பேயாம்.

இரண்டாவது, முதற்சங்கம், நடுச்சங்கம், கடைச்சங்கமென்னும் மொழிகளே முற்றும் மாறாயிருப்பது கொண்டு பன்னீராயிர புத்த சங்கங்கள் இருந்த மதுரையில் இந்த மூன்று சங்களிலிருந்து விவரத்தை கனந்தங்கிய ஆர்ச்சலாஜிக்கல் சர்வேயர் காணாத விவரந் தோன்றவில்லை.

(மேலது;542)

என்பவர் இதனை அடுத்து சொல்ல வருவது கவனத்தில் கொள்ள வேண்டியதாகப்படுகிறது.

இம்மூன்று சங்கங்கள் இருந்ததாக ஏற்கினும் கடைச்சங்கத்திற்கு இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தவர் திருவள்ளுவர் என்று கூறியுள்ளக் கூற்றால் கடைச்சங்கத்திற்குத் திருவள்ளுவர் சென்றதும் அவரது குறளைச் சங்கப்பலகையில் வைத்ததும் பொய்யென்றே திட்டமாக விளங்குகிறபடியால் சங்க சரித்திரங்களைக் கொண்டே சங்கைகளுள்ளது என்பதைத் திட்டமாகத் தெரிந்துக் கொள்ளலாம்.

(மேலது;542)

என்று கூறி மேலும் தொடர்பவர்,

மூன்றாவது புத்தபிரான் தோன்றிய நெடுங்காலங்களுக்குப் பின் இராமர் தோன்றியுள்ளாரென்று வஷிஷ்டர் கூறியுள்ள இஸ்மிருதிகளில் ஒன்றாம் வாஷிஷ்டங் கூறுவதுமின்றி அநுமார் இலங்காதீவஞ் சென்றிருந்த போது அங்குள்ள ஓர் கோபுரத்தின் மீதுட்கார்ந்து ஈது புத்த மடமென்று கூறியதாக வடமொழியிலுள்ள வால்மீகி ராமாயணங் கூறுகின்றது. இத்தகைய நூலாதாரங்களை அன்னோர் கண்டிருப்பாராயின் இராமர் திருவள்ளுவருக்கு முந்தியவரா பிந்தியவரா என்பதும் பொய்யிற்புலவன் பொருளுரைத் தேறாயென்னும் மொழி சிறப்புறுமா உறாவாவென்றும் உணர்ந்து கூறுவர். அந்நூற்களையும் புத்தரது காலவரையறையும் அறியாதவராதலின் அம்மொழி சிறவாதென்று கூறி விட்டார். நான்காவது வியாழம், வெள்ளி இவர்களின் நூலாதாரங்கொண்டு

> திருவள்ளுவர் தனது குறளை இயற்றியுள்ளாரென்பது திருவள்ளுவர் மாலையிற் கூறியுள்ள செய்யுட்களுக்கு முற்றும் மாறாகவே முடியும். இதுகாருங் தோன்றி வியாழம் வெள்ளி இவர்களின் நூற்கள் முற்கால சரித்திரங்களில் இல்லாது முரண்பட்டு தற்காலந் தோன்றியுள்ள படியால் திருவள்ளுவர் குறள் ஆதாரங் கொண்டே வியாழம், வெள்ளி, பிரகஸ்பதி, சுக்கிரன், சாணக்கியர் அர்த்தசாஸ்திரம் யாவுந்தோன்றியுள்ள தென்பது அதன் தோற்ற காலங்கொண்டே சொல்லாமலே விளங்கும்.

(மேலது;543)

இறுதியாக,

> ஆதிபகவனாம் புத்தபிரான் ஓதியுள்ள திரிபீட வாக்கியங்களாம் திரிபேத வாக்கியங்களைத் தழுவி முதலாம் பிடகத்திற்கு வழி நூலார் திருக்குறளைத் திருவள்ளுவர் இயற்றியுள்ளார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகையில் அவற்றை மறைப்பது முழு பூசணைக்காயைப் பிடிசாதத்தால் மறைப்பதற்கொக்கும். ஆதலின் நமதன்பர் இனியாதாரமற்ற சரித்திரங்களையும் இயல்புக்கு விரோதச் செயல்களையும் உடனுக்குடன் நம்பாது தேற விசாரித்துத் தெளியும் படி வேண்டுகிறோம்.

(மேலது;543)

என்று சொல்லி புராண இதிகாசத்தின் அடிப்படையில் கட்டமைக்கப்படும் தொன்மச் சார்ந்த நம்பிக்கையைக் கேள்விக்குட்படுத்துகின்றார். மூன்று சங்கங்கள் மதுரையில் இருந்ததை ஏற்க மறுப்பவர் பன்னீராயிரம் புத்த சங்கங்கள் மதுரையில் இருந்தது என்று எந்த ஆதாரத்தில் கூறுகின்றாரென்று விளங்கவில்லை.

### 2.1.5. தி.வை. சதாசிவப்பண்டாரத்தாரின் சங்க இலக்கியச் சான்றுகளின் அடிப்படையிலான கரிகாற் சோழன் பற்றிய கால ஆய்வு

செந்தமிழ் இதழின் தொகுதி பன்னிரெண்டின் பகுதி இரண்டில் (1913–14) சோழன் கரிகாலன் கி.பி. 55 – கி.பி 95 என்னும் தலைப்பில் தி. வை. சதாசிவப் பண்டாரத்தாரின் கட்டுரை வெளிப்பட்டுள்ளது.

இக்கரிகால் சோழனை, சோழன் கரிகால் வளவனென்றும், சோழன் கரிகாற் பெருவளத்தானென்றும் சங்க இலக்கிய நூல்களுள் காணப்படுவதைச் சுட்டிக் காட்டி இவன் பெயரையே இவனுக்குப் பின்னர்

வந்தப் இச்சோழ வம்சத்தில் சிலர் சூட்டி கொண்டமையால் இவனைக் கரிகாலன் முதலாவான் என்ற அடையோடு அழைப்பதைப் பொருத்தமாகக் கருதுபவர், இச்சோழனின் தந்தை உருவப்பஃ றேரிலிஞ்சேட்சென்னி என்பதைந்தந்து இவனது ஆட்சி காலம் கி.பி.55 முதல் கி.பி.95 வரையுலுமாக வி. கனகசபை பிள்ளை தமது 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளதை ஆதாரமாகக் கொண்டு எழுதப்புகுகின்றார். இக்கால நிர்ணயத்தைப் பல அறிஞரும் ஏற்றுக் கொண்டுள்ளனரென்பது, இவரது கருத்தாகக் கொள்ளப்படுகிறது. மேலும், இவனின் பெயருக்காண காரணமாகச் சொல்ல வருபவர், காலில் அணிந்த செருப்பு கடித்து கருமையுற்றதால், கரிகாலன் என்று அழைக்கப் பட்டிருப்பதையும், இளமையிலேயே மன்னராக ஆட்சி பொறுப்பினை ஏற்றதால், ஒரு சமயம் ஒரு வழக்கில் தீர்ப்புச் சொல்ல வேண்டி வந்த போது அவ்வழக்கில் சம்மந்தப்பட்டவர்கள் இளவளான இச்சோழனால் எங்ஙனம் அனுபவ அறிவோடு தீர்ப்பு சொல்ல முடியும் என்று ஐயுற்று நோக்கியதை உணர்ந்த கரிகாலன், தன் இளமைக் கோலத்தைக் காட்டாமல் முதுமையாளனைப் போன்று வேஷம் தரித்து அவ்வழக்கை விசாரித்துத் தீர்ப்பு வழங்கியத் திறத்தை

> *“இளமை நாணி முதுமையெய்தி*
> *யுரைமுடிவு காட்டியவுரவோன்”*

என்ற மணிமேகலை அடிகளாலும், உரை முடிவு காணானிளமையோ னென்ற / நரை முதுமக்களுவப்ப நரைமுடித்துச் / சொல்லான் முறை செய்தான் சோழன் குலவிச்சை / கல்லாமற் பாகம்படும்” என்ற பழமொழிச் செய்யுளாலும் எடுத்துக்காட்டி, அவனின் அரசியல் செயல்பாடுகளை விளக்கித் தரும் பட்டினப்பாலை செய்யுளான காடுகொன்று நாடாக்கிக் / குளந் தொட்டுவளம் பெருக்கிப் / பிறங்கு நிலை மாடத்துறந்தை போக்கிக் / கோயிலொடு குடிநிரீஇ / வாயிலொடுபுழையமைத்து / ஞாயிறெறும் புதைநிரீஇ / என்ற பாடலடிகளை விளக்குவதோடு, இவன் இலங்கையின் முதல் கயவாகுவின் தகப்பன் காலத்தில் இலங்கை மீது படையெடுத்து சென்று 1200 சிங்களவர்களைச் சிறைபடுத்திக் கொண்டு வந்து காவிரியில் அணைக்கட்டினான் என்ற தகவலை ‘தொழுது மன்னரேகரை செய்பொன்னியில்’ என்று பன்னிரெண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாக ஏற்கப்படும் கலிங்கத்து பரணியால் தெரியவருதாகத் தருகின்றார். இதில் கலிங்கத்துப் பரணியின் காலத்தைக் குறிப்பிட்டுக் காட்டவில்லை. இவன் காலத்தில் பூம்புகாரென்னும் காவிரிப்பூம்பட்டினம் தலைநகராகவும் துறைமுகப்பட்டினமாகவும் பெரும் சிறப்புற்று விளங்கியதை நினைவுக்கூர்ந்து

செல்வதோடு, இதற்குச் சிலப்பதிகாரத்தின் “இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்” என்ற அடிகளைத் தருகின்றார். இவனது வெற்றிச் சிறப்புகளைச் சிலப்பதிகாரப் பாடலும், கலிங்கத்துப் பரணிப்பாடலும் நூலின் பெயரைக் குறிப்பிடாமல் பழைய செய்யுள் ஒன்றும் குறிப்பிடுவதாகக் காட்டி இவன் மீது கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை நூலையும், முடத்தாமக் கண்ணியார் இயற்றிய பொருநராற்றுப்படை நூலையும் குறிப்பிட்டு மேலும் புறநானூற்றிலும் சில செய்யுள்கள் வெளிப்பட்டுள்ளதையும் காட்டுகின்றார்.

இக்கட்டுரையை முடிக்கும் தருவாயில், இக்கரிகாலனின் துணைவியார், வேள்குமாரத்தி என்பதையும், இவர்களின் பேர பிள்ளைகளே இளங்கோவடிகளும் சேரன் செங்குட்டுவனும் என்பதோடு கீழ்வரும் வம்சாவளி பட்டியலையும் தருகின்றார்.

> இவன் காலத்திய அரசர்கள் :– பாண்டிய நாட்டில் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, நெடுஞ்செழியன், சேர நாட்டில் முடிச்சேரலாதனன், சேரன் செங்குட்டுவன், இலங்கையில் முதற்கயவாகுவின் தகப்பன் முதற்கயவாகு.
>
> (தி.வை.சதாசிவப்பண்டாரத்தார், 1914;14)

சோழ அரசனைக் கரிகால் வளவனுக்குச் சேர நாட்டை ஆட்சி புரிந்த சேரன் செங்குட்டுவனும், சேர நாட்டில் துறவியாக விளங்கி சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகளும், எவ்வாறு மகனாக மாறினார்கள். அடிப்படையிலேயே சோழ நாடு வேறு சேரன் செங்குட்டுவன் என்று தன் பெயரிலேயே சேர நாட்டை அடையாளப் படுத்தியிருக்கும் செங்குட்டுவனும் இளங்கோவடிகளும் வேறு என்று வாதிட இடமிருப்பதுக் குறித்து டி.வி.சதாசிவ பண்டாரத்தோடு, இக்கூற்றிணை முதன் முதலில் வெளிப்படுத்தி, சேரன் செங்குட்டுவனின் காலத்தைக் கண்டறிந்துக் கூறிய 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டத் தமிழகம் என்னும் நூலின் ஆசிரியர், வி.கனகசபைப் பிள்ளையும் விளக்கி கூறினாரா? என்ற கேள்விக்குப் பதிலாக, சேரன் வம்சாவளியான வேள் குமாரத்தியை மணந்தவன் சோழன் கரிகாலன் அதனால் இம்முறை ஏற்பட்டது என்று விளக்கம் தருகிறார். அவ்வாறு மணந்தானென்றாலும் தந்தையின் நாடான சோழநாட்டைதானே குறிப்பிட்டு, சோழன் செங்குட்டுவன் என்று தமது பெயரை அழைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறுக் கூறிக் கொள்ளாமல் தாயின் நாடான சேரநாட்டைக்கூறி சேரன் செங்குட்டுவன் என்று அழைத்துக் கொண்டமை எவ்வாறு பொருந்தும் என்ற அடுத்த வினாவும் எழுவதைப் பார்க்கிறோம். மேலும், தொகுதி பன்னிரெண்டில் (ஆடி 1914)பகுதி ஒன்பதாம் இதழில் அதிகமான் நெடுமானஞ்சி என்னும்

தலைப்பை அமைத்துக் கொண்டு எழுதியுள்ளார். இக்கட்டுரையில்,

> இவன் கடைச்சங்க நாளில் தமிழகம் புகழ விளங்கிய கடையெழு வள்ளல்களில் ஒருவனென்பது 'முரசுகடிப்பிகுப்பவும்' என்னும் 158ம் புறப்பாட்டாலும். சிறுபாணாற்றுப்படையில் 84 முதல் 122 வரையுள்ள அடிகளாலும் நன்கு விளங்கும். இவனை அதியமான் நெடுமானஞ்சி யெனவும், நெடுமானஞ்சியெனவும் அஞ்சியெனவும் எழினியெனவும் வழங்குவர்.

(மேலது;320)

எனத் தொடங்குபவர். இவ்வரசன் மழவர் என்னும் கூட்டத்தார்க்கு அரசனென்பதனைப் புறம் 88 ஆம் பாடலின் ஓங்கு திறலொளி றிலங்கு நெடுவேன் மழயர்பெருமகன் என்ற அடிகளாலும், வழுவில் வண்ணமழவர் பெரும என்னும் 90 ஆவது புறப்பாடலிலும் குறிக்கப்படுவதோடு, இவனூர் தகடூரென்பதை 230, 158 புறநானூற்றுப்பாடலாலும், இவனது மலை பனை மலை என்பதும் இவன் வேங்கைப் பூவையும் வெட்சிப் பூவையும் சூடுபவன் என்பதையும் தருபவர் இவன் காலம் குறித்துக் கூறுகையில்,

> தொல்காப்பியப் புறத்திணையியல் ஏழாஞ் சூத்திரத்துரையில் ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர் செல்லாது, தன் மதிற்புறத்துவருந்துணையும் இருப்பின் அஃது உழிஞையினடங்கும், அது சேரமான் செல்வழித் தகடூரிடை அதிகமானிருந்ததாம்" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலாற் சேரமானுக்கும் அதிகமானுக்கும் தகடூரின் கண் ஒரு பெரும்போர் நடந்திருக்க வேண்டுமென்பது அறியப்படுகிறது. இனி, ஔவையார் பாடிய கடல் கிளர்த்தன்ன தகடூர் நாப்பண்" என்னும் 295ஆம் புறப்பாட்டாலும் புறத்திரட்டிலே காணப்படும் தகடூர் யாத்திரைப்பாடல் பாடல்களாலும் தகடூரின்கண் ஔவையார் காலத்தில் ஒரு பெரும் போர் நடந்திருக்க வேண்டுமென்பது நன்கு விளங்குகிறது.

(மேலது;323)

என்று கூறுகின்றவர், ஔவையாரின் காலம் இன்னது என்று திட்டவட்டமாகக் கூறாமல், தொடக்கப் பத்தியில் குறிப்பிட்டிருந்ததை இங்ஙனம் நினைவுறுத்திக் கொள்ள செய்கிறார். அதாவது இஃது கடைச் சங்க காலத்தில் இயற்றப்பட்டதோர் பாடலென்பதால் இக்காலம் ஔவையார் வாழ்ந்த கடைச்சங்க காலமாக உணர்த்துகின்றார்.

இம்மன்னனைக் குறித்து, இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் இயற்றிய சிறுபாணாற்றுப்படையில் (99–103) அடிகளில் குறிக்கப் படுவதையும், இவ்வரசனைப் பாடியப் புலவர்களான, ஔவையார், பெருஞ்சித்திரனார், பொன்முடியார், பரணர் ஆகியோரை வரிசைப்படுத்திக்

காட்டுகின்றார். இதனோடு, இவ்அதியமான் நெடுமானஞ்சியை அதிகமாக பாடியவர் ஔவையாரே என்பதையும் குறிப்பிட்டுச் சொல்லுகின்றார். இவ்வரசனின் காலத்தையும் புலவரின் காலத்தையும் இன்னது என்று அறிதியிட்டு கூறா விடினும், அதிகமான் நெடுமானஞ்சிக்கும் ஔவையாருக்குமிருந்த அக்கால நட்பினை உணர்த்த வருகையில் கீழ்வருமாறு உவமைகளைக் கூறி இச்சங்ககாலத்துள் இவர்கள் வாழ்ந்தவர்கள் என்பதைச் சொல்லாமல் உணர்த்தி செல்கின்றார். அப்பத்திக் கீழ்வருமாறு அமைந்துள்ளது.

> வேள்–பாரிக்கு கபிலர் போலவும், வேள்–ஆய்க்கு உறையூர் ஏணிக்சேறி முடமோசியார் போலவும், சேரமான் கணைக்காலிரும் பொறைக்குப் பொய்கையார் போலவும், கோப்பெருஞ் சோழற்குப் பிசிராந்தையார், பொத்தியார் போலவும். அதியமான் நெடுமானஞ்சிக்கு ஔவையாரே பெரிதும் நட்புரிமை பூண்டவராவர்.
>
> (மேலது;324)

இச்சான்றுகளாலும் இவ்வுவமைகளாலும், இப்புலவன் கடைச்சங்க புலவன் என்பதை உணர்த்தி நிற்பதைக் காண்கிறோம்.

### 2.1.5.1. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார் தரும் சங்ககால மன்னர்களும் புலவர்களும்

இத்தொகுதியின் பங்குனி மாத இதழின் ஐந்தாம் பகுதில் 'சோழர் குடி' என்று டி.வி.சதாசிவபண்டாரத்தார் ஓர் கட்டுரை வரைந்துள்ளார். இதில் சோழ மன்னர்களின் வம்சாவளி குறித்து ஒரு பருந்து பார்வையோடு தொட்டுக்காட்டி, கடைச்சங்க காலத்திற்கு முன்னர் வாழ்ந்த சோழர்களாக மனுநீதிசோழனும், சிபியும், செம்பியனும், காந்தமன் என்பனும் குறிப்பிட்டுச் சொல்லி, கடைச்சங்கம் சோழ மன்னர்களாக, புறநானூற்று முதலிய தொகை நூல்களில் கிடைக்கப்பெறும் தரவுகளின் வழி, முடித்தலை கோப்பெருநற்கிள்ளி, பேற்பஃறடக் கைப்பெரு விறற்கிள்ளி, உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னி, கரிகாலன், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருவளவன், இராண சூயம் வேட்டபெருநற்கிள்ளி, கோபெருஞ்சோழன், சோழன் செங்கணான் ஆகியோரை வரிசைப் படுத்துகின்றார். இவற்றோடு, கரிகாலன் இலங்கை மீது படையெடுத்துச் சென்றதையும் சேரன் செங்குட்டுவன் நலங்கிள்ளி நெடுங்கிள்ளி ஆகியோரை உறையூர்க்குத் தெற்கில் போர்ச் செய்து வென்றதையும் கூறி, கடைச் சங்க காலத்துக்குப் பிறகு வந்த சோழ மன்னர்களைக் குறிப்பிட்டுச்

செல்கின்றார். இவற்றால் சங்ககாலம் இதென்று குறிப்பிட்டுச் சொல்லவில்லையென்றாலும் கடைச்சங்கத்திற்கு முன்பின் இருந்த புலவர்களோடு, கடைச்சங்கத்திலுமிருந்த மன்னர்களைத் தந்திருப்பதன் வாயிலாக, இவர்களின் காலத்தைச் சொல்லளவில் தெரிவிக்கப் பட்டுள்ளதைக் காண்கிறோம். டி.வி.சதாசிவ பாண்டாரத்தார், இளங்கோவடிகள் குறித்துள்ள பழைய சரிதங்கள் என்று தலைப்பிட்டு, 1800 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் பண்டைய மன்னர்களைத் தொகுத்தளிக்கும் தமது நோக்கத்தைச் சுட்டி, முறையே, மனுநீதிசோழனைச் சிலப்பதிகார வழக்குரைகாதை 53, 55 அடிகளும் வாழ்த்து காதை அம்மானை வரி 2 ம் குறிப்பிடுவதைக் காட்டுகின்றார். மேலும் வழக்குரை காதையின் 51–52 ஆம் அடிகளிலும் வாழ்த்துகாதை அம்பளரி 2லும் நீர்ப்படைக் காதை 166–168 வரிகளிலும். சிபி சக்கரவர்த்தி குறிக்கப்படுவதையும், காடுகாண் காதை 23, 25 வரிகளிலும் ஆய்ச்சியர் குரவை உள்வரிவாழ்த்து 1 அடிகளிலும், வாழ்த்து வள்ளைப்பாட்டு 2 வரியிலும் உக்கிர குமார பாண்டியனையும் காடுகாண் காதை 26–29 அடிகளும் கட்டுரைகாதை 50–51 அடிகளும் ஆய்ச்சியர்க்குரவை படர்க்கை பரவல் 3 ஆம் அடியும், உக்கிர குமார பாண்டியன் தன்கை வாளால், இந்திரனை வென்றதையும் மேகத்தைச் சிறைப்படுத்தியதையும் மேற்கண்ட வரிகள் உரைப்பதாகக் கூறி, இவ்வாறே குலசேகர பாண்டியனைப் பற்றியும், பாண்டவருக்கும் கௌரவர்க்குமிடையே நடந்த பாரதப் போரில் பெருஞ்சோறு வழங்கிய உதியன் சேரலாதனைப் பற்றியும், சிலப்பதிகாரத்தின் குறிப்புகளால் காட்டியுள்ளார். இவற்றால் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழக சேர, சோழ, பாண்டிய மன்னர்களை அறிய முடிவதை நிறுவியுள்ளார். இந்த 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட என்ற சொல்லாடலை கனகசபை பிள்ளையிடமிருந்து பெற்றுக் கொண்டு இருக்கிறார் என்பதை அறியலாம்.

### 2.1.6. மு. இராகவையங்காரின் கல்வெட்டு மற்றும் இலக்கியச் சான்றுகளின் அடிப்படையிலான சங்க கால ஆய்வு

இப்பதிமூன்றாம் தொகுதியின் ஆனி மாச (1915) பகுதி 8 ஆம் இதழில் “சாஸனமும் தமிழ்ச் சரிதங்களும்” என்னும் தலைப்பில் மு. இராகவையங்கார் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இதில், பண்டைய நாளில் நடுகல் வைத்து அதன்மேல் இறந்த வீரர்களின் பெயர்களையும், அவர் குறித்த குறிப்பும் எழுதப் பட்டுவந்ததைத் தொல்காப்பியத்துள்ளும் சங்க இலக்கியத்துள்ளும் கிடைக்கப் பெறும் தரவுகளின் அடிப்படையில் இதுவே பழைய சிலாசாஸனம் இருந்தமைக்கான ஆதாரமென நிறுவுகின்றார்.

மேலுமொரு சான்றாக, பாண்டியர் குறித்த சாசனம் கிடைக்கப்பெற்றிருப்பதைக் கீழ்வருமாறு எழுதுகின்றார்.

> சில வருஷங்கட்கு முன், சிலாசாசன பரிசோதகரால் வெளிப்படுத்தப் பட்ட அறிக்கையில், இற்றைக்கு 1150 வருஷங்களுக்கு முன் பராந்தகன் என்ற பாண்டியனால் கோயிலிற்பாடும் பாணனொருவனுக்கு வேள்விக்குடி என்ற கிராமம் அளிக்கப்பெற்ற விவரங்கூறும் சாஸனமொன்று பாண்டிய மிசாவெளியோடும் வெளியிடப்பட்டிருக்கிறது. Annual Report of Assistant Archeological spot for Epigraphy இதனுட்கண்ட பாண்டியர்களுள், பல்யாக சாலை முதுகுடுமி என்பவன், முதல்வனாக நிறுத்தப்பட்டுள்ளான். இவன் கொற்கை கிழான் நற்கொற்றன் என்ற பாணனொருவனுக்கு வேள்வி குடியை அளித்திருந்தானென்றும் பிற்காலத்தில் அக்கிராமம் வேற்றரசனின் இராஜாங்கத்திற்குள் சேர்ந்து கொள்ளப்பட்டதென்றும் அப்பாணன் வமிசத்தவனொருவன் இது விசயமாகப் பாண்டியன் பராந்தகனிடம் முறையிட்டு கொண்டு அவ்வூரைத் திரும்ப பெற்றானென்றும் அச்சாஸனங் கூறுகின்றது. இதனாற் புறநானூற்றுள் கண்ட முதுகுடுமிப் பெருவழுதி வரலாறு, பண்டையக் சாஸனத்து பயின்று விளங்குதல் தெரியலாம். இவ்வேள்விகுடி சாஸனத்துக் கண்ட குறிப்புகளுள்ளே பாண்டிய வமிசத்துக்கு ஆதியில் ஆசாரியஸ்தானம் வகித்தவர் அகஸ்தியர் என்றும். தேவர்கட்காக ஒரு பாண்டியன் தூதுசென்றான் என்றும் காணப்படுகின்றன. இறையனார் களவியலுரையில், “அரை தரு மேகலையன்னமன்னாயன்ற கத்தியன்வாங் – உரைதருதீந்தமிழ் கேட்டோனுசிதன் (89) எனப் பாண்டியனொருவனைப் பற்றிய உதாரணச் செய்யுளும்” அல்லதூஉம், அசுரரும் அமர் செய்த காலத்துத் தேவர்களையும் அசுரர்களையும் ஒருவீர் ஒருவீர் மிக்காரை ஒறுப்பல்யான் எனப் பாண்டியன் மாகீர்த்தி செய்வித்ததுபோல செய்வித்தலுயொன்று, என்னும் வாக்கியமும் (36–சூத்திரவுரை) முன்னவற்றோடு முறையே ஒப்பிடத்தக்கவை.
>
> (மு. இராகவையங்கார், 1915;268)

எனக் கூறி, இச்சாஸனத்தின் மூலம் இடைக்காலப் பாண்டியன் தொட்டு சங்க கால பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வரையிலும் தகவல்கள் கிடைக்கப் பெறுவதால், இறையனார் களவியலுரையோடு ஒப்பிட்டு இவ்வேள்விக்குடி சாஸனத்தினால் வெளிவந்த உண்மைகளை உரைக்கின்றார். அடுத்து சின்னமனூர்த்தாமிர சாஸனத்தினால், பழைய

பாண்டிய நெடுஞ்செழியன் தலையாலங்கானத்தே சேர சோழர்களை வென்ற தகவல் கிடைக்கப்பெறுவதாகக் கூறி மாங்குடி மருதனாரால் பாடப்பட்ட பாண்டிய நெடுஞ்செழியன் பற்றிய சங்க இலக்கியப் பாடலையும் தந்து ஒப்பிட்டுக் காட்டி இவர்களை அறிய பயன்படும் சாஸனங்களைப் போலவே கரிகாலனை அறிவதற்கும் கரிகாலனின் முன்னோனான கோச்செங்கணானும் குறிக்கப்பட்ட சாஸனம் Archnological Survey of S.India Vol.IV இல் காணப்படுவது தந்து, இவ்விரு மன்னர்களும் சங்க நூலான புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளதைச் சுட்டிக் காட்டுகின்றார். சேரர்களைப்பற்றி நேரடியான சாஸனம் கிடைக்கப்பெறவில்லையெனினும் வடஆரிய வேந்தனான சமுத்திர குப்தன் கி.பி.375 இருந்தமைக்கான சான்றை தரும் சாஸனத்தில் சேர நாட்டை ஆட்சிபுரிந்த மாந்தரன் என்பவன் குறிக்கப்பட்டிருப்பதைக் கூறி இவன் பரணரால் பாடப்பட்ட மாந்தரம் பொறையனாக இருக்க வேண்டும் என்றும் அல்லது யானைக் கட் சேய் மாந்திரன் என்பனாகயிருக்க வேண்டுமென்றும் ஊகித்துள்ளார்.

இவற்றோடு சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் சிற்றரசர்கள் குறித்து கூறத் தொடங்குகையில் வேள் பாரியும் கபிலரும் கொண்டிருந்த நட்பையும், மூவேந்தரும் இப்பாரியை வஞ்சித்து கொன்ற செய்தியும், அதனை அடுத்து கபிலர், அப்பாரியின் மகள்களைத் திருமணம் செய்து தர தக்க அரசனைத் தேடி சென்றதையும், திருக்கோவலூர் வீரட்டானே சுவர்கோயிற் குமுதப் படைகளில் 900 ஆண்டுகளுக்கு முன், அதாவது முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் பொறிக்கப்பட்ட சாசனத்தில் கிடைக்கப் பெறுவதைக் குறிப்பிடுகின்றார். இச்சாஸனத்தில் பாரியின் மகளைக் கபிலர் மலைமானுக்கு மணம் புரிந்து விட்டு பின்னர் பெண்ணையாற்றங்கரையில் அக்கினியில் புகுந்து உயிர் நீத்தார் என்ற செய்தியும் கிடைக்கப் பெறுவதைத் தருகின்றார். இத்தரவுகளோடு, புறநானூற்றின் 133, 200, 201, 202, 236 ஆம் பாடல்கள் சான்றாக இருப்பதையும் ஒப்பிட்டுக்காட்டியுள்ளார். இவ்வகவற்பா சாஸனத்தை அக்கோயிலிலிருந்து படியெடுத்து எழுதி, ஸ்ரீமான் கோபிநாதராவ் செந்தமிழ் (தொகுதி 4–பக். 232) இதழில் வெளியிட்டிருப்பதையும் அடிக்குறிப்பில் தருகின்றார். இறுதியாக இச்சாஸசனச்செய்திகளோடு முரண்பட்ட தகவலைக் கீழ்வருமாறு சுட்டி சரி செய்கின்றார்.

> சாஸனப் பகுதியில் மலைமானுக்கும் கபிலராற் பாரிமகளிர் மணம் புரிவிக்கப் பட்டன ரென்ற செய்தி புறநானூற்றால் காணப்பட்டுள்ளது. ஆயினும் பாரிமகளிருவருள் மூத்தவளை மலையற்கு அளித்து, இளையவளைப் பார்ப்பார்ப்பகுத்தனர் என்று

கருதல் பொருத்தமாகும். இவ்விளைய மகளின் மணம் பின்பு ஔவையாரால் முடித்து வைக்கப்பட்ட தென்பது தமிழ் நாவலர் சரிதம் முதலிய பின்னூல்களால் ஊகிக்கப்படுகின்றது.

(மேலது;270)

என்று எழுதியிருக்கிறார். இதனோடு, ஆய் என்னும் சிற்றரசனை, புறநானூற்றில் உறையூர் முடமோசியார் பாடிய பாடல்களைச் சான்றாகத் தந்து, இவனைப் பற்றி கி.பி.9 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகத் தெரியவரும், திருவாங்கூர் ஸம்ஸ்தான சாஸனத்தினை து.அ.கோபிநாத ராவால் பெற்று திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகள் ஸீரிஸ் 11, 12 இல் கிடைக்கப் பெறுவதையும் தந்துள்ளார். இதனையடுத்து பல்லவ சாஸனங்களையும், ஆழ்வார்கள் பற்றிய சாஸனங்களையும் சொல்லப் புகுகின்றார்.

இக்கட்டுரையால், சங்க காலத்திற்குப் பிற்பட்ட சாஸனங்களில் சங்க காலத்தில் வாழ்ந்த மன்னர்களையும், புலவர்களையும் குறிப்பிடும் குறிப்புகள் கிடைக்கப் பெறுவதை ஒப்பிட்டுக் காட்டியுள்ளதை அறிந்து கொள்ள முடிந்தது.

இறுதியாக, சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் நாடுகளாக, பல் குன்றக் கோட்டம் ஒய்மானாடு, பன்னாடு, வேணாடு, முதலிய நாடுகளும் கச்சிப்பேடு, வேம்பற்றூர், நேரியாயில், கொடுங்கூர், எயில் முதலிய நகரங்களையும் குறிப்பிடும் சாஸனங்களையும் சுட்டிக்காட்டி இத்துறையோடு கைக் கோர்த்து தமிழ் இலக்கிய சரித்திர ஆராய்ச்சியை மேற் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தை வெளிப்படுத்தி முடித்துள்ளார்.

### 2.1.6.1. தொன்மப் புரிதலிலிருந்து விலகிய வரலாற்று அணுகுமுறையிலான சங்க கால ஆய்வு

8 ஆம் தொகுதியில் (1915 – ஜீன்) பகுதி ஒன்றில் மு. இராகவையங்கார் 'சேரன் செங்குட்டுவன்' என்ற தலைப்பில் கட்டுரை வெளிப்படுத்தியுள்ளார். கடைச்சங்க காலத்து சேரனான செங்குட்டுவனின் வம்சம் மிகத் தொன்மைவாய்ந்தது என்பதும், இவனின் தலைமுறையினைப் பதிற்றுப்பத்தின் வழி சுட்டிக் காட்டி, இச்செங்குட்டுவன் வடதிசைச் சென்று கனகவிசயரை வென்று கண்ணகிக்குக் கோவில் எழுப்பக் கல் கொண்டு வந்த வரலாற்றினையும் எடுத்துரைத்து, அப்போது கயவாகும் வந்திருந்ததைக் குறிப்பிட்டு இவன் வைதியசமயத்தோடு சைவத்தையும் ஆதரித்தவனென்றும், நாடும் நகரமும் சிறப்புற்றிருந்ததென்றும் உணர்த்துகின்றார்.

இவன் காலத்தில் வாழ்ந்தப் புலவர்களாகச் சோழ நாட்டில் நெடுங்கிள்ளியும் பெருநற்கிள்ளியும் உரையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர்களென்றும் கிள்ளிவளவனும் நலங்கிள்ளியும் காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்டனர் என்றும், பாண்டிய நாட்டில் கோவலனைக் கொன்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும் அவரின் தம்பி வெற்றிவேற் செழியனும் நன்மாறனும் இருந்தனரென்றும், இலங்கையில் கயவாகு, கொங்கிளங்கோசர் அறுகை நூற்றவர்கன்னர் முதலியோர் சிறந்து விலங்கினார்ரென்றும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

இவனோடு வாழ்ந்த புலவர்கள் பரணரும் சாத்தனாரும், தமது சகோதரரான, இளங்கோவடிகளையும் சுட்டி, பரணர், பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தை இவன் மேல் பாடியுள்ளதை நினைவுக்கூறுகின்றார்.

இச்செங்குட்டவனுக்குக் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்ற காரணப் பெயரும் உண்டென்பதைக் காட்டி, இவன் காலம் குறித்தப் புரிதலைக் கீழ்வருமாறு தருகின்றார்.

> இவன் காலம் கி.பி.2–3 ம் நூற்றாண்டென்பது இதுவரை வழங்கியுள்ள கொள்கை; ஆனால், வேறு பிரபல பிரமாணங்கள் புதியனவாக அகப்பட்டவற்றை நோக்கும் போது, கி.பி.4 அல்லது 5 ஆம் நூற்றாண்டே இவன் வாழ்ந்த காலமாதல் வேண்டுமென்பது உய்த்துணரப் படுகின்றது.

(மு. இராகவையங்கார், 1915;13)

இக்குறிப்போடு **1916** இல் சேரன் செங்குட்டுவன் என்று தனி நூலொன்றை எழுதவிருக்கும் எண்ணத்தையும் முடிவுரையில் காட்டியிருக்கிறார்.

### 2.1.6.2. வரலாற்று அடிப்படையிலான சங்க கால ஆய்வில் சேரன் செங்குட்டுவன்

**1916** இல் மு. இராகவையங்காரால் எழுதப்பெற்ற சேரன் செங்குட்டுவன் எனும் நூல் தமிழ் இலக்கியக் கால ஆய்வுலத்தில் ஒரு முக்கிய நூலாகத் தெரியவருகிறது. இந்நூலின் முன்னுரையில், சேரர்களைப் பற்றி குறிக்கவருகையில்,

> இவர்கள் சேரர், சேரலர் எனத் தமிழினும், கேரளர் என வடமொழியினும் வழங்கப்படுவர்.

(மு. இராகவையங்கார், 1916;2)

என்று அடிப்படியான அறிமுகம் செய்யத் துவங்கும் மு. இராகவையங்கார் தாம் ஆய்வு செய்ய எடுத்துக் கொண்ட 'சேரன் செங்குட்டுவன்' என்பவனைப் பற்றி தெளிவுறுத்த ஆதாரமாக அமையும் நூல்களைக் கீழ்வருமாறு வரிசைப்படுத்தியுள்ளார்.

> இவ்வாராய்ச்சிக்குச் சிலப்பதிகாரம் மணிமேகலை பதிற்றுப்பத்து என்பவை சிறந்த சாதனங்கள். இவையன்றிச் சங்கச் செய்யுட்கள் சிலவும் வேறு புறக்கருவிகளும் உரிய அளவில் உபகாரப்படுவன.
>
> (மேலது;4)

இவற்றோடு சங்க இலக்கியமான அகநானூற்றின் சில பாடல்களும் புறநானூற்றின் சிலப்பாடல்களையும் எடுத்தாண்டு ஆய்வினைச் செம்மை செய்துள்ளதையும் அறியமுடிகிறது. இவ்விடத்து ஆய்வுப்பொருளான கால ஆய்வுப் புரிதலைக் கவனிப்போம். வைதீக மரபினைக் களமாகக் கொண்ட காலச் சூழலில் வாழ்ந்தவன் சேரன் செங்குட்டுவன் என்பதை விளக்கிக் காட்டும் மு.இராகவையங்கார், அவன் சமணத்தையும் பௌத்தத்தையும் பெரிதும் பாராட்டி வளர்த்தவனாகவும் குறிப்பிட்டுக் காட்டுவதோடு அக்கால நிலைப்படி இக்கால நிலைப் போன்று பிறிதொரு மதங்களைத் தாழ்த்தி உயர்த்தி சொல்லும் நிலை இல்லாமலிருந்ததைச் சுட்டிக் காட்டுகின்றார். சேரன் செங்குட்டுவன் காலத்தில் வாழ்ந்த பாண்டிய, சோழ மன்னர்களையும் புலவர்களையும் தக்கச் சான்றுகளோடு எடுத்துக் காட்டுகின்றார். சான்றாகச் சோழர் என்னும் தலைப்பின் கீழ் கீழ்வருமாறு எழுதிச் செல்வதைக் காணமுடிகின்றது.

> செங்குட்டுவன் காலத்திற் சோணாடாண்ட அரசர்கள் பலராயினும், சிறப்பாக உரையூர்ச் சோழரும் புகார்ச் சோழருமென இருபகுதியினரையும் கொள்ளலாம். "மாடமதுரையும் பீடாருறந்தையும் – ஒலி புனற் புகாரும் கலிகெடு வஞ்சியும்" (சிலம்பு 8:3–4) எனச் சோணாடு தங்காலத்தில் இரண்டு இராசதானிகள் உடையதாயிருந்ததை இளங்கோவடிகளும் குறிப்பிடுவர். செங்குட்டுவனுடைய தாயுடன் பிறந்த அம்மானும் சோழன் மணக் கிள்ளியின் மகனுமாகிய நெடுங்கிள்ளி உரையூரிலிருந்து ஆண்டு வந்தனன். (புறப்பாடல் 44, 45, 47ம்) இவ்வுரையூர்க் சோழர்க்கும் புகார்ச் சோழர்க்கும் பெரும் பகை மூண்டு போர் நிகழ்ந்து வந்ததென்பது புறநானூற்றுச் செய்திகளினின்று புலப்படுகின்றது.
>
> (மேலது;196)

என்று சொல்லத் தொடங்குபவர், புகாரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்த சோழர்கள் கிள்ளிவளவனும் அவனது தம்பியுமாகிய

நலங்கிள்ளியும் என்கிறார். இவர்கள் கரிகாலனின் புதல்வர்கள் என்பதையும் குறிப்பிடுகின்றார். மேலும் செங்குட்டுவனின் மாமன் உறையூர் நெடுங்கிள்ளி இவரின் புதல்வர்கள் கிள்ளிவளவனும் நலங்கிள்ளியும் என்பதையும் கூறி இவ்விருவர்களுக்குள்ளேயே போர் மூண்டு காறி என்னும் ஆற்றங்கரையில் நெடுங்கிள்ளி இறந்ததை புறநானூறு 47 ஆம் பாடல் செய்திதருவதாகக் கூறுகின்றார். இப்போர் செய்தியை மணிமேகலை (19 : 126 – 28) பாடலும் இயம்புகிறதென்பது அவர் எடுத்துத்தரும் செய்தியாகும், அவர் கொடுத்திருக்கும் பட்டியலின் மூலம் உறையூர் சோழரின் வழியில் உறவு கொண்டு அவ்வழியே நற்சோணை என்னும் நெடுஞ்சேரலாதன் வந்து இவனை அடுத்து செங்குட்டுவனும் இளங்கோவும் வந்தனர் என்பது தெரிய வருகிறது. இவரின் இவ்வாய்வு முடிவால் சேரன் செங்குட்டுவன் கரிகாலன் காலத்திற்குப்பிற்பட்டவன் என்பதும், அவனின் புதல்வர்களின் காலத்தில் வாழ்ந்தவனென்பதும் தெரிகிறது.

பாண்டியன், சேரன், செங்குட்டுவன் காலத்தில் ஆட்சிப்புரிந்தவராக ஆரியப்படை தந்த நெடுஞ்செழியனும் அவனது தம்பியால் வெற்றிபேற் செழியனும் வாழ்ந்தவர்களாகக் கூறுகின்றார். இக்கருத்திற்கு ஆதாரமாகச் சிலப்பதிகாரத்தில் வரும் கட்டுரை காதையில் பராசரனென்னும் பார்ப்பனரின் வரலாற்றினைச் சான்றாகக் கொண்டுள்ளதும் தெரியவருகிறது. மேலும், மதுரைக் காண்டத்தின் இறுதிக் கட்டுரையில் குறிக்கப்படுவதையும் புறநானூற்றில் 183 ஆம் பாடலை இப்பாண்டியனையே பாடியதென்பதையும் குறிப்பிடுகிறார். மேற்கண்ட ஆரியப்படைத்தந்த நெடுஞ்செழியனே புறநானூற்றின் 183 ஆவது பாடலைப் பாடியிருப்பதோடு, கண்ணகி மணாளனைக் கொலைச் செய்யவும் காரணமாக இருந்துள்ளவன் என்பதையும் தந்து இவன் சில காலம் இருந்து இறந்ததும், அவன் மகனாகிய நெடுஞ்செழியன் பட்டத்திற்கு வந்ததும் பின்பு கடைச்சங்கத்தின் இறுதி பாண்டிய மன்னனாகக் குறிக்கப்படும், உக்கிரப் பெருவழுதி வாழ்ந்ததையும் தருகின்றார்.

தலையாங்கானத்துச் செருவென்ற இந்நெடுஞ்செழியனே அகநானூற்றினைத் தொகுக்கத் தூண்டி துணையாக இருந்துள்ளான் என்பதையும் அறிவோம். மு. இராகவையங்கார் கருத்தால், ஆரியப்படைத் தந்த நெடுஞ்செழியன் வெற்றி வேற் செழியனான நன்மாறன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுந்செழியன், கானப்போர் தந்த உக்கிர பெருவழுதி ஆகிய பாண்டியர்கள் வாழ்ந்த சமகாலத்தில் சேரன் செங்குட்டுவன் வாழ்ந்தான் என்பது தெரியவருகிறது. மேற்கண்ட கூற்றால், மேற்கண்ட சோழர்களும் பாண்டியர்களும் இச்செங்குட்டுவன் காலத்தில்

வாழ்ந்த மன்னர்களாகத் தெரியவருவதோடு, இம்மரபும் பரம்பரையும் கரிகாலன் காலத்தை அடுத்தது என்பதும் புலப்படுகிறது. அவ்வாறெனில் இச்சேர செங்குட்டுவனின் காலம் எதுவாக இருக்கும் என்ற வினா எழுகிறது.

### 2.1.6.3. சேரன் செங்குட்டுவனின் காலப் புரிதலும் தொன்ம மறுப்பும்

செங்குட்டுவன் காலம் என்று தலைப்பிட்டு 13ஆவது பகுதியாக எழுதியுள்ள இந்நூலில் மு.இராகவையங்கார் கீழ்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> நம் சேரர் பெருமான் விளங்கிய காலம் மூன்றாவது சங்கத்துச் சான்றோர் வாழ்ந்த காலமேயாகும். புலவர் பெருமக்களான பரணரும் சாத்தனாரும் செங்குட்டுவனை நேரிலறிந்து அவனது அவையைச் சிறப்பித்தவர்களாதலின், அப்புலவர்களாற் பாடப்பட்ட பிறதமிழரசர்களும், தலைவர்களும், அன்னோரைப்பாடிய போது தமிழ்ப் பெருமக்களும் நஞ்சேரர் பெருமான் காலத்தினும் அதனையொட்டிய காலங்களிலும் விளங்கியவர்கள் என்பது தெரியலாகும்.

(மேலது;196)

என்று கடைச்சங்ககாலத்தில் இவனது ஆட்சி ஓங்கியிருந்தது என்பதைத் தெளிவுக்குக் கொண்டு செல்ல முயலுபவர் கடைச்சங்க காலத்தை இச்சேர செங்குட்டுவனைக் கொண்டு காண்கையில் அது கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று சொல்லிப் பின்னர் கிடைக்கப் பெற்ற ஆராய்ச்சி முடிவுகளால், செங்குட்டுவனின் காலம் கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்று பெறுவதாகக் கூறியுள்ளார். எத்தகைய தரவுகளின் அடிப்படையில் கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்ற முடிவிலிருந்து மாறி கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்ற நிலைக்கு வந்தாரென்பது பற்றிய தரவுகள் முதல் பதிப்போடு அதாவது சேரன் செங்குட்டுவன் என்னும் இந்நூலின் 1916 இல் வெளிவந்த முதல் பதிப்பில் குறிப்பிட்டுள்ளதாகக் கூறுகின்றார், பின்னர் 1929 இல் வெளிவந்த இரண்டாம் பதிப்பு முதல் அத்தகவல்கள் பதிப்பிக்கப்படாததையும் காணமுடிகிறது. எனினும் அவரின் முடிவு கி.பி.5 ஆம் நூற்றாண்டே சேர செங்குட்டுவனின் காலம் என்பதாகும். இதனால் சங்க காலத்தை கி.பி. 5 ஆம் நூற்றாண்டு வரையிலும் என்று அவர் கொண்டிருந்தாரென்பது வெளிப்படுகிறது. மேலும் கரிகாலனின் காலம் கி.பி.4ஆம் நூற்றாண்டு என்று கருதுவதற்கு இடம் தருவதோடு சேரன் கண்ணகிக்குக் கோயிலெடுத்தபோது இலங்கை அரசன் கயவாகு வந்ததும் கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்ற முடிவில் வந்து நிற்கிறது. இம்முடிவு பெரும் முரண்

வாய்ந்தது என்பதைக் குறிப்பிட்டுச் சொல்லாமலே யாவரும் அறிவர். எவ்வாறெனில், இலங்கை வரலாற்று நூலான மகாவவம்சத்தின் படி, கயவாகு என்ற பெயரில் இரண்டு மன்னர்கள் வாழ்ந்தார்களென்பதும் அவற்றின் முறையே முதல் கயவாகு என்பவன் கி.பி.171 முதல் கி.பி.193 வரையில் அரசாண்டார் என்றும், இரண்டாம் கயவாகு கி.பி.1137 ஆம் ஆண்டு முதல் கி.பி.1153 வரை வாழ்ந்தானென்பதும் கிடைக்கப்பெறுகிறது. இவ்விரண்டு முடிகளுக்கும் தொடர்பில்லாத கி.பி.5 ஆம் நூற்றாண்டை செங்குட்டுவன் காலமென்று கூறுவதும் அக்காலம் சிலப்பதிகாரத்தின் காலமென்று சொல்லாமல் உணர்த்த வருவதும் எங்ஙனம் பொருந்துமென்ற கேள்வி இயல்பாக எழுகிறது. இவற்றில் மேலும் வியப்பாகவிருப்பது கி.பி.5 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னும் இம்மன்னனின் காலத்தைக் கொண்டு செல்லும் ஆய்வாளர்கள் இருந்துள்ளனர் என்று அவர் குறித்துள்ளதாகும். எவ்வாறெனில் பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்தைப் பாடிய பரணரின் காலமும் கி.பி.5 நூற்றாண்டு எனக் கருதியிருப்பதோடு பதிற்றுப்பத்தின் காலமும் புறநானூற்றில் பரணரால் பாடப்பட்ட மன்னர்களின் காலமும், இச்சமகாலத்தில் வாழ்ந்த சோழ பாண்டிய மன்னர்களாகச் சுட்டப்பட்டவர்களின் காலமும் கி.பி.5 நூற்றாண்டிற்கு நகர்த்தப்படுவதையும் காண்கிறோம். இவ்வாறு பல்வேறு விதமான முரண்களைத் தோற்றி வைக்கும் இவரது இம்முடிவுக்கு ஆதாரங்களாகக் கிடைக்கப்பெற்றவைகளையும் இதனோடு, நாக்கீரரின் காலத்தையும் சுட்டிக்காட்டிச் ஆராய்ந்துச் செல்லும் போக்கினையும் இனிக் காண்போம்.

### 2.1.6.4. சங்க கால ஆய்வில் நக்கீரரும் செங்குட்டுவனும்

செங்குட்டுவன் வாழ்ந்த சங்க காலத்தைக் கூறவருபவர், நெடுநல் வாடையைப் பாடியவரான நக்கீரரே அகநானூற்றின் 346 ஆம் பாடலைப் பாடியவரென்றும் இவரும் செங்குட்டுவன் காலத்தவர் என்றும் உறுதியாகக் கூறுகின்றார். இந்நக்கீரரே, இறையனார் களவியலுக்குப் பொருளுரைத்தவரென்றுச் சொல்லத் தொடங்கி, சிலர் காலத்தினைக் கண்டறிந்து எடுத்துரைப்பதன் மூலமாக இதுவரையிலும் வலியுறுத்தி வந்த செங்குட்டுவன் காலம் தமிழ்ச் செய்திப்படி உறுதிப்படும் என்ற எண்ணத்தில் கீழ்வருமாறு முடிவுறுத்துவதைக் காணமுடிகிறது.

> அக்களவியலுரைக் காலமாகிய 8ம் நூற்றாண்டைவைத்து அதனிலிருந்து 10 தலைமுறை முற்பட்ட நக்கீரர் காலத்தைக் காணுமிடத்து அப்புலவர் பெருமான் உத்தேசம் 5ம் நூற்றாண்டிலிருந்தவராதல் பெறப்படும். அஃதாவது (கி.பி.770–1030) 470ல் வாழ்ந்தவர் என்பதாம். ஆகவே, அந்நக்கீரனார் காலத்தை

ஏறக்குறைய ஒட்டியிருந்தவனாகத் தெரியும் செங்குட்டுவன் முதலியோர்க்கும் அந்நூற்றாண்டின் முற்பகுதியைக் கொள்ளத் தடையில்லை என்க.

(மேலது;ப.122)

இம்முடிவிற்குக் களவியலுரைக்கு உரையெழுதியவர் தந்திருக்கும் குறிப்புகளுள் அரிகேசரி, பராங்குசன், நெடுமாறன் முதலிய பாண்டிய மன்னர்கள் சங்கமங்கை நெல்வேலி எனும் இடங்களில் போர்புரிந்த குறிப்புகள் கிடைக்கப் பெறுவதை எடுத்தாண்டு இம்மன்னர்களின் காலத்தை 1907–8 ஆம் ஆண்டின் Epigraphical Annual Report (Page 62–68) இல் கிடைக்கப்பெறும் சின்னமனூர் வேள்விகுடித் தாமிர சாசனத்தின்படி கி.பி.770 என்று அடையாளம் கண்டிருப்பதைக் கூறி அடிக்குறிப்பில், பதிற்றுப்பத்திற் ஒவ்வொரு சேரர்க்கும் 30 ஆண்டுகள் ஆட்சிகாலமாகக் கொள்ளப்படுவதால், இவ்வுரை எழுந்த காலமாக ஏற்கப்படும் கி.பி.770 லிருந்து 10 தலைமுறை முன்னேச் சென்றால் கிடைக்கப்பெற்ற காலமான கி.பி.470ஆம் ஆண்டே இச்செங்குட்டுவனின் காலமென நிறுவுகின்றார் இக்கருத்தினையே செந்தமிழ் தொகுதி 4 இல் (பகுதி 7) “இளம்பூரணாரடிகள்” என்ற தலைப்பிலும் யானை மலைச் சாஸனத்தால் அறிந்தது என்ற தலைப்பிலும் இவ்வாசிரியரே எழுதியுள்ளதோடு இக்கருத்தோடு ஒத்துப்போகும் வகையில், ஸ்ரீமாந் து.அ. கோபிநாதராவ் செந்தமிழ் தொகுதி–6 (பக்–58–59)இல் எழுதிய கட்டுரையும் அடிக்குறிப்பில் எடுத்துரைத்துள்ளார்.

இதனால் இறையனார் களவியலுரை கி.பி.8இல் எழுதப் பெற்றதென்பதும் இக்காலம்முதல் 10 தலைமுறைக்கு முன்னே நக்கீரரும் செங்குட்டுவனும் காலம் என்பதும் அவரின் முடிவாக இருப்பதைப் பார்க்கிறோம். சிலப்பதிகாரத்தின் காலத்தை முதன்முதலாக இலங்கை மன்னன் கயவாகினைச் சுட்டி காட்டி கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று நிறுவிய ஸ்ரீ கனகசபைப் பிள்ளையின் கருத்தினைச் சுட்டி காட்டி மறுக்காமல் பொதுப்பட இக்கயவாகுவின் காலம் குறித்து கீழ்வருமாறு மறுத்துரைக்கிறார்.

அக்கஜபாகுவே நம் சேரன் காலத்தவன் என்பதற்குப் பெயரொற்றுமை ஒன்றைத்தவிர, உட்பிரமாண மொன்றும் அந்நூலூற் பெறப்படவில்லை என்பது சரித்திர அறிஞர் நன்கறிவர்.

(மேலது;123)

என்று எழுதுவதோடு அடிக்குறிப்பில் தந்திருக்கும் தகவல் தீர்க்கமான அவரின் முடிவினைச் தருகின்றது.

மகாவம்சமானது கி.மு.501 முதல் கி.பி.301 வரை இருந்த இலங்கையரசர் வரலாறுகளையே கூறுவதாதலால் 5ம் நூற்றாண்டினனாகிய நம் சேரன் காலத்திருந்த இலங்கைவேந்தன் செய்தியை அந்நூலில், தூண்டிடல் இயலாததாம். கி.பி.301 க்குப் பிற்பட்ட இலங்கையரசர் வரலாறுகள், 1262, 1295–ம் வருஷங்களில் ஏறக்குறைய மகாவம்சம் செய்யப்பட்டதற்கு ஆயிரமாண்டுக்குப் பின் எழுதப்பட்டதென்பர்.

(மேலது;163)

இத்தகவலை, அதாவது கி.மு. 501க்கும் கி.பி.301க்கும் இடைப்பட்ட வரலாறுகளையே கி.பி. 1262க்கும் கி.பி.1295க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது என்னும் தகவலை Sketches of Ceylon History (Page 29–30) என்னும் Sri.P. Arunachalam என்பவரின் நூலின் மூலமாகப் பெற்றதைக் காட்டியுள்ளார். எனவே இவரின் கூற்றுப்படி, கி.பி.5 ஆம் நூற்றாண்டில் ஒரு கயவாகு இருந்தான் என்னும் செய்தி தெரியவருகிறது. இவனே கண்ணகிக்குக் கோயில் எழுப்பிய போது சேரன் செங்குட்டுவனுடன் இருந்தவன் என்பதையும் கூறாமல் உணர்த்தியுள்ளார். இவ்வாய்வினை முடிக்கும் நிலையில், ததியன் (Dathiya) பிதியன் (Pithiya) எனும் இருவரில் இலங்கைமீது படையெடுத்து வெற்றிப் பெற்றத் தகவலை, P. Arunalchalam எழுதிய மேற்கண்ட நூலின், List of the “Kings of the Suluvamsa” என்ற பகுதியில் எழுதப்பட்டுள்ளதைத் தந்து, மேற்கண்ட ததியனைத் தலையாலங்கானந்தந்த நெடுஞ்செழியன் வென்ற செய்தியை அகநானூறு 39 பாடல் தருவதால், ததியனை திதியன் என்கிற முடிவுக்குப் பொருந்துவதாலும் இம்மன்னனும் செங்குட்டுவனின் காலமாதல் வேண்டுமென்பதைக் கூறுகின்றார். இறுதியாக, இம்மன்னன் அகம் 321 பாடலிலும் 196 பாடலிலும் பொதியின் மலையையும் அறத்தை என்னும் ஊரையும் உடையவனென்றும், மேலும் அகநானூற்றின் (45, 126, 145) பாடல்களினால் அன்னி என்பதனைப் போரில் வென்றவன் என்பதனையும் சொல்லுகின்றார்.

ததியன், பழையன்மாறன் எனும் இருபெயரைப் பெற்ற தமிழ் மன்னர்கள் கி.மு.முதல் நூற்றாண்டில் இலங்கையை வென்றனரென்ற தகவலில் மகாவம்சத்துள் சொல்லப்படுவதால், அக்காலமே இவ்வகநானூற்றில் குறிக்கப்படும் அதேப் பெயர் கொண்ட மன்னர்களின் காலம் என்று முடிவு செய்துக் கொண்டால், அதனால் சேரன் செங்குட்டுவனின் காலமும் அவ்வாறு ஏற்பது பெரும் பிழையாக முடியும் என்று கூறி முடிக்கின்றார். இவர்கள், செங்குட்டுவன் காலத்திற்கும்

முன்னோர்கள் என்பது இராகவையங்காரின் தீர்வாக இருப்பதைக் காணமுடிகின்றது. இத்தகவலை வலுவான கேள்விகளோடு அதே நேரத்தில், ஊகத்தின் அடிப்படையிலும் முடித்திருப்பதையும் காண்கிறோம்.

### 2.1.7. மு. தம்பையாவின் ஆய்வும் சங்கம் பற்றிய தொன்ம மறுப்பும்

தொகுதி 18 இன் கார்த்திகை மாத இதழில் (பகுதி 4) ‘முச்சங்க வரலாறு’ என்னும் தலைப்பில் எழுதியுள்ள மு.தம்பையா செந்தமிழின் 17 ஆம் தொகுதியில் ஸ்ரீமத் கே.ஜி. சங்கரன் (பகுதி 10) எழுதியிருந்த கட்டுரைக்கு மறுப்பான கட்டுரையாக இதனைக் காட்டியுள்ளார். அதாவது ‘முச்சங்க வரலாறு’ ஏற்ககத்தக்கன அல்ல என்று கூறியிருப்பதை ஆராய புகுவதாக அமைத்து கொண்டு அவர் முன் வைத்திருக்கும் காரணங்களையும் அதற்கு மு.தம்பையா தரும் பதில்களையும் கீழ்வருமாறு புரிந்துணரலாம். முச்சங்கங்கள் பற்றிய கருத்து இறையனார் களவியலுரைக்கு முன்னுள்ள நூல்களுள் காணப்பெறாமை யேன்? இக்கேள்விக்கு, அடியார்க்கு நல்லார்க்கும் முற்பட்ட நூல்கள் முழுமையும் கிடைக்கப் பெறாமையால் இக்கேள்வி பொருத்தமில்லையென்று கூறி மதுரைக் காஞ்சியின் தொல்லாணை நல்லாசிரியர் / புணர் கட்டுண்ட புகழ்சால் சிறப்பின் / நிலந்தரு திருவினெடியோன் என்றதனால் கடைச்சங்க காலத்திற்கு முன்னும் சங்க மிருந்ததற்குச் சான்றாகத் தருகின்றார்.

இரண்டாவது வினாவாக, முடிநாகராயர் புறநானூற்றைத் தொகுத்தவராதலால் இவரைக் கடைச்சங்கப் புலவராகக் கொள்ளலாம் என்பதை மறுக்கும் மு. தம்பையா இம்முடிநாகராயர் இயற்றிய செய்யுள் மிகவும் தொன்மை வாய்ந்ததெனவும் அதுவும் தலைச்சங்க காலத்து செய்யுள் நடையைப் பெற்றிருப்பதால், தலைச்சங்க காலத்து நூலாக ஏற்று, இவர் பாடிய காலத்தில் பாரதப் போர் நடந்ததென்ற குறிப்பு ஏற்கத் தக்கதே யென்கின்றார்.

அடுத்த வினாவாக, அகத்தியர் என்பவர் எவ்வாறு தலைச்சங்கத்திலும் இடைசங்கத்திலும் 4440 ஆண்டுகள் உயிர் வாழ்ந்தாரென்றும் இது இயல்பிற்குப் பொருந்தாதென்பதால், நன்னூல் மயிலை நாதர் உரையாலும், Mr.Dubramil என்பவரின் கூற்றாலும், கி.பி.2 ஆம் நூற்றாண்டை சார்ந்தவரென்று உரைக்கின்றாரென கூறி, இதற்குப் பதிலாக, முற்காலத்தில் முனிவர்கள் அவ்வாறு நெடுங்காலம் வாழ்ந்தது சாத்தியமென்று கூறி, அல்லது தலைச்சங்கத்தில் ஒருவரும் இடைச்சங்கத்தில் ஒருவமாக அகத்தியர் என்னும் பெயரிலேயே விளங்கியிருப்பார்கள் என்று பதிலுரைத்திருக்கின்றார்.

அடுத்தாகத் தொல்காப்பியம் இடைச்சங்கமான (3700 ஆண்டுகளில்) காலத்தில் இயற்றப்பட்டதென்றால், கடைச்சங்க நூல்களில் காணப்படும் நடையோடு ஒத்து போவதால், இரண்டும் ஒருகாலத்தவையாக அதாவது கடைச்சங்க காலத்தனவாகக் கொள்ளலாம் என்பதோடு, தொல்காப்பிய பயிற்சியால் அவ்வாறு கடைச்சங்கப் புலவர்கள் எழுதினர் என்கின்றார். அடுத்ததாக, முச்சங்க காலத்தின் நீட்சி பெரும் வியப்பைத்தருவதோடு, இயல்பான நிகழ்விற்கு பொருத்த வில்லையென்று கே.ஜி.சங்கரன் கூற அதற்குப் பதிலுரைக்கும் தம்பையா, இறையனார் களவியல் உரைக்காட்டும் கணக்கின் படி ஒவ்வொரு அரசர்க்கும் முறையே 50 ஆண்டுகளும் 43 ஆண்டுகளும் 37 ஆண்டுகளும் பகுத்தறிந்தால் கிடைப்பதால் இது ஏற்கத் தக்கதே யாகும் என்கிறார். இதனோடு மேலும் 89, 59, 49 என்று பாண்டியர் புலவர் தொகை வருவதால் இது கற்பனையே என கே.ஜி. சங்கரன் கூறுதற்கு, அது கற்பனையில்ல ஏன் இவ்வாறு இருக்க கூடாது என்ற வினாவினை அழுத்தமாக எழுப்புகிறார்.

இறுதியாக, நம்பியாண்டார் நம்பி இச்சங்க வழக்கமான இடை, கடை என்பவற்றைப் பற்றி கூறாமை ஏன் என வினவுகின்றவருக்கு, அவருக்குப் பின் வந்த நம்பிகள் சங்கப் புலவர்களைக் குறிப்பிட்டு சென்றிருப்பதை ஆதாரமாகக் கூறி மறுக்கின்றவர், தலை, இடை, கடை என மூன்று சங்கங்களும் இருந்ததும் உண்மை என்பதற்கு இறையனார் களவியலுரையும், அடியார்க்கு நல்லார் உரையும் சான்றாகக் காட்டி, முச்சங்க வரலாறு உண்மை என்று உறுதிபட நின்று கட்டுரையை முடிக்கின்றார். இக்கேள்விகளும் பதில்களும் மிகவும் எளிமையான உரையாடல் தன்மையோடு அமைந்திருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.1.8. நா. சுப்பிரமணியனின் கால ஆய்வில் நாலடியாரும் திருக்குறளும்

1921 ஆம் ஆண்டின் 19 ஆம் தொகுதி (பகுதி 4) இதழில், (மாசி மாதம்) நாலடியார் காலம் என்னும் தலைப்பில் நா.சுப்பிரமணியன் எழுதிய கட்டுரை கிடைக்கப் பெறுகின்றது. இந்நூலின் சிறப்பினை நச்சினார்க்கினியர் அடியார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர்கள் எடுத்துகாட்டுவதால் பெறப்படுகிறதென்று கூறுவதோடு, இந்நூலின் காலம் குறித்து கூறப் புகும்பொழுது,

இந்நூல் கடைச்சங்கம் மருவிய பதினென் கீழ்க்கணக்கு நூல்களுள் முதலாவதென்றும், திருக்குறட்கு முன்னரியற்றப் பெற்ற தென்றும் கூறுவர் பலர், இதற்கு அன்னார் கூறும் சான்றாவது,

நாலடி நான்மணி நானாற்பதைந்திணைமுப்
பால் கடுகங் கோவை பழமொழி மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோடேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க்கணக்கு

என்றும் வெண்பாவேயாம்.

(நா. சுப்பிரமணியன், 1921;122)

என்று தந்திருக்கிறார். ஆக, சங்கம் மருவிய இலக்கியம் என்ற குறிப்பினைக் கீழ்க்கணக்கு என்ற நூலின் வரையறைப்பாடலைக் கொண்டு அடையாளம் கண்டிருக்கின்றனர் என்ற உண்மை தெரியவருகிறது. நாலடியாரின் காலமறியப் புகுபவர். இந்நாலடியாரின் **200, 296** ஆவது பாடல்களில், 'பெருமுத்தரையர்' என்பவரைப் பற்றின குறிப்புக் கிடைக்கப் பெறுவதால் இவர்கள் வாழ்ந்த காலமாக J.S.I.Association Vo.II (page-2,3) என்னும் நூலின் வாயிலாக இவர்கள் பாண்டியருள் ஒரு பிரிவினர் என்றும், இவர்களோடு மீனவர், தென்னவர், உக்கிரர் என்ற வகுப்பினரும் வாழ்ந்தார்களென்றும், கிடைக்கப்பெறும் குறிப்பினைத் துணையாகக் கொண்டு, இச்செய்யுள் இப்பெருமுத்தரையர் என்பவர் வாழ்ந்த காலத்தில் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்றுக் காட்டுகின்றார். மேலும் இவ்வினத்தினர் பல்லவர்களிடத்திலும், பாண்டியர்களிடத்திலும் கப்பம் கட்டிவந்தனர் என்பதனையும் தருகின்றார். இச்சான்றினை Pallava Antiquities Vol.II (p.16) என்னும் நூலின் வழிப் பெற்றிருப்பதையும் காட்டுகின்றார். இவ்வினத்தினர் பற்றியக் குறிப்பு சாசனங்கள் வழியும் அறியக் கிடைப்பதைத் தருகின்றார். கீழ்வரும் கூற்று இவ்வாய்வில் கவனிக்கப்பட வேண்டியதாகத் தெரிகிறது.

> இன்னவரில் விடேல் விடுகுமுத்தரையனென்பான் மலையடிப்பட்டிச் சாஸனங்களிரண்டில், தான் நந்திவர்மன் கீழ்ச் சிற்றரசனேயென வொப்புக் கொண்டிருக்கின்றான். (J.S.I.Association Vol.II, p.23 Inscriptions 3 and 4) தவிர, புதுக்கோட்டைச் சமஸ்தானத்திலுள்ள மலையடிப்பட்டி நார்த்தாமலை முதலிய இடங்களிற் குகைக்கோயில்கள் செதுக்கியிருக்கின்றனர்.

(மேலது;123)

இக்குகைக்கோயில்களைப் பற்றி அடிக்குறிப்பில் தந்திருக்கும் தகவல் யாதெனின் குகைக்கோயில் என்பது ஒரு மலைக்குள் குடையப்பட்டு அநேகமாக ஒரு தாழ்வாரத்தையும் அறையையும் உடையதாயிருக்கும். அவற்றுள், சுவாமி வடிவமிருக்கும், இது தான் மணிமேகலையிற் குச்சரக்குடிகை எனக் கூறப்பட்டது என்று தருகின்றார்.

அவ்வாறெனில் மணிமேகலையின் காலத்தை இவர் என்னவாகக் கருதினாரென்ற வினாவிற்கு யாதொன்றும் இவ்விடம் கூறவில்லை. மேலும் தொடர்பவர்,

> அவைகள் சிற்ப வடிவு சாஸ்திரப்படி 'பாண்டியன் வடிவை' யொக்குமேயொழிய நந்திவர்மன் வமிசத்திய வடிவை யொவ்வாது Pallava Antiquities Vol.II (P.16) நந்திவர்மன் வமிசத்திற்கு முடிவு ஆண்ட ஸிம்ஹ விஷ்ணுவமிசத்தவர் களிலொருவரும் முத்தரையர் நாட்டையாண்டதாகத் தெரியவில்லை. அக்காலத்திலிந் நாட்டிலும் சோழர்களிருந்ததாகவுந் தெரியவில்லை.

(மேலது;123)

எனத் தந்து இறுதியாக நாலடியாரின் காலம் கி.பி.717–க்குப் பிறகே ஆரம்பிக்கின்றது. ஆகவே நாலடியார் 717–க்குப் பிறகு இயற்றப் பெற்றதாகும். அதிலிருந்து நாலடியார் என்பது கி.பி.7 ஆம் நூற்றாண்டின் கடைசியிலோ 8 ஆம் நூற்றாண்டின் முதலிலோ எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று (பக்கம் 124) முடிவுக்கட்டுகின்றார். இந்நூலால், கடைச்சங்க காலத்திற்குப் பிறகு ஜெய்னர்கள் கூடி சங்கம் வைத்து தமிழ் வளர்த்தனர் என்ற கருத்துரைத்து ஜெய்னச்சங்கம் குறித்து, இரா. இராகவைங்கார் மூன்றாம் தொகுதியில் எழுதியிருந்த கருத்தினையும் இக்கருத்திற்குச் சான்றாகக் கொண்டதையும் அடிக்குறிப்பில் தருகின்றார். இக்காலத்தில் சைவமும், வைணவமும் போட்டி போட்டுக் கொண்டு தன்னை வளர்த்து கொண்டிருந்ததும் தெரியவருகிறது.

சங்கம் மருவிய நூலான நாலடியாரைச் சங்க இலக்கியக் கால ஆய்வில் எதற்காகக் காட்டவேண்டும் என்ற வினா எழுவது இயல்பே. இதனைக் காட்டியசைக்குக் காரணம், கடைச்சங்க காலத்தின் இறுதியாக அரங்கேற்றப்பட்ட நூல் திருக்குறள் என்று வழங்கி வரும் வழக்கையறிவோம். இக்கட்டுரையில், நாலடியார் காலம் குறித்து ஆராயப் புகுவோர்.

> இந்நூல் கடைச்சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் முதலாவதென்றும், திருக்குறட்கு முன்னரியற்றப் பெற்றதென்றும் கூறுவர் பலர்.

(மேலது;123)

இதற்கு அன்னோர் கூறும் சான்று பதினெண் கீழ்க்கணக்கு நூல்களை வரிசையமைத்திருக்கும் குறும்பாட்டென உரைக்கின்றார். நாலடியார் ஏழாம் நூற்றாண்டின் கடைசியிலோ, 8 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ

இயற்றப்பட்டதென்றால் திருக்குறள் எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் என்று முடிவாகி, இதனைக் கடைச்சங்க நூலாகக் கொண்டிருக்கும் கூற்றுப் பொய்க்கிறது. இப்படிப்பட்ட ஆய்வுகளும் வெளிப்பட்டுள்ளதைக் காட்டவே இந்நாலடியார் காலம் குறித்த கட்டுரையை இவ்விடம் கவனத்திற்குட் படுத்தினோம். மேலும் மணிமேகலையின் காலத்தையும் கேள்விக்குட் படுத்துவதைப் போல, அடிக்குறிப்பில் காட்டியதையும் கண்டோம்.

### 2.1.9. கே.ஜி. சங்கரனின் கல்வெட்டு ஆய்வும் சங்ககால களப்பிரர் குறிப்பும்

1903 ஆம் ஆண்டின் பகுதி 10 இல் 'களப்பிரரும் சங்க காலமும்' என்னும் பொருளில் கே.ஜி.சங்கரன் எழுதிய கட்டுரை வெளிவந்துள்ளது. தொகுதி 17 இல் இவர் எழுதிய கட்டுரைக்குத் தொகுதி 18 இல் மு.தம்பையா மறுப்புரைத்ததைபோலவே 21 ஆம் தொகுதியில் களப்பிரர் குறித்த தம்பையாவின் உரைக்குப் பதிலுரையாகக் கீழ்வருமாறு எழுதுகிறார்.

> முதலில், வேள்விக்குடிச் செப்பேடுகளில் வரும் "அளவரிய ஆதிராசரை அகலநீக்கி அகலிடத்தை, களப்ரனென்னுங் கலியரைசன்கைக் கொண்டதனை இறக்கியபின்" என்ற வரிகளுக்குப் பாண்டியரை அகல நீக்கி, களப்பிரவரசர்கள் அகலிடத்தைக் கைக்கொண்டு வேள்விக்குடியை இறக்கியபின்' என்று பொருள் கூறி பாண்டியரை நீக்கியபின் பலகளப்ரர்கள் ஆண்டனரென்றும், அவர்கள் இறங்கியது வேள்விக்குடியே யென்றும், அவர்களை நீக்கியது கடுங்கோனல்லனென்றும், தம்மையா அவர்கள் வரைந்துள்ளார்கள்.
>
> (கே.ஜி. சங்கரன் 1923, ப.485)

இதனைத் தந்து, இறக்கப்பட்டது கேள்விக் குடியென்று தம்பையா கூறியதாகக் கூறி, பாண்டியரை அகல நீக்கியது களப்பிரன் என்பதால், பல களப்ரர்கள் ஆளவிடாமல் 'கடுக்கோனே' மீண்டும் தந் நாட்டை ஆண்டானென்றும் எனவே அக்களப்ரனை வென்றது கடுங்கோனே என்றும் கூறி, இம்முடிவை மறுத்துரைக்க முடியாதென்று தம்பையாவின் உரைக்கு மறுப்புரை நிறுவுகின்றார்.

மேலும் ஆனைமலைச் சாஸனத்திலிருந்து ஐடிலவர்மன் காலத்தைக் குறிக்க முயன்று, அவனது ஆட்சி ஆண்டை 25 என நிர்ணயித்து இவ்வைடில வர்மன் முன்னவர் காலங்களையும் அக்கட்டுரையில் தந்திருப்பதை நினைவுறுத்தி, இச்செப்பேடுகளில், நெல்வேலியில் போரிட்டு வென்றதாகச் சொல்லப்படும் மாறவர்மன் என்பவன், கி.பி.7 ஆம் நூற்றாண்டைச் சாந்தவனென்றும், அதே போல் ஞானசம்பந்தரால்

சைவனாக்கப்பட்ட நெடுமாறனும் இந்நூற்றாண்டைச் சேர்ந்தவனென்றும் கூறி, புறநானூற்றின் 166 ம் பாடலில் குறிக்கப்பட்டிருப்பது இந்த சம்பந்தரே என்றால் புறநானூற்றின் காலம் கி.பி.7 நூற்றாண்டென்றுரைக்கிறார். காரணம் கூற முயலுபவர் மணிமேகலையில் குச்சரக்குடிகையென்ற சிற்றில் இருமுறை கூறப்படுகிறதென்றும். இதற்கு, உ.வே.சா சொல்லும் குர்ஜரதேசத்து சிறுக் கோயில் என்பதை ஏற்க மறுத்து, குர்ஜரர்கள் இந்திய சரித்திரத்தில் முதன் முதலாக, கி.பி.6 ஆம் நூற்றாண்டில் வந்தவர்களாகத் தெரியவருவதால், அவர்களின் பரவலுக்குப் பின்னே சிற்பத் தொழில் தென்னாட்டில் பரவியதாகச் சொல்லி, எனவே மணிமேகலை கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே இயற்றப்பட்டதாகக்கூறி சங்க காலமும் கி.பி. 6, 7 ஆம் நூற்றாண்டை சார்ந்ததே என முடிவுக்கு வந்து கட்டுரையை முடிகின்றார். இக்கருத்தினை வலியுறுத்திக் கூற எவ்விதமான வலுவானச் சான்றுகளும் முன் வைக்கப்பட வில்லையென்பதையும் கட்டுரை உணர்த்துகின்றது.

## 2.2. பண்பாட்டு அடிப்படையிலான ஆய்வு நோக்கில் தொன்ம அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுகளுக்கு மறுப்பு

வரலாற்று தரவுகளின் புரிதலோடு கிளர்ந்தெழுந்த ஆய்வுகள் தொன்ம அடிப்படையிலான சங்க கால ஆய்வினைக் கேள்விகுட்படுத்தும் நிலை 1904 லேயே அழுத்தம் பெற்றுவிட்டாலும் 1927 சங்க இலக்கியங்களின் உட்பொருளினைப் பண்பாட்டு அடிப்படையில் தமது ஆய்வினை மேற்கொண்டு பெரும் கவனத்தைப் பெற்றவராகத் தெரியவருபவர் பி.டி. சீனிவாசையங்கார். அவரின் ஆய்வு வடஇந்தியர்களின் (ஆரியர்) பண்பாட்டுக் கலப்பு ஏற்பட்டப் பின்பே சங்க இலக்கியங்களாகக் கிடைக்கப்பெறும் பெரும்பாலான பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன என்பதாகும். இத்தகைய கருதுகோளில் அணுகியும் ஆராய்ந்தும் உள்ள இவரின் ஆய்வுப் போக்கினை இங்ஙனம் கவனத்தில் கொள்வோம்.

### 2.2.1. பி.டி. சீனிவாசையங்காரின் ஆய்வில் பத்துப்பாட்டு எட்டுத்தொகையின் காலம்

'பத்துப்பாட்டில் சேர்ந்த பிற்காலப் பாட்டுகள் ஆறு' என்ற தலைப்பினை 27 ஆம் இயலில் அமைத்து எழுதியுள்ள பி.டி.சீனிவாசையங்கார் பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்று படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய நான்கு நூல்களும் பழைமையானவை, அதாவது கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவையாக ஏற்கிறார். ஆனால் பத்துப்

பாட்டுள் மீதமுள்ள நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம், சிறுபாணற்றுப்படை, திருமுருகாற்றுப்படை ஆகிய ஆறு நூல்களும், எட்டுத் தொகையில் கலித்தொகையும் கி.பி.6 ஆம் நூற்றாண்டில் பாடப்பட்டவையாகக் கொள்கிறார். இக்கருத்தினை வலியுறுத்த வரும் பி.டி.சீனிவாசையங்கார்.

> ஏனைய ஆறும் பிற்காலத்தவை (கி.பி.6 ம் நூற்) அவற்றில் வரும் ஆரியக் கருத்துக்கள் போகிற போக்கில் சொல்லியவை அல்ல; தமிழர் வாழ்வியலில் ஊடுருவித் தமிழ் மரபுகளை மாற்றியவையாக உள்ளன. பாடப்பட்டோரும் பெருவேந்தர் அல்ல (குறுநில மன்னர், முருகன் போன்றோரே) அவையும் புலவரின் இயற்கைக் கற்பனையில் தோன்றியவையாக இல்லாமல் தொல்காப்பிய பொருளதிகாரத்திற் கேற்பச் செயற்கையாக எழுதப்பட்டவை போல் உள்ளன.
>
> (பி.டி. சீனிவாசையங்கார், 1929, ப.232)

என்று எழுதுகின்றார். இவ்வாதத்திற்குக் உவமையாகக் கிரேக்கத்தில் எழுதப்பட்ட நாடகங்களையும் ஹோமரின் காவியத்தையும் நன்கு கற்று தோய்ந்ததன் விளைவாய் அரிஸ்டாட்டில் காவிய நாடகத்தில் சிறந்து விளக்கினாரென்றும் இத்தகைய சிறந்ததோர் நிலையே கி.பி.17 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பிரென்சு நாட்டு நாடகங்களைக் கிரேக்க மூலகாவிய நாடகங்களின் இலக்கணமாக அமைத்துக் கொள்ளாமல், அரிஸ்டாட்டிலின் நாடகத்தையே இலக்கணமாக்கிக் கொண்டு எழுதியதுபோல என்று ஊகித்து தன் கருத்தை உறுதி என நம்புகிறார். அவர் குறிக்கவரும் பத்துப்பாட்டின் ஆறு நூல்களும் கி.பி.6 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதென்பதற்கு அவர் தரும் கருத்துகளைக் கண்டப்பின்பு சங்க இலக்கியங்கள் குறித்து அவர் வரையறுத்திருக்கும் பத்திக்குச் செல்வோம்.

### 2.2.1.1. பத்துப்பாட்டு முன்வைக்கும் ஆரிய பண்பாடு

நக்கீரர் எழுதிய நெடுநல்வாடை பற்றிக் கூறும்பொழுது இந்நூலின் பாட்டுடைத்தலைவன் நெடுஞ்செழியன் என்பது அந்நூலுள் காணக் கிடைக்கவில்லையென்றும் இத்தகையோர் தவறான புரிதலை ஏற்படுத்தியவர் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் என்றும் கூறி,

> வரி 115 இல் நாற்பது என்னும் எண் ''தசநான்கு'' என அரைச் சம்ஸ்ருதத்தில் குறிப்பிடப்படுகிறது. மேஷம் ஆடு என்றும் ரோகிணி உரோகிணி என்றும் வருகின்றன. ஆரியர் சிலரின் சாத்திரக் குறிப்புகள் உள்ளன. கர்ப்ப கிரஹதத்தைத் தமிழாக்கி ''கருவொடு பெயரிய இல்'' என்கிறார். போர் முனையிலிருந்து அரசன் விரைந்து

வருமாறு அரசி வேண்டுவது தமிழ்த் தெய்வமாகிய கொற்றவையே எனினும் இப்பாட்டில் ஆழ்ந்த ஆரியப் பண்பாட்டுத் தாக்கங்கள் உள்ளன.

(மேலது, ப.232)

என்று கூறியுள்ளார். இவரின் கூற்றுப்படி ஆரிய பண்பாட்டின் தாக்கம் பெரிதும் பரவலாகக் கிடைக்கப்பெறும் இலக்கிய உட்பொருள்கள் அனைத்தும் பிற்காலத்தில் தோன்றியவையாக வரையறைப் படுத்துவதென்பது இச்சான்று மூலமாகத் தெரியவருகிறது.

நப்பூதனார் பாடிய 'முல்லைப்பாட்டு' என்னும் நூலினைக் குறித்து கூறவருபவர் இந்நூலின் தலைவன் பெயர் குறிக்கப்படவில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, இந்நூலும் ஆரியப்பண்பாட்டின் தாக்கத்தால் திருமாலின் வாமன அவதாரத்தையும் படிவப் பார்ப்பான் முக்கோல் முதலியனவும் பேசுவதாகக் தெரியவருவதால் இதனின் காலமும், நக்கீரரின் காலமாகக் கொண்டு, அடுத்து, கபிலர் பாடிய 'குறிஞ்சிப்பாட்டு' தமிழ் அகப்பொருளை ஆரிய அரசன் பிரகத்தனுக்கு அறிவுறுத்தப் பாடியதாக நச்சினார்க்கினியர்க் கூறும் கருத்தினை ஏற்பதோடு ஆரியக்கருத்துக்கள் பல இருப்பதனால் கி.பி.6 இன் இறுதியில் தோன்றியதென்று காட்டி, ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கு என (24) என்ற அடிகளையும் அந்தி அந்தணர் அயர' (அந்திச்சடங்கு) (235) என்ற அடிகளையும் தந்துள்ளார்.

அடுத்து பெருங்கௌசிகனார் நன்னனைப் பாடிய மலைபடுகடாம் பத்துப்பாட்டு என்று குறிக்கப்பட்ட நூல்களுள் மிக்க நலம் அமைந்தது என்பதை மட்டும் கூறி சிறுபாணாற்றுப் படைக்குச் சென்று விடுகின்றார். அதில் நல்லியக் கோடனைப் பற்றி சொல்லவரும் நத்தத்தனார் மூவேந்தர்கள், இந்நல்லியக்கோடன் கடையேழு வள்ளல்கள் ஆகியோருக்குப் பின்னர் வள்ளன்மையிற் சிறந்தவன் என்று குறிப்பிடப்படுவதால் இவன் காலம் கி.பி.6ன் இறுதியாக இருக்குமென்று குறிப்பால் உணர்த்தி காட்டுகின்றார்.

சிறுபாணாற்றுப் படையின் பாட்டுடைத்தலைவன் ஒரு குறுநில மன்னன். இம்மன்னனைப் பற்றிப் பாடவந்த புலவர் மூவேந்தரையும் கடையெழு வள்ளல்களையும் கூறி பின்னர் இவனைப் பாடி வரிசைப்படுத்தியுள்ளதால் இவன் காலம் மூவேந்தரின் ஆட்சி முடிவுற்ற நிலையில் இருந்திருக்க வேண்டியதோடு இவனைப்பற்றிய பாடல்களும் இக்காலத்தே எழுதப்பட்டிருக்க வேண்டுமென்ற சிந்தனையை முன்வைக்கிறார்.

அடுத்து திருமுருகாற்றுப்படை பற்றி கூறவருபவர் தமிழ் பண்பாட்டுநிலை முடிவுற்று ஆரியவழக்குப் பெரிதும் தோன்றிய, காலச் சூழலில் எழுதப்பட்ட நூலாகக் காட்டுகின்றார். இவ்வாதத்திற்கு அவர் தரும் சான்றுகளும் சிறுபாணாற்றுப் படைக்குறித்துக் குறிப்பிட்டதைப் போலவே ஏற்கத்தக்கதாகவே உள்ளது. அவர் சுட்டிக்காட்டியிருப்பது கீழ்வருமாறு அமைந்துள்ளது.

> தமிழர் தொன்று தொட்டு முருகனை வழிபட்ட முறை நலிந்து "ஆரிய" சண்முக வழிபாட்டுமுறையோடு கலந்து விடுகிறது. திருச்சீரலைவாய் பற்றிய பகுதியில் வரும் சண்முகனின் ஆறு முகங்களும் பன்னிரு கைகளைப் பற்றிய வருணனை, கி.பி.ஆறாம் நூற்றாண்டுக்கு முந்திய எந்தத் தமிழ் இலக்கியத்திலும் காண முடியாதது ஆகும். திருவேரக வழிபாட்டு முறை முழுமையான ஆரிய வழிபாட்டு முறை. ஆரியப் புராணக்கதையின் படி குமாரக்கடவுள் பிறப்பு வரலாறு தரப்படுகிறது.
>
> (மேலது;234)

என்று கூறியிருக்கும் ஆய்வுக் கருத்துகள் பெரும்பாலும் ஏற்கத் தக்கதாகவே உள்ளன. ஆயினும் இவ்வியலில் தொடக்கத்தில் அவர் தொல்காப்பிய இலக்கணக் கோட்பாட்டில் அதாவது பொருளதிகாரக் கோட்பாட்டினை வைத்துக் கொண்டு படைக்கப்பட்டது, பத்துப்பாட்டின் மேற்கண்ட ஆறு நூல்களும் என்று வரிசையமைப்பர். திருமுருகாற்றுப் படைக்கு இலக்கணம் கூறப்படாமயைச் சுட்டிக்காட்டாமல் விட்டுவிடுவது முரணைத் தோற்றி வைத்துவிடுவதைப் பார்க்கிறோம்.

### 2.2.1.2. கலித்தொகை முன்வைக்கும் ஆரியப் பண்பாடு

எட்டுத்தொகையுள் ஒன்றான கற்றோர் ஏத்தும் கலித்தொகையின் காலத்தே உணர்த்த வருபவர்,

> கலித்தொகைப் பாடல்கள் மூன்றில் கொற்கை, மதுரை பற்றிய குறிப்புகளும் இயற்பெயர் சுட்டப்படாத பாண்டிய மன்னர் பற்றிய குறிப்பும் உள்ளன. (அக்காலத்தில் களப்பாளரும் பாண்டியரும் யார் வலியரென்று நிறுவத்தம்முள் பொருந்திருக்கலாம்) கி.பி.ஆறாம் நூற்றாண்டில் ஆரிய வழக்கங்கள் சமயம், மூடநம்பிக்கை முதலியவை தமிழருடையனவற்றோடு நெருங்கிக் கலந்து விட்டதையும், ஆரியப் பண்பாட்டின் கை ஓங்கியதையும் கலித்தொகைப் பாடல்கள் காட்டுகின்றன.
>
> (மேலது;235)

இயல் 28 இல் மேற்கண்ட கருத்தினை முன் வைத்துள்ளார். இங்கு இயல்பாய் ஒரு கேள்வி எழுகிறது. சிறுபாணாற்றுபடையில் மூவேந்தர் மறைந்து கடையெழு வள்ளல்களும் மறைந்து பின்பு நல்லியக்கோடன் தோன்றி கொடையாளியாக விளங்குகின்றான் என்று சொல்லியப்பின்பு இவ்விடத்தில் 6 ஆம் நூற்றாண்டு இறுதியில் பாண்டியர் களப்பிரரோடு மல்லுக்கட்டிய நிலையிலிருந்துள்ளனர் என்று சொல்லியிருப்பது முன்னுக்குப்பின் முரண்படுவதைக் காட்டுகிறது. இக்காலத்தில் பல்லவர்களின் வருகை பெருமளவில் நிகழ்ந்துவிட்டதைக் குறித்து யாதொன்றும் கூறவில்லை. ஆயினும், மூவேந்தர் தன் காலம் குன்றி காணப்பட்டதோர் சூழலை அவ்வாறு சுட்டியிருக்க வாய்பிருக்கிறதென்று ஏற்கவும் இடம் தருகிறது. இத்தகையதோர் சமய பண்பாட்டு ரீதியானதொரு நிலையில் நின்று சங்க இலக்கியங்களாக வரையறைப் படுத்தும் பத்துப்பாட்டினையும் எட்டுத் தொகையினையும் ஆராய்ந்திருப்பது புதியதொரு அணுகுமுறையாக இருந்துள்ளதென்பதையும் மறுக்கமுடியாது.

### 2.2.1.3. தொன்மை வாய்ந்த சில சங்க இலக்கியங்கள்

இயல் பன்னிரெண்டில் 'கிடைத்துள்ள தமிழ்ச் செய்யுள் நூல்களில் மிகப் பழையனது' என்று தலைப்பிட்டு எழுதும் பி.டி.சீனிவாசையங்கார் தமிழ் இலக்கிய உருவாக்கத்தை ஆரிய திராவிட பண்பாட்டின் இருவேறு புரிந்துணர்தலின் தன்மையில் தன் கருத்தைக் கூறியுள்ளார். அவரின் புரிதலின் அடிப்படையில் கண்டோமென்றால் பழம் பாடல்கள் அனைத்தும் இன்றைக்குக் கிடைக்கப் பெறவில்லை என்றே கூற வேண்டியிருக்கிறது. அதாவது, தொன்மை வாய்ந்த தனித்த மரபும் நாகரீக பண்பாடும் தமிழர்கள் பெற்றிருந்தனர் என்பதை முழுமையாக ஏற்பவர். தற்போது கிடைக்கப் பெற்றுள்ள பழைய இலக்கியங்கள் அனைத்தும் கி.பி.1 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே எழுதப்பட்டன என்ற கருத்தில் மிகவும் பிடிப்பாக இருந்துள்ளாறென்பது தெரிகின்றது. இன்றைக்குத் தமிழ் ஆய்வு உலகத்தால் தொன்மை வாய்ந்த சங்க இலக்கியங்களாக நிலைபெற்று வழக்கியுள்ள எட்டுத்தொகையையும் பத்துப்பாட்டினையும் குறித்து பி.டி. சீனிவாசையங்கார் கீழ்வருமாறு எழுதுகிறார்.

> தொடக்க காலத்தமிழ் இலக்கியம் எப்படி இருந்திருக்கும் அவை ஒரு சிலவரிகள் கொண்ட பாடல்கள் ஆக இருந்திருக்கும். (பிற்காலத்தவை ஆன எட்டுத்தொகை நூற்பாடல்கள் கூட 4 லிருந்து 20–30 வரிகள் தாமே கொண்டுள்ளன) சில நூறுவரிகள் கொண்ட பத்துப்பாட்டுப் பாடல்கள் கி.பி.5ம் நூற்றாண்டில் தான் தோன்றின.

(மேலது;156)

என்ற கருத்தினைக் கொண்டவர் சங்க இலக்கியங்கலாக அறியப்படும் பாடல்கள் தொகுக்கப்பட்ட காலம் பற்றி உரைக்கையில் வருகின்ற பொழுது கி.பி.5 ஆம் நூற்றாண்டில் இப்பணி நடந்ததாகக் கொள்கின்றார். அதாவது, புறநானூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியவற்றினைத் தொகுக்கும் பணி செய்தனர் என்று குறிப்பிடுபவர் இந்நான்கு நூல்களும் பிற்காலத்தில் தோன்றியதாக இவ்விடத்திலும் சுட்டிக் காட்டுகின்றார். இந்நான்கும் குறிப்பிட்டதோர் நோக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கம் பெற்றன என்பது அவருடைய எண்ணமாகயிருக்கின்றது. ஒவ்வொரு திணைக்கும் நூறு பாடல்களைக் கொண்டு ஐந்துப் புலவர்களால் எழுதப்பட்டது ஐங்குறுநூறு என்றும் கலிப்பாவால் திணைக்கு 30 பாடல் வீதம் 150 அகப்பாடல்கள் உருவாக்கும் நோக்கோடுப் படைக்கப்பட்டவை கலித்தொகை என்றும், வையை, திருமால், முருகன் பற்றி பாடி நிலைநாட்ட செய்த முயற்சி பரிபாடலென்றும், பத்து சேர மன்னர்களைப் பற்றி வரலாற்று ரீதியானதொரு தரவைப் போல் புகழ்ந்துபாடிய புறப்பாடல்களைக் கொண்டது பதிற்றுப்பத்து என்றும் கண்டுணர்ந்து இவைகள் தொல்காப்பிய பொருளதிகார இலக்கணக் கோட்பாட்டின் அடிப்படையில் உருவாக்கம் பெற்றவை என்பது அவரின் அடிப்படைவாதமாக இருப்பதைக் காணமுடிகிறது. பின்னர் தவறுதலாக முக்காலப் பாடலையும் பிற்காலப் பாடலையும் இணைத்து எட்டுத்தொகை என்று பெயரிட்டனர் என்பவர் அது எக்காலத்தில் நடந்ததென்பதைப் பற்றி யாதொரு தகவலும் சொல்லவில்லை. பத்துப்பாட்டின் காலத்தை வரையறைப் படுத்துகையில், கி,பி.4 ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் பொருநாராற்றப்படை பாடப்பட்டிருக்க வேண்டுமென்று சொல்லத் தொடங்கி திருமுருகாற்றுப்படை கி.பி.6 ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியதென்கிறார். கரிகாலனின் காலமும் கி.பி.4 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பதோடு, வடச்சொல் படிப்படியாக இவ்விலக்கியங்களில் அதிகரித்துள்ளதை நினைவுறுத்தி இருப்பதையும் காணமுடிகிறது. பத்துப்பாட்டு இலக்கியங்களைக் குறித்து இறுதியாகச் சொல்லி முடிக்க வருகையில் கி.பி.4 ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட தமிழர்களின் வாழ்வியலை அறிய, பெரும் ஆதாரமென்ற பொருண்மையோடு நிறுத்தியிருப்பது தெரிகிறது.

### 2.2.1.4. மேற்கணக்கும் கீழ்க்கணக்கும்

பதினெண்கீழ்க் கணக்கு என்று பகுத்தறியப்பட்டுள்ளவற்றுள் திருக்குறளின் காலம் குறித்தப் புரிதல் தமிழ் அறிஞர்கள் மத்தியிலும் இலக்கிய வரலாற்று வரையறையின் அடிப்படையிலும், நிலவி வரும் கணிப்பினை அறிவோம். அதாவது திருக்குறளின் காலம் கி.மு.31 என்றும்

கி.பி.1 ஆம் நூற்றாண்டிடு என்றும் இருவேறு கருத்துரு இருக்கையில் அதன் காலப்புரிதல் குறித்து பி.டி.சீனிவாசையங்கார் கூறியிருக்கும் கருத்தும் ஆராய வேண்டியதாக இருக்கிறது. அக்காலம் குறித்து ஆராயவேண்டியது ஒரு புறமென்றால் அந்நூலின் வடிவம் பற்றியும் அந்நூலின் அறம் பற்றியும் உரைத்திருக்கும் பார்வை இங்கு பதிவுச் செய்யப்பட வேண்டியதாக இருக்கிறது. திருக்குறள் காலம் பற்றி இவ்விடம் கவனிப்பதற்குக் காரணம், சங்க கால இலக்கியங்கலாகத் தமிழ் சான்றோர்கள் வரையறைப் படுத்தியிருக்கும் காலகட்டத்தில் இந்நூலின் காலத்தையும் தீர்மானித்திருப்பதை இவ்விடம் நினைவுறுத்திக் கொள்ளவேயாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் காலத்தை கி.பி.5 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.8 ஆம் நூற்றாண்டு வரையான முன்னூறு காலப்பரப்பில் எழுதப்பட்டவையாகச் சுட்டுபவர். இவர் அவற்றின் கால ஆய்விற்குச் செல்வதற்கு முன்பு திருக்குறளைப் பற்றி கீழ்வருமாறு கருத்துரைக்கின்றார்.

> இவற்றுள் தலையான திருக்குறள், அதுவரைத் தமிழிலக்கியத்தில் இல்லாததான அறநூல் வகை சார்ந்தவை. அவை எட்டுத்தொகை நூல்களில் முற்பட்ட நான்கு, பத்துப்பாட்டு ஆகியவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை, சமஸ்கிருத தர்ம, அர்த்த சாத்திரங்களைப் பின்பற்றி சரித்திர நடையில் எழுதப்பட்டவை. அறக்கருத்துக்கள் இருப்பினும் கவித்துவம் இல்லாதவை, கவிநயம் அற்றவையும் அறங்களைப் பற்றிக் கூறுவனவுமான வரட்டுச் செய்யுட்களைக் கொண்டவை.

(மேலது;152)

என்று எழுதியிருப்பது திருக்குறளின் மேல் ஈடுபாடற்ற ஒரு நிலையிலிருந்து எழுதியதைப் போல் படுகிறது. இப்படியொரு மனநிலை திருக்குறளைக் கற்றவருக்கு வருவது பெரும் அரிதாகுமென்பதைக் கூறத் தேவையில்லை. இவரின் ஆய்வில் ஒத்துப்பார்க்க வேண்டியதும் ஆராயவேண்டியதுமான கருத்தினை இயல் 12 இல் கூறுகின்றார். அதாவது இதன் காலத்தை கி.பி.5 ஆம் நூற்றாண்டு முதல் 8 ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் எழுதப்பட்டதாகக் கூறுபவர் இயல் 29 இல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்று தலைப்பிட்டு இவை கி.பி.6 ஆம் நூற்றாண்டு முதல் 8 ஆம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தில் இயற்றப்பட்டவை என்று கூறுகின்றார். இறுதியாக அவர் உணர்த்தவரும் கருத்து திருக்குறள் கி.பி. 5ஆம் நூற்றாண்டு நூலென்பதுவேயாகும். திருக்குறளோடு சேர்த்து வைத்தெண்ணப்படும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களின் காலம் பற்றி கூறுகையில்,

> இவை (பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்) கி.பி.6–8 நூற்றாண்டுகள் சார்ந்தவை. கி.பி.8ம் நூற்றாண்டு சார்ந்த முத்தரையரை நாலடியார் பாடல்கள் இரண்டு குறிப்பிடுகின்றன. களவழி நாற்பது, சோழன் செங்கணான் மீது பாடிய புறப்பாடல், ஐந்து நூல்கள் அகப் பொருள் சார்ந்தவை, களவழி நாற்பதும், இவ்வைந்து நூல்களும் பழைய புறம், அகப்பாடல் மரபின் தேய்ந்து போன கடைசிப் படைப்புகள். 12 நூல்கள் அடி நூல்களாகும். இவை அக்காலத்தில் இந்தியா முழுவதும் பிரபலமாக இருந்த சமஸ்கிருத நீதி நூல் பார்த்துப் பாடப்பட்டவை, இது தென் இந்தியாவில் ஆரியப் பண்பாடு நிலை பெற்று விட்டதைக் காட்டுகின்றன. இந்நூல்களில் பெரும்பாலானவை யாப்பில் உள்ளனவே யொழிய கவிநயம் அற்றவை. உயர்ந்த ஒழுக்கத்தைப் புகட்டும் இவ்வறக் கருத்துக்களை விஞ்சியவை வேறு எந்த நாட்டின் படைப்பிலும் இல்லை.

(மேலது;237)

என்று இறுதியாகப் புகழ்ந்திருந்தாலும் மேற்கண்ட பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காலகட்டமைப்புச் சிந்தனை திருக்குறளின் கால சிந்தனைக்கும் வழியமைத்துள்ளதால் இக்கருத்துகளைக் கவனிக்க வேண்டியுள்ளது. இதில் கி.பி.8 ஆம் நூற்றாண்டை சார்ந்த “முத்தரையன்” என்பவரை நாலடியாரின் இரண்டு பாடல்கள் கூறியுள்ளன என்ற கருத்து மேலும் ஆராயத் தூண்டுகிறது. இது ஒருபுறமிருக்க, திருவள்ளுவர் கால சூழல் குறித்தும் திருக்குறள் பற்றியும் கூறவந்தவர் அதனின் காலத்தைத் தீர்மானிப்பதோடு கீழ்வருமாறு எழுதுகிறார்.

> ஆரியக் கருத்துக்கள் பல; சமஸ்கிருதச் சொற்களும் பல; எனவே குறளின் காலம் கி.பி.6ம் நூற்றாண்டுக்கு முன்னது எனக் கூற இயலாது.

(மேலது;238)

இதன்மூலம் திருக்குறளின் காலம் குறித்தப் புரிதல் எவ்வாறு இருந்துள்ளது என்பதைக் காண்கின்றோம். இதனோடு அக்காலத்தின்படி சிலப் பாடல்களுக்கு விளக்கம் காட்ட முயலுபவர் கீழ்வருமாறு எழுதுகின்றார்.

> வள்ளுவர் மயிலாப்பூரில் பிறந்ததாகக் கதை உள்ளது. இருக்கலாம். காஞ்சிப் பகுதிக்குத் தெற்கிலுள்ள தமிழகத்தில் ஆரியப் பண்பாடு கால் கொண்டது வள்ளுவர் காலத்துக்குச் சற்றுமுன்னர் தான். ஆனால் வள்ளுவர் காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஆரியப் பண்பாடு நிலை பெற்று இருந்த காஞ்சிப் பகுதியில் அவர் பிறந்ததனால் தான் வள்ளுவர் குறள்

ஆரிய பண்பாட்டைப் பெருமளவுக்குப் பின்பற்றுவதாக அமைகிறது. கி.பி.ஆறாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் தமிழகத்தில் பரவலாக நுழைந்து, பழைய தமிழ்ப் பண்பாட்டின் மீது தாக்கம் விளைத்த ஆரிய சமயங்களான வைணவம், சைவ, புத்த, சமண சமயங்களிடையே அக்கால கட்டத்தில் போராட்டம் இல்லை.

(மேலது;238)

மேற்கண்டவற்றில் வள்ளுவர் காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஆரியப்பண்பாடு நிலை பெற்று இருந்த காஞ்சிப் பகுதியில் என்று கூறுவதிலிருந்து வடவர்களின் ஆதிக்கம் பெறுமளவு பரவியதென்பவர், கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்கும் ஆயிரமாண்டுகளுக்கு முன்னரே என்று குறிப்பிட்டிருப்பதையும் பார்க்கிறோம். கி.பி.6 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழகம் முழுவதும் பரவலாக நுழைந்தனர் என்ற மற்றொரு கருத்தையும் முன் வைக்கிறார். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நுழைந்தவர்களுக்கு கி.பி.6 ஆம் நூற்றாண்டுதான் பரவலாகத் தமிழகம் முழுவதும் தன்னைப் பரப்பிக் கொண்டனர் என்று கூறியிருப்பது எவ்வாறு பொருந்தும் என்ற கேள்வி எழுகிறது. இது ஒரு புறமென்றால் சங்க கால இலக்கியங்களாக ஏற்கப்பட்டுவரும் எட்டுத்தொகைப் பத்துப்பாட்டு நூல்களினை இரு கூறுகளாக்கி, அவற்றுள் முன்னது ஒரு பகுதி தொன்மை வாய்ந்ததென்றும் மற்றொன்று கி.பி.5ஆம் நூற்றாண்டிற்குப் பிறகும் ஆறின் இறுதியிலும் இயற்றபட்டதென்றும் கூறுகின்றவர், இவ்வாறு பிரித்தரிந்து காலத் தீர்மானம் செய்தமைக்கு, ஆரிய கலப்பு கருத்துக்கள் மேலாங்கிக் காணப்படுவதே ஆதாரம் என்கின்றார். திருக்குறள் தோன்றுவதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆரியர்கள் வந்து தம் பண்பாட்டு கலப்பினைச் செய்து ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்தவர்கள் கி.பி.1 ஆம் நூற்றாண்டு வரையிலும், அதாவது அவர்க் கணக்குப் படி, ஐந்து நூற்றாண்டுகள் வரையிலும் சும்மா இருந்திருப்பதோடு, கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்கு முன் பத்து நூற்றாண்டுகளாக முன் தமக்கான எந்தத் தாக்குப் போக்கிற்கும் உள்ளாகாமல் இருந்து வந்தனரென்றும் எனவே தான் எட்டுத்தொகையில் புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நான்கும் ஆரிய தாக்கமின்றி தனித்த மரபில் எழுதப்பட்டுள்ள தென்றும், மீதமுள்ள ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை ஆகிய நான்கு நூல்களும் பின்னர் எழுதப்பட்டதென்றும், அவற்றில் ஆரிய சாயல் படிப்படியாகப் படிந்துள்ளதைக் காணமுடிகிறதென்றும் கூறியுள்ளார். இக்கருத்திலிருக்கும் முரணைச் சுட்ட வேண்டுமென்றால். கி.பி.6 ஆம் நூற்றாண்டுக்கு முன் ஆயிரம் ஆண்டுகளாக இருந்தபோதிலும் கி.பி.1 ஆம்

நூற்றாண்டிற்குப் பிறகும் கி.பி.4, 5 நூற்றாண்டுகளிலும் எழுதப்பட்டதாக குறிப்பிடும் எட்டுத்தொகையில் நான்கு நூல்களும், பத்துப்பாட்டுள் பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகியவையும் எழுதப்பட்டன என்கின்றார். ஏனைய நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு. மலைபடுகடாம், சிறுபாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை ஆகிய ஆறும் கி.பி.6 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதென்றும் கூறியுள்ளதைக் காண்கிறோம். இவ்விடம் சுட்டிக்காட்டப்பட்டுள்ள கருத்துக்களை ஒப்பு நோக்கி எண்ணிப் பார்த்தாலே இவற்றுள்ளிருக்கும் பொருத்தமும் பொருத்தமின்மையும் உணரமுடியும்.

அதாவது மேற்கண்டவைகளிலிருந்து கி.பி.1ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே தமிழ் சங்க இலக்கியங்கள் எழுதப்பட்டன என்பதும், அவை கி.பி.6 ஆம் நூற்றாண்டில் முடிவெய்தின என்பதும், கி.பி.6 ஆம் நூற்றாண்டில் தொடங்கி கி.பி.8 ஆம் நூற்றாண்டு வரையுள்ள இரண்டு நூற்றாண்டுகளுக்குள் எழுந்தவையே பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்று முடியவெய்தியிருப்பதையும் பார்க்கிறோம்.

மூன்று சங்கங்களும் அவற்றின் காலமும் அவ்வவைக்குள்ளிருந்த புலவர்களும் கற்பனையே என்னும் கருத்துள்ளவர் கி.பி.1 ஆம் நூற்றாண்டை ஒட்டிச் சங்கங்கள் மூவேந்தருக்கும் தனித்தனியாக இருந்திருக்கும் என்றும் குறிப்பிடுகின்றார். இச்சங்கங்கள் அடியார்க்கு நல்லார் குறிப்பில் எழுநூற்றுக் காவதம் அதாவது ஆயிரம் மைல் தூரம் கடல் உள்வாங்கிக் கொண்டதென்ற கருத்தையும் ஏற்றுக் கொண்டுள்ளாரென்பதும் தெரிகின்றது. பி.டி. சீனிவாசையங்காரின் கூற்றிலிருந்து சங்கம் பற்றிய இறையனார் உரையின் கருத்து கற்பனையென்பதும், கி.பி. 1 ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு சிறிதுகாலம் சங்கங்கள் இருந்தன என்பதுமாகப் புரிந்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.2.1.5. சிலப்பதிகாரத்தின் காலமும் செங்குட்டுவனும்

இனி, சிலப்பதிகாரம் குறித்தும் செங்குட்டுவன் பற்றியும் கூறியுள்ள கருத்துக்களைக் காண்போம்.

> சில வகைகளில் இராமாயணம், இலியதம், ஈனியத், சுவர்க்க நீக்கம் ஆகிய காவியங்களை விட சிலப்பதிகாரம் சிறந்தது எனலாம்.
>
> (மேலது;240)

என்ற கருத்தினைக் கொண்டவர், சிலப்பதிகாரம் குறித்து முன் வைத்திருக்கும் கேள்விகள் அதுவரையிலும் இந்நூலைப் பயின்று ஆய்ந்து

வந்த அறிஞர்களிடமிருந்தும் இவருக்குப் பின் தொடர்ந்து பயின்று ஆய்ந்துவரும் அறிஞர்களிடமிருந்தும் இவரைத் தனித்து அடையாளப் படுத்துகின்றன. அக்கருத்தினைக் காண்போம்.

> தமிழில் முதல் காவியம் இதுவே. காவிய வடிவம் சமஸ்கிருத இலக்கியத்திலிருந்து கடன் பெற்றது. ஆனால் பாடுபொருள் முழுமையாகத் தமிழ் தமிழர் சார்ந்தது. புறநானூற்றுப் பாடல் 183 இல் பாடியவர் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் கோவலனைக் கொல்ல வந்த பாண்டியன் பெயர் சிலப்பதிகார நூலில் இல்லை. மதுரைக் காண்ட இறுதியில் உள்ள கட்டுரைத்தான் ''வட ஆரியர் படைகடந்தவன் அப்பாண்டியன் என்கிறது.
>
> கும்பகோணத்தருகே ஆரியப்படை என்று ஒரு பண்டைப் போர்களம் உள்ளது. புறம்–183 சுட்டும் பாண்டியன் பெயரில் வரும் 11 ஆரியப் படை அக்களத்தைக் குறிப்பதாகவும் இருக்கலாம். கட்டுரை எழுதியவர் அதைப் பிறழ உணர்ந்து வட ஆரியர் படை கடந்து எனக் குறித்திருக்கலாம்.
>
> இவ்விரு காண்டங்கள் (புகார், மதுரை) அளவிலேயே சிலப்பதிகாரக் கதை முழுமையடைந்து விடுகிறது.
>
> (மேலது;240)

என்று கூறி செல்பவர், கோவலனைக் கொல்வித்த பாண்டிய நெடுஞ்செழியன் பெயரே சிலம்பில் இல்லையென்றும் புறநானூற்றின் 183 ஆம் பாடலை இயற்றிய ஆரியப்படை கடந்த பாண்டிய நெடுஞ்செழியன் என்று முழுமையாக பெயர் குறிக்கப்படுவதை வைத்தும், மதுரைக் காண்ட இறுதியில் சுட்டப்படும் வட ஆரியப் படை கடந்தவன் என்பதனை வைத்தும் இவன் பாண்டிய நெடுஞ்செழியன் என்று பின்னர் வந்தவர்களால் அடையாளம் காணப்பட்டிருக்கும் என்றும் கூறுகின்றார்.

ஆயினும், சிலப்பதிகாரம் முதல் இருகாண்டங்களில் முடிந்து விட்டதென்றும் முழுமைப்பெற்று விட்டதென்றும் கூறியிருப்பது மூன்றாம் காண்டம் பற்றி அவர் சொல்லவரும் கருத்திற்கு அச்சாரமாக அமைகிறது. அதாவது சிலப்பதிகாரத்தின் மூன்றாம் காண்டமான வஞ்சி காண்டம் இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதில்லை என்பது அவரின் வாதமாகயிருக்கிறது. இக்கூற்றிற்கு இவர் முன் வைக்கும் காரணங்களைக் காண்போம்.

> கண்ணகிக்குப் படிவம் அமைக்க கல்கொண்டு வர சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்று வந்தான் என்ற ஒரே இணைப்பே இக்காண்டத்துக்கும் முந்திய இரண்டிற்கும் இடையே உள்ளது. இக்காண்டம் 'சிலப்பதிகாரம்' என்ற பெயரிலேயே அடங்காது,

> முதலிரண்டு காண்டங்களுடன் முழுமையெய்திய தனது சிறந்த காவியத்தை முடித்த பின்னர் காவியக் கதையின் நயத்தைச் சிதைக்கும் வகையில் (செங்குட்டுவன் புகழைக் கூறவென்றே) மூன்றாம் காண்டத்தை எழுதியிருப்பாரா என்பது ஆய்வுக்குரியது.
>
> (மேலது;241)

என்று கேள்வியெழுப்பியவர் இரண்டு காண்டங்களிலும் உள்ள செழுமையும் இனிமையும் சுருக்கமும் தேர்ந்த சொல் நயமும் மூன்றாம் காண்டத்தில் கிடைக்கப்பெற வில்லை என்றும் சுட்டிக் காட்டுகின்றார்.

செங்குட்டுவனைப் பற்றிச் சொல்ல முற்படுபவர்,

> பதிற்றுப்பத்துப் பரணர் பாடிய ஐந்தாம் பத்தின் தலைவன் கடல் பிறக் கோட்டிய வேல் கெழுகுட்டுவன் தான் மூன்றாம் காண்டத் தலைவன் செங்குட்டுவன் எனக் கொண்டு முன்னவன் சாதனைகளாகப் பதிற்றுப்பத்துப் பதிகம் கூறுவன எல்லாம் இக்காண்டத்தில் செங்குட்டுவன் மேல் ஏற்றப் படுகின்றன.
>
> (மேலது;241)

என்று கருத்துரைக்கத் தொடங்குபவர், பதிற்றுப் பத்தில் பரணரால் பாடப்பட்ட கடல் பிறக் கோட்டிய வேல் கெழுகுட்டுவன் வேறு வஞ்சிக் காண்டத்தில் புகழப்படும் செங்குட்டுவன் வேறு எனத் தெரிவிப்பதால், மேலும் நீலமலையிலிருந்து கங்கைக்குச் செல்லும் செங்குட்டுவனின் செயலும் அவ்வாறு படையெடுத்து சென்று நூற்றுவர் கன்னர் என்னும் சாதகனி என்பவர்களை வென்றது வரலாற்று ரீதியானப் பொருத்தமின்மையாகக் கருதுகிறார். சாதகணிகளின் ஆட்சி கங்கை வரை பரவியிருந்தது கி.பி.77 வரையாம். அதற்குப் பிறகு வரும் செங்குட்டுவன் அவர்களைப் படையெடுத்துச் சென்று வென்றது என்பது முரணாகப்படுகிறதாம். மேலும் கங்கை ஆற்றுக்குப் அப்பாலும் சில மன்னர்களைச் செங்குட்டுவன் வென்றான் என்பதும் கங்கைப் பகுதியில் ஆண்டமன்னரைப் போரில் வெல்லப் பெரும்படையுடன் தமிழகத்திலிருந்து சென்றது என்பது இந்திய புவியியல் அடிப்படையிலும் பொருந்தமின்மையாகக் கருதுபவர் இந்திய வரலாற்றை அறியாதவர்களே இத்தகைய கட்டுக் கதையைக் கட்ட முடியும் என்ற முடிவினை வலியுறுத்தியிருப்பதையும் காண முடிகிறது. இவ்விடம் கவனிக்க வேண்டிய மற்றொரு முக்கியமான கூற்று கண்ணகிப் பற்றியதாகும்.

> செங்குட்டுவன் தொடங்கி, மாளவ, உறையூர் இலங்கை வேந்தர்களும் பின்பற்றியதாகப் புகார்க் காண்டம் கூறும் பத்தினி வழிபாட்டு எச்சங்கள் எவையும் இந்தியாவில் எங்கும் இல்லை.

> இலங்கையில் மட்டும் புத்த சமயத்தோடு இணைந்து ஓரளவுக்கு இருக்கிறது. தென் இந்தியாவில் தொன்று தொட்டு இருந்து வரும் பத்தினி வழிபாடு என்பது (காளியின் அம்சமாகக் கொள்ளப்பட்டுவரும்) தமிழ் மக்களின் தாய்த் தெய்வ வழிபாட்டுடன் ஒட்ட வைக்கப்பட்ட (5 கணவர்களையுடையவள் ஆயினும்) அழியாத பத்தினி திரௌபதி வழிபாடேயாகும். திரௌபதி வழிபாட்டுக்குப் போட்டியாகக் கண்ணகி வழிபாட்டைப் புகுத்தும் முயற்சியாகப் புனையப்பட்டதே புகார்க் காண்டம் என்றும், அம்முயற்சி தோற்றது என்றும் கருத இடமுண்டு.

(மேலது;242)

இக்கூற்றில் பளிச்சென எழும் கேள்வி இலங்கையில் மட்டும் கண்ணகி வழிபாடு புத்தச் சமயத்தோடு இணைந்து காணப்படுகிற தென்று ஏற்றுக் கொள்ளும் பி.டி.சீனிவாசையங்கார், அது எவ்வாறு இலங்கைச் சென்றது என்பதனைப் பற்றி யாதொருக் கருத்தும் கூறாமல், சென்று விடுகின்றார். இக்கேள்விக்காண விடை ஆராயாமல் விட்டதால் செங்குட்டுவன் காலமும் இலங்கை மன்னன் கயவாகு கி.பி.2 ஆம் நூற்றாண்டில் கண்ணகிக்குக் கோட்டம் அமைக்கையில் வந்த காலமாக ஏற்றுவரும்அறிஞர்களின் முடிவு மேலும் தொடர்வதற்கு வாய்ப்பாகிவிடுகிறது.

### 2.2.1.6. மணிமேகலையின் காலம்

இவ்விடம் எண்ணிப்பார்க்க வேண்டிய மற்றொன்று மணிமேகலையின் காலம் குறித்து அவர் தந்திருக்கும் முடிவாகும். சிலப்பதிகாரத்தின் பதிகத்தில் மணிமேகலையை எழுதிய சீத்தலைச் சாத்தனாரை இணைத்துப் பேசியிருப்பது பி.டி.சீனிவாசையங்காருக்கு ஏற்கக் கூடிய கருத்தாக இல்லையாம். அதற்கு அவர் தரும் காரணம், சிலப்பதிகாரம் ஆரியத்தையும் சரிபாதிக்குக் கூறுகிறதென்றும், ஆனால் மணிமேகலை புத்த சமயம் வேறுன்றி வலுப்பெற்றப் காலத்திலே எழுதப்பட்டிருக்க வேண்டுமென்றும் கருதுகிறார். அக்கூற்றினைக் காண்போம்.

> ஆரியக் கருத்துக்கள், நடைமுறைகள், தமிழ்கருத்துகள், நடைமுறைகளோடு கலக்கத் தொடங்கியிருந்த போதிலும் தமிழ் சார்ந்தவைக்கும் ஆரியம் சார்ந்தவைக்கும் சம முக்கியத்துவம் இருந்து வந்த காலமாகிய கி.பி.6 ம் நூற்றாண்டில் எழுந்தது சிலப்பதிகாரம். மணிமேகலை அப்படியல்ல பழந்தமிழ்ச் சமயங்களை விட புத்த சமயம் வலுப்பெற்றுவிட்ட காலத்தில் எழுதியது. அது ஆரியப் பண்பாட்டுத் தாக்கத்தினால் மணிமேகலைகாவிய மாந்தர் பெயர்கள் எல்லாமே சமஸ்கிருதம் ஆகிவிட்டன. அந்நூலின்

அளவைப் மெய்யியல் கருத்துகளை கி.பி.7ம் நூற்றாண்டுக்கு முன்னர் எழுதியிருக்க இயலாது.

(மேலது;243)

என்று பிரித்துக் காட்டுவதோடு சமணக் காவியமான சீவக சிந்தாமணிக்கு எதிராக எழுதப்பட்டதே மணிமேகலை என்பதோடு சிலப்பதிகாரம் கூறும் கொற்றவை, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை போன்ற வழிபாடுகளெல்லாம் தமிழ் தெய்வத்தோடு ஆரிய தெய்வ வழிபாட்டினைக்கலந்த முயற்சியாகத் தெரியவருகிறதென்றும் சுட்டிக்காட்டி, எட்டுத்தொகையின் அகநானூற்றுக்குப் பின்னர் எழுந்தது சிலப்பதிகாரம் என்றுரைத்து இதற்குச் சாட்சியாக அகநானூற்றில் வேங்கடம் திரையருக்கும் கள்வருக்கும் உரிய தென்று கூறுகிறதேயொழியே சிலப்பதிகாரம் கூறும் திருவரங்கத்திலும் வேங்கடத்திலும் திருமால் வழிபாடு ஏற்பட்டு அது வழிப்பாட்டு தலமாக நிறுவப்பட்ட காலத்துக்குப் பின்னர் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்கிறார். மேலும் பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தைப் பாடிய பரணரும் குறிக்கும் கடல் பிறக் கோட்டிய வேல்கெழுகுட்டுவனே செங்குட்டுவனாயின், வேங்கடமலை திருமாலைக் குறிப்பிடாமல் விட்டிருக்க மாட்டார். எனவே, பரணருக்கும் பிற்பட்டவரே இளங்கோவடிகள் என்பதும், இளங்கோவடிகளுக்கும் இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு தோன்றியவரே சீத்தலை சாத்தனாரென்பதும் பி.டி.சீனிவாசையங்காரின் முடிவாக இருக்கிறது.

## 2.3. தொன்ம அடிப்படையிலான ஆய்வு நோக்கில் வரலாற்று அடிப்படையிலான சங்க இலக்கிய வரையறை மற்றும் கால ஆய்வுகளுக்கு மறுப்பு

தொன்மத்தில் கற்பனைகள் மிகுதியாகக் கலந்திருந்தாலும் அத்தகையதோர் சிந்தனையின் அடிவேரில் உண்மையில்லாமல் போகாது என்னும் கருத்தின் அடிப்படையில் தமது ஆய்வினை அமைத்துக் கொள்ளும் ஆய்வாளர்கள் அத்தகைய கற்பனை என்பது தமிழில் கண்டுணரமுடியாத காலத்தொன்மையின் வெளிப்பாடுதான் என்னும் பொருண்மையிலும் முன்னெடுத்துள்ளனர். மேலும் தொன்மத்தை மறுப்பவர்களுக்கு நேர் நின்று தத்தமது ஆய்வினை முன்வைத்து வரலாற்று ரீதியான ஆய்விற்கு எதிர்குரல் கொடுத்துள்ளனர், இவர்களின் ஆய்விற்கான ஆதாரங்களையும் அவைகளின் வெளிப்படல்களையும் இவ்விடம் கவனத்தில் கொள்வோம்.

## 2.3.1. து.அ. கோபிநாதராவின் தமிழிலக்க ஆய்வும் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையின் மறுப்பும் அதற்கு எதிர்ப்பும்

பங்குனி மாத இதழில் (தொகுதி 3 பகுதி–5) 'தமிழிலக்க வரலாறு' என்னும் தலைப்பிட்டு, ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் கீழ்வருமாறு தமதுரையைத் துவக்குகிறார்.

> ஐப்பசி மாசத்துச் செந்தமிழ்ப் பத்திரிகையிலே ஸ்ரீமத் து.அ. கோபிநாதராவ் அவர்கள் 'தமிழிலக்க வரலாறு' என பொருவிஷயம் வெளியிட்டார்கள். அதிலே கோப கிருது மாசிமாசத்துச் செந்தமிழ்ப் பத்திரிக்கையில் தமிழிலக்கத்தைக் குறித்தெழுதப்பட்ட விஷயம் முழுதும் ஆதாரமில்லாக் கூற்றென்றும் சாசன வாராய்ச்சியாற் றமக்குள்ள துணிவைக் கொண்டு தமிழிலக்கங்களின் சரித்திரத்தைச் சுருங்கக் கூறுதும் என்றும் ராயரவர்கள் நுதலிப்புகுந்தார்கள்.

(ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, 1905;149)

என்று எழுதத் தொடங்குபவர் பின்னர் அவர் பங்குனி மாதத்தில் தந்திருந்த "தமிழிலக்க வரலாறு" பட்டியல் உணர்த்த வரும் செய்தியினைக் காட்டி,

> "இவ்வளவோடமையாது" இந்தியாவில் வழங்கும் எல்லா அக்ஷரங்களும் அசோக ராஜாவின் காலத்து வழங்கிய அக்ஷரங்களின் திரிபு எனவும் வரைந்து விட்டார்கள்.

(மேலது;149)

என்று தொடங்குபவர், கீழ்வருமாறு தமது வாதத்தை அடுக்கடுக்கான வினாக்களாகவும் விடைகளாகவும் எழுதியுள்ளார்.

> சீலாசாசனமின்றிக் கூறப்படுவதெல்லாம் ஆதாரமில்லாக் கூற்றென்பது ராயவர்கள் மதமாயின் யாம் மேற்கூறக்கிடப்பது யாதுமில்லை. அசோகன் காலத்து இலக்கங்களும் அக்ஷரங்களும் அவனுக்கு முன்னரில்லாது அவன் காலத்திலேயே ஆக்கிக் கொள்ளப்பட்டன வென்பதற்குச் சிலாசாசனமுளதோ? அசோகன் காலத்துக்கு முன்னர் வழங்கிய இலக்கங்களும் அக்ஷரங்களுமே அவன் காலத்தில் வழங்கப்பட்டனவாகாவோ? அவன் காலத்தில் தமிழிலக்கங்களும் அக்ஷரங்களும் இல்லாதன வென்பதற்கு ராயவர்கள் காட்டுஞ் சிலாசாசனம் யாது? ராயரவர்கள் மதப்படி முதன் முதல் அசோகனே சிலாசாசனம் செய்வித்தானாக, அவன் தனக்கு முன்னரில்லாத இலக்கங்களையும் அக்ஷரங்களையும் தானே சிருஷ்டித்தான் என்பது எதனாற்றுணியப்பட்டது. அசோகன் கலிங்க தேசத்தை வெற்றி கொண்ட காலத்தில் அங்குச் சென்று வழங்கிய தமிழிலக்கங்களைச் கவர்ந்தானென்னல் சாலதோ?

> இது காறுங் கண்ட இந்திய சிலாசானங்களுள்ளே பழையது அசோகன் சிலாசாசன மென்பது ராயவர்கள் கூற்று. அசோகன் இற்றைக்கு இரண்டாயிரத்து நூற்றிருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னே விளங்கிய அரசன் என்பது யாவருமறிவர். இற்றைக்கு இரண்டாயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முற்பட்ட அஃதாவது அசோகனுக்கு இருநூறு வருஷங்களுக்கு முற்பட்ட சிலாசாசன மொன்று நேபாளத்தருகே அகப்பட்டதும் அதன் 'போட்டோகிராப்' படத்தைக் கொண்டியற்றிய பிரதிலிமி யொன்று (Encypedia Britanica) புதிய பதிப்பில் வெளியிடப் பட்டிருப்பதும் ராயரவர்கள் அறிந்திலர் போலும். இதனால் ராயரவர்கள் அசோகன் காலத்துச் சிலாசாசனமே பழையதென மேற்கொண்டது பொருந்தாமை காண்க.

(மேலது;151)

என்று தமது வாதத்தை அமைத்துள்ளதைக் காணும் பொழுது அசோகன் காலத்து எழுத்துருவிலிருந்து இந்தியா முழுவதும், குறிப்பாகத் தமிழகத்தில் நிலவியதென்ற கருத்து பொய்யுரையென்று தெரிவிக்க வருகிறார். மேலும் து.அ.கோபிநாதராவ் வரிசைப்படுத்திய அசோகர் காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், என்னும் தமிழக வரலாற்று உண்மைக்கு முற்றிலும் மாறுபட்டதென்று கூறி, சான்றாக அசோகன் காலத்திற்கு முன்னர் சேர, சோழ, பாண்டியர்கள் ஆண்டதை ஏன் குறிப்பிடவில்லையென்ற கேள்வியையும் எழுப்புகின்றார்.

து.அ. கோபிநாதராவ் முச்சங்கம் குறித்து எந்தக் கருத்துரையும் செய்யாமல் இப்படியொரு அணுகுமுறையில் எழுதியிருப்பதையும் எண்ணிப் பார்க்கத் தூண்டுகிறது. ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை கூறுவது பின்வருமாறு அமைந்துள்ளது.

> தமிழ் நூல்களுள்ளே தொல்காப்பியம் முதற்சங்கத் திறுதிக் காலத்தன்றோ இடைச்சங்கத்திற்கும் கடைச்சங்கத்திற்கும் நூலாயிருந்ததும் அதுவே யன்றோ, எப்படிக் குறைக்கினும் தொல்காப்பியர் தோன்றிய காலம் ஐயாயிரம் வருஷங்களுக்கு முற்படுமேயன்றி உட்படாது. அதிலே தமிழ் எழுத்திற்கு வரி வடிவு கூறப்பட்டுக் கிடத்தல் யாவருமறிவர். அது ராயவரர்கள் மேற்கொள்ளும் சிலாலிகிதத்தினுஞ் சிறந்தவச்சிர லிகிதமன்றோ. அங்ஙனமாகவும் தமிழெழுத்துக்கள் இற்றைக்கிரண்டாயிரத்து நூற்றிருபத்தைந்து வருஷங்களுக்கு முற்பட்ட அசோகன் காலத்து அக்ஷரங்களின் திரிபு என்பது ராயரவர்களுக்குச் சாத்தியமாவது

எங்ஙனம்? எவ்விஷயத்தையும் சிலாலிகிதங் கொண்டே சாதித்தல் வேண்டு மென்பது ராயரவர்கள் அபிமதமாயின் தொல்காப்பியஞ் செலாலிகிதமாக.

(மேலது;152)

எனப் பதிலளித்துக்கேள்வியெழுப்பியிருப்பதைப் பார்க்கிறோம். து.அ.கோபிநாதராவ் இறையனார் களவியல் கூறுவது முழுவதும் கட்டுக்கதை என்று எண்ணி விட்டாரென்றாலும் அது குறித்த எந்தவொரு வார்த்தையும் சொல்லாமல் திடும்மென ஒரு புதிய திசையிலிருந்து தமிழ் மொழியின் தொன்மைக் குறித்துக் கூறியிருப்பது அதுவரையிலும் நிகழ்ந்த ஆய்வுகளிலும், தமிழ் மொழியின், அதன் இலக்கியங்களின் தொன்மைக் குறித்து நிலவிவந்த மரபார்ந்த நம்பிக்கையின் மீதும் அவர் கொண்டிருந்த எண்ணம் புலப்படுகிறது.

தொல்காப்பியம் தலைச்சங்கக் காலத்தின் இறுதியில் தோன்றி இடைச்சங்க காலத்திலும் கடைச்சங்க காலத்திலும் அறிஞர்களால் போற்றப்பட்டு வந்தததென்னும் வாதத்தை முன் வைத்து, எப்படிக் குறைக்கினும், ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் குறைவுபடாத தொன்மையை உடையநூல் தொல்காப்பியமென்றும் அதிலேயே எழுத்தின் வரிவடிவங்கள் குறித்தச் சிந்தனையை முன்வைத்திருக்கும் நிலையை காண்பதால் 2125 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அசோகன் காலத்திற்குப் பின்னர் தமிழின் வடிவம் தோன்றியதென்பது சற்றும் பொருந்தாதக் கருத்தென்னும் பொருளில் உரைத்து, தொல்காப்பியத்தில் பிறமொழிச் சொற்கள் இல்லையென்றும், அதனுள் எண்கள் குறித்த இலக்கணங்கள் கூறப்பட்டதென்றும் எடுத்துக்காட்டி தமிழக்கே சிறப்பாகவுள்ள ஒன்பது, தொண்ணூறு, தொள்ளாயிரம் என்ற சொல்லாடல் முறையைத் தொன்மையான ரோமன் எண்களுடன் ஒப்பிட்டுக் காட்டி ரோமனினும் நுட்பம் நிறைந்த மொழியாக விளங்கும் ஆற்றலைச் சுட்டிக் காட்டுகின்றார். இறுதியாக அவர் முன் வைத்திருக்கும் விளக்கமும் கேள்வியும் கீழ்வருமாறு அமைந்துள்ளது.

தமிழிலே ஒன்று முதலிய எண்களுக்கு மாத்திரமன்று கால், அரை. முக்கால், அரைக்கால், காணி, அரைக்காணி, மாகாணி, மா, இருமா, முந்திரி முதலிய கீழ்வாய் எண்களுக்கு மிலக்கமுளவன்றோ அக்கீழ்வாயெண்ணுப் பெயர்களுந் தமிழ்ச் சொற்களேயன்றோ. அவைகளை வடமொழியிற்றானும் இத்தனையிலொரு அமிசமென்று வழங்குவதன்றி தனித்தனிச் சொல்லாற் குறித்து வழங்குபாறில்லை. தமிழிலக்கங்கள் அசோகன் காலத்து எண்களின்றிரிபெனக் கூறும்

> ராயரவர்கள் தமிழ்க் கீழ்வாயிலலக்கங்களுக்கும் அசோக இலக்கணங்களையே மூலஸதான மாக்குவார்கள் போலும். தமிழ்க் கீழ்வாயிலாக்கங்களுக்கிணையான இலக்கங்கள் இந்திய பாசைகளுள் மற்றெப்பாசையிலும் இதர தேச பாசைகளிலும் இல்லையன்றோ
>
> (மேலது;153)

இவ்வாதத்தை முன்வைத்து தமது கருத்தினை வலுவாக நிறுவமுயலுபவர், ஔவையாரின் “எட்டேகால் லஷணமே யேழைந்து மைப்பயீரயே” என்னும் வரிகளையும், திருமூலரின் “எட்டுமிரண்டு மின்தறிகின்றிலர்” என்னும் வரிகளும் திருவாசகத்தின் எட்டினோ டிரண்டும் மறியேனையே? என்னும் வரிகளையும் எடுத்துக்காட்டி இவைகள் தொன்று தொட்டு இலக்கியங்களிலும் கையாளப்பட்டுவருதலால் இவைத்தமிழுக்கே உரிய தனித்தன்மை வாய்ந்தவை என்பதை உணர்த்தி, தொல்காப்பிய இலக்கணத் தொன்மையால் இலக்கிய மரபின் தொன்மையை உணரச்செய்து, இறுதியாக நாம் முன்னர் எழுப்பிய அதே கேள்வியை ஆ.முத்துத்தம்பிப் பிள்ளையும் எழுப்பியிருக்கிறார். அதாவது அசோக எண்ணுருக்களில் ஒன்றுக்கும் ஆறுக்கும் மட்டும் காட்டியிருக்கிறதே மற்ற எண்களுக்கெல்லாம் ஏன் எண்ணுறு சொல்லவில்லை என்ற வினாவினையே எழுப்புகின்றார்.

இவ்வினாவிற்குப் பதிலளிப்பது போல் து.அ. கோபிநாத ராவுக்கு பதிலாகக் கோ. வெங்கோபராவ் பின்வருமாறு எழுதியிருப்பதையும் காணமுடிகிறது. வைகாசி மாத இதழில் ‘தமிழிலக்க வரலாற்றுச் சர்ச்சை’ என்னும் தலைப்பில் கோ. வேங்கோபராவ், ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையர்கள், மாசி மாத இதழில் எழுதிய கட்டுரைக்கு து.அ. கோபிநாத ராவ் எழுதிய மறுப்புரையும் அதற்கு மீண்டும் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை எழுதிய மறுப்புரையும் நினைவுறுத்தி கீழ்வருமாறு தமதுக் கட்டுரையைத் தொடங்குகின்றார்.

> இராயரவர்கள் விஷயம் வெளிவருமுன் பிள்ளையவர்கள் கொள்கையே பெரும்பாலும் நட்பத்தக்கதாய் இருந்திருக்கும், ஆனால் இப்போதிரண்டையும் உற்றுநோக்கின் பிள்ளையவர்கள் கொள்கைக்கு அவரது யுக்திபுத்தி மட்டுமே ஆதாரமாக நிற்கிறது. இராயரவர்களதோ மறுத்தற் கொண்ணாததும் சரித்திர உண்மைக்கு இன்றியமையாததுமான சாஸ்திரத்துணிவு என்பது விளங்கும். இதனை சிறிது ஆராய்வோம்.
>
> (கோ. வெங்கோபராவ், 1905;240)

என்று முடிவை முதலிலேயே காட்டிவிட்டு இதுவரையிலும் கிடைத்திருக்கும் சிலாசாசனங்களிலேயே தொன்மை வாய்ந்தது அசோகன் காலத்து சிலாசாசனங்களே என்பதை இவரும் குறிப்பிட்டு, கோபிநாதராவ் குறிப்பிட்ட வரிசை முறை மிகச் சரியானதென்று எந்தச் சான்றும் காட்டாமல் வாதிக்கத் தொடங்குகின்றவர், கீழ்வருமாறு ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையிடம் கேள்வியை முன் வைக்கின்றார்.

> (Encyclopedia Britannica)வில் அசோகன் காலத்திற்கு முந்தியதோர் சாஸநம் கிடைத்தது என்று பிள்ளையவர்கள் சொல்லுகிறார்கள். இன்னதொகுதியின் இன்ன பக்கத்தியிருக்கின்றது என்று அவர் கூறவில்லை. இவ்வாறாயின் அப்பெருந்தொகுதிப் புத்தகக்கடலுள் எங்கேயென்று தேடுவது. இது சாத்திய மன்றுறென்று தெரிந்திருந்தும் பக்கம் முதலியன கூறாது விடுத்ததினால் சரித்திர உண்மையாராய்ச்சியின் கௌரவத்தைப் பிள்ளையவர்கள் சிறிதேனும் கருதினாரல்லரென்று ஐயுறுகின்றோம். அசோகன் கலிங்கம் வெற்றி கொண்ட காலத்து அங்கு வழங்கிய தமிழிலக்கங்கள் கொண்டானெனிலோ என்பதற்கு இவர் என்னவாதரங்கொண்டு சங்கிப்பது? ஆதாரமுண்டென்று காட்டினால் எமக்குஞ் சம்மதந்தான். இதுவே யன்றி கலிங்கத்திலக் காலத்தில் வழங்கி வந்த பாஷையும் தமிழ் தான் என்று எவ்வாறு நிர்ணயிக்கிறார்? கொடுந்தமிழ் நாடாகிய மைசூரில் (In Siddhapur of the Chitaldrug Taluk) அசோக மகாராஜாவின் சாஸநம் அவன் காலத்து அக்ஷரத்தில் காணப்படுவதேன்? இவனும் பிற்காலத்திய அரசர் செய்தவண்ணம், அவ்வத்தேசத்து அக்காலத்து வழங்கிய பாஷைக்குரிய எழுத்திலன்றோ எழுதுவித்திருக்க வேண்டும். பழைமைக்குப் பெயர் போன பாண்டியநாட்டின் நடுவில் (மதுரை ஜில்லா மேலூருக்கு 5 மைல் தூரத்திலுள்ள கீழ்வளவு என்னும் கிராமத்துக் கடுத்த ஒரு பாறையில் வரையப்பட்டிருக்கிறது) அசோகன் காலத்திய அக்ஷரத்தில் ஒரு சாஸநமிருப்பதற்கு என்ன சொல்லப்போகிறார் பிள்ளையவர்கள்? தென்னாட்டின்கண் அசோகன் சாஸநம் கண்டது போல வடநாட்டில் ஏதேனும் தமிழ்ச் சாஸநம் இது காறும் கண்டதுண்டா?
>
> (மேலது;241)

என்று கேள்வியெழுப்பி கோபிநாத ராவ் அவர்கள் அசோகன் காலத்திற்கு முன் எழுத்துருகள் இல்லையென்று கூறவில்லை, கிடைக்கப்பெற்றவைகளில் அசோகன் காலத்து சான்றே தொன்மையுடையதாகயிருக்கிறதென்று புரிந்து கோ.வெங்கோபராவ் து.அ. கோபிநாதராவுக்குச் சார்பாக எழுதியிருப்பதைப்

பார்க்கிறோம். அசோகர் கால எண்ணெழுத்தில் ஒன்றும் ஆறும் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளதே மீதமுள்ள எண்கள் ஏன் குறிக்கப்படவில்லை என்ற கேள்விக்குக் கீழ்வருமாறு பதிலுரைக்கிறார்.

> இராயரவர்கள் காட்டிய படத்தில் அசோக எண்கள் இரண்டினைத்தவிர மற்றவை இன்மைக்குக் காரணம் அவை கிடைத்திலவென்பதே

(மேலது;242)

மேலும் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளைக்குப் பதில் கூற முயலுபவர் தொல்காப்பியத் காலம் கி.மு. 5000 என்ற வாதம் எந்த ஆதாரமுமின்றி முன் வைக்கப்பட்டதாகக் கூறி அத்தொல்காப்பிய காலம் என்னவாக இருக்கலாமென்றோ அல்லது அத்தொன்மை கால பழமை உடையதாக இருக்க வாய்ப்பில்லை யென்றோ ஒரு சிறு துளியும் கூறாமல் அடுத்தப் பதிலுரையைக் கீழ்வருமாறு தந்திருக்கின்றார்.

> அரை, கால், அரைக்கால் என்பன வடமொழி வழக்கைத் தென்மொழியிலும் வழங்கியிருக்கிறதேயொழிய இம்மொழிக்கே யுரியன வல்ல. தமிழுக்கேயுரித்தானவை ஒன்றொழிபத்து (ஒன்பது) என்பன போன்றவை யென்றார் பிள்ளையவர்கள் ஏகோனவிம்சதி, பாதோனைகாதசம் முதலியவடமொழி வழக்கைப் பிள்யைவர்கள் ஓரார் போலும்

(மேலது;242)

இவர் தந்திருக்கும் பதிலுரையிலிருந்து நமக்குத் தெரியவருவது வடமொழியினை உயர்வு படுத்தி தமிழ் மொழிக்குத் தனித்துவம் மிக்க மரபோ, தொன்மையோ இல்லை என்ற கருத்தினை நிறுவுவதிலேயே குறியாக இருந்துள்ளாரென்பதேயாகும். இல்லாமல் போனால் அசோகன் காலத்திலிருந்து எண்ணுருவம் வந்ததென்ற கருத்தோடு வடமொழியான சமஸ்கிருதத்தை உயர்த்தி இருப்பாரா? இக்காலப் பின்னணியில் பல்கலைக் கழகத்தில் தமிழ் மொழி உள்ளூர் மொழியென்று ஒதுக்கப்பட்டதும், வடமொழியான சமஸ்கிருதம் உயர்ந்த மொழியாகப் போற்றப்பட்டதும் எத்துறைநோக்கினும் அத்துறையில் பார்ப்பனர் ஆதிக்கம் பரவலாக இருந்ததும் அவ்வாதிக்கத்தை எதிர்த்துப் பார்ப்பனர் அல்லாதார் செயல்படத் தொடங்கியதுமான செயல்பாடுகளைத் தமிழ்ச்சமூக வரலாற்று நிகழ்வுகளாகக் காண்கிறோம். இத்தகைய சூழலை எதிரொளிப்பதாகவே இத்தகைய ஆய்வும் அமைந்துள்ளதென்பதைப் பார்க்கிறோம்.

### 2.3.1.1. கோ.வெங்கோபராவிற்கு ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையின் பதிலுரை

ஆ. முத்துதம்பிப் பிள்ளை தம் மாசிமாத இதழில் முதன்முறையாகத் தமிழே அனேக பாஷைகளுக்கு இலக்கம் கொடுத்தது என்று எழுதியதற்கு, து.அ.கோபிநாதராவ் மறுப்புத் தெரிவிக்கும் முறையில் அசோகன் எழுத்து முறையிலிருந்தே தமிழுக்கு எழுத்து முறை வந்ததென்று கூறியதும் அதற்கு ஆ.முத்துதம்பி பிள்ளை மறுத்தெழுதியதும் இம்மறுப்பிற்கு வேங்கோபராயர் என்பவர் து.ஆ.கோபிநாதராவுக்குச் சார்பாக எழுதியதோ அசோகன் காலத்திற்கு முற்பட்ட சிலாசாசனம் உண்டென்றால் அது எங்ஙனம் காணப்படுகிறது? காட்டும் பார்க்கலாம். என்று கேள்வியெழுப்பி முடித்திருந்ததும் முன்பே எடுத்து ஆராயப்பட்டன. அக்கேள்விற்கான பதிலை இவ்விதழின், அதாவது ஆணிமாத (ஆகஸ்டு) 372 ஆம் பக்கத்தில் தந்துள்ளார். அவ்வுரைக் கீழ்வருமாறு அமைத்துள்ளது.

> அசோகன் காலத்துக்கு முந்தியும் சிலாசாசன முண்டென்றும் அதற்குப் பிரமாணம் என்சைக்லோ பீடியா பிரிட்டானிகா (Encyclopedia Britanica) என்னும் ஆங்கில சப்த சாகரம் என்றும் யான் கூறியது போதாதென காரணியகர் கூறித் தொகுதியும் பக்கமும் வினாவுகின்றார்கள். மேற்கூறிய நூல் அகராதியாதலின் தொகுதியும் பக்கமும் கூறுவதநாவசியகம். அதிலே ரயிட்டிங் (Writting) என்னுஞ் சொல்லை நோக்கி அது சம்மந்தமாக வரும் விஷயத்திலே போட்டகிராப் படத்தோடு காட்டப்பபட்டிருக்கும் அசோகன் காலத்துக்கு நூற்றைம்பது வருஷங்களுக்கு முந்திய சிலாசாசனத்தின் வரலாற்றைக் கண்டு தெளியுமாறு ஸ்ரீமான் வெங்கோபராயவரர்களை வேண்டுகின்றேன்.

(மேலது;373)

எனப் பதிலுரைத்திருக்கின்றார். இதன்மூலம் தமிழின் தொன்மைக் குறித்த தம்முடைய ஆதாரப் பூர்வமான ஆய்வை வெளிப்படுத்தியிருப்பது தெரியவருகிறது.

### 2.3.1.2. மு. இராகவையங்காரின் ஆய்வில் பாரதப்போரின் காலமும் புறநானூறும்

மு. இராகவையங்காரின் இக்கட்டுரையிலிருந்து தெரிய வருவது சங்க காலம் என்பது கி.மு.1200இல் தொடங்கி கி.பி.200 வரையிலும் நடந்தது என்பதும் இக்காலவரையறைக்கு உட்பட்ட நூல்கலனைத்தும் சங்க இலக்கிய நூல்களாகக் கொள்ளும் உண்மையுமாகும். எனவேதான் தலைச்சங்க காலத்தில் வாழ்ந்தவராக இறையனார் களவியலுரைக்

குறிப்பிடும் முரஞ்சியூர் முடிநாகராயரை அடுத்ததாகக் குறிப்பிட்டுக் காட்டி புறநானூற்றின் அம்முதல் பாடலை, அதாவது பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் மேற்பாடப்பட்டப் பாடலைச் சுட்டி இப்புலவன் தலைச் சங்கத்துப் புலவன் என்ற காரணத்தினாலேயே, பின்னாளில் வெவ்வேறு புலவர்களால் வெவ்வேறு இடங்களில் எழுந்த சங்கப் பாடல்களைத் தொகுத்தவர்கள் இப்பாடலை முதலில் வைத்து புறநானூற்றை அமைத்தனர் என்று முடிவுகட்டுகின்றார்.

இச்சேரலாதன் பாரதப் போரில் உணவளித்தச் செய்தியை அகநானூற்றில் (பாடல்–233) மாமூலனார் பாடலிலும் காணக்கிடைப்பதால் இது ஒரு வரலாற்று நிகழ்வாகவே உறுதிபடுத்திக் கொள்கின்றார். இதனை அடுத்து கி.பி.2 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாக ஏற்கப்படும் சிலப்பதிகாரத்திலும் (சிலம்ப 29–ஊசல்) இச்சேரலாதனைக் குறித்து இளங்கோவடிகளும் பாடுவதால் மு.இராகவையங்காருக்கும், இவரைப் போன்ற ஒத்தக் கருத்துள்ள ஆய்வாளர்களுக்கும் சேரலாதன் பாரதப் போரில் உணவளித்தவனே என்ற கருத்தில் உறுதியோடிருந்ததைக் காணமுடிகிறது.

மேலும் நச்சினார்க்கினியர், இறையனார் களவியலுரையில் தலைச்சங்கத்துப் புலவர்களின் வரிசையில் கூறப்படாத கோதமனார் என்னும் புலவரையும் தம் உறையில் சுட்டியிருப்பதை எடுத்துத் தந்து இக்கோதமனாரும் தலைச்சங்கப்புலவர் என்பதற்கு இவர் புறநானூற்றில் பாடிய 385 அது பாடலைச் சுட்டிக்காட்டி இப்பாடலுள் பாடுபொருளாய் வரும் தருமபுத்திரன் பாண்டவர்களின் முன் தோன்றல் என்ற கருத்தினைத் துணையாகக் கொண்டு நச்சினார்க்கினியரின் கருத்திற்கு வலுவூட்டுபவரின் இக்கோதமனாரும் சங்க காலத்தில் வாழ்ந்தவரென்று கருத இடமிருப்பதாகக் கூறுகின்றார்.

இக்கட்டுரையை முடிப்பதற்கும் முன்பாகப் பானிணி காலத்தை நினைவுறுத்தியும் பாரதக் காலத்தைக் குறிப்பிட்டும் முற்றுவிக்கின்றார். அதாவது,

> பாரத யுத்த காலம், கலியுக வரம்பத்தை யொட்டி, இன்றைக்கு 5000 ஆண்டுகட்கு முன்பு என்பது நூல்களில் வழங்கும் வழக்காகும். இதனை நம் நாட்டினும் பிறநாட்டினுமுள்ள சரித்திராசிரியர் பலர் நவீன ஆராய்ச்சி முறையிற் சோதித்துருவதில், அம்மகாயுத்தம் நடந்தேறியது இன்றைக்கு 3000 ஆண்டுகட்கு முன் (அஃதாவது கி.மு.12–ம் நூற்றாண்டினிடையில்) என்று முடிவு கூறுகின்றனர். அச்சரித்திராசிரியர் பாணினியின் காலத்தை கி.மு.9,10 ஆம் நூற்றாண்டென்று அறுதியிட்டுள்ளதை முன்னரே குறிப்பிட்டேன்.

> இத்தகைய முடிவுகளிற் புகுந்து நாம் ஆராயவில்லையேனும் இவர்கள் கொள்கையிலிருந்து பாணினிபகவான் பாரத காலத்தை, அடுத்திருந்தவரென்ற வளவின் நமக்கு விளக்கமாகின்றது. ஆகவே, அப்பாரதயுத்த நிகழ்ச்சிக்குப் பின் பாணினி காலத்தையொட்டியே அகத்தியனார் தென்னாட்டுப் பொதியிலிற்றங்கித் தலைச் சங்கத்தைத் தொடங்கியவராக வேண்டும் என்று, மேற்கூறிய செய்தி கட்சியை நாம் கொள்ளலாகும்.

(மேலது;88)

இப்பத்தியை மொத்தமாக எடுத்துத் தந்ததற்குக் காரணம், பாணினியின் காலத்தை கி.மு.910 என்று கூறி இதற்குப் பின்னரே அகத்தியரைத் தென்னாட்டுப் பொதியிலிற்றங்கித் தலைச்சங்கம் தொடங்கினாரென்று கூறி முடிகிறார். இக்கருத்து, பெருஞ்சோறு உதியன் சேரலாதனைப் பாடிய முரஞ்சியூர் முடிநாகராயர் குறித்து மேற்கண்டப் பத்தி முன் பக்கத்தில், ஆய்ந்து கூறியிருந்த முடிவோடு முரண்படுகிறது என்பதைச் சுட்டிக் காட்டுவதற்கே ஆகும். அதாவது, முடிஞ்சியூர் முடிநாகராயர் குறித்து குறிப்பிட்டுச் சொல்ல வந்த மு.இராகவையங்கார், கீழ்வருமாறு எடுத்துத் தந்து முடித்திருக்கிறார்.

> இங்ஙனம் பேருணவளித்த சிறப்புப் பற்றியே பெருஞ்சோற்றுதியன் என இவன் விசேடிக்கப்பட்டனன். இதனை, “அலங்குளைப் புரவி ஐவரொடுசினைஇ நிலந்தலைக் கொண்ட பொலம்பூதும்மை ஈரைம் பதின்மரும் பொழுது களத்தொழியப் பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்” என, அவ்வரசனை இம்முடிநாகர் நேரில் விளித்துக் கூறுமாற்றான் உணர்க. இதனால், அவ்வரசனும் இப்புலவரும் ஒரே காலத்தவர் என்பதும், இப்பாட்டுப் பாரதயுத்தம் முடிந்த சமீப காலத்தே பாடப்பட்டதென்பதும் புலனாம்.

(மு. இராகவையங்கார்; 1905;88)

என்று குறிப்பிடுகின்றார். பாரத போர் நடந்து கொண்டிருந்த பொழுது உதியஞ்சேரலாதன் சோரளித்துள்ளான் என்பதும், அதனை நேரில் கண்ட முடிஞ்சியூர் முடிநாகனார், சேரனைப் பாடினாரென்றும் இந்நிகழ்வுகள் அனைத்தும் சமகாலத்தில் நிகழ்ந்ததென்றும், உறுதிப்படக் கூறிவிட்டவர், பின்னர் கட்டுரையை முடிக்கையில் கி.மு.9,10 ஆம் நூற்றாண்டுகளுக்கு இடையில் வாழ்ந்ததாக ஏற்கப்பட்ட பாணினியை ஒட்டியே அகத்தியர் வந்து அதன் பின்னர் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கினாரென்று கூறுவதும், அதன் முன்னர் இப்பாடல்களை இயற்றிய முரஞ்சியூர் முடிநாகனார்

தலைச்சங்கத்திலிருந்து பாடல் புனைந்துள்ளார் என்ற கருத்தை உணர்த்துவதும் எவ்வாறு பொருந்துமென்ற கேள்வி இயல்பாய் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை. இங்கு முரண்படக் காரணம் பாரதக் காலம் கி.மு.12 ஆம் நூற்றாண்டு என்று கூறிவிட்ட பின்னர் ஏன் இரண்டொரு நூற்றாண்டு கழித்து பாணினி காலத்தை அடுத்து அகத்தியர் காலத்தையும் தலைச்சங்க காலத்தையும் கொண்டுவந்து நிறுத்துகிறார். இவ்விரு ஆய்வுக் கட்டுரைகளும் 1904–இலும் 1905 மாக வெளிவந்திருப்பதைக் காண்கின்றோம்.

### 2.3.1.3. மு. இராகவையங்காரின் ஆய்வுக்கு ஆ. முத்துத்தம்பிப் பிள்ளையின் பாரத கால ஆய்வு மறுப்புரை

1905 இன் ஆகஸ்டு மாத (ஆவணி) இதழில் (தொகுதி 3 பகுதி 10) இதழில் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளைப் பாண்டவர் காலம் என்னும் தலைப்பிட்டு பாண்டவர் காலம் கி.மு.12 ஆம் நூற்றாண்டு என்று ஆய்வறிஞர்கள் சிலர் கூறிவரும் கருத்தினைச் சுட்டி, இதனை ஏற்பது ஐரோப்பியர்களின் கருத்தினை ஏற்பதற்குச் சமமென்று கூறி இறுதியாகக் கீழ்வருமாறு இப்பாண்டவர் காலத்தைத் தருகின்றார்.

> “இற்றைக்குச் சற்றேறக்குறைய ஆயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்னே விளங்கினவரென யாவராலும் அங்கீகரிக்க பெற்றவரும் உத்தம வித்துவ சிகாமணியும் சோதிட சாஸ்திரத்திலும் கணிதத்திலும் தமக்கிணையில்லாதவருமாகிய வராகமிகிரர் தமது பிஹேத் சங்கிதையிலே, 3 ஆம் அத்தியாயத்திலே 3 ஆம் சுலோகத்திலே விக்கிரம சகந் தொடங்குவதற்கு இரண்டாயிரத்து ஐஞ்னூற்றிருபத்தாறு (2526) வருஷங்களுக்கு முன்னேயுள்ள உதிஷ்டிரன் அரசியற்காலத்திலே சப்தரிஷிகள் மகநக்ஷரத்திரத்திலிருந்தன என்று கூறுதலின் பாண்டவர் காலம் 4500 வருஷங்களுக்கு முற்பட்டதென்பது வெள்ளிடைமலையன்றே (உதிஸ்டிரன் – தருமபுத்திரன்)
>
> (ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, 1905;371)

என்பதோடு நிறுத்தாமல், இக்காலத்திலிருந்து மாறுபட்டக் கருத்துடையவர்களின் கருத்து பொய்யுரையென்று அடிக்குறிப்பில் தந்துள்ளார். இது பாரத காலமும் தமிழரும் என்று எழுதிய மு. இராகவையங்காருக்கும் (பாரத காலம் கி.மு.12 நூற்றாண்டு) வி. கோபாலையருக்கும் மறுப்புரையாக அமைந்திருப்பதை அறிய முடிகின்றது.

### 2.3.1.4 மு. இராகவையங்கார் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளைக்குப் பாரதகாலம் பற்றிய பதிலுரை

ஆ. முத்துதம்பிப் பிள்ளையவர்கள் குறிப்பிட்டிருக்கும் கால வரையறையும் மறுப்புரையும்கொஞ்சமும் பொருத்தமாகவும் ஆராய்ச்சி நெறிமுறை படியும் அமையவில்லையென்பதை மிகவும் நாகரீகமாக கூறி, அவர் காலத்தைக் கணிப்பதற்கு ஆதாரமாகக் கொண்ட சுலோகம் வராகமிகிரர் தமது நூலில், சர்க்க சித்தாந்தந்தினின்று மேற்கோளாகக் காட்டியதென்றும், அவர் எழுதியதல்ல என்றும், மு. இராகவையங்கார் தெளிவிக்கிறார். மேலும் இத்தகைய புராணங்களின் காலக்குறிப்பிடலில் முரண்பாடுகள் இருப்பதைத் தந்து, கேள்வி எழுப்புவதோடு, ஆ. முத்துதம்பிப் பிள்ளையவர்களுக்கு மறுப்பு தெரிவித்து, இறுதியாகக் கீழ்வருமாறு கூறி தமது உரையை முடிக்கின்றார்.

> பாரத கால விஷயமாக வேலந்தை ஸ்ரீமத் கோபாலரையவர்கள் Chronology of Ancient India என்றொரு நூல் எழுதி வெளியிட்டுள்ளார்கள். அது சென்னை “மெஸர்ஸ் ஜி. நடேசன் அண்டு கம்பெனியிற் கிடைக்கும். பிள்ளையவர்கள் அதன் பேரில் உறுதியாக நிலைக்கக்கூடிய மறுப்புரைகளை எழுதிப் பத்திரிகை வாயிலாக வேனும் புத்தக வாயிலாகவேனும் வெளியிடுதல் உலகோபகாரமாம். இவ்வாறல்லாதவை எழுச்சி கொண்ட ஆரிய மக்களை அடக்கும் வலியற்றவை என்பது ஒருதலை.
>
> (மு. இராகவையங்கார், 1905;378)

என்பது மு. இராகவையங்காரின் முடிவாக இருப்பதைப் பார்க்கிறோம். இதன்மூலம் அக்கால ஆரிய திராவிட பண்பாட்டின் தொன்மை சார்ந்த பூசல் நிலவியிருப்பதைக் காணமுடிகிறது.

### 2.3.2. மு. இராகவையங்காரின் முச்சங்க காலம் பற்றிய வரையறை

1904–05 களில் ஸ்ரீரங்கத்தில் இயங்கி வந்த “ஸ்ரீ வாணீ விலாஷனி” என்னும் பத்திரிக்கையின் 2 ஆம் சங்ஜிகையில் ‘ஐயன் ஆரிதன்’ என்ற பெயரில் மு. இராகவையங்கார், தமிழ்ச் சங்கங்கள் குறித்து ஆய்வுக் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார். 1938 இல் இராமநாதபுரத்தைச் சார்ந்த ஆர். சேஷாத்திரி என்பவராலும் ஆர். நாராயணன் என்பவராலும், (இவ்விருவரும் மு. இராகவையங்காரின் புதல்வர்கள்) இக்கட்டுரையையும் உள்ளடக்கிய தொகுப்பை ஆராய்ச்சித் தொகுதி என்ற தலைப்பில் எஸ். வையாபுரிப்பிள்ளையின் முன்னுரையோடு வெளியிட்டிருக்கிறார்கள்.

அந்நூலில், இச்சங்கங்கள் குறித்து மு. இராகவையங்கார் கொண்டிருந்த கருத்துக்கள் தெரியவருவதோடு, அவர் அச்சங்க நூல்களைப்பற்றியும் அச்சங்கத்துப் புலவர்களைப் பற்றியும் கூறியுள்ளமை கிடைக்கின்றன. முச்சங்கங்களிருந் ததற்கானச் சான்றுகள் கிடைக்கப்பெற்றிருக்கும் சங்க நூல்களுள் தெளிவாக இல்லாமையால் சங்கமிருந்திருக்க வாய்ப்பில்லை என்கின்ற கருத்தினை முன்வைக்கும் அறிஞர்களின் கருத்துக்களை மறுத்து கூறும் நோக்கத்தோடு தலைச்சங்கம் என்ற தலைப்பில் காணப்படும் அக்கட்டுரையில் கீழ்வருமாறு எழுதுகிறார்.

> சிறிது நுணுகியாராய்ந்தால் அவர்களுக்குப் பொருத்த முடையதன்று என்பது புலனாம். இடைச்சங்க மிரீஇயபாண்டியருள் நிலந்தருதிருவிற் பாண்டியன் என்பானும் ஒருவன் என்பது நன்னூலால் அறியப்படுகின்றது. இவனே தொல்காப்பியத்தை இயற்றுவித்தோன். இனி 'நிலந்தருதிருவிற் பாண்டியன வையத்து' என்னும் அந்நூற் பாயிரத்தான் அறிக. கடைச்சங்கத்தவரான மாங்குடி மருதனரால் மதுரைக் காஞ்சியுள் "தொல்லானை நல்லாசிரியர் புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின் நிலந்தரு திருவினெடியோன்"
>
> (மு. இராகவையங்கார், 1904–05;76)

எனப் புகழப்பட்டவன், இப்பாண்டியனே என்று கூறி நிறுத்தி அடிக்குறிப்பில் இவ்வடிகட்கு நச்சினார்க்கினியர் வேறுபொருள் கூறுவராயினும் இதுவே ஏற்புடையதென்பது ஆராய்ந்தறியதக்கது என்பதனைத் தந்து தமிழ்ச்சங்கம் இருந்ததை நிறுவும் நோக்கோடு மேற்கண்ட பாடல் வரிகளுக்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறார்.

> இதனுள் சங்கமென்னும் வடசொல்லாற் பெயர் கூறப் படாமற்போயினும் நல்லிசைப்புலவர் பலரைக் கொண்டு அப்பாண்டியன் செந்தமிழாராய்ச்சி செய்தவன் என்பது 'புணர்கூட்டுண்ட' என்பதனால் விளக்கமாம். புணர்கூட்டுண்ணுதல் சங்கமாக விருந்து தமிழாராய்ச்சி செய்தல், புணர், சங்கம், தொகை என்பன ஒரு பொருட்களாதல் புணர் கூட்டுண்ட தொல்லாணை நல்லாசிரியராயர், நான்மறை முற்றிய அதங்கோட்டாசாவின், தொல்காப்பியர் முதலியோராவர் இவ்வாறே புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க (மணிமேகலை 7–114) எனப் புலவர் குழாத்தைச் சங்கமென்ற பெயறாற் கடைச்சங்கத்தவரான சாத்தனார் வழங்கல் காண்க.
>
> (மேலது;78)

இவரின் இக்கருத்தின் மூலம் தமிழ்ச் சங்கம் இருந்ததென்பதும் இடைச்சங்கத்தில் தொல்காப்பியம் அரங்கேற்ற மன்னராய் வீற்றிருந்தவனே நிலந்தருதிருவிற் பாண்டியன வைத்து எனவரும் அடிகளில் குறிக்கப்படுபவன் என்றும் இவனே மாங்குடி மருதனாரால் பாடப்பட்ட மதுரைக் காஞ்சியில் (760–4) வரும் "தொல்லாணை நல்லாசிரியர், புணர் கூட்டுண்ட புகழ்கால் சிறப்பின் நிலந்தருதிருவினெடியோன்" என்ற வரிகளில் குறிக்கப்படும் பாண்டியனும் ஒருவனே என்று கூறுகின்றார். அதாவது இடைச்சங்கத்திலிருந்த பாண்டியன் என்றும் நிறுவி கடைச்சங்கத்தின் போதும் வீற்றிருந்தான் என்பது இவரின் கருத்தாகும். இக்கருத்தினை இக்கட்டுரையிலேயே நிறுவியுள்ளார். மேலும் மேலே குறிப்பிட்டுள்ள அடிக்குறிப்பில் மணிமேகலை (7–114) செய்யுள் வரிகளைக் குறித்திருப்பதோடு கடைச்சங்கத்தவரான சாத்தனார் வழங்கல் காண்க என்ற தொடரையும் அமைத்து, சாத்தனாரையும் கடைச்சங்கப் புலவரென்று புகழ்வதால், இளங்கோவடிகளையும் குறிப்பால் உணர்த்தியுள்ளாரென்பது விளங்குகிறது. இதனோடு முச்சங்கம் இருந்தது என்ற கருத்தினை ஆராய்ந்து நிறுவிட முயலும் மு.இராகவையாங்கார்,

> களவியலுரைப் பாயிரத்தே தலைச்சங்கமிருந்தார் :– சிவபிரான், முருகவேள், நிதியின்கிழவன், அகத்தியனார், முரஞ்சியூர், முடிநாகராயர் முதலாக 549–ன்மர் என்றும், அவர்கள் 4440 ஆண்டு இச்சங்கத்து விளங்கினர் என்றும், அச்சங்கத்தை நடைபெறச் செய்த பாண்டியர் 89 ன்மர் என்றும், அச்சங்க மிருந்த நகரம் கடல்கொள்ளப்பட்ட தென்மதுரை என்றும் எழுதப்பட்டுள்ளன. இத்தலைச்சங்கத்தவன் வான்மீகனார் கௌதமனார் என வேறிருவரையுஞ் சேர்த்துக் கூறுவர். நச்சினார்க்கினியர் (தொல்.பொ.74) இவர்களுள், சிவபிரான் முருகவேள் நிதியின் கிழவன் (குபேரன்) என்போர் தெய்வங்களாதலின், அவரைப்பற்றிய ஆராய்ச்சி ஈண்டு நிகழ்த்தற்குரியதன்று. ஆதலின், ஏனைப் பெருமக்களுள் தலைவரான அகத்தியரை முதலில் நோக்குவோம்.
>
> (மேலது;80)

என்று எடுத்தாண்டு, அகத்தியரைப் பற்றின புராண இதிகாசங்களில் கூறப்படும் கருத்துக்களின் அடிப்படையில், 'அகத்தியம்' என்னும் தமிழிலக்கிய நூலை அகத்தியர் எழுதினாரென்பதைக் காட்டி இந்த அகத்தியர் தலைச்சங்கத்தில் வீற்றிருந்ததோடு இடைச்சங்கத்தும், இடைச்சங்கத்தை ஒட்டியே எழுந்த கடைச்சங்கத்துமிருந்தார் என்று கூறி இத்தகைய ஆற்றல் அவருக்கு, அதாவது பல யுகங்கள், அவர் வாழ்ந்தவரென்ற நம்பிக்கையோடு கூறியுள்ளார். அதனை நோக்குவாம்.

> சிவபிரான் உமாதேவியைத் திருமணம் புரிந்த காலத்தில் அகத்தியனார் தென்றிசைசெல்ல அப்பிரானால் ஏவப்பட்ட வரலாறு, கந்த புராணங்களிற் கூறப்படுகின்றது. சிவபிரான் திருமணம் இராமாவதாரத்துக்குப் பல யுகங்கள் முற்பட்டதென்பர். இவையன்றி, அம்முனிவர், 'தழற்புரை நிகறகடவுள் தந்தமிழ் தந்தவர்' என்பதும், தலைச்சங்கத்தவருள் ஒருவராய் அகத்தியம் என்ற தமிழிலக்கண நூலை ஆக்கியருளியவர் என்பதும் தமிழ் நாட்டுப் பெருவழக்காக உள்ளன. இவற்றை யெல்லாம் சேர்த்து நோக்குமிடத்து, அகஸ்திய முனிவர் பல யுகங்கள் வாழ்ந்தவரென்று கொள்ள வேண்டும்.
>
> (மேலது;81)

என்று நிறுவயிருப்பதைக் காண்கிறோம். இந்நம்பிக்கை, அதாவது புராண இதிகாசங்களின் அடிப்படையில் புனையப்பட்டிருந்த இக்கதைகள் இயல்பான வாழ்வில் ஏற்க முடிந்ததா என்பதை எண்ணிப்பார்த்தாலே விளங்கி விடும். எனினும் இறையனார் அகப்பொருள் உரைத்தரும் கருத்தின் அடிப்படையிலும், அவ்வடத்தைப் பிடித்தபடிப் பயணப்பட்டு அடையும் புராண, பாரத, கதைகளின் அடிப்படையிலும் தெய்வத்தின் மேல் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையின் அடிப்படையிலும், மு. இராகவையங்கார் இம்முடிவிற்கு வந்திருக்கிறாரென்பது தெரியவருகிறது. மு. இராகவையங்காரின் கருத்திலுள்ள சாதக பாதகங்கள் ஒருபுறமிருக்க அகத்தியரைப் பற்றிக் கூறும் இன்னொரு முக்கியமான குறிப்பையும் இங்கு நினைவுப்படுத்திக் கொள்வது பொருத்தமானதாகப்படுகிறது. அக்குறிப்பினைக் காண்பதற்கு முன்பாக தொல்காப்பியப் பாயிரவுரையில் நச்சினார்க்கினியர், வடதிசையிலிருந்து தென்திசை அகத்திய முனிவர் வந்தாரென்பதை எடுத்துக்காட்டியிருப்பதோடு, இராமாயணத்தில் வான்மீகி குறிப்பிட்டுள்ளதையும், (ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம்) குறித்துக்காட்டி, சிவபெருமானே தெற்கில் அமைந்துள்ள பொதிய மலைக்குச் அகத்தியரை அனுப்பியதாக நம்பப்படும் புராண வரலாறையும் எடுத்துத் தருகின்றார். இக்கருத்தினைத் தமது "ஸ்ரீவால்மீகி முனிவருந் தென்னாடும்" என்ற இன்னொரு கட்டுரையில் நிறுவி உள்ளதையும் நினைவுறுத்துகின்றார். நச்சினார்க்கினியர் அகத்தியமுனிவர் வந்த வரலாற்றைக் கூறும்பொழுது கீழ்வருமாறு கூறியுள்ளார் என்பதனை மு. இராகவையங்கார் எடுத்தாளுகின்றார்.

"தேவரெல்லாங்கூடி யாம் சேர விருத்தலின் மேருத்தாழ்ந்து தென்றிசையுயர்ந்தது: இதற்கு அகத்தியனாரே ஆண்டு இருந்ததற்குரியர்' என்று அவரை வேண்டிக்கொள்ள, அவருந் தென்றிசைக்கட் போதுகின்றவர்... "துவராபதிப் போந்து நிலவிகடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண்" அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் காடு கெடுத்து நாடாக்கி இராவணனைக் கந்தருவத் தாற்பிணித்து இராக்கதரை ஆண்டுவாராமை விலக்கிப் பொதியிலின் கண்ணிருந்தனர்" என்பதாம்

(மேலது;83)

என்று எடுத்துத்தருகின்றார். கண்ணபிரானின் வம்சத்தினாராக வேளிரை நச்சினார்க்கினியர் உரைத்திருப்பதைப் போலவே மு.இராகவையங்காரும் "வேளீர் வரலாறு" என்று செந்தமிழ் இதழில் எழுதி பின்னர் அது நூலாக்கம் பெற்றதையும் நினைவுறுத்துகின்றார். இப்பக்கத்தில் கொடுத்திருக்கும் மற்றொரு குறிப்பும் ஆய்விற்கு உட்பட்டதாகப்படுகிறது. நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளதில் 'இராவணனைக் கந்தவெத்தாற் பிணித்து இராக்கதரை ஆண்டு வாராமை விலக்கிப் பொதியிலின் கண்ணிருந்தனர்" என்ற வரிகளுக்கு விளக்கம் தரவரும் மு.இராகவையங்கார் அடிக்குறிப்பில்,

"கண்ணபிரான் காலத்துக்குப் பிற்பட்டவனாகத் தெரியும் இவ்விராவணன், வேறோர் கொடிய இராக்கதன் போலும்"

(மேலது;83)

என்று தருகின்றார். இதிலிருந்து நச்சினார்க்கினியரின் கூற்றைக் காப்பாற்ற முயலுவதோடு, புதிதாக ஒரு இராவணனைக் கொண்டு வந்து தருவதையும் காண்கிறோம். இந்த இராவணன் கண்ணபிரான் காலத்தில் வாழ்ந்தவனாம். அதே பெயரைக் கொண்டிருப்பதோடு, அதே அரக்கத்தனமும் அவனுள் இருந்ததாகக் கூறியிருப்பது கவனிக்கத்தக்க ஒன்றாக இருக்கிறது. மேலும், தமிழ் குலங்கள் திணைப்பகுப்பின் அடிப்படையில் உருப்பெற்ற நிகழ்வைக் கூறுகையில் அகத்தியரால் இலக்கண நூல் உருவாக்கப்பட்டதோடு, நிலங்களுக்கான தெய்வங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதையும் கீழ்வருமாறு விளக்குகின்றார்.

இங்ஙனம் அகத்தியனார் பொதியத்தில் இருந்த காலத்தே தான். தமிழ்நாட்டுப் பூர்வீகமக்களது பாஷையையும் அவர் பழக்க வொழுக்கங்களையும் அறிந்து தம் பெயரால் இலக்கண நூலை அவர் இயற்றியதும், தென்னாட்டரசரைக் கொண்டு தலைச்சங்கத்தை

> நிறுவியதுமாகும். இந்நிலத்தினை முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென நான்கு பிரிவினதாகப் பகுத்து அவ்வந் நிலத்தவரின் வழக்காறுகளை அறிந்து அகத்தினார் நூலியற்றியவரென்பதும், அந்நிலப்பிரிவுகளுள், முல்லையான காடு சார்ந்த நிலம் மாயோனாகிய கண்ணபிரானை ஆதிதெய்வமாகவும் அப்பிரான் வளர்ந்த ஆயர்குலத்தவரை மக்களாகவும் உடையதென்பதும், அம்முனிவரது தலைமை மாணாக்கராகச் சொல்லப்படும் தொல்காப்பியனார் கூற்றுக்களினின்று நாம் நன்கறியலாம். "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்று கூறிய தொல்காப்பியர் கருத்து முல்லைத் தெய்வம் கண்ணபிரான் என்பதேயாகும்.
>
> (மேலது;84)

என்று விளக்கியதோடு அடிக்குறிப்பில் மு.இராகவையங்கார் 'கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள்' என்று தாம் இயற்றியிருக்கும் கட்டுரையைச் சுட்டி தமது கருத்தை விளக்கமாக அறிய விரும்புகின்றவர்கள் அதனைக் காணவும் என்று காட்டுகின்றார். மேலும் தொடரும் மு. இராகவையங்கார்,

> அம்முல்லைக்குரிய ஆயர்க்குலத்தவர்க்கு அப்பெருமானே வழிபடு கடவுள் என்பதனையும் கடைச்சங்க நூல்களும் பிறவும் திருமாலின் ஏணையவதார மூர்த்திகளை அந்நிலத் தெய்வமாகக் குறியாது. கண்ணபிரான் வழிபாடு பிரபலம் பெற்றிருந்தது என்பது தேறப்படும். எனவே கண்ணபிரானையே அவ்வாறு சிறப்பித்துக் சொல்லுதலையும் கற்றார் அறிவர். இவற்றால், அகத்தியனார் காலத்தேயே கண்ணபிரான் வழிபாடு பிரபலம் பெற்றிருந்தது என்பது தேறப்படும். எனவே கண்ணபிரான் வாழ்ந்த காலத்துக்குப் பின்பே அகத்தியர் தென்னாடு புகுந்து தலைச்சங்கத்தைத் தாபித்தும், அகத்தியம் என்ற முத்தமிழிலக்கண நூலினை இயற்றியும் போந்தவர் என்பது தெளிவாம்.
>
> (மேலது;84)

என்று கூறி முடிக்கின்றார். இக்கூற்றால் தலைமை தமிழ்ச்சங்கத்தை அகத்தியர் நிறுவினார் என்பதும் முல்லை நில மக்கள் வாழ்க்கை உருவாக்கம் பெற காரணமாக இருந்தாரென்பதும் அந்நில மக்களுக்குத் தெய்வமாக அவரவர்களின் வழிபாட்டின் அடிப்படையிலேயே கண்ணபிரான் தமிழ் இலக்கண நூலிலும் கட்டமைக்கப்பட்டாரென்பதும் இவர் காலத்தில் வாழ்ந்த தொல்காப்பியரும் தம் நூலில் இக்கருத்தினையே இலக்கணமாக அமைத்தாரென்பதுமாக அடுக்கடுக்காகச் செய்திகளைத் தருகின்றார். எடுத்துக்காட்டியுள்ள மேற்கோளில், கண்ணபிரான் வாழ்ந்த காலத்துக்குப்

பின்பே அகத்தியர் தென்னாடு புகுந்து தலைச்சங்கத்தைத் தாபித்ததும், அகத்தியம் என்று முத்தமிழிலக்கண நூலினை இயற்றியும் போந்தார் என்றும் கூறி இக்கருத்து தெளிவானதாகக் கூறுகின்றார். இதில் அகத்தியர் இலக்கண நூலினை இயற்றியதோடு தலைச்சங்கத்தில் அரங்கேற்ற செய்தார் என்பதும் இக்காலத்தில் உடனிருந்தவர் தலைமாணாக்கரான தொல்காப்பியர் என்றும் குறிப்பிட்டிருப்பதும் அவர் வலியுறுத்த வருபவைகளாகும். இதனைச் சுட்டிக் காட்டிக் கேள்வி எழுப்புவதற்குக் காரணம், இதே நூலுல் பக்கம் 88 இல் இடைச்சங்கம் என்று பெயரிட்டு எழுதப்பட்ட கட்டுரையும் 1904 இல் ஸ்ரீரங்கத்திலிருந்து வந்து கொண்டிருந்த ஸ்ரீவாணிவிலாஸினி என்ற பத்திரிக்கையிலும் இதே ஆண்டில் செந்தமிழ் இதழிலும் தலைச்சங்கம் என்று தலைப்பிட்டக் கட்டுரையை அதே 'ஐயன் ஆரிதன்' என்ற பெயரில் எழுதியுள்ளார்.

இவ்விடைச்சங்கம் என்னும் கட்டுரையினைக் கீழ்வருமாறு தொடங்குகின்றார்.

> தலைச்சங்க வரலாறு போலவே இடைச்சங்கச் செய்திகள் சிலவும் இறையனார் களவியலுரைப் பாயிரந்தே வரையப்பட்டுள்ளன. அவையாவன:– "இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழியும் மோசியும் வெள்ளூர்க்காப்பியனும் சிறுபாண்டரங்கனும் திரையன் மாறனும் துவரைக் கோமானும் கீரந்தையுமென இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப, அவருள்ளிட்டு மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினரென்ப; அவர்களாற் பாடப்பட்டன கலியுங் குருகும் வெண்டாளியும் வியாழ மாலையகவலும் என இத்தொடங்கத்தன என்ப; அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் மாபுராணமும் இசை நுணக்கமும் பூதபுராணமும் என இவை; அவர் மூவாயிரத் தெழுநூற்றியாண்டு, சங்க மிருந்தரென்ப அவரைச் சங்கமிரீ இலினார் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்ம ரென்ப; அவருட் கவியரங்கேறினார் ஐவர்பாண்டியரென்ப, அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாட புரத்தென்ப, அக்காலத்துப்போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது.

(மேலது;89)

என்று குறிப்பிடுகின்றார். இதில் கவனிக்க வேண்டியது இடைச் சங்கமிருந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் என்று கூறும் இறையனார் களவியலுரையை எடுத்தாளும் மு. இராகவையங்கார் தலைச்சங்கத்திலும் இவ்விருவரும் வீற்றிருந்தார்களென்றும் இங்கு

அகத்தியம் அரங்கேற்றப்பட்டதென்றும் அச்சங்கத்தின் காலம் 4440 என்று கூறிப்பதுமாகும், இவ்விடைச்சங்கத்தின் காலம் 3700 ஆண்டு என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும். தலைச்சங்கம் நிறுவி அதில் அகத்தியம் என்னும் நூலையும் அரங்கேற்றியவர் உடன் தொல்காப்பியரையும் தம் தலை மாணாக்கராகக் கொண்டிருந்தவர் இடைச்சங்கத்திலும் தலைமையேற்று வீற்றிருந்து தொல்காப்பியரின் இலக்கண நூலை அரங்கேற்றியுள்ளார் என்பதும் கடைச்சங்கத்தில் அகத்தியரின் 'அகத்தியம்' தொல்காப்பியத்தால் வழக்கொழிந்தது என்றும் இக்கால இடைவெளியைக் கருத்தில் கொள்ளாமல் எழுதியிருப்பதால் எத்தனைக் காலம் இவ்வகத்தியரே தலைமையேற்றிருந்திருப்பார், தொல்காப்பியரோடு உடன் பயின்ற பனம்பாரனார் குறுந்தொகையில் ஒரு பாடல் (54) இயற்றியிருப்பதோடு, தொல்காப்பியரின் நூலுக்குப் பாயிரமும் எழுதியிருப்பதாகச் சுட்டிகாட்டியிருப்பது எவ்வாறு பொருந்தும் என்பன போன்ற கேள்விகள் எழுகின்றன.

### 2.3.2.1. மு. இராகவையங்காரின் வேளீர் வரலாறு முன் வைக்கும் சங்க காலம்

வேளீர் வரலாறு கட்டுரைத் தொடங்கப்படுவதற்கும் முன்பாகக் கீழ்வரும் குறிப்பு அடைப்புகுறிகளுள் காணப்படுகின்றது.

> சென்னைத் தபாலிலாகாத் தலைவர் ஸ்ரீமத் வி. கனகசபைப் பிள்ளையவர்களைச் சபாநாயகராகப் பெற்று வித்துவ சமூகத்தில், செந்தமிழ் உதவிப் பத்திராசிரியர் ஸ்ரீ மு. இராகவைங்காரவர்களால் எழுதிப்படிக்கப்பட்டதாகும் – பத்திராசிரியர்.

(மு. இராகவையங்கார், 1905;212)

இக்கட்டுரையின் மையப் பொருள் கீழ்வருமாறு அமைகிறது.

> பழைய சங்கச் செய்யுள்களில் வேளீர் என்ற ஒரு கூட்டத்தார், தமிழ்ப் பேரரசர்களாகிய சேர, சோழ, பாண்டியரையடுத்துப் பலவிடங்களிற் கூறப்படுகின்றனர். இதனைப் பண்கெழு வேந்தரும் வேளிரும் எனப் புறநானூற்றினும், "இருபெரு வேந்தரொடு வேளீர்" என மதுரைக்காஞ்சினும் "வேந்தரும் வேளிரும்" எனப் பதிற்றுப்பத்திற் பல விடங்களினும் வருதலால் அறியலாம். இதனால் தமிழகத்திற் பேரரசர்களாகிய மூவேந்தரையுமடுத்து மதிக்கப்பட்ட சிற்றரசருள் இவ்வேளிர்களே முற்பட்டவர்களென்பது தெரியவரும். அன்றியும் 'தொன்முதுவேளிர்' நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளீர் 'இருங்கோ வேண்மருங்டு' என நூல்களிற் காணப்படுவதால் இவர்கள் பண்டைக் காலமுதலே தமிழ் நாட்டில் விளங்கிவர்களென்பதும் தேறப்படும்.

(மேலது;212)

இப்பண்டையகாலமாக எதனைக் குறிப்பிடுகின்றாரென்பதே ஆய்விற்கு ஏற்றதேயொழிய, இவ்வேளீர் யாவர், அவர் குலம் யாது? இவர்கள் தமிழ் பழங்குடிகளா? இவர்களின் புராதன நாடு எது? இவர்களது வரலாறு யாது? என்ற அடுக்கடுக்கான கேள்விகளைக் கேட்டுக் கொண்டு எழுதப்புகும் ஆய்வுகளும் தரவுகளும் இங்ஙனம் பொருந்தாமல் போகுமென்பதால் இவர்களின் காலம் குறித்து தந்திருக்கம் குறிப்புகளைக் காண்போம்.

> நச்சினார்க்கினியர் கூற்றுப்படி, வேளீர் என்பவர் துவாரகையை யாண்ட கண்ணபிரான் வழியினராயின், அவர்களை நாம் யாதவர் என்றே அழைக்கலாம். ஏனெனில், கண்ணன் வழியினரெல்லாம். யது வம்சத்திற் பிறந்த சந்திர குலத்தவரென்பது பிரசித்த மன்றோ. முற்காலத்திலே வேளீர் என்பவர் துவாரகையினின்று தென்னாட்டுக்கு வந்த யாதவர்களாயின், அவர்கள் வரலாறு பண்டைத்தண்டமிழ் நூல்களிற் குறிக்கப்பட்டிருத்தல் வேண்டும். நச்சினார்க்கினியரெழுத்துப்படி அவர்கள் கண்ணபிரான் காலத்தை யடுத்துத் தெற்கே வந்தேறிவையராகத் தெரிதலால் அவர்கள் செய்தியை நன்றாக விளக்கக் கூடிய அக்காலத்து நூல்கள் இப்போது இறந்தன. ஆயினும், பிற்பட்ட கடைச்சங்கச் செய்யுளில் அவ்வேளிரது வரலாற்றைக் காட்டவல்ல இரண்டொரு செய்திகளும் இல்லாமற்போக வில்லை.

(மேலது;212)

என்று தனக்கே யுரிய ஆய்வறிவில் கவனிக்கத்தக்க வாதவிவாதங்களை ஏற்படுத்திக்கொண்டு ஆராயத் தொடங்குகின்றார். இதில் கண்ணபிரான் காலத்தவர் இவ்வேளிரென்று உரைக்கின்றார். இதனை நிறுவிடதக்கச் சான்றுகளில்லை ஆதலால், அக்காலத்தில் தொடர்ச்சியாக இயங்கிவந்த கடைச்சங்க நூல்களில் இரண்டு தரவுகள் கிடைப்பதாகக் கூறுகின்றார். அச்சான்றுகளை எடுத்துத்தர விழைபவர். புறநானூற்றில் கபிலரின் (201) பாடலைத் அதாவது ‘‘நீயே வடபான் முனிவன் றடவினுட் டோன்றிச் செம்புனைந் தியற்றிய சேணெடும் புரிசை உவரா வீகைத் துவரையாண்டு நாற்பத் தொன்பது வழிமுறை வந்த வேளிருள் வேளே’ என்றப் பாடலைக் எடுத்துக்காட்டி ஆராயத் தலைப்படுகின்றார். மேற்கண்ட பாடலடிகளின் வாயிலாக நச்சினார்க்கினியர் இவ்வேளிர் வடதிசையிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்தவர்களென்று உரைக்கின்றவர், இவர்களே கண்ணனின் மரபினராகக் குறிக்கப்படும் யாதவர்கள் என்றும் ஏற்கின்றார். அதாவது துவாரகையிலிருந்து வந்தவர்களே இவ்யாதவரென்பதை நிறுவமுயலுவதோடு 900 வருடங்களுக்கு முன்னரும் இக்குடியினர் தமிழகப் பகுதிக்குள் வாழ்ந்துள்ளனர் என்பதைச் சுட்டிக் காட்டி இவ்வினத்தாரும் 1800

ஆண்டுகளுக்கு முற்பட்ட இனத்தவரும் ஒரினத்தவரென்ற கொள்கையோடுப் பயணபட்டு, திவாகரம் என்னும் பிங்கலந்தையினுள் குறிக்கப்படும் அம்பர்கிழான் சேந்தனார் என்னும் வேளிரினத்தவன் கடைச்சங்க காலத்தவரான ஔவையாரால் பாடப்பட்டவன் என்று குறிப்பிடுகின்றார். இவரின் ஆதிகுடியினரின் இனத்தையே கபிலரின் அப்பாடலில் அமைந்துள்ள நீயே .... துவரையாண்டு நாற்பத்தொன்பது வழிமுறைவந்த வேளிருள்ளேயே என்ற அடிகளை ஆதாரமாகக் கொண்டு கீழ்வரும் முடிவினைக் கண்டறிந்துள்ளார்.

> மேற்கூறிய நாற்பத் தொன்பது வேளிர்களைக் கொண்டு கணிப்போமாயின் கபிலர் பாடிய இரங்கோவேளுக்கு 1029 வருஷங்கட்டு முற்பட்டதே அவன் வழியின் ஆதிமுன்னோரது காலமென்பது பெறப்படும். படவே, கடைச்சங்கத்தவராகிய கபிலர் பாடிய அவ்விருங்கோவேள் காலம், ஏறக்குறைய 1800 வருஷங்களுக்கு முற்பட்டதென்பது தெளிவாதலால் வேளிருடைய ஆதிமுன்னோர் தமிழ்நாட்டுக்கு வந்தேறிய காலம் கி.மு.11 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதாம் என்பது வெளியாகும்.

(மேலது;223)

இம்முடிவிற்குத் துணையாக ஸ்ரீரோமேச்சந்திரதத்தர், ஸ்ரீவேலந்தை – கோபாலையர் முதலியோர் ஆய்ந்து வெளிப்படுத்தியிருக்கும் கி.மு.13 நூற்றாண்டு (Dutt's Ancient Indian, PP.10) என்னும் முடிவும், கி.மு.12 ஆம் நூற்றாண்டு என்று (Chronology of Ancient India the Date of the Mahabharatha War) என்ற நூலின் முடிவும் அமைவதாக எடுத்துக் காட்டுகின்றார். மேலும் சேரன் இனத்தவர்கள் வடதிசையிலிருந்து வந்தேறியவர்கள் என்று கனகசபைப் பிள்ளை தமது நூலில் குறித்திருப்பதையும் இவ்வாறே வேளிர் வந்தமைக்குச் சான்று எனக் காட்டிச் செல்கின்றார். இதில் பாண்டியர், சோழர்களின் தொன்மைக்குச் சான்றாய் ஒரு குறிப்பையும் தந்துள்ளார். அதாவது,

> கி.மு.4 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் விளங்கிய நந்தசக்கரவர்த்தி காலத்தவரும், பாணினிக்கு 'வார்த்திகை' எழுதினவருமாகிய காத்தியாயனர், பாண்டிய சோழர்களை எடுத்தோதுவதோடு, பாண்டுவமிசத்தவன் ஒருவனிடமிருந்து தோன்றியவர் யாவர், அவர் பாண்டியர் (Vasthika on Ponini IV 1-168) எனச் சொன்ன முடிவு காட்டி பாண்டியர் வரலாற்றைக் குறிப்பிடுகின்றார் என்பர்.

(மேலது;226)

இத்தகவலைத் தருவதன் மூலம் கி.மு.4 ஆம் நூற்றாண்டில் சேர சோழ பாண்டியர்கள் அதாவது சங்க காலத்திலிருந்தவர்களைப் பற்றின குறிப்பினைக் காத்தியாயனார் என்பவர் எழுதியிருப்பது தெரியவருகிறது. இக்கட்டுரை முழுவதும் இவர்களின் குலத்தோற்றத்தையும் தென்னகம் வந்த வரலாற்றையும் எடுத்துரைத்து, இறுதியாக 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டு விளங்கிய வேளிருள் வேள் ஆவி, வேள் ஆய், வேள் எவ்வி, வேள் பாரி, வேள் பேகன், முதலிய பலரும் இவ்வேளிருள் பெருவள்ளல்களாக விளங்கினர் என்பதை சங்க சான்றின் வழி நிறுவி முடிக்கின்றார். இக்கட்டுரையினால் 1800 ஆண்டுகள், அதாவது கடைச்சங்கக்காலத்தில் இவ்வேளிர் வாழ்ந்திருந்த தகவல் நன்கு நிறுவப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

### 2.3.2.2. இடைச்சங்கமும் மூன்று கடல்கோள்களும்

1905 ஜூன் மாத செந்தமிழில், அதாவது ஆனி மாத இதழில் தொகுதி 3, பகுதி 8, 271 ஆம் பக்கத்தில் இடைச்சங்கம் என்னும் தலைப்பிட்டு, ஐயன் ஆரிதன் (மு. இராகவைங்கார்) எழுதியிருக்கும் கட்டுரை இடைச்சங்கத்தின் காலத்தைக் குறிக்க வருகையில், கி.மு.12 ஆம் நூற்றாண்டு முதல் கி.மு.6 அல்லது 3 ஆம் நூற்றாண்டு வரை என வரையறை செய்துள்ளார். இம்முடிவிற்குவர இறையனார் களவியலுரையில் கூறப்பட்டுள்ள முச்சங்க வரலாற்றுக் கட்டமைப்பை அடித்தளமாக அமைத்து கொள்கின்றார். இதனோடு கடல்கோள் ஏற்பட்ட தகவலைக் கலித்தொகை –148 யின் வாயிலாகவும் வடிவே லெறிந்த வான்பகை பொறாது எனவரும் சிலப்பதிகார பாடலாலும் எடுத்துரைக்க முனைகிறார். சிலப்பதிகாரம் கூறும் கடல்கோள் செய்திக் குறித்து அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் எவ்வாறு வேறுபட்டுள்ளனரென்பதை, அதாவது,

> பஃறுளியாற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடைப்பட்ட நிலம் 700 காவதநீள முள்ளதென்று அடியார்க்கு நல்லார் எழுதியது ஒருபுறம் நிற்க; அவ்வுரையாசிரியர்க்கும் முற்பட்ட சிலப்பதிகார அரும்பதவுரைகாரர் 11–ஆம் காதை 16–ஆம் அடியுரையில் 'பஃறுளியாறு – குமரிப்பக்கத்தோர் யாறு' என்றெழுதியுள்ளார். இது குமரியாறும் பஃறுளி யாறும் நெருங்கியுள்ளவையே என்பதை விளக்கி, அடியார்க்கு நல்லார் கூற்றோடு முரணுகின்றது. இதனால் அவ்விரண்டாற்றுக்கும் இடைப்பட்ட தொரு சிறுநாடே தென்னாட்டில் அழிந்ததாக வேண்டுமென்பது பெறப்படும்.
>
> (மு. இராகவையங்கார், 1905;275)

என்று கூறி அவ்வாறு அழிந்த பகுதியைப் பேராசிரியரின் உரையால் ‘பனைநாடு’ என்ற பகுதியே அது என்பதைக் குறித்து அடியார்க்கு நல்லார் நாற்பத் தொன்பது நாடு கடல்கோளால் அழிந்தது என்று கூறுவது இச்சிறு இடத்தில் இருந்த பகுதிகளாக இருக்கலாம் என்று ஊகித்து, எவ்வாறாயினும் இடைச்சங்க காலத்தில் கடல்கோள் நடந்து மதுரையின் ஒரு பகுதியைக் கடல் விழுங்கிவிட்டது ஏற்கத்தக்கதே என்று நிறுவுகின்றார். மேலும் இவ்வாறு அழிந்த பகுதிக்குப் பதிலாகச் சேர சோழ அரசர்களிடமிருந்து குண்டூர், முத்தூர் என்னும் இரண்டுப் பகுதியைப் பாண்டியன் பெற்றான் என்பதையும் அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார காடுகாண் காதை 17–22 ஆம் அடிகளின் உரையில் கூறியிருப்பதால், அவ்வாறு அழிந்த நிலப்பகுதி இன்னதென்று தெரியவருவதைப் பார்க்கிறோம். இந்நிகழ்வால் நிலம் பெற்றான் என்பதற்கு மற்றுமொரு சான்றாகக் கலித்தொகையில் “மலிதிரை பூர்ந்து தன் மண்கடல் வெளவாலின் புலியோடு வின்னிக்கிப் புகழ் பொறித்த கிளர் கெண்டை” எனச் கலித்தொகையில் சொல்லப் படுவதையும் தருகின்றார்.

இறையனார் களவியலுரையில் கூறும் கடல்கோள், தலைச் சங்கத்தில் நிகழ்ந்ததென்று அடியார்க்கு நல்லார் பிழையாகப் பொருட் படுத்திக் கொண்டதோடு இளம்பூரணார் கூறாதக் கூற்றையும் அதாவது, தலைச்சங்கமென்று தமது முகவுரையில் கூறாததையும் சேர்த்து தவறுதலாகப் பொருள் கொண்டு விட்டதாகச் சுட்டிக்காட்டி, இறையனார் அகப்பொருளுரைக் குறிப்பிடுவது இடைச் சங்கக் கடல்கோளையே யென்றும் இக்காலத்தில் வாழ்ந்த நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையத்தில் தான் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டதென்றும் தொகுத்துத் தருகின்றார்.

இக்கடல்கோள் இடைச்சங்க இறுதியில் நடந்ததாகக் கொள்வதற்கும், தலைச்சங்க கடல்கோளைபற்றியும் கடைச்சங்க கடல்கோளைப் பற்றியும் ஏற்பதற்குச் சான்றுகளாக இ.டென்னன்டு என்னும் ஆங்கில அறிஞர் தமது சிலோன் (Tennent’s Ceylon) என்னும் நூலின் முதல் தொகுதியில், கிறிஸ்து பிறப்பதற்கும் 2387 ஆண்டுகளுக்கு முன் ஒரு கடல் கோள் நடந்ததை பௌத்த வரலாறு கூறுவதாகக் கூறியதையும் சான்றுகளாக நிறுவி The Tamils 1800 years ago (P.21) என்னும் நூலில் வி. கனகசபைப் பிள்ளை தந்திருக்கும் சான்றினையும் காட்டி, மூன்று கடல்கோள் நடந்ததை முறையே கீழ்வருமாறு அமைத்துள்ளார்.

> இவற்றால் இற்றைக்கு 4292 வருஷங்கட்குமுன் நிகழ்ந்த முதற்கடல்கோள் ஒன்றாகவிருந்த இலங்கை இந்தியாக்களைப் பிரித்து விட்டதென்பதும், இரண்டாம் கடல்கோள், கி.மு.6 ஆம்

நூற்றாண்டு தொடக்கத்தே நிகழ்ந்ததென்பதும், மூன்றாம் கடல்கோள் மூன்றாம் நூற்றாண்டில் நடந்ததென்பதும் விளங்கின. இவற்றுள் முதலாஞ்செய்தி கி.மு.12 ஆம் நூற்றாண்டின தென்று தெளியப்பட்ட பாரத காலத்துக்குப் பெரிது முற்பட்டிருந்ததோடு, இலங்கையும் இந்தியாவும் ஒன்றாயிருந்த பழங்காலத்து விஷயமாகவும் இருத்தலால், அதனைப் பிந்திய இடைச்சங்ககாலத்து நிகழ்ச்சியாகக் கூறுதல் பொருத்தாது. கி.மு.ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்து இலங்கைத் தீவத்தின் தென்மேற்றிசையில், (அஃதாவது கன்னியாகுமரிச் சார்பாயுள்ள கடற்பிற தேசத்திலே) நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் கடல்கோள், தலைச்சங்க மிருந்த பாரத காலத்துக்குச் சில நூற்றாண்டுக்குப்பின் நிகழ்ந்ததாகத் தெரிதலால், அதனை முடத்திருமாறன் காலத்து நிகழ்ச்சியாக ஒப்புக் கொள்ளலாம்.

அஃதன்றேல், மூன்றாவதாகக் கூறப்படும் கி.மு.3ம் நூற்றாண்டில் நிகழ்ந்த கடல்கோளாகவே கொள்ளப்படும். எங்ஙனமாயினும் கி.மு.6 ஆம் நூற்றாண்டுக்கும் கி.மு.3 ம் நூற்றாண்டுக்கும் மத்திய காலமே இடைச்சங்க வரலாற்றிற் கண்ட கடல்கோட் காலமென்பதற்கு யாதோரிழுக்குமில்லை. ஆகவே, முடத்திருமாறனாகிய நிலந்தரு திருவிற்பாண்டியன் காலமும் "நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்து" என்பனதால் அப்பாண்டியன் காலத்துச் செய்யப்பட்டதாக விளங்கும் தொல்காப்பியர் காலமும் அந்நூற்றாண்டு கட்கிடைப்பட்ட தென்பதும் தானே பெறப்பட்டது.

(மேலது;281)

என மூன்று கடல்கோள்கள் குறித்தும் முச்சங்களின் காலம் குறித்தும் எடுத்துரைத்திருப்பதைப் பார்க்கிறோம். இன்னும் விளக்க வரும் மு.இராகவையங்கார் அவர்கள் நெட்டிமையாற் பாடிய புறநானூற்றின் 9 ஆம் பாடலான,

*எங்கோ வாழிய குடுமி தங்கோச்*

.....................................

...............................

*நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'.....*

(மேலது;281)

என்னும் பாடலடியினைக் காட்டி முடத்திருமாறனுக்கு முன்பிருந்தவன் பல்யாக சாலை முதுகுடுமி என்பதை அறிய இப்பாடல் உதவுவதாக விளக்கம் தருகிறார். அதாவது, இடைச்சங்கக் காலத்தில் நிகழ்ந்த கடல்கோளுக்கு

முன்பிருந்தவன் என்பது இப்பாடலில் வரும் பஃறுளி ஆற்றுமணல் குறிப்பெனக் கூறுகின்றார். மேலும் தொல் தமிழகத்தில் முச்சங்கம் இருந்தமைக்குக் கிடைக்கப் பெற்ற ஆதாரமாக, மாங்குடிமருதனர் மதுரைக்காஞ்சியில் பாண்டியன் தலையாங்கனத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடிய பாடலுள் அதாவது “பால்சாலை முதுகுடுமியின் / நல்வேள்வித் துறை போகிய / தொல் லாணை நல்லாசிரியர் / புணர்கூட்டுண்ட புகழ் சால்சிறப்பின் / நிலந்தரு திருவி னெடியோன் போல / மகிழ்ந்தினிதுறைமதி / என்னும் அடிகளின் வாயிலாக அறியப் பெரும் செய்திகளாகக் கிடைக்கப்பெறுவது இடைச்சங்க காலத்து, நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையில், நான் மறை முற்றிய அதங்கோட்டாசான் தொல் காப்பியனார், பனம்பாரனார் முதலிய புலவர்கள் அனைவரும் முதுகுடுமிப் போன்றவரென்பது கூறி, அப்புலவர்களின் சங்கத்தைப் போல அதாவது, நிலந்தருவினெடியோனை வாழ்த்துவதைப் போல தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியனையும் வாழ்த்துகின்றமையால் சங்க மென்ற ஒன்று இருந்துள்ளதை அறிய முடிவதாகக் குறிப்பிடுகின்றார். சங்கம் இருந்திருப்பதற்குச் சான்றுண்டா? என்று வினவுபவர்களுக்குக் கீழ்வரும் கருத்தினை அடைப்புக் குறிகளுக்குள் தந்துள்ளார்.

> சங்கமென்ப துண்டென்பதற்குப் பழம் பிரமாணர்களில்லை என கூறுவோர் தொல்லாணை நல்லாசிரியர் புணர்கூட்டுண்ட புகழ்கால் சிறப்பின் நிலந்தருதிருவினெடியோன், என மேற்குறித்த அடிகளாற் போதரும் சரித்திரவுண்மையை நுணகி ஆராயக்கடவர்.

(மேலது;280)

இதனோடு புறநானூற்றில் 9 ஆம் பாடலையும் 94 ஆம் பாடலையும் முதுகுடுமியைத் தலைவனாகக் கொண்டுப் பாடிய புலவர்கள், இடைச்சங்க கடல்கோளுக்கு முன்புறுந்தவர்களென்பதைக் காட்டி இக்கடல் கோள் நடந்த போது குமரியின் தெற்கெல்லை கடலாக இருந்ததா? ஆறாக இருந்ததா? என்ற ஆய்வாளர்களின் ஐயம் போக்கக் காரிக்கிழார் 9 ஆம் பாடலை அமைத்திருப்பதாக விளங்கி கொண்டு, குமரி என்று சுட்டப்படுவது ஆறே என்று முடிவு செய்கிறார். இப்புலவர்களின் காலத்திற்குப் பிறகு நிகழ்ந்த கடல்கோளால் இவ்வாறு கடலுள் மூழ்கியது என்பது ஐயமின்றி தெளிவு பெருவதற்குச் சான்றாக விளங்குவதைச் சுட்டுகின்றார். இவ்வாதத்தால் தமிழ்ச்சங்கம் இருந்ததென்பதும் பின்னர் கடல்கோள் நடந்ததென்றும் சொல்லப்பட்டு வந்த வாதங்கள் கட்டுக்கதையில்லை என்று நிறுவ முனைந்திருப்பதைப் பெறுகிறோம். மேலும் அவர் சில சான்றுகள் தந்து இக்கட்டுரையை முடித்திருக்கும் வாதத்தினையும் காண்போம்.

நற்றிணையின் 105 பாடலைப் பாடிய முடத்திருமாறன் முதற்சங்கம் தொட்டு இடைச் சங்கத்தின் இறுதி வரையிலும் இருந்தவனாகவும் இவனோடு தொல்காப்பியன், பாயிரம் பாடிய பனம்பாரனாரின் பாடலும் குறுந்தொகையில் 52 ஆம் பாடலும் காணப்படுவதைச் சுட்டுகின்றார். இறுதியாகச் சங்கம் இருந்ததென்பதையும் கடல்கோள் நடந்ததென்பதையும் நிறுவிட செங்கோன் தரைச் செலவு என்னும் நூல் (சுவடிகளிலிருந்தது என்று குறிக்கிறார்) மதுரையில் அச்சடிக்கப்பட்ட தென்றும் அந்நூல் பஃறுளி ஆறு கடலில் மூழ்குவதற்கும் முன் இயற்றப்பட்டதென்றும் கூறி, இதனை முதலூழித்தனியூர்ச்சேந்தன் என்னும் புலவர் பாடியுள்ளதாகத் தருகின்றார். இந்நூல் கிடைத்திருப்பதற்கான சான்றோ அல்லது கால ஆய்வில் ஈடுபட்ட பிற அறிஞர்கள் எடுத்துக் காட்டியதற்கான சான்றோ கிடைக்கவில்லை யென்பதையும் நாம் எண்ணிப்பார்க்க வேண்டியிருக்கிறது. முன்பு கூறத் தொடங்கியது போலவே இறுதியாக இவ்விடைச்சங்க காலத்தினைக் கீழ்வருமாறு வரையறைச் செய்கின்றார்.

> இதுகாறும் கூறிவந்தவற்றால் இடைச்சங்கமென்பது கி.மு.12 ஆம் நூற்றாண்டிதாகிய பாரத யுத்தத்துக்குப்பின் கி.மு.6 ஆவது அல்லது 3 ஆம் நூற்றாண்டுவரை அஃதாவது நமக்கு 2500 அல்லது 2205 வருஷங்களுக்கு முன் – இருந்ததாகத் துணியலாம்.

(மேலது;283)

இதனால் இடைச்சங்க காலம் 900 நூற்றாண்டுகள் நடைப்பெற்றதாக கூறிச் சென்றுள்ளார். சங்கம் தொடர்ச்சியாக இயங்கியதென்றாலும் இத்தனை ஆண்டுகாலம் அதிலும் இடைச்சங்க இறுதிகாலம் வரையிலும், சான்றாக முடத்திருமாறனின் முதற் சங்கம் தொட்டு இடைச்சங்கத்தின் இறுதி வரையிலும் இருந்தானென்பது எங்ஙனம் பொருந்துமென்று தெரியவில்லை. முதல் சங்கம் நடைப்பெற்ற ஆண்டு ஒன்பது நூற்றாண்டுகளுக்கும் மேல் என்பதும் பெறப்பட்டது. முதற்சங்க காலம் தொட்டு, அகத்தியர், தொல்காப்பியர், பனம்பாரனார், முடத்திருமாறன் எனப் பல புலவர்கள் வாழ்ந்திருந்தனர் என்பது இயல்பான வாழ்விற்குப் வாய்ப்பில்லை என்பதை அறிவோம். எனினும் இறையனார் களவியலில் கற்பனைக் கலந்து சங்கமிருந்த தென்ற உண்மையினைப் பெரிதும் மிகைப்படுத்தி கட்டமைத்துள்ளாரென்பது வெளிப்டையாகத் தெரியவருகிறது. இடைச்சங்க காலத்தை வரையறுத்த மு,இராகவையங்காரும் இப்பண்ணெடுங் காலம் இப்புலவர்களும் மன்னர்களும் வாழ்ந்து வந்தனர் என்ற கூற்றினை வெளிப்படுத்தாமல் உணர்த்திச் சென்றிருப்பதையும் பார்க்கிறோம்.

### 2.3.2.3. தலைச்சங்கமும் பாரத காலமும்

ஆடி மாத செந்தமிழில் தொகுதி 3 பகுதி 1 இல் பாரத காலமும் தமிழரும் என்னும் தலைப்பில் மு.இராகவைங்காரின் கட்டுரையில் சங்கம் இருந்ததா? என்று ஐயம் கொள்பவர்களுக்கு, இடைச்சங்கம் கட்டுரையில் எடுத்துக் காட்டிய அதே நிலந்தருதிருவிற் பாண்டியன் நெடியோன் என்ற வரிகளைக் காட்டி முதற் சங்கத்தில் இருந்தவர்களாக, சிவபிரான், முருகவேல், அகத்தியர், முரஞ்சியூர் முடிநாகராயர் முதலியோர்களுள் முரஞ்சியூர் முடிநாகராயை மட்டும் எடுத்துக் கொண்டு பாரத காலத்தைக் கண்டறிய முனைபவர் புறநானூற்று நூலின் இரண்டாவது பாடலான முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியதை ஆய்விற்கு தளமாக அமைத்துக் கொண்டிருக்கிறார். அதாவது முரஞ்சியூர் முடிநாகராயர் பாடிய அப்பாட்டிற்குத் தலைவனான சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன், பாரத போர் நிகழ்ந்த போது பாண்டவர்களுக்கு உணவளித்தான் என்ற தகவலைப் பெறுவதால், அப்பாரதப்போர் நிகழ்ந்த காலத்தில் அச்சேரனும் இப்புலவரும் இருந்தனர் என்பது பெறப் படுவதாகத் தருகின்றார். இச்செய்திக்குச் சான்றாக, அகநானூற்றில் மாமூலனாரும்

*மறப்படைக்குதிரை மாறா மைந்திற்*
*............உதியஞ்சேரல் பெருஞ்சோறு*
*கொடுத்த ஞான்றை யிரும்பல் கூளிச்*
*சுற்றங் குடியிருந் தாங்கு*

(மு. இராகவையங்கார், 1905;310)

என்று பாடியிருப்பதும் இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில் ஓரைவரீரைம் பதின்மருடன்றெழுந்த / போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த சேரன், என்று பாடியிருப்பதாலும் தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் தலைச்சங்க காலத்திருந்தவராக வான்மீகனார், மார்க்கண்டேயனார், கௌதமனார் முதலியோரைக் கூறுகின்றார். இதனை எடுத்துக் காட்டும் மு.இராகவையங்கார், வான்மீகனார் பாடல் புறநானூற்றின் 358 ஆம் பாடலாக இருப்பதையும் மார்க்கண்டேயனாரின் பாடல் புறம் 395 ஆம் பாடலாக இருப்பதையும், கோதமனார் பாடிய பாடல் 399 ஆம் பாடலாக அமைந்திருப்பதையும் காட்டி இதில் கோதனார் பாடலில் தரும புத்திரனே அறவோன் மகனே என்று கூறப்படுவதையும் சொல்லி அவன் பாண்டவர்களுள் முதலானான் எனவே இவர் பாரத காலத்தவர் என்பது மெய்ப்படுவதாக உரைக்கின்றார். எனவே இக்காலம் தலைச்சங்க காலம் என்பது தெளிவாகத் தெரிவதாக எழுதுகின்றார்.

இக்கோதமனாரோடு, பதிற்றுப் பத்தின் மூன்றாம் பத்தைப் பாடிய பாலை கௌதமனாரை வேறுபடுத்திக் காட்டி, தலைச்சங்க காலத்தில் இருந்த கௌதமனார் என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடும் கௌதமனார் இவரே எனக் காட்டுவதற்குச் சான்றாக, இவர் பாடிய பல்யானை செல்கெழுகுட்டுவன், என்னும் சேரன் இமய வரம்பன் நெடுஞ் சேரலாதனின் தம்பி என்பதால், இவர்கள் இருவரும் உதியஞ்சேரலின் மக்கள் என்பதைக் கூறி உதியஞ்சேரல் பாரத போரில் பாண்டவருக்கு உணவளித்தவன் என்பதை முன்னரே சுட்டிக் காட்டிவிட்டதால் பாரதக் காலத்தை அடுத்த காலத்தில் வாழ்ந்தவர் கௌதமனார் என நிறுவுகின்றார். இப்பாலைக் கௌதமனார், பல்யானை செல்கெழு குட்டுவனைப் பாடி சுவர்கம் சென்றாரென்பது கடைச்சங்கக் காலத்தில் வழங்கப்பட்ட செய்தியென்று உரைக்கின்றார். இறுதியாக அப்பாரத காலத்தையும் முடிஞ்சியூர் முடிநாகர் காலத்தையும் கீழ்வருமாறு தருகிறார்.

> ஸ்ரீமத் வி. கோபாலையரவர்கள் பிரபலமான பதினொரு தக்க காரணங்களால், கி.மு.12 ஆம் நூற்றாண்டினிறுதியே பாரதயுத்த காலமென்று, படிப்போர் மகிழ்ந்துவக்கும் படி இந்தியன் ரெவ்யூ என்னும் ஆங்கிலப் பத்திரித்தினும் தாம் தனித்து வெளியிட்ட ஆங்கில நூலினும் (Chronology of Ancient India) நாட்டியிருக்கின்றனர். இவ்வையரவர்களது கொள்கையை சரிதவாராய்ச்சி வல்லார் பலர் உண்மையுடையதென்று துணிந்திருக்கின்றார். இவ்வாறு அக்கொள்கை என்றும் அசைவுபெறாத வலிபெறுமாயின் நமக்கு முப்பத்தொரு நூற்றாண்டுகட்கு முந்திய பாரத யுத்தகாலத்தையொட்டி, முரஞ்சியூர் முடிநாகராயர், கௌதமனார், வான்மீகையார், மார்க்கண்டேயானார் குமட்டூர்க் கண்ணனார் முதலிய புலவர்கள் தலைச்சங்கத்திலிருந்து தமிழ் வளர்த்தார்களென்று முடிக்கலாம்.

(மு. இராகவையங்கார், 1905;311)

இத்தலைச் சங்க காலத்தில் தான், அதாவது பாரத காலத்தை யொட்டியே தென்னாடு வந்து, காடுகளைத் திருத்தி, கண்ணபிரான் வழியினரான வேளிரைக் குடியேற்றியதோடு, தலைச்சங்கம் நிறுவினார் என்ற நச்சினார்க்கினியரின் கூற்றும் மெய்ப்படும் எனக் காட்டுகின்றார். இவ்வாய்வின் முடிவையும் இதற்கு முன்னிதழில் 'இடைச்சங்கம்' என்ற தலைப்பிட்டுத் தந்திருந்த ஆய்வின் முடிவையும் ஒப்பு நோக்கினால், மு. இராகவையங்கார் முரண்பட்ட கருத்தினை முடிவாகத் தந்துள்ளாரென்பது தெரியவரும். அம்முடிவு யாதெனில் 1905 இல் ஜுன் மாத இதழில்

இடைச்சங்க காலம் கி.மு. 12 ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த பாரத யுத்தத்துக்குப் பின்னும் தொடர்ந்து கி.மு.6 அல்லது கி.மு.3 ஆம் நூற்றாண்டு வரை என்கிறார். பாரத யுத்த காலமான கி.மு.12 ஆம் நூற்றாண்டு தலைச்சங்கதவரான முரஞ்சியூர் முடிநாகராயர், கௌதமனார், வான் மீகையார், மார்க்கண்டேயர் குமட்டுர்க்கண்ணனார் முதலியோர் வாழ்ந்ததாக முடிக்கிறார். இவ்விரண்டும் தலைச்சங்கம் காலத்தின் கால நிருபணமா? அல்லது இடைச்சங்க காலத்தின் வரையறையா? என்பது தெளியவில்லை, அத்தோடு பாரத காலமும் தமிழரும் என்னும் இக்கட்டுரையில் முரஞ்சியூர் முடிநாகராயரைப் பற்றிக்கூறவருகையில் தந்திருக்கும் பத்தியைக் கீழே காட்டுவதன் மூலம் இன்னொரு முரணும் விளங்க வருவதைக் காணமுடியும்.

> பழைய புலவரது வரலாறுகள் சிலவற்றை ஆராய்வதற்குக் கடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்டும் தொகுக்கப்பட்டுமுள்ள நூல்களே சிறந்த கருவிகளாகும். அவற்றுள் புறநானூறு சிறந்தது. அந்நூலின் இரண்டாவது செய்யுள் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் பாரதயுத்தத்திற் பாண்டவர் பக்கம் நின்று அப்பெரும்போர் முடியுந்துணையும் பாண்டவசேனைக்கு உணவளிக்கும் அருஞ்செயலை மேற்கொண்டு புரிந்தவன். இக்காரணம் பற்றியே பெருஞ்சோற்றுதியன் என்னும் அடையுடன் வழங்கப்பட்டான்.

(மேலது;305)

என்று தந்திருக்கும் பத்தியில் பழைய புலவரது வரலாறுகள் சிலவற்றை ஆராய்வதற்குக் கடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்டும் தொகுக்கப்பட்டுமுள்ள நூல்களே சிறந்த கருவியாகும் என்றும் கடைச்சங்க காலத்து புறநானூறு என்றும் எழுதியிருப்பது முன்னர் இடைச்சங்க காலம் என்று வரையறைச் செய்யப்பட்டதும் நிராகரிக்கப்படுகிறது. பாரதகாலமும் தமிழரும் என்னும் இக்கட்டுரையின் முடிவாய் தலைச்சங்கத்தினை வரையறுத்த காலமே இடைச்சங்கத்திற்கும் உரிய காலமாக இருப்பதும் தெரியவருகிறது. மூன்றாவதாகச் சொல்லவரும் கடைச் சங்க காலத்திற்கும் அதே புலவர்களின் பாடலை எடுத்தாண்டுள்ளதைக் காண்கிறோம். இவ்வாறு மும்முனை முரண்களையும் ஒரே காலகட்டத்திற்குள் வரையறுத்து அவ்வொரே காலக்கட்டத்தையே தலைசங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கமென அடையாளமிட்டிருப்பதையும் பார்க்கிறோம்.

### 2.3.2.4. கடைச்சங்க காலம்

பகுதி மூன்றில் 'வேள் அண்டிரன்' என்னும் குறுநில மன்னனைக் குறித்து மு.இராகவையங்கார் எழுதியுள்ளார். இவ்வேள் அண்டிரன் 'ஆய்' என்று குறிக்கப்பட்டதைக்காட்டி வள்ளல் தன்மையைப் பாடிய புலவர்களாக

உறையூர் ஏணிச்சேரி முடமோசியர், துறையூர் ஓடைகிழார், குட்டுவன் கீரனார் ஆகியோரை தந்து, மோசியார் பாடியுள்ள "மழைக்கணந் சேக்கு மாமலைக் கிழவன் / வழைப்பூங் கண்ணி வாய் வாளண்டிரன் / குன்றம் பாடின கொல்லோ / களிறுமிக வுடைய விக்கவின்பெறு காடே / என்ற பாடலைத் தந்த இவனின் கொடைச்சிறப்பை உணர செய்துள்ளார். இவ்வாய் அண்டிரனோடு அகநானூற்றில் ஆய் எயினன் என்று ஒருவன் பாடப்பட்டுள்ளதையும் தந்து, அவனின் இவன் வேறானவன் என்று பிரித்துக்காட்டி இவ்வேளிரோடு சளுக்கியர் என்னும் இனத்தவர் தொடர்புடையவரென்றும், இவ்விருப்பிரிவினரும் வடதிசையிலிருந்து தமிழகம் புகுந்தவர்களென்றும் உரைத்துள்ளார். இறுதியாக இவன் காலம் குறித்து கூறுகையில் 1750 ஆண்டுகளுக்கு முன்பு டாலமி என்னும் யவன அறிஞரின் பயணக்குறிப்பினைக் காட்டி டாலமி இந்தியாவிற்குள் வந்து தமிழகம் வந்த போது இங்குக் கடைச்சங்க காலம் நிலவி கொண்டிருந்தது என்றும் அவரின் குறிப்பில் யவனர்கள் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பனவற்றையும் கீழ்வருமாறு காட்டுகின்றார்.

> இவ்யவனாசிரியர் இங்கு வந்த சமயம் கடைச்சங்கம் நிகழ்ந்த காலமாம். யவனர்கள் முன்னாளில் சேரனாட்டுப் பெருந்தறைமுகப் பட்டினமாயிருந்த தொண்டி, முசிறி முதலிய விடங்களில் நம் கப்பலுடனிறங்கி மிளகு முதலிய பொருள்களை விலைக்குப் பெற்றுச் செல்வதும் உண்ணாடுகளில் வியாபாரஞ் செய்வதும் பெருவழக்கமாயிருந்ததென்பது, டாலமி முதலியோர் குறிப்புகளால் விளங்குதலேயன்றி, பழைய சங்க நூல்களிலும் அச்செய்திகள் கேட்கப்படுகின்றன. இதனை "யவனர் தந்த வினைமானன்கலம், பொன்னொடு வந்து கறியொடு பெயரும், வளங்கெழு முசிறி" (அகம்) என்பன போன்றவற்றான் அறிக– இனி, மேற்கூறிய டாலமியாசிரியர் தங்குறிப்பில் தமிழகத்துள்ள பல நகரங்களைப் பற்றி யெழுதிய விடத்தில், ஆயது நாட்டையும் அதனுள் ஐந்து துறைமுகங்களையும் குறித்திருக்கின்றார். அவ்வாசிரியர் எழுத்துப்படி ஆராய்ந்தால், வேள் ஆயுடையநாடு திருவாங்கூர் ஸம்ஸ்தானத்துள்ள கோட்டயமென்னும் ஊர்க்கு தெற்கண் உள்ள பிரதேசமாகு மென்பர். இவ்வாறு 1750 வருஷத்துக்கு முன்னிருந்த யவனாசிரியரொருவர் ஆய்நாட்டைக் குறித்திருத்தலால், அக்காலத்துக்கு முன்பு விளங்கிய வள்ளல் "ஆய் அண்டிரன்" என்பது வெளியாகின்றது.
>
> (மு. இராகவையங்கார், 1906;96)

என்று வேள் ஆய் அண்டிரன் காலத்தைக் சுட்டிக் காட்டுபவர், தமது வேளீர் வரலாறு என்னும் நூலுள், யவன நாட்டைச் சேர்ந்தவர்களே இவ்வேளீர் என்றும் அகத்திய முனிவரின் தமிழக வருகையின் போது உடன் வந்து குடி யேறியவர்களென்றும், கூறியுள்ளதையும் இவ்விடம் நினைவுறுத்தி கொள்வது பொருத்தமென நினைக்கிறேன்.

இவ்வாண்டில் (1906) நான்காம் தொகுதியின் 5 ஆம் பகுதியில் "வேளீர் வரலாற்று மறுப்பு" என்ற தலைப்பில் ஸ்ரீமத். கார்த்திகேய முதலியார் எழுதியுள்ளார். அதற்கு முன்பாக 'நன்னன் வேண்மான்' என்னும் சங்க கால குறுநில மன்னனைப் பற்றி மு.இராகவையங்கார் வேளிரினத்தவனென்று கூறி இவனைப் பற்றிய பாடல்களின் வழி ஆராய்ந்துள்ளார். இவனைப் பற்றிய குறிப்புகள் அகநானூறு, (97) மலைபடுகடாம் (அடி94) பத்துப்பாட்டு, (372) முதலிய நூல்களில் கிடைக்கப் பெறுவதையெல்லாம் சுட்டிக்காட்டி, இவனின் நாடு பல்குன்றக் கோட்டமென்றும் இதன் தலைநகர் செங்கண்மா என்றும் தந்து, இவனை நன்னன் சேய் நன்னன் என்றும் புகழப்படுவதை மதுரைக் காஞ்சியின் வின்னவி நடக்கைமேவரும் பெரும் பூண் / நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு / என்று குறித்துக்காட்டி செல்கின்றார்.

இறுதியாக இவனது குலம் குறித்து கூறுகையில், இவன் வேளீர் மரபைச் சார்ந்தவன் என்றும், வேளீர் எனப்பட்டவர் பழைய சளுக்கியரே என்பதை நினைவுறுத்தி கீழ்வருமாறு உரைக்கின்றார்.

> ஆனால் இந்நன்னன் குலத்தைச் சளுக்கியர் மரபென்பதினும் அவரது சகோதரவகுப்பினராகிய கடம்பர் மரபென்றல் பொருத்தமாகத் தெரிகிறது. ஆதிசரித்திரத்தை நோக்கும் பொழுது சளுக்கரும் கடம்பரும் குலத்தில் வேறுபட்டவரல்லர்.
>
> (மேலது;190)

என எழுதப் புகுந்து,

> தம்மைப் பிறப்பித்த முனிவரிடத்திலிருந்து பெற்ற "ஆரீதிபுத்திரர்" என்னும் பெயரும், மானவ்யகோத்திரமும், முருகக் கடவுளைத் தங்குல தெய்வமாகக் கொண்டமையும் சளுக்கியர்க்கும் கடம்பர்க்கும் வித்தியாசமின்றியே காணப்படுகின்றன. இவருள் கடம்பரென்பவர், தம்மிருக்கைப் பக்கத்தே (தங்குல தெய்வமாகிய முருகக்கடவுட்குரிய) கடம்பமரத்தை வளர்த்து அதனைப் பெரிதும் போற்றிவந்ததனால் அப்பெயர் பெறலாயினர். (Bombay Gazeteer, Vol. I, Part II, Page 286) இவ்வாறு கடம்பைப் போற்றிய வேளீர் வகுப்பார், சங்க காலத்தில் மேற்கூறிய நன்னன் வழியினராகவே காணப்படுகின்றார். பதிற்றுபத்தின் நான்காம் பதிகத்தில் 'உருள் பூங்கடம்பன் நெடுவாயினன்னன் என்று கூறப்பட்டுள்ளது.
>
> (மேலது;190)

என்றெல்லாம் தந்து இறுதியாக வேளிருள்ளே கடம்பரென்ற பிரிவுள்ளதால் அவர்களே இவர்களேன்று கூறி, இதற்குப் பம்பாய் இராஜதானியில் சான்றுள்ளதாகச் கூறி இவ்வேளிராகிய சாளுக்கியர் மகத நாட்டு ஆந்திரரினின்று பிரித்தவரென்பதையும் தருகின்றார். இவ்வம்சத்தினரை இவ்வாறெல்லாம் தந்து இறுதியாக 'வேளீர்' என்று தமிழ் நூல்களிற்கூறப்பட்டோர், மிகப் பழைய காலத்தே மகத நாடாண்ட ஆந்திரனின்று பிரிந்து தென்னாடண்ட ஒரு சிற்றரசர் என்றே பழைய நூல்களும் பிறவும் குறிக்கின்றன என முடித்துள்ளார். இம்முறையோடு வேளீர் வரலாறு என்னும் நூலின் கருத்துகளோடு சற்றே முரண்படுகிறது. வேளிர் வரலாறு நூலில் அகத்தியரோடு வந்தவரென்றும் கண்ணபிரான் வழித்தோன்றல் என்றும் கூறி இவ்விடம் ஆந்திரர் என்று உரைத்திருப்பது முன்னுக்குப் பின் முரணாக அமைந்திருப்பதைக் காண்கிறோம். இதனாலோ தானோ என்னவோ இதே இதழில் (பங்குனி) ப.தி. கார்த்திகேய முதலியார் 'வேளீர் வரலாற்று மறுப்பு' என்னும் தலைப்பிலான சிந்தனையை வெளிப்படுத்தியுள்ளார். இக்கட்டுரை இவர்களின் இனம் குறித்தப் புரிதலை மட்டும் தருவதால் அடுத்தக் கட்டுரையை நோக்குவோம்.

### 2.3.3. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரின் மூன்று முடிவுகளும் சங்ககால கடைவள்ளல்களின் காலமும்

இந்நான்காம் தொகுதியின் (வைகாசி பகுதி 7) இதழில் கடைவள்ளலார் காலம் என்னும் தலைப்பில் பங்களூர் ஸென்ட்ரல் காலேஜ் போரசாசிரியர் எஸ்.கிருஷ்ணசாமி ஐயங்காரென்பவர் எழுதியுள்ளார்.

இவ்வுரை மதுரை தமிழ்ச் சங்கத்தின் (ஐந்தாம் ஆண்டின்) 1906 மே 25 மாலையில் உ.வே.சாமிநாதையரவர்களின் தலைமையில் வாசிக்கப்பட்டதென்று அடிக்குறிப்பில் தந்துள்ளார்.

இக்கட்டுரையினை, கீழ்வரும் மூன்று முடிவுகளை ஆதாரமாகக் கொண்டு தொடங்குகின்றார்.

1. தொன்றுதொட்டு வழங்கும் மூன்றுஞ் சங்கமென்னுமொரு கல்விக்கழகம் இருந்திருக்கக் கூடுமென்பதொன்று.

2. இச்சங்கம் மிக வுயர்ந்த நிலைமையிலிருந்த காலம், சேரன் செங்குட்டுவன் காலமே யென்பது மற்றொன்று.

3. இச்செங்குட்டுவன் காலம் இதுகாறும் தெரிந்த பாட்டில் கி.பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டாயிருத்தல் வேண்டும்.

(எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், 1906;347)

இம்மூன்று முடிவுகளைக் காட்டிப் பின்னர் முச்சங்கங்களில் கடைச்சங்கத்தின் புலவர்களாக அறியவரும் நாற்பத்தொன்பது பேரும், இச்சங்கத்தை நிறுவி வளர்த்தெடுத்தவர்களான பாண்டியன் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி யீராக நாற்பதின்மர் என்றும் இவர்களுள் மூவர் தமது கவிதையை அரங்கேற்றம் செய்தனரென்றும் அவர்களுள் இவ்வுக்கிரப் பெருவழுதி முன்பே திருவள்ளுவரின் குறள் அரங்கேற்றப்பட்டதென்பதையும் எடுத்துரைக்க வருபவர்.

> திருவள்ளுவமாலையில் உக்கிர பாண்டியன் சாற்றுக்கவி யொன்றிருக்க, ஔவையென்னும் பெயரோ, புகழ்ப் பெயரோ பெற்ற உடன் பிறந்தான் நாயனாருக்கிருந்தனவென்பது அனைவருமறிவர். இக்கல்விக்கரசி இப்பாண்டியனையும் இவன் நண்பராகிய சோழன் ராஜசூயம் வேட்டபெருநற்கிள்ளியையும், சேரமான் விமாவெண் கோவையும் புறப்பாட்டு முந்நூற்றுபத்தேழில் இவர்கள் பெயர் புலப்படுத்தினா ரல்லரேனும் புகழ்ந்துள்ளார்.
>
> (மேலது;348)

மேற்கண்டதில் திருவள்ளுவமாலையில் உக்கிரபாண்டியனின் பாடல் ஒன்றிருப்பதும் அவ்வையார் திருவள்ளுவரின் உடன்பிறந்தாலென்பதையும் நினைவுக் கூர்ந்து, புறநானூற்றில் **99** ஆம் பாடலில் அவ்வையார், உக்கிரப்பாண்டியனையும் ராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளியையும், சேரமான் மாவெண் கோவையும் குறிப்பால் உணர்த்தி பாடியதையும் காட்டி, ஐயூர் மூலங்கிழார், உக்கிரப் பெருவழுதி வேங்கை மார்பனைவென்ற செய்தியைப் புறம் **21** ஆம் பாடலில் தந்துள்ளதையும் காட்டுகின்றார். அகநானூற்றைப் தொகுப்பித்தோனும் இவ்வுக்கிரப் பாண்டியனே என்பதைச் சொல்லி சிலப்பதிகாரத்தின் செய்யுலொன்றில் உக்கிரப்பெருவழுதி எவ்வாறு புகழப்படுகிறான் என்று நினைவுறுத்துகின்றார். இவ்வுக்கிரப்பெருவழுதி காலத்தில் அவ்வையாரைப் பெரிதும் போற்றியவர் அதிகமான் நெடுமான் அஞ்சியும் இவ்வஞ்சியின் புதல்வனாகிய பொருட்டெழினி என்பதையும் எடுத்துரைக்கின்றார்.

அவ்வையார் அதிகமாகப் போற்றி பாடியது அதிகமான் நெடுமான் அஞ்சியையும், அவனின் மகன் பொருட்டெழினி என்பதையும் எடுத்துரைத்து புறநானூற்றில் **91** அம் பாடலில் கிடைக்கப்பெறுவதை,

*ஆர்கலி நறவி னதியர் கோமான்*
*போநடுதிருவிற் பொலந்தா ரஞ்சி என்றும்*
*நீயே தொன்னிலைப்*
*பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட*

*சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா*
*தாத னின்னகத் தடக்கிச்*
*சாத னீங்க வெமக்கீத் தனையே*

(மேலது;349)

என்ற பாடலில் கிடைக்கவரும் செய்தியை, நல்லூர் நத்தத்தனர் தாமியற்றிய சிறுபாணாற்றுப் படையில்,

*"மால்வரை, கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி*
*யமிழ்துவிளை தீங்கனி யௌவைக்கித்த*
*வுரவுச்சி கனலு மொளிதிகழ்நெடுவே*
*லரவக் கடற்றனை யதிகனும்*

(மேலது;349)

மேற்கண்ட செய்தியை நத்தத்தனார் எறுமா நாட்டு நல்லியக் கோடனுடைய வள்ளன்மையைப் புகழ உவமைப்படுத்தியுள்ளதையும் சொல்லி புறநானூற்றின் **(99)** பாடலான,

*செருவட்டிமிழ்குரன் முரசி னெழுவரொடு*
*சென்றமர் கடந்தநின் னாற்றல் தோற்றிய*
*வன்றும் பாடுநர்க் கரியை யின்றும்*
*பரணன் பாடினன் மற்றொன் மற்றுநீ*
*முரண்மிகு கோவலூர் நூறிநி*
*னரணடு திகிரி யேந்திய தோளே*

(மேலது;350)

என்ற பாடலின் வாயிலாக அவ்வையாரும் பரணரும் நெடுமானஞ்சியும் சமகாலத்தவரென்பதைப் பின்வருமாறு நிறுவுகின்றார்.

> செங்குட்டுவற் கிளையோன் இளங்கோ வென்பதும், செங்குட்டுவனைப் பரணர் பாடினரென்பதும் இதினின்றும் ஐயமின்றியறியலாம் முன்னெடுத்துகாட்டிய சிறுபாண்மேற்கோளி னின்றும், ஔவையாருக்கும் அஞ்சிக்குமிருந்த நட்புத்தன்மை நன்கு விளங்கும். புறப்பாட்டு **(99)** தொண்ணூற் றொன்பதினின்றும் அஞ்சியைப் பரணர் சிறப்பித்தனரென்பது வெள்ளிடைமலையாம் ஆதலால், செங்குட்டுவன் அதிகமான் அஞ்சி, ஔவை, பரணர் இவர்கள் சமகாலத்தவர் அன்றேல் ஒரேதலை முறையிலிருந்தவராக வேண்டுமென்பதற் கையமில்லை.

(மேலது;351)

என முடிவு செய்து பின்னர் கடை வள்ளலார் காலம் என்ற தமது ஆய்வுப்பொருண்மையை நோக்கி நகர்கின்றவர், நல்லூர் நத்தத்தனார்

தாமியற்றிய சிறுபாணாற்றுபடையில் கடைவள்ளல்கள் எழுவருள் ஒருவரனான பேகன் மயிலுக்குப் போர்வை ஈந்ததைச் சுட்டியுள்ள அடிகளைக் காட்டுகின்றார். (கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய / அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன் / பெருங்கல நாடன் பேகன்) இதே செய்தியைப் பரணர் தாமியற்றிய புறநானூற்றில் 145 ஆம் பாடலில் தருவதோடு இப்பேகனின் மனைவியாகிய கண்ணகியைப் பிரிந்து வேறொருத்தியை நாடிய பொழுது கண்ணகியின் துயரைப் பாடியவர்களான கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோரைக் குறிபிட்டு கபிலருக்கும் பாரிக்கும் இருந்த பெரும் நட்பையும், முல்லைக்குத்தேர் ஈந்த உள்ளத்தை புறம் 200 பாடலும் – 202 பாடலும் தருவதை எடுத்துரைத்து 201 ஆம் பாடல் இருங்கோவேலைப் பற்றியுள்ளதால், பாரிக்கும் இருங்கோவேலுக்கும் சம்மந்தமிருக்குமென்றும், கபிலர், சேரன் மாந்தரஞ் சேரலிரும் பொறையின் காலத்துக்கு முற்பட்டரென்பதை புறம் 53 ஆம் பாடலைத் தந்து மாறோகத்து நப்பசலையார் புறம் 126 இல் பாடும் குன்றுக் குடையானான மலையமான் திருமுடிக்காரியை, கபிலர் ஒரிடத்தில் புகழ்ந்துள்ளதையும் சுட்டி, புறம் 174 இல் கபிலர் பெருவிறற்கிள்ளியையும் பாடியிருப்பதை அடுத்தடுத்து புறப்பாடல்களின் வழியாக எடுத்துக்காட்டி, கீழ்வருமாறு இம்முதலுரையை முடிக்கின்றார்.

> மேலேழுதியவாறு ஔவை, கபிலர், பரணரில் மூவரே முதலாகக்கருதிய விடத்து. ஏனைய அனைத்து கவிகளும் வள்ளலாரு மொரே தலை முறையில் வாழ்ந்ததாகக் கண்டுள்ளாம்.
>
> (மேலது;354)

இக்கட்டுரையின் தொடர்ச்சியனை ஆனி! (8) மாத இதழிலும் ஆடி மாத இதலும் வெளியிட்டு கரிகாலனைக் குறிப்பிடும் சிலப்பதிகார அடிகளைச் சுட்டிக்காட்டி, இக்கரிகாலனுக்குப் பின்னரே நெடுமுடிக்கிள்ளி வந்தானென்பதைப் பின்வருமாறு எழுதுகின்றார்.

> நெடுமுடிக்கிள்ளி என்னும் இக்கிள்ளியே கரிகாலனுக்குப் பின்வந்த அதிர்ஷ்ட வீனனான அரசனாவான், இவன் காலத்திற்றான் புகார்கடல் கொண்டதுமன்றி சோழ மேன்மையும், மிகவும் கீழ்ப்பாடைந்தது. தென்னிந்திய அரசர்களில் அதிர்ஷ்டவசமாய்க் கரிகாலெனென்று பெயர்படைத்தவர் சிலரேயாகக் கிள்ளி யென்போர் பலரேயாங் (சிலம்பு 9 புறத்தில் 12) அவர்களுக்குள் இவனொருவனென்று குறிப்பது வெகுகடினமான தாயுமிருக்கிறது. ஆயினும் தனிமைப்படுத்துஞ் சில விலக்கணங்கள் இவனை

இன்னோனென்று விளங்கிக் காட்டுங் கருவிகளாம். உறையூருக்கருகிலிருந்த நேரிவாயிலென்னு மூர்ப்புறத்துச் செங்குட்டுவனென்பா தன் பேராற்றலால்.

*மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா*
*வொத்த பண்பின ரென்பது மன்ன*
*ரிளவரசு பொறாஅ ரேவல் கேளார்*
*வளநா டழிக்கும் மாண்பின ராதலி*
*னொன்பது குடையு மொருபக லொழித்துக்*

கிள்ளியைத் தன்னரசில் நிலைபெறச் செய்தனன்

(மேலது;393)

மேற்கண்டதோடு பதிற்றுப்பத்தில் பரணரும் அவ்வாறே

*ஆராக் செருவிற் சோர் ழடிக் குரியோ*
*ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து*

(மேலது.393)

என்று தந்திருப்பதை எடுத்தாண்டு, சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் புகாரை கடைசியாய் ஆண்டவன் இவனே என்று சுட்டப்பட்டிருப்பதைக் குறிப்பிட்டு, இவன் தொண்டைமானிலிந்திரையனக்குத் தகப்பன் என்பதை மணிமேகலை ஆழத்திர நாடைந்த காதையிலும் (50, 60) அதற்கடுத்த காதையிலும் (177, 205) கிடைக்கப் பெறுவதைத் தருகிறார். இதன் மூலம், கரிகாலன் காலத்தை அடுத்து வாழ்ந்தவன் நெடுமுடிக்கிள்ளி என்பதைத் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

அடுத்த இதழில் (ஆடி–பகுதி 9) புகாரை இறுதியாக ஆண்ட நெடுமுடிக்கிள்ளியைக் குறிப்பிட்டாலும், இக்கிள்ளி என்று குறிக்கப்படும் அரசர்களைக் குறித்து கீழ்வருமாறு கேள்வியெழுப்பி முடிக்கிறார்.

> புறநானூற்றுப் பாடல்களில் வெவ்வேறு அடைகள் பெற்று வழங்கப்படும் கிள்ளிகளையெல்லாம் உறையூரிலிருந்தாரேயன்றிப் புகாருடன் புகலப்பெற்றிலிர். சிலப்பதிகாரத்திலும் உறையூர் ஒரு பேரூராய் வழங்கப்பட்டிருப்பதன்றி, சிறுபாணாற்றுப்படையிலும் கூட புகார் வழங்கப்பெறாதது வெகு முக்கியமான விஷயமென்பது பின் தெரியும்.

(மேலது;483)

எனத் தந்து முடிக்கிறார். சிறுபாணாற்றுப்படையில் புகார் கிள்ளியைச் சம்மந்தப்படுத்திக் கூறாமல்விட்டது பின் தெரியுமென்றவர் அடுத்த ஆவணி மாத இதழில் (பகுதி 10) இலங்கை சரித்திரத்தைக் கொண்டு அதாவது

கயவாகுவின் வரலாற்றையும் குறிப்பிடும் மகாவம்சத்தினூடாக அறியவரும் தமிழ் வேந்தர்கள் குறித்த தகவல்களைக் (மகாவம்சம் ராஜரத்நாகரி) காட்டி செல்கிறார். கரிகாலன் கயவாகுவின் தந்தை காலத்தில் இலங்கை மேல் படையெடுத்து சென்றதும், பின்னர் கயவாகு ஆட்சிப் பொறுப்பேற்று, சோழர்கள் மீது படையெடுத்து இலங்கையிலிருந்து கைதியாக அழைத்துவரப்பட்டவர்களை மீட்டானென்றும் கூறி இக்காலத்தில் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பெருவேள்வியிட்டானென்றும் இந்நிகழ்விற்கு முதலாம் கயவாகு வந்திருந்து கண்ணகி வழிபாட்டை இலங்கைக்கு எடுத்து சென்றானென்பதுமாக எடுத்துரைத்து,

> செங்குட்டுவன் காலம் கி.பி.2 ம் நூற்றாண்டென்றும் தமிழ் மிகச் செழிப்புற்றோங்கிய காலம் கி.பி.2,3 ம் நூற்றாண்டுகளே யென்றும் கொள்ள வேண்டியதாயிருக்கிறது.

(மேலது;528)

எனத் தந்து, இக்காலத்தில் வாழ்ந்த கடையெழு வள்ளல்களின் நாடாக, பின்வருவனவற்றைத் தருகிறார்.

> பழனிமலைக்குக் சுற்றியிருந்த நாடு நல்லூர்க்கதிபதியான பேகன் தாம். இதற்கும் தகடூர் நாட்டிற்கும் நடுப்பட்டது பாரியின் பறம்பு நாடாகக் கொள்ளலாம். இதற்குக் கிழக்கு இக்காலத்திய சேலமும் கோயம்புத்தூரும் சேர்ந்த கொங்கு நாடாகும். இதற்குச் செங்கிழக்காய் கீழ்சமுத்திரக்கரையருகிலுள்ளது திருக்கோவலூரான் காரியின் மலாடு, இதற்குத் தெற்குப் பட்டு வடக்குக் காஞ்சியை யுமுட்கொண்டது சோழநாடு. பாலைகாட்டுக் கண்வாய்க்குத் தெற்கிற்றாய் மலையமலையின் பொதியிற் குன்றைச் சுற்றிய நாடு ஆய்க்குரியதாயும், அதற்கெதிர் கிழக்காய் கொற்கையைச் சுற்றியது எவ்விதக்குரியதுமாகும்.

(மேலது;530)

என்றுரைத்து, பல்லவர்காலம் முதல் விஜயநகர காலம் வரையும் பருந்துபார்வையில் சுட்டித் தமது கட்டுரையை முடிக்கிறார். மேற்கண்டதால் சேர வம்சத்தவனாக சேரன் செங்குட்டுவன் காலமே அதாவது கி.பி. 2, 3 ஆம் நூற்றாண்டே இக்கடையெழு வள்ளல்களின் காலமென்பதை வரையறுத்திருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.3.4. மு. இராகவையங்காரின் புராண அடிப்படையிலான ஆய்வில் சங்க இலக்கிய நக்கீரனார் காலப்புரிதல்

இத்தொகுதியின் ஐப்பசி மாத இதழில் (பகுதி 12) நக்கீரனார் என்று மு. இராகவையங்கார் எழுதியிருக்கும் கட்டுரையில், நக்கீரனார் வரலாறு,

மதுரை மான்மியக்கள், சீகாளத்திப்புராண திருப்பரங்குன்றப் புராணம் முதலிய நூல்களில் கிடைக்கப் பெறும். அவரைப் பற்றின வரலாற்றினை அதாவது அவரைப் பற்றின கதைகளை எடுத்து காட்டி ஆராய்கின்றவர். அக்கதையினைப் பின்வருமாறு சொல்லத் தொடங்குகின்றார்.

மதுரைக் கணக்காயனார் மகனாராகிய நக்கீரனார். கடைச்சங்கத்திற் றலைமைப் புலவராக விளங்கினவர். இறையனார் திருவாய்மலர்ந்தருளிய அகப்பொருட் பாண்டியன் நியமனப்படி, உருத்திரசன்மர் முதலியோர் வியக்கும்படி சங்கத்தார் இயற்றிய உரைகளில்லாஞ் சிறந்தோருரையிட்டவர். வாங்கிய சூடாமணிக் கட்டிய பொற்கிழிபெற வேண்டி, திருவாலவா யுடையாரிடமிருந்து "கொங்கு தேர் வாழ்க்கை" என்னுந் திருப்பாசுரம் பெற்றுவந்த தருமி என்னும் பார்ப்பனச்சிறுவன் அக்கிழி பெறாவண்ணம், அப்பாசுரத்திற் குற்றங்கூறி மறுக்க, அவ்வாறு மறுத்தது தெரிந்து சிவபிரானே எதிரில் வந்து தர்க்கிக்க அவர் முன்னும் அஞ்சாது குற்றங்கூறி வாதித்த குற்றத்தால், பொற்றாமரையில் இறைவன் சினக்க வீழ்ந்து, பார்வதியார் கூந்தற்கும் செயற்கை மணமேயென்று கூறிய பழிப்பாலே குட்டநோயடைந்து அது தீர்தல்வேண்டித் திருக்கை வலையை நோக்கிச் சென்றார். செல்லுமிடையில் வழிக்கணிருந்த ஒரு தீர்த்தத்தையும் ஆலமரத்தையும் கண்டு அங்கேயிருந்து சிவ பூசை செய்யும் போது, ஓரிலை ஆலமரத்தினின்று தடாகத்தில் வீழ்ந்து பாதி மீனாகவும் பாதிப் பறவையாகவும் மாறித் தரையிலும் நீரிலு மொன்றையொன்று இழுத்து நிற்பதுகண்டு நக்கீரர் நிட்டை கலைந்து வியந்திருந்தனர். இங்ஙனமிருக்க பிரமரக்ஷச ஒன்று, இருமனப்பட்டுச் சிவ பூசையியற்றும் புலவர் ஆயிரவரை ஒருசேர உண்ண எண்ணங் கொண்டு தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென் பதின்மரை ஒரு குகையில் அடைத்து வைத்து, பின்னுமொருவரைத் தேடிவரும் போது சிவபூஜையில் இருமனப்பட்டிருந்த நக்கீரர் அகப்பட்ட, ஆயிரவரானது நற்காலமென்று அவரைத் தூக்கிவந்து குகையிலடைத்து, ஸ்நானஞ் செய்துவரச் சென்றது. இவரைக் கண்ட குகையிலிருந்த ஏனைப்புலவர்கள் 'ஓ! எங்கட்கு இன்றுடன் முடிவுகாலங் காட்டினையே' என்று பூதத்தின் செய்திகளையும் தங்கள் செய்தியினையும் கூறி முறையிட, அவற்றைக் கேட்ட நக்கீரர் திருமுகாற்றுப்படையோதி முருகக்கடவுளைத் துதிக்க, அக்கடவுள் வந்தருளி அப்பூதத்தினைக் கொன்று புலவர்களைச் சிறைமீட்டனர். பின், நக்கீரர் அக்கடவுள் நியமனப்படி ஒரு தீர்த்தத்தில் மூழ்கி, தகழிணகைலையாகிய திருக்காளத்தியில் எழுந்து குட்டநோய் நீங்கி ஆங்குக் கோயில் கொண்டருளிய சிவபிரானைத் தரிசித்துக்

கைலையாதிகாளத்தி பாதியந்தாதிபாடி முடிவில் முத்தியுமடைந்தனர் என்பது,

(மு. இராகவையங்கார், 1906;558)

என நக்கீரர் குறித்து கொல்லப்பட்டுள்ள கதையினைத் தருகின்றார். மேலும் திருவாலவாயுடையார் திருவிளையாடல்' என்னும் நூலுள் நக்கீரருக்கும் சிவனுக்கும் நடைபெற்ற வாதினைக் கூறும் பாடல்களையும் எடுத்துக்காட்டுகின்றார். தொடர்ச்சியாக "கொங்குதேர் வாழ்க்கை" என்று தொடங்கும் சங்கப்பாடலின் வரலாற்றினை நக்கீரரே இயற்றியதாக ஏற்று திருவெழு கூற்றிருக்கை என்னும் நூலிலும் பெருந்தேம்பாணி என்னும் நூலிலும் கிடைக்கப்பெறுவதாகக் கூறி இச்செய்தியை, திருநாவுக்கரசு நாயனாரும், "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனக் கிழி தருமிக்கருளினோன் காண்" என்று கூறியிருப்பதும், (திருப்பத்தூர்ப்பதிகம்) கல்லாடத்திலும் கூறப்படுவதையும் சுட்டி, நக்கீரர் இயற்றிய நூல்களாகப் பின்வருவனவற்றை வரிசையமைக்கிறார்.

க. திருமுருகாற்றுப்படை
உ. நெடுநல்வாடை
ங. கைலைபாதிகாளத்திபாதியந்தாதி
து. திருவீங்கோய்மலை எழுபது
ரு. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை
சா. திருவெழு கூற்றிருக்கை
அ. கோபப்பிரசாதம்
கா. காரெட்டு
க. போற்றித்திருக்கலிவெண்பா
கக. கண்ணப்பதேவர் திருமறம்
கஉ. குறுந்தொகை
கங. நற்றிணை
கச. அகநானூறு
கரு. புறநானூறு
கசா. நக்கீரனாரடிநாளு

(மேலது;563)

இவற்றோடு, தானே முழுதுணர்ந்து என்னும் பாயிரத்தைத் திருவள்ளுவர்மேல் பாடியுள்ளதையும் தந்து, இவர் பாட்டுடை அரசர்களாய் அமைத்துக் கொண்டவர்கள், பாண்டியன் நெடுஞ்செழியன், உக்கிரப் பெருவழுதி, பாண்டியன் நன்மாறன், கிள்ளிவளவன், கரிகாலன், சேரன் ஆதன் முதலியோரென்பதோடு காட்டி, மதுரை மேலைமாசி வீதியில் இவருக்குத் தனிகோயில் ஒன்றிருப்பதையும் நினையுறுத்தி இவரும்

கடைச்சங்கத்தை அலங்கரித்தப் புலவர்களுள் தலைமையானவரென்று முடிக்கின்றார். பன்னிரு திருமுறைகளுள் பதினோராம் திருமுறையினைப் போற்றிய பிற்கால நக்கீர தேவரின் நூல்களையும் சேர்த்து சங்க கால நக்கீரர் பாடியதாக மயங்கியிருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.3.5. சதாசிவம்பிள்ளை, அ.க. வைத்தியநாத தேசிகர் - சங்க இலக்கிய கால ஆய்வில் கல்லாடரின் காலம்

இத்தொகுதியின் மாசி மாத இதழில் கல்லாடம் என்னும் தலைப்பில் சதாசிவம் பிள்ளை ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதனுள்,

> கல்லாடர் செப்பனுவற் கல்லாட நூறுநூல் வல்லார் சங்கத்தில் வந்தருளிச் சொல்லாயு மாமதுரையீசர் மனமுவந்து கேட்டு முடி தாமசைத்தார் நூறு தரம்.

(சதாசிவம் பிள்ளை, 1906;122)

என்னும் பாடலை எடுத்துக்காட்டி இக்காலவரின் காலம் குறித்தப் புரிதலைப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

> கல்லாட முகப்பில் அச்சியற்றப் பெற்றிருக்கும் மேலுள்ள இவ்விரு செய்யுட்களாலும் அவ்வரிய நூலைச் செய்தவர் மதுரை முத்தமிழ்ச் சங்கப் புலவர்கள் நாற்பானென் பதின்மரில் ஒருவராகிய கல்லாடரென்று வெளியாகிறது. ஆனால் தற்காலத்துள்ள சில தக்க தமிழ் மகாவித்துவான்கள் கடைச்சங்க காலத்திற்கும் பின்தோன்றி அக்கல்லாடனார் திருநாமத்தையே தரித்துக் கொண்டிருந்த வேறொரு தக்க புலவராற் றிருவாய் மலர்ந்தருளியிருக்க வேண்டு மென்கிறார்கள். இதற்குக் காரணம் கடைச்சங்க காலத்திற்கு பின்னிகழ்ந்ததாகத் தெரியவரும் சிற்சில திருவிளையாட்டுக்கள் இந்நூலிற் கூறப் பெற்றிருப்பனவேயாம்.

(மேலது;123)

இதனால் கல்லாடர் சங்க காலப் புலவரென்று நிலவியிருந்த எண்ணத்தையும் பின்னர் அக்கருத்து மாறப்பெற்றிருப்பதையும் சுட்டி அவர்களைக் குறித்து ஆராயப்புகாமல், அப்பாடலைப் பற்றின தரவுகளை அறிய எழுதிச் செல்கின்றார்.

இத்தொகுதியின் புரட்டாசி மாத இதழின் ஆறாம் தொகுதியில் அ.க. வைத்தியநாத தேசிகர் என்பவரும் 'கல்லாடர்' என்று தலைப்பிட்டு பின்வருமாறு எழுதியுள்ளார்.

> *சொல்லென்னும் பூம்போது தோன்றிப் பொருளென்னும்*
> *நல்லிருந் தீந்தாது நாறுதலான் - மல்லிகையின்*

*வண்டார் கமழ்தாம மன்றே மலையாத*
*தண்டாரான் கூடற் றமிழ்*

என நல்லிசைப் புலவர்களெல்லாம் மனமொத்து நாவாரப்புகழும் பெருமை வாய்ந்த தமிழ் அரசு வீற்றிருப்பப்பெற்ற மதுரை மாநகரிலுள்ள கடைச்சங்கப் புலவர் நாற்பானென் பதின்மருள் ஒருவரே இக்கல்லாடர். ஒல்காப் புகழ்த் தொல்காப்பியத்துக்குரைகண்ட நச்சினார்க்கினியரை யுள்ளிட்ட ஐவர் உரையாசிரியர்களுள் ஒருவர்.

*ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத்துக்*
*குறையிடையிட்ட விரதர் கல்லாடர்*

எனப்பிறாண்டும் வருதல் காண்க. கடவுட் புலமைத் திருவள்ளுவரருளிச் செய்த திருக்குறளின் சிறப்புப்பாயிரமாகிய திருவள்ளுவ மாலையிற் "கல்லாடர்" எனக் குறிப்பிடப்பட்டாரும் இவரே. (பக்கம் **526**, **6** ஆம் தொகுதி)

*ஒன்றே பொருளினின் வேறென்ப வேறெனி*
*னன்றென்ப வாறு சமயத்தார் - நன்றென*
*வெப்பா லவரு மியைபவ வள்ளுவனார்*
*முப்பான் மொழிந்த மொழி*

(மேலது;526)

என்னும் திருவள்ளுவமாலைப் பாடல் கருத்துக் கல்லாடர் தாமியற்றிய

*சமயக் கணக்கர் மதிவழி கூறா*
*துலகியல் கூறிப் பொருளிது வென்ற*
*வள்ளுவன்றனக்கு வளர்கவிப் புலவர் முன்*
*முதற்கவிபாடிய முக்கட்பெருமான்*

என்று காணப்படுவதை எடுத்துக்காட்டி, பின்வருமாறு கூட்டி தருகின்றார்.

> இதனால் நாயனார், குறளை அரங்கேற்றிய காலத்துடனிருந்து புலவர் நாற்பானென்பதின் மக்களுள் இவரும் ஒருவர் என்பதும் திருவள்ளுவமாலையிற் கூறப்பட்ட கல்லாடரும் இக்கல்லாடரும் வேறல்லர் என்பதும் நுணகி யாராய்வார்க்கு இனிது புலப்படும். தெய்வப்புலவராம் நம்பெரியாரருளில் செய்த திருக்குறளின்கண் தேரான்றெளிவுந் தெளிந்தான் கண்ணையுறவுந் தீராவிடும் பைதரும் எனத் தெளிவிற் கெல்லையாகக் கூறப்பட்ட திருக்குறளைக் கல்லாடர் தாமியற்றிய கல்லாடத்தினும் 'தேரான்' றெளிவெனுந் திருக்குறட்புகுந்து எனக் கூறியிருந்தாலும் ஈண்டரயத்தக்கதாம். இதனான் நாயனாருடைய குறள் அரங்கேற்றத்தின் பின்பே கல்லாடம் இயற்றப்பட்டதென்பது நன்கு துணியப் படும்.

தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியனை நக்கீரர். நெடுநல்வாடையிற் புகழ்தாங்கு இக்கல்லாடரும் அவன் பெருமையை ஓர் அகவற்பாவாற்றெறிந்துள்ளார்.

(மேலது;527)

என்கின்ற காரணங்களை அடுக்கடுக்காகத் தந்து கல்லாடர் சங்க காலத்தவரென்றும், திருக்குறள் அரங்கேற்றம் கண்டபோது உடனிருந்தவரென்றும் சொல்லிச் சென்று, கீழ்வருமாறு எழுதி முடிக்கிறார்.

> கல்லாடர், இந்நூறு ஆசிரியப்பாக்களாலும் இடைச்சங்க காலமும் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த புலவர் தொகையும், கடைச்சங்க காலத்து நடந்த சில அற்புத சம்பவங்களும் கூடன் மாநகரிலெழுந்தருளிய இடக்கரத்தனாலேந்திய மடக்கொடி பாகனாம் செந்நிறவானவன் உஞற்றிய பல திருவிளையாடல்களும் பாரத ராமாயண சரிதங்களும், காரைக் காலம்மை, சாக்கிய நாயனார், மூர்த்திநாயனார், மார்க்கண்டேயர் முதலிய பல அன்பர்களின் திருந்தொண்டும் பெருத்தவீறும், இன்னும் பல பெரியாரின் அமைச்சரித்திரங்களுமாகிய இன்ன பிறவற்றை எல்லாம் எடுத்துக் கற்றவர் காமுறும் வண்ணம் கூறிச் சொல்கின்றார்.

(மேலது;528)

மேற்கண்டவற்றால் கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்குப் பின்பு வந்தவர்களையும் சுட்டியிருப்பதை அறிகிறோம். இதனால், பக்தி இலக்கிய காலத்தையும் சேர்த்து சங்க காலம் என்று கூறிபருப்பதும் கல்லாடரும் அக்காலம் என்று உணர்த்துவதும் சொல்லாமலே விளங்கும். 1908 இல் இத்தகைய புரிதலும் ஆராய்ச்சிப் போக்கும் தொடர்ந்துள்ளதைப் பார்க்கிறோம்.

### 2.3.6. சி.வி. வெங்கட்ராமையரின் தொன்ம அடிப்படையிலான சங்க கால ஆய்வில் கரிகாலனின் காலம்

விவேக போதினியின் 1911–12 இதழில் தொகுதி 4 (மார்கழி பகுதி 7) இல் சோழன் கரிகாலன் என்னும் தலைப்பில் சி.பி. வெங்கடராமையர் எம்.ஏ அவர்கள் எழுதியுள்ளார். இதில்,

> ஆதிகாலத்தில் சோழ நாட்டையாண்டு வந்த அரசர்களுள் அநேகர் கடைச்சங்கப் புலவர்களால் பெரிதும் பாராட்டப் பட்டிருக்கிறார்கள். அவர்களுள் சோழன் கரிகாலனே முதன்மையானவன் எனச் சிறப்பித்துக் கூறலாம். அவனைச் சோழன் கரிகாலன் என்றும், சோழன்கரிகால் வளவன் என்றும், சோழன் கரிகாற் பெருவளந்தான் என்றும் சொல்வதுண்டு.

(சி.வி. வெங்கட்ராமையர், 1911–12;295)

என்று சொல்லத் தொடங்கி, இவன் பத்துப்பாட்டு, புறநானூறு, பட்டினப்பாலை, பழமொழி, நூல்களில் போற்றப்படுவதைக் கூறுகிறார். இவனின் ஆட்சிச் சிறப்பைச் சொல்லி, இவனது காலம் கடைச்சங்கமென்பதை மட்டும் குறிப்பிடுகின்றார். இச்சங்ககாலம் இறையனார் களவியல் குறிக்கும் வழி என்பதை உணர்த்திச் சென்றுள்ளதைக் காணமுடிகின்றது.

## 2.3.7. நாகை ஸி. கோபாலகிருஷ்ணனின் சங்க கால ஆய்வில் நக்கீரரும் திருவள்ளுவரும்

விவேகபோதினியின் 5–ஆம் தொகுதி 1912 ஜீலை–1913–ஜீன் இதழில், நாகை ஸி. கோபால கிருஷ்ணன் என்பர் 'தெய்வப்புலமை நக்கீரனார்' என்னும் தலைப்பில் கட்டுரை வரைந்துள்ளார். இதில் மதுரையில் நிலவிய கடைச்சங்கத்து நாற்பத்தொன்பது புலவர்களுள், ஒருவரென்பதும், இவரே இறையனார் அகப்பொருளுக்கு உரையியற்றினாரென்பதும், இவ்வுரை நூலுக்கு முசிறியார் நீல கண்டனார் பாயிர உரை வரைந்தார் என்பதோடு, பத்துப்பாடல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப்படையை இயற்றியப் பெரும் புலவரென்பதும் தருவிக்கப்பட்டுள்ளன.

இவர்காலம் குறித்து கருத்துரைக்கையில் கிழ்வருமாறு இவர் எழுதியிருப்பது கிடைக்கப் பெறுகின்றது.

> நக்கீரர் காலமோ மிகப் பழமையானது, மதுரைக் கடைச்சங்கம் கிறிஸ்து பிறந்த முதல் நூற்றாண்டிற்குப் பிறகு இருந்த தில்லை என்பது பிரபல பண்டிதர்களின் ஆராய்ச்சியால் முடிவு கட்டப்பட்ட முடிவாதலாலும், ஆசிரியர் நக்கீரனார் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராதலாலும், அவருடையக் காலம் இன்றைக்குப் பதினெட்டு அல்லது பத்தொன்பது நூற்றாண்டுக்கு மேற்பட்டதாகும்.
>
> (நாகை.ஸி. கோபாலகிருஷ்ணன், 1912–13;11)

என்று முடிவுக்கட்டி அவர் பாடல்கள் குறித்த கவியின்பத்தினைப் போற்றி எழுதப் புகுகின்றார். இவ்வியலில் இவரின் காலம் கடைச்சங்க காலமெனப்படும் கி.பி. 1 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்று மட்டும் கூறி நிறுத்துகிறார்.

ஆறாம் தொகுதியில் 1913 ஜீலை –1914 ஜீன் எட்டாம் பகுதியில். பண்டைகாலத் தமிழ்ப் புலவர்கள் என்னும் பொதுத் தலைப்பில், 'திருவள்ளுவர்' குறித்த நாகை லி. கோபாலகிருஷ்ணன் எழுதியுள்ளார். இதனுள் திருவள்ளுவரின் சிறப்புகளைக் கூறத் தொடங்கி அவரை புகழ்ந்துரைத்தப் புலவர்களைத் சுட்டிக்காட்டி, அவரின் தொழில், மதம், முதலானவற்றோடு காலம் குறித்து ஒரு தகவலைத் தந்திருக்கிறார். கிறிஸ்து பிறப்பதற்கும் 95

ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவர் பிறந்திருக்க வேண்டுமென்றும், சரியாகக் குறிப்பிடவேண்டுமென்றால் கி.மு. 20 இல் அதாவது கடைச்சங்க காலத்தில் அரங்கேற்றியிருக்க வேண்டுமென்றும், திருக்குறள் அரங்கேற்றப்பட்டு 10 வருடங்கள் வாழ்ந்து வந்து 85 ஆம் அகவையில் புகழ் உடல் அடைத்தாரென்றும் 'ஸ்ரீ சுவாமி வேதாசலம், (மரைமலையடிகள்) தனது ஞானசாகரப் பத்திரிக்கையில் கூறியிருப்பது முற்றிலும் ஏற்கத்தக்கதே என்று கூறி இறுதியாக இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவர் வாழ்ந்தாரென்பது பெறப்பட்டதென்று முடிக்கின்றார். இதன் மூலம் திருவள்ளுவரின் காலம் கடைச்சங்க காலமென்பது நம்பத்தக்கதேயென்றுரைப்பதைப் பார்க்கிறோம்.

தொகுதி 7 இல் (1914 – ஆகஸ்டு) பகுதி இரண்டில் ஸ்ரீகோபாலகிருஷ்ணன் பண்டைக்காலத் தமிழ்ப் புலவர்கள், என்னும் தலைப்பில் பெருந்தேவனாரைப் பற்றி எழுதியுள்ளார். இக்கட்டுரையின் தொடக்கம் கீழ்வருமாறு அமைந்துள்ளது.

> சீருறும் பாடல் பன்னீராயிரமுஞ் செழுந் தமிழுக்கு – வீரர் தஞ்சங்கப் பலகையி லேற்றிய வித்தகனார்– பாரதம் பாடும் பெருந்தேவர்வாழும் பழம்பதிகாண் – மாருதம் பூவின் மணம் வீசிடுந் தொண்டைமண்டலமே என்னுந் தொண்டைமண்டல சதகச் செய்யுளால், இவர் தொண்டை நாட்டில் பிறந்து வளர்ந்தவர் என்பது இனிது பெறப்படுகின்றது.

(நாகை. ஸ்ரீ. கோபாலகிருஷ்ணன், 1914;54)

என்று தொடங்குபவர் இவர் வடமொழி புலமைப்பெற்றுப் பாரதத்தைத் தமிழில் இயற்றினாரென்றும் இப்பாரதம் கடைச்சங்கத்தில் அரங்கேற்றப் பட்டதென்றும், அவ்வாரே திருக்குறள் அரங்கேற்றம் செய்யப்பட்ட போது,

> எப்பொருளும் யாரும் இயல்பினறிவுறச் செப்பிய வள்ளுவர் தாஞ் செப்பவரு – முப்பாற்குப் பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டை மறை நேர்வனமற்றில்லை நிகர்.

(மேலது;54)

என்று புகழ்ந்துரைத்தாரென்றும் (பொருள்: 'பாரதம் பழைய இராம கதையை ஒப்பதாகும், மனுஸ்மிருதி பழையவேதத்தை ஒப்பதாகும். ஆனால் தெய்வத் திருக்குறள் நூலுக்கு ஒப்பதும் மிக்கதும் வேறில்லை) கூறி இதனோடு புறநானூறு, குறுந்தொகைப் போன்ற நூல்களுக்குப் பாயிரம் பாடிய சிறப்பு பெற்றவரென்றும் விளக்கிக் காட்டி இவரின் காலத்தைக் கீழ்வருமாறு தருகின்றார்.

> இவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராதலால், நக்கீரர், கபிலர், பரணர் முதலானவர்கள் இவரோடுடனிருந்த புலவர்கள் என்பதும், இவருடைய காலம் தெய்வப்புலமைத் திருவள்ளுவருடைய திருக்குறள் கடைச்சங்கத்தில் அரங்கேற்றப்பட்ட காலம் என்பதும், அதாவது இற்றைக்கு இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னராமென்பதும் இனிதறியக் கிடக்கின்றன.
>
> (மேலது;54)

என வரையறை படுத்துகின்றார். திருக்குறளின் காலத்தை முன்னரே கூறிவிட்டதை அடிப்படையாகக் கொண்டு கபிலர், பரணர், காலத்தோடு இப்பெருந்தேவனாரின் காலத்தையும் ஒன்றென கண்டு கொண்டிருக்கிறா ரென்பதும் தெரியவருகின்றன.

## 2.3.8. நாராயணையங்காரின் சங்கம் பற்றிய ஆய்வில் சோழர்களின் தமிழ்ச் சங்கம்

1914 இல் கார்த்திகை மாதத்து (பகுதி 1) பதிமூன்றாம் செந்தமிழ் தொகுதியில் 'சோழர் தமிழ்ச் சங்கம், என்று தலைப்பிட்டு எழுதப்பட்டுள்ளக் கட்டுரை கிடைக்கின்றது. இக்கட்டுரையில் பாண்டியர்களுக்குத் தமிழ்ச் சங்கம் இருந்துள்ளதைப் போல சோழர்க்கும் தமிழ்ச்சங்கம் இருந்திருக்கிறது என்ற கருத்தினை முன்வைக்கிறார். இதனை அப்பொழுது பத்திரிக்கை ஆசிரியராய் இருந்த நாராயணையங்கார் எழுதியுள்ளார். இச்சோழத் தமிழ்ச் சங்கம் இருந்துள்ளமைக்குச் சான்றாக, புறநானூற்றின் 34 ஆம் பாடலைக் காட்டுகின்றார். இக்கட்டுரையினை,

> சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன் தன்னிடத்துப் பரிசு பெற்றுப் போகின்ற ஆலந்தூர் கிழாரை நோக்கி நீ யெம்மை நினைத்து வருவையோ (எம்மை என்றது தானுந் தன் றேவியுமாகிய விரிவரையுங்குறித்து நின்றது. இதற்கு ஆயிழைகணவ என்றது துலங்கு. (தியோதகம்) நினைத்து வருவையோ வென்றது, அடிக்கடி எங்களை நினைத்து ஆசீர்வதித்திருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டபடி) வென்ன, அதற்கு அவர் உன்னை எந்நாளும் இருபொழுதும் வாழ்த்திப் பாடியிரேனாயின் நான் செய்ந்நன்றி கொன்றோனோவேன் என்ற கருத்தொடு பாடிய பாட்டென்று புறநானூற்றுள் உள்ளது. அப்பாட்டிற் காட்டிய செய்நன்றி யின்னதெனத் தெளிதலாலும், அப்பாட்டிலுள்ள பிற குறிப்புக்களாலும் சோழரதராட்சியில் ஒரு தமிழ்ச்சங்க மிருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.
>
> (நாராயணையங்கார் 1914;1)

எனத் தொடங்கி அப்புறப்பாடலை முழுவதுமாகத் தந்து, அப்பாடலில், இரத்தி நீடியவகன்றலை மன்றம்' என்று ஒரு மன்றம் குறிக்கப்படுவதையும் இம்மன்றம், இன்னதென்று விளங்க, கரப்பிலுள்ள பொடு வேண்டு மொழி பயிற்றி'' எனவருவதில் 'மொழிப் பயிற்றி' என்ற சொல், தமிழ்ச் சங்கத்தை உணர்த்துவதாகத் தந்துள்ளார். இறுதியாக,

> ஆதலாற் சங்கமென்னும் பெயரே தமிழ் மொழியில்லாமையால், தமிழ்நாட்டில் முன்பு தமிழ்ச்சங்கங்களில்லையென்பது பொருந்தாதென வுணர்க.

(மேலது;11)

என்று முடிக்கின்றார். இக்கட்டுரை முழுவதும் சோழர் அரசவையில் ஒரு சங்கமிருந்ததென்பதைக் கண்டறிய அப்புறப்பாடலைத் துணையாகக் கொண்டு செல்கிறதேதவிர, இச்சங்கம் இக்காலம் முதல் இக்காலம் வரை இருந்திருக்கிறதென்ற நோக்கத்தில் ஆராய புகவில்லையென்பதும் தெரிகிறது.

### 2.3.9. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியின் சங்கம் பற்றிய ஆய்வில் மூன்று கடல்கோளும் முச்சங்கமும்

புரட்டாசி மாத இதழில் (பகுதி 11) "தமிழ் நாடுகள்'' என்ற தலைப்பிட்டு பண்டித எஸ்.சுப்பிரமண்ய சாஸ்திரி என்பவர் ஒருக் கட்டுரை வரைந்துள்ளார். இதனை, கே.எஸ்.ஸ்ரீநிவாஸ பிள்ளையவர்களது (தரவுகளின்) உதவி பெற்று எழுதப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார். இக்கட்டுரையில் முச்சங்கள் இருந்தனவென்று இறையனார் களவியலுரைக் குறிப்பிடுவதை அடிப்படையாகக் கொண்டு, மூன்று கடல்கோள் நிகழ்ந்தமைக்கான சான்றுகள் சங்க நூல்களில் காணப்படுகின்றனவா? என்ற கேள்வியோடே ஆராயப் புகுபவர் தொல்காப்பியம் இயற்றி அரங்கேற்றம் செய்யப்பட்டது தலைச்சங்க காலத்து கடல் கொண்ட மதுரையென்று சிலரும், இடைச்சங்க காலத்து கபாடபுரமென்று சிலரும் கூறும் கருத்தினை எடுத்து காட்டி, இவ்விரு நாடுகளும் குமரியின் தென்றிசை பக்கமாயிருந்தனவென்றும் நாற்பத்தொன்பது நாடுகளிருந்தன வென்றும் கூறியிருப்பதால் இங்ஙனம் இயற்றி சங்கத்தில் அரங்கேற்றப் பட்டிருக்குமென்ற தனது நம்பிக்கையையும் தெரிவித்துப் பனம்பாரனார் பாடிய பாயிரத்தைக் கொண்டு கீழ்வருமாறு கேள்வியெழுப்புகின்றார்.

> பனம்பாரனார் தமிழுலகத்திற்குக் குமரியாற்றைத் தெற்கெல்லை யென்று கூறியதனால் அக்குமரியாற்றிற்குத் தெற்கில் அவர் காலத்துத் தென் மதுரை கபாடபுரங்களடங்கிய தமிழ்நாடுகளாவது

> பாண்டியர்களாவது சங்கங்களாவது இருந்தனவெனக் கூறுதல் அவரது கொள்கைக்கு முற்றும் முரணுவதெனத் தெளிவாகின்றது. அக்காலத்திற் பெரியாற்றுற்குத் தெற்கிலும் தமிழ் நாடுகளிருந்திருப்பின், அவர் அந்நாடுகளுக்குத் தெற்கிலிருந்த மலையாறு முதலியவற்றையே தெற்கெல்லையாகக் கூறியிருப்பாரென்றிக் குமரியாற்றினைக் கூறுதற்கு ஒரு சிறிது மிடமில்லை. மேலே கண்டபடி குமரிக்குத் தென்றிசைக் கண்ணிருந்ததெனக் கூறப்பட்ட மதுரையிலோ கபாடபுரத்திலோ தொல்காப்பியமியற்றி யரங்கேற்றப் பெற்றதெனின், அது அரங்கேறிய காலத்திற் கூடவேயிருந்து சிறப்புப் பாயிரமியம்பிய பனம்பாரனாரும் ஆங்கே யிருந்திருத்தல் வேண்டும்.
>
> (எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, 1915;418)

என்று பாயிரத்தைப் படித்து ஆராயத் தொடங்குவர், தலைப்பிற்கு ஏற்றதைப் போலவே அவ்விடங்களைப் பற்றி இறையனார் களவியலுரையில் கூறப்படும் முச்சங்க வரலாறு குறித்து தந்துள்ள தகவல்களை எடுத்து காட்டி, மகாபாரத யுத்தகாலமும் தலைச்சங்க காலமும் ஒன்றென்று கூறுவதைக் கவனத்திற்குள்ளாக்கும் முன்னர், தலைச்சங்க புலவராகிய முரஞ்சியூர் முடிநாகராயர் பாரத யுத்தத்திற் படைகளுக்குணவளித்த பெருஞ்சோற்று உதியன் சேரலாதனைப்பற்றினத் தகவல் மறுப்பதற்கில்லையென்று கருத்துரைத்து, கீழ்வருமாறு விசாரணையைத் தொடங்குகின்றார்.

> கடைச்சங்கம் 1850 யாண்டு இருந்ததென்று சொல்லப் படுகின்றது. கடைச்சங்கத்து இறுதிக்காலம் கி.பி.2ம் நூற்றாண்டுடென்று கொண்டால் அச்சங்கம் கி.மு.17ம் நூற்றாண்டில் துடங்கியிருந்தல் வேண்டும். மகாபாரத யுத்தம் நடந்த காலம் வாயு மத்ஸிய, விஷ்ணு, பாகவத, புராணங்களிற் சொல்லப் பட்டிருக்கிறபடி கணக்கிட்டால், கி.மு.15ம் நூற்றாண்டாகும். விளந்தை கோபாலையரவர்கள் 'The Chronology of Ancienct India' என்னும் ஓர் புத்தகம் வெளியிட்டிருக்கின்றனர். அது பல பண்டிதர்களாலும் நன்கு மதிக்கப்படுகின்றது. ஐயரவர்கள் பல காரணங்களை விரிவாய்க்காட்டிப் பாரத யுத்தகாலம் கி.மு.12 ம் நூற்றாண்டென்று நாட்டியிருக்கின்றார். எவ்வகையாய் பார்த்தாலும் கடைச்சங்கந் துவங்கி பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் பாரத யுத்தம் நிகழ்ந்த தெனவையும் முரஞ்சியூர் முடிநாகராயர் பாரத யுத்த காலத்திலிருந்தவரென்றால் அவர் தலைச் சங்க புலவரா? கடைச்சங்கப் புலவரா?
>
> (மேலது;436)

என்ற அவர் தந்திருக்கும் வினா மிகவும் கவனிக்கத்தக்கதாகயிருப்பதைப் பார்க்கின்றோம். இதனோடு மு.இராகவையங்காரின் இடைச்சங்கம் என்ற கட்டுரையின் கருத்துக்களையும் நோக்குவோம். கபாடபுரம் என்ற ஒன்றிருந்ததா? என்று கேள்வியெழுப்பி வான்மீகி ராமாயணத்திலே கிஷ்கிந்தா காண்டத்தின் 41வது சருக்கத்தில் சுக்கீரவன் வாயிலாக, சீதாபிராட்டியைத் தேட அனுப்பும்போது பாண்டியர்களைப் பற்றி குறிப்பிடப்படுவதாகக் கூறப்பட்டிருப்பதை, அறிஞர்கள் பலரும் எடுத்துக்காட்டித் இச்சருக்கத்தில் கபாடபுரம் என்று குறிக்கவில்லை, 'சவாடம்' என்று தான் குறிக்கப்பட்டுள்ளது. அதாவது 'பாண்டியனது' நகரத்துவாரக்கதவு என்று பொருள் படுமென உரைக்கிறார். சங்கங்கள் நடைப்பெற்ற ஆண்டுகள் குறித்த தகவல்களில் பெரும் முரணிருப்பதை ஏற்று கொண்டாலும், மேற்கண்ட புரிதலில், அதாவது இராமாயண கிஷ்கிந்தா காண்டத்தின் 41 ஆவது சருக்கத்தில் குறிக்கப்பட்டிருப்பது பாண்டியனது நகரமா? கதவா? என்ற வாத விவாதம் ஒருபுறமிருந்தாலும், அக்காலத்தில் இவ்விடத்தில் பாண்டியர்கள் ஆட்சிபுரிந்திருக்கிறார்கள் என்பதில் இருவருக்கும் மாற்றுக் கருத்தில்லையென்பதைப் பார்க்கிறோம்.

மேலும் தொடரும், எஸ். சுப்பிரமண்ய சாஸ்திரி, கி.பி.9, 10ஆம் நூற்றாண்டுகளுக்கு முன் புலவர்கள் இத்தென்திசையை, தமிழ் நாடு என்று கூறவில்லை யென்றும் இந்நூற்றாண்டில் யாரோ ஒருவர் எழுதிய இறையனார் களவியல் உரையில் தான் எங்கோ ஏற்பட்ட கடல்கோளைத் தமிழகத்தின் தென் திசைக்கண் நிகழ்ந்ததென்று கூறியிருக்கிறாரென கூறுவதோடு, இவ்விரையனார் களவியல் உரையை நக்கீரர் எழுதினர் என்று பொய்யுரைத்ததே இதனை நம்புவதற்கு இடமளித்திருக்கிறதென்று, நக்கீரர் இவ்வுரையை எழுதவில்லையென்ற புரிதலையும் தருகின்றார். இதனோடு கீழ்வருமாறு உரைப்பதையும் காணமுடிகிறது.

> தலையிடைச் சங்கங்களிருந்தவனவல்லவோவென்றான் அவை அந்தப் பெயர்களுடன் கடல் கொண்டதாகச் சொல்லப்படகிற மதுரை கபாடபுரங்களிலுருந்தன வென்று நினைக்க இடமில்லை. குமரிக்கு வடக்கிற் பாண்டியர்களிருந்த விடத்துப் பல நூற்றாண்டுகள் சங்க மிருந்து வந்ததெனத்தெரிகிறது. அதைக் கடைசியாயிருந்த சங்கப் புலவர்களும் ஒரே சங்கமாகக் கொண்டாரென்றும், தலையிடைக்கடையென்று பிரிக்க வில்லையென்றும் நினைப்பதற்கு அதாரமிருக்கிறது. தலைச்சங்கப் புலவர்களென்றும் இடைச்சங்கப் புலவர்களென்றும் இப்போது கூறப்படுகிறவர்களாலியற்றப்பட்ட செய்யுள்களும் அந்தப் பேதமின்றியே (கடைச்சங்க காலத்தில்

> தொகுக்கப்பட்ட) அகநானூறு புறநானூறு முதலிய நூல்களிற் கிடைக்கின்றன. நெடுநாள் சங்க மிருந்த தென்றால் தலைக் காலத்திருந்த புலவர்களும் இடைக்காலத்திருந்த புலவர்களும் கடைக் காலத்திருந்த புலவர்களுமென்று விவசரிப்பது அவசியமாக யிருக்கலாம். அதற்காகச் சங்கத்தைத் தலை இடை கடையென்று மூன்றாகப் பிரித்தல் வேண்டியதே யில்லை.
>
> (மேலது;438)

என முடிக்கின்றார். இக்கருத்துக் கிடைக்கப்பெற்ற சங்க இலக்கியப் புலவர்களை வைத்து அதாவது இறையனார் களவியலுரையின்படி தலை, இடை, கடை என்று பிரித்து கூறும் முச்சங்கங்களில் இருந்த புலவர்களை வைத்து ஏற்கத்தக்கதாக இருப்பதையும் கால நீட்டிப்பின்படி முச்சங்களிலும் இயல்பை மீறிக் காணப்படுவதாலும் இதனை ஏற்பதில் பொருத்தமிருப்பதை உணர்கிறோம். எனினும் ஒரு புறம் இறையனார்களவியல் உரையைக் கேள்விக்குட்படுத்தினாலும் அதன் அடிப்படைகளை மறுக்கவில்லை என்பது பிடிபடுகிறது. எனவேதான் பாரதப்போரில் பெருஞ்சோற்றுதியன் உணவளித்தான் என்ற புறநானுற்றுப் பாடலைப் பெரும் நம்பிக்கைக்குறிய நிகழ்வாக ஏற்றுக் கொள்கிறார். அதே சமயத்தில் பன்னெடுங்காலம் நிகழ்ந்த சங்கம் முச்சங்கமாகப் பிரித்தெரிய வாய்ப்பில்லை என்றும் அது தொடர்ந்து இயங்கி வந்த ஒன்றென்றும் கூறியிருப்பதும் புலப்படுகிறது. எனினும் மூன்று கடல்கோள் பற்றி இறையனார் களவியல் உரை முன்வைக்கும் கருத்துகளைப் பற்றின ஆய்வில் புகாமல், உரையாசிரியர்கள் சுட்டியிருக்கும் சங்ககாலப் பகுதிகளைப் பற்றின ஆய்வில் கவனம் செலுத்துவதையும் பார்க்கமுடிகிறது. இவ்வாய்வின் அடிப்படை நம்பிக்கை தொன்மபுரிதல் என்பதை அவரின் பாரத காலத்திற்கு முன்பிருந்த நம்பிக்கையிலிருந்து பெறமுடிகிறது.

### 2.3.10. த. கனகசுந்தரம்பிள்ளைத் தரும் சங்க நூல்கள் தொகுக்கப்பட்ட காலம்

9 ஆம் தொகுதியில் ஸ்ரீமான் த. கனசுந்தரம் பிள்ளை பி.ஏ. அவர்கள் ‘திருவள்ளுவர்’ என்று தலைப்பிட்டு, எழுதியுள்ளதில் திருவள்ளுவரைக் குறித்தும் திருக்குறளைக் குறித்தும், பெரிதும் வழங்கப்படும் புகழுரைகளையெல்லாம் நினைவுறுத்தி திருவள்ளுவரின் காலம் குறித்து உரைக்கையில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கில் இத்திருக்குறளைத் தவிர்த்து அனைத்து நூல்களும் திருக்குறளுக்குப் பிறகே இயற்றப்பட்டதென்று முடிவுச் செய்கிறார். இதனோடு தொகை நூல்களுள் சிலப்பாடல்கள், திருக்குறளுக்கும் முந்தையதாக இருக்க வாய்ப்பிருப்பதைக் சுட்டுபவர்.

> எட்டுத் தொகைகள் யாவும், அல்லது அவற்றுட்பல, தொகுக்கப்பட்டது குறளியற்றி வெகு காலத்துக்குப்பின் திருவள்ளுவரோடு ஒரு காலத்தவராக எண்ணப்படும் சீத்தலைச் சாத்தனார், அவ்வையார், இடைக்காடனார், முதலியோர் பாடல்கள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் தொகை நூல்களில் காணப்படுவதால் இது தெளிவாகும். மணிமேகலை பாடினவர் சீத்தலைச் சாத்தனாராயின், இந்தத் தொகை நூல்கள் தொகுக்கப்பட்டது மணிமேகலையும் சிலப்பதிகாரமும் தோன்றிய பின்பேயாகும்.

(த. கனகசுந்தரம் பிள்ளை, 1916–17;204)

திருவள்ளுவரின் காலம் குறித்த சிந்தனையோடு கடைச்சங்க நூல்கள் தொகுக்கப்பட்டிருக்க வேண்டிய காலம் இன்னதென்று தெளிவாக எடுத்துரைக்கவில்லையென்றாலும், தமது கருத்தினை முன்வைத்துள்ளதைக் காண்கிறோம். இவற்றோடு, தொல்காப்பியர் திருவள்ளுவருக்கு முற்பட்டவரென்பதையும் காட்டுகின்றார். இதனையடுத்து இவரின் ஊர்குறித்த ஆராய்ச்சிக்குச் சென்று இக்கட்டுரையை முடிக்கின்றார்.

### 2.3.11. ரா. இராகவையங்கார் தரும் மூவேந்தரின் தொன்மை

1917 இல் ரா. இராகவையங்கார் எழுதிய ‘வஞ்சிமாநகர்’ என்னும் நூலின் முன்னுரையில் தான் எழுத எடுத்துக் கொண்ட களத்தினைக் கீழ்வருமாறு அமைக்கிறார்.

> அமிழ்தினுமினிய தமிழ்மொழியுணர்ந்த புத்திமான்களுக்குள், சில காலமாகச் சங்க காலத்துச் சேரர் தலை நகராகிய வஞ்சிமாநகர் கொங்கு நாட்டுக்கருவூர் தானே; அன்றி, மேல் கடற்கரைக் கணுள்ள கொடுங்கோளூர் தானே; என்று ஐயமுண்டாகி அதனடியாகச் சிலபல ஆதேபசமாதான ரூபமான வாதங்கள் புஸ்தகவாயிலாகவும், பத்திரிகைவாயிலாகவும் நிகழ்தலைக் கண்டு...

(ரா. இராகவையங்கார், 1917; முன்னுரை)

என்று தொடங்கி மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம் என்ற பெயரில் நிறுவி அவற்றின் வாயிலாகச் ‘செந்தமிழ்’ எனும் இதழினைக் கொண்டுவரக் காரணமாக விளங்கிய ஸ்ரீமான் இராஜராஜவர சேதுபதி மஹாராஜர் என்பவரின் தூண்டுதலாலும் அவர் செய்த பொருளுதவியாலும் இந்நூல் எழுதப்பட்டதாகக் குறித்துள்ளார். இதனால் இந்நூலின் ஆய்வு எல்லை ‘வஞ்சிநகரம்’ எவ்விடம் என்பதையும் தற்போது கொங்கு நாட்டுப் பகுதியிலுள்ள கருவூரா, மேல்கடற்கரையில் அமைந்துள்ள கொடங்கோளூரா என்ற கேள்விக்கு விடைக்காண்பதே என்பதையும் அறிகிறோம்.

எனவே, காலம் குறித்த ஆய்விற்கோ, மு.இராகவையங்கார் குறித்துள்ள சேரன் செங்குட்டுவனின் காலம் குறித்தச்சிந்தனைக்கோ இடமில்லாமல் அக்காலத்தில் நிலவிவந்த தமிழ்நாட்டுப் பகுதிகளையும் பாண்டியருக்குக் கீழும் சோழருக்குக் கீழும் சேரருக்குக் கீழும் அமைந்த எல்லைகளின் அடிப்படையில் இருந்த நகரங்கள் குறித்தும் சிந்தித்துள்ளாரென்பதும், இச்சிந்தனைப் புரிதலுக்குச் சேரர் பற்றிய குறிப்புகள் கிடைக்கப்பெறும் எட்டுத்தொகைப் பத்துப்பாட்டு நூல்களையும் தொல்காப்பியத்தையும் பயன்படுத்திக் கொண்டுள்ளாரென்பதும் அந்நூலைக் கற்றதன் மூலமாக விளங்கிக் கொள்ள முடிகிறது. இம்மூவேந்தரின் காலம் குறித்த திட்டவட்டமான தெளிந்த வரையறையும் முடிவும் சுட்டிக் காட்ட வேண்டிய கட்டாயமில்லாததால், இவர்களின் தொன்மைக் குறித்துக் கூறி, அதன் வாயிலாக அப்போது நிலவிவந்த நாடு நகரங்களின் பழைமையையும், மரபையும் ஆய்ந்துள்ளாரென்பதும் தெரியவருகின்றது. அதாவது சேர சோழ பாண்டிய மரபென்பது மிகத் தொன்மை வாய்ந்தது. என்பதைக் குறிப்பிடவரும் இடத்தில் புராணச் சான்றுக்கள் கிடைக்கப் பெரும் தகவல்களை, சேக்கிழார் பெரியபுராணத்தின் விறன் மிண்ட நாயனார் புராணத்தில் குறிப்பிட்டுள்ள ஒரு பாடலைக் காட்டி பின்னர் கீழ்வருமாறு மூவேந்தர்களின் தொன்மையை உணர்த்துகின்றார்.

> தொல்காப்பியனார் 'வண்புகழ் மூவேந்தர்க்குந் தண்பொழில் வரைப்பு" என்று சூத்திரஞ் செய்தலானும், இம்மூவேந்தர் மலையினையுங் கூறுதலானும் தொல்காப்பியனார்க்கு முன்னே இம்மூவரும் இத்தமிழ் நாட்டு ஆட்சி பெற்று நிலைபெறுதல் நன்குணரலாகும். வான்மீக ராமாயணத்தும் இம்மூவேந்தர் நாடு கூறப்படுதலாணிக் கருத்து வலியுறுத்தல் காண்க.
>
> (மேலது;148)

என்று குறிப்பிட்டிருக்கும் சான்றைப் போலவே தொன்மையையும் காலத்தையும் அவ்வப்போது சில இடங்களில் குறித்துள்ளாரே தவிர குறிப்பிட்டு காலக் கணிப்புச் செய்யவில்லையென்பதும் தெரிகின்றது.

## 2.3.12. அ. குமாரசாமிப்புலவரின் தமிழ்ப்புலவர் சரிதம் முன் வைக்கும் சங்க காலப்புரிதல்

> அகத்தியனார் பொதியமலை வாள், காசியினின்றும் வந்தவர், சிவபிரானிடத்தும், முருகபிரானிடத்தும் தமிழ் மொழியைக் கற்றவர் தமிழ் மொழிக்கு இலக்கணவரம்பு செய்து தென்னாட்டிற் பரப்பிய செந்தமிழ்க் குரவர்.
>
> (அ. குமாரசாமிப்புலவர் 1916;1)

என்று கூறத் தொடங்குபவர்,

> தலைச்சங்கத்திலும் இடைச்சங்கத்திலும் வீற்றிருந்து தமிழ் மொழி ஆராய்ந்த தலைமைப்புலவர் தொல்காப்பியர், அதங்கோட்டு முனிவர், பனம்பாரானார், அரிநயனார் முதலிய பன்னிருவருக்குந் தமிழாசிரியர். இயல், இசை நாடகம் என்னும் முத்தமிழிலக்கியங்களை விரித்து விளக்கித் தமிழ் மொழிக்கோர் இலக்கணஞ்செய்தவர். அதன் பெயர் அகத்தியம், அது, முதல், இடை,கடை என்னும் சங்கம் மூன்றிலும் இலக்கணமாயிருந்தது.

(மேலது;1)

என்று கூறியிருப்பதைக் காண்கிறோம். சங்ககாலம் குறித்த தகவலில் அக்காலம் குறித்த வரையறையை எங்கும் குறிப்பிடவில்லை யென்றாலும் முச்சங்கம் இருந்தது என்ற நம்பிக்கை இவருக்கு இருந்திருக்கிறதென்பதும் அவற்றில் அகத்தியர் முதல் சங்கத்திலும் இடைச் சங்கத்திலும் வீற்றிருந்து தமிழ் மொழி ஆய்ந்ததோடு தலைமையும் ஏற்றிருந்தார் என்ற நம்பிக்கையும் தருகிறார். அகத்தியரைப் பற்றி இச்சிறு அளவே குறித்துவிட்டு அவர் இயற்றியதாகக் கூறப்படும் இலக்கண நூலிலிருந்து சில நூற்பாக்களை எடுத்துக்காட்டி அவைகள் இலக்கண களஞ்சியத்தில் கிடைக்கப்பெற்றதாகக் குறிப்பிட்டுள்ளார். அகத்தியரை அடுத்து அதிமதுரகவிராயன் அதிவீரராமபாண்டியன், அந்தகக்கவி வீரராகவ முதலியார் என அடுத்தடுத்து கால வரன்முறைப்படி வரிசைப்படுத்தாமல் புலவர்களைச் சிறு சிறுபத்திகளின் மூலமாக அறிமுகம் செய்து வைக்கிறார்.

இவர் வரிசைப் படுத்தியிருக்கும் விதம் அகரம் தொடங்கி முறைப்படுத்தப் பட்டிருக்கிறது. சரித்திர ஆய்வு மேற்கொள்வோர். கால வரன்முறைப்படி புலவர்களை அமைப்பது பெருவழக்காயிருந்திருப்பினும், இவர் இம்முறையிலிருந்து மாறுபட்டதோர் முறையில் அணுகியிருப்பதையும் காணமுடிகிறது.

சங்க காலப்புலவர்களுள் ஒருவர் இளங்கோவடிகள் என்று அறிமுகம் செய்து வைக்கையில் கீழ்வருமாறு கூறுகின்றார்.

> இவர் நகர் மலைமண்டலத்துள்ள வஞ்சிமாநகர், குலம் அரசர் குலம், சமயம் ஆருகதம், நிலை துறவறம், காலம் கடைச்சங்க காலம்.

(மேலது;35)

என்று கடைச்சங்கப் புலவர் என்றுரைப்பதைக் காண்கிறோம். இவரைக் குறித்து குறிப்பிடும்பொழுது, காலவரையறைக் குறித்த எந்தக் கருத்தினையும் குறிப்பிடாமல் கடைச்சங்க காலமென்று மட்டும் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே சீத்தலைச் சாத்தனார் எடுத்துரைக்கும்

பொழுதும் கடைச்சங்கமென்றே குறிப்பிடுகின்றவர், வேறு சில குறிப்புகளும் தருகின்றார். அதாவது,

> இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். தானிய வாணிகஞ் செய்தமை காரணமாகக் கூலவாணிகன் சாத்தனார் எனக் கூறுப்படுவர். கண்ணகி கதையை எடுத்துக்கூறி இளங்கோவடிகளைக் சிலப்பதிகாரம் என்னும் இலக்கியம் பாடும்படி செய்தவர். அதன் கதைத் தொடராகிய மணிமேகலை என்பவள் துறவு பூண்ட கதையை மணிமேகலை என்னும் பெயரொடும் இலக்கியமாகச் செய்தவர். அகம், புறம், நற்றிணை முதலிய தொகை நிலைகளிலுஞ் சில சில கவி பாடினார்.

(மேலது;93)

என எடுத்துரைப்பதோடு, திருவள்ளுவரையும் (பக்கம்–118) நக்கீரரையும் (பக்கம்–121) நரிவெரூஉத்தலையாறையும் (பக்கம்–125) பரணரையும் (பக்கம்–133) பூதன்சேந்தனாரையும் (140) பெருந்தேவனாரையும் (பக்கம்–140) மருதனிளநாகனார் (147) மாங்குடிமருதனார் (பக்கம்–148) மாமூலனார் (பக்கம்–149) மோசீகீரனாரையும் (பக்கம்–178) வெள்ளி வீதியாரையும் (பக்கம்–178) அகரவரிசைப்படி குறிப்பிட்டு இப்புலவர்கள் அனைவரும் கடைச்சங்கப் புலவர்கள் என்று சுட்டியுள்ளார். இதே காலத்தில் வாழ்ந்த சங்கப் புலவர்களுள் மீதமுள்ளதாகக் கருதிய நூற்று இருபத்தாறுப் புலவர்களைச் சங்கப்புலவர் என்று தலைப்பிட்டுப் பெயரை மட்டும் வரிசைப்படுத்துகிறார்.

தொல்காப்பியம் குறித்துக் கூறும்பொழுது கீழ்வருமாறு உரைக்கின்றார்.

> இவர் இடைச்சங்கப் புலவருள் ஒருவர். குலம் வேதியர் குலம், பழைய காப்பியக் குடியிற் பிறந்தது பற்றித் தொல்காப்பியர் எனப்பட்டார் என்பர். அகத்திய முனிவர்க்கு முதன்மாலைகள், அகத்தியத்தின் வழியாக இலக்கணம் ஒன்று செய்தவர். அது தொல்காப்பியம் எனப்படும். பன்னிருபடலத்துள்ளும் ஒரு படலஞ் செய்தவர், தொல்காப்பியம் ஒன்றே அன்று தொடங்கி இன்றுவரையும் நின்று நிலவுவதோர் பன்மையிலக்கணம்.

(மேலது;121)

என்றதின் மூலம் இவரை இடைச்சங்கப் புலவரென்று முன்னைக் மு.இராகவையங்கார் குறிப்பிட்டிருப்பதைப்போலவே இவரும் ஏற்பதைக் காண்கிறோம்.

## 2.3.13. பெயர் விழையானின் சங்கம் பற்றிய கால ஆய்வு

'பெயர் விழையான்' எனும் இவர், யாரென்பது தெரியாமலேயே இவருடைய கட்டுரைகளை செந்தமிழில் பிரசுரித்ததாக நான்காம் தமிழ்ச் சங்கத்து மான்மியம் எனும் நூலில் குறிப்பு ஒன்று கிடைக்கிறது.

இவரின் கட்டுரைகளுள் கீழ் வருவன சங்க கால ஆய்வு தரவுகளாகக் கண்டெடுக்கப்பட்டன. அவற்றினைக் காண்போம்.

### 2.3.13.1. காக்கைப் பாடினியாரும் இளங்காக்கைப் பாடினியாரும்

19 ஆம் தொகுதியின் ஆடி மாத இதழில் (பகுதி 9) 'பெயர் விழையான்' என்பார் காக்கைப்பாடினியார் பற்றியும் இளங்காக்கைப் பாடினியார் பற்றியும் அடுத்தடுத்து இரண்டுக் கட்டுரைகளை வெளியிட்டுள்ளார்.

'காக்கைப் பாடினியார்' தொல்காப்பியரோடு சகமாணவரென்றும் இடைச்சங்க காலத்தவரா? கடைச்சங்க காலத்தவரா? என்ற வினாவினையும் எழுப்பி எவ்வாராயினும் அகத்தியரின் பன்னிரெண்டு மாணவருள் ஒருவர் என்பதை ஏற்றுக் கூறத் தொடங்குகின்றார். பன்னிரு படலத்தில், இக்காக்கை பாடினியாரும் பாடல் இயற்றியுள்ளதைக் குறிப்பிட்டு, இவர் யாப்பிலக்கண நூல் இயற்றினாரென்றும் அந்நூல் காலவயப்பட்டு ஒழிந்ததென்றும் அதிலிருந்து உரையாசிரியர்கள் மேற்கோள்கள் எடுத்தாண்டுள்ளனரென்றும் தருகின்றார். இக்கட்டுரைக் காக்கைப் பாடினியாரின் சிறப்பினையே சுட்டிக் காட்டுகிறது. இவர் அகத்தியர் மாணவரென்பதும் தொல்காப்பியருடனும் பனம்பாரனாருடனும் உடன் பயின்றவரென்பதும் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் கிடைக்கப்பெறுவதையெல்லாம் தந்து இறுதியாக இவர் தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தைச் சார்ந்தவரென்றும் முடிக்கிறார்.

அடுத்து இளங்காக்கைப் பாடினியரைப்பற்றி உரைக்க வருபவர், இவர் மேற்கண்ட காக்கைப்பாடினியாரிலும் வேறுபட்டவரென்பதோடு அவருக்கும் அடுத்த காலத்தில் வாழ்ந்தவரென்றும், இளங்காக்கைப் பாடினியாரைத் தொடர்ந்து சிறுக்காக்கைப் பாடினியார் வாழ்ந்தவரென்றும் கூறிச் செல்கிறார். இக்கருத்திற்கு இருபெரும் சான்றுகளாகத் தொல்காப்பிய செய்யுளில் 1, மரபியல் 95 ஆகியவற்றிற்குப் பேராசிரியர் தரும் உரையின் வாயிலாகத் கிடைக்கவரும் குறிப்பினையும் தருகின்றார். இதனை "சங்கப் புலவர் வரலாறு" என்னும் நூலுள் விளக்கிக் காட்டப்பட்டிருப்பதாக அடிக்குறிப்பில் தருகிறார். இதனால், காக்கைப் பாடினியாரின் காலம் தொல்காப்பியர் வாழ்ந்த காலமென்பது இவரின் முடிவாகயிருப்பதைப் பார்க்கிறோம்.

### 2.3.13.2. அரிசில் கிழார் காலமும் திருவள்ளுவமாலையும்

தொகுதி 21இல் (பகுதி 2) 'பெயர் விழையான்' என்பவர் 'அரிசில்கிழார்' என்று தலைப்பமைத்து கொண்டு கட்டுரையொன்றெழுதி யுள்ளார், இதன் மூலம் அரிசில் என்பது சோழ நாட்டில் ஓடும் ஆற்றின் பெயரென்று நற்றிணை 141 ஆம் பாடல் தருவதைத் தந்து, இவர் கடைச்சங்க காலத்துப் புலவரென்றும் இவர் பாடிய பாடல் குறுந்தொகையுள் 193 லும் புறநானூற்றில் 146 லும் 281 லும், காணக்கிடைப்பதைத் தருகின்றார்.

இப்புலவர் பதிற்றுபத்தின் எட்டாம் பத்தை சேரன் மீது பாடி பரிசு பெற்றதையும் தருவதோடு, இவர் பாடியதாக, குறுந்தொகையில் ஒன்றும் திருவள்ளுவமாலையில் ஒன்றும் புறநானூற்றுள் ஏழுமாக மொத்தம் இருபத்திரெண்டு பாடல்கள் கிடைப்பதைத் தருகின்றார். இதில் திருவள்ளுவ மாலை திருக்குறளுக்கு அடுத்து இயற்றப்பட்டதை அறிவோம். எனினும், திருக்குறளின் காலத்தைச் சுட்டாமல் பாடல் குறிப்புகளை மட்டும் தந்து சென்றிருப்பதைக் காணமுடிகிறது. திருவள்ளுமாலையிலும் காணப்படுவதால் இவரின் காலமும் கடைச்சங்க காலமாகுமென்ற புரிதலிருத்திருக்கிறது.

### 2.3.14. வீராசாமி செட்டியாரின் விநோதரச மஞ்சரி கட்டமைக்கும் சங்க இலக்கியங்கள்

வீராசாமி செட்டியார் இயற்றிய கட்டுரைகளின் தொகுப்பான விநோதரச மஞ்சரி என்னும் நூல் 1921 இல் தொகுத்து வெளியிடப்பட்டிருப்பதும் இதன் எல்லா கட்டுரைகளும் (காளிதாஸ் புலவர் சரித்திரம் – ஓர் பதிவிரதை நீங்கலாக) அப்போது சென்னையிலிருந்து வந்து கொண்டிருந்த 'தினவர்த்தமானி' என்னும் பத்திரிகையில் வெளிவந்தவை என்னும் செய்தியினை பி.இரத்தின நாயகர் கண்டுபிடிக்க (பார்க் டவுன், சென்னை) நூன்முகம் பக்கத்தில் தருகின்றார். இத்தொகுப்பு நூலுள் "ஔவையார் சரித்திரம்" என்ற தலைப்பிலமைந்த கட்டுரை சங்ககால பொருண்மைக்குத் தக்கதாக அமைந்துள்ளது.

'ஔவையார் சரித்திரம்' என்னும் கட்டுரைக் கீழ்வருமாறு தொடங்குகின்றது,

> தென்னாட்டிலே பாண்டியரின் செங்கோல் நடாத்திய மதுரை மாநகரிலே கடைச்சங்கமிகுந்த காலத்தில் ஔவையார் என்னும் மாது சீரோமணி சோழ தேசத்திலே உறையூர் என்னும் பட்டணத்தின் சாவடியில் ஆதியென்பவளுக்கும் பகவன் என்னும் ஓர் அந்தணனுக்குச் ஜேஷ்ட புத்திரியாகப் பிறந்தனர். அப்போது ஆதிபகவன் என்னும் தாய் தந்தையருக்குள் ஏற்பட்டிருந்த உறுதி

மொழிப்படி பிறந்த குழந்தையை விட்டு நீங்க மனமெழாது தாய் வருந்திய போது அக்குழந்தைச் செய்வதறியாது

இட்டமுட னென்றலையிலின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ - முட்ட முட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ

இதுகேட்டுத் தாய் வருத்தம் நீங்கி குழந்தையை விட்டேகினாள், பின்பு அடுத்த சேரியிலிருந்த பாணர்கள் அக்குழந்தையை யெடுத்து வளர்க்க வளர்ந்து இயல்பாகவே சகல கலைகளையும் அறிந்து தமிழ் நாட்டிலே கல்வியிற் சிறந்த பெண்களுள் முதன்மை பெற்றிருந்தனர்.

ஔவையார் ஜீவந்தராயிருந்த காலத்திற் கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் ஆகிய வித்வசிரோமணிளிருந்தனர். அக்காலத்திற் கம்பர் ஒரு பாட்டிற்கு ஆயிரம் பொன் பெற்றாலன்றி ஒருவர் மீதும் பாடுவதில்லை. ஔவையோ பசிக்கு ஒரு கைகூழ் பெற்றால் ஒரு பாடல் பாடுவாள். இதனால் ஔவைக்குக் கூழுக்குப்பாடி என ஒரு பெயர் வழங்கும்.

(வீராசாமி செட்டியார், 1921;337)

என்று எழுதியிருக்கின்றார். ஔவையாரின் சம காலத்தில் கம்பரும், ஒட்டக்கூத்தரும், புகழேந்தியும் வாழ்ந்தனர் என்ற கர்ணபரம்பரை கதைக் கூறியதன் அடிப்படையில் தொகுத்தளிக்கிறார் என்பது அவரின் 360 ஆவது பக்க முடிவு பத்தி உணர்த்துகிறது. கடைச்சங்கமிருந்த ஔவையார் என்று கூறி சிறிதும் தெளிவின்றி கம்பரோடும் ஒட்டக்கூத்தரோடும் புகழேந்தி புலவரோடும் சம காலத்தவர் என்று முடிந்திருப்பதை எண்ணுகையில் விவேகபோதினியின் 11 ஆம் தொகுதி (1919–ஜூலை –1920 ஜூன்) ஜூலை இதழில் ஸ்ரீமான் எஸ் அவைரத விநாயகம் பிள்ளை எம்.ஏ எல்.டி என்பவர் 'தமிழ் நூல் வரலாறு' என்னும் கட்டுரையில் உரைந்திருக்கும் மேற்கண்ட நூல் குறித்த கருத்து தான் பின்வருமாறு நினைவுக்கு வருகிறது.

விநோத ரஸமஞ்சரி ஒருவாறு புலவர் வரலாறு கூற எழுந்த நூலேயாகும். ஆயினும் அதனையெழுதிய வீராசாமிச் செட்டியார் உண்மையைக் கவனியாது விநோத ரசத்தையே விக்ஷஷமாகப் பாராட்டினார்.

(எஸ். அவைரத விநாயகம்பிள்ளை, 1919–20;19)

இந்த 'ஔவையார் சரித்திரம்' என்னும் கட்டுரையில் ஔவையாரின் காலம் குறித்து ஆராயாமல் கட்டுக்கதையைக் கொண்டு அதிலும் சங்க காலத்தில்

இயற்றப்பட்ட பாடல்கள் நீங்கலாக, பிற்காலத்தவர்களையும் எழுதி கதைக்காகச் சேர்க்கப்பட்ட பாடல்களையும் காட்டியிருப்பதும் தெரியவருகிறது.

### 2.3.15. கே.எஸ். சீனிவாசப் பிள்ளையின் தொன்ம அடிப்படையிலான சங்க கால ஆய்வு

ஆய்வறிஞர்களின் சங்க காலம் குறித்த ஆய்விற்கு இறையனார் களவியருரையை எவ்வாறு அடிப்படையாகக் கொண்டார்களோ அவ்வாறே 1922இல் 'தமிழ் வரலாறு' என்னும் நூலை எழுதிய கே.எஸ். சீனிவாசப்பிள்ளை தமது நூலில் காலம் பற்றின புரிதலுக்குக் கீழ்வருமாறு அமைத்துக் கொண்டு எழுதியிருப்பதும் தெரியவருகிறது.

> தமிழாசிரியர் பலர் மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்தன என்பர். முதற்சங்கம் 4440 யாண்டில், இடைச்சங்கம் 3700 யாண்டு, கடைச்சங்கம் 1850 ஆண்டு நடைபெற்றன என்பது அவர் கொள்கை. சங்கம் இறுதி பெற்றதைச் சரித்திர ஆராய்ச்சிக்காரர் இற்றைக்குச் சுமார் 1700 யாண்டுகளுக்குமுன் என்பர். சங்கங்களுக்கு இடையிட்ட யாண்டு இத்துணை என்பது அறியக் கூடவில்லை. இவர் கொள்கைப்படி தமிழ்ச்சங்கம் தொடங்கியது இற்றைக்கு 12000 யாண்டுகளுக்கு முன்னர் என்பது தவறாகாது.
>
> (கே.எஸ். சீனிவாசப்பிள்ளை 1922;11)

என்று கூறுகின்றார். அகத்தியரைப் பற்றி, குறிப்பிடும் இன்னொரு முக்கியமான குறிப்பு இவ்விடம் கூறுவது மிகவும் பொருந்தமாக இருக்குமென நினைக்கிறேன். அதாவது, மு. இராகவையங்கார் தரும் ஆய்வு முடிவான சிவபெருமான் வடமொழியைப் பாணினிக்கும் தமிழ் மொழியை அகத்தியருக்கும், கற்பித்ததன் பின்னே நூலுருவாக்கம் குறித்தச் செயல்பாடுகளெல்லாம் நிகழ்ந்ததாகக் கூறும் காஞ்சிப்புராணப்பாடலை எடுத்தாண்டு, முதலில் வடமொழியும் பின்னர் அகத்திய முனிவருக்குத் தமிழையும் போதித்தாரென்று குறிப்பிடுபவர், பாணினியின் காலத்தை, மகாபாரத காலத்திற்குப் பிற்பட்டவராகக் கொண்டு கோல்டு ஸ்டக்கர் (Dr. Goldstucker) என்ற ஜர்மானிய அறிஞர் கூறிய காலத்தைக் கீழ்வருமாறு தருகின்றார்.

> பாணினி முனிவர் தம் இலக்கண நூலில், மகாபாரத காலத்துப் பெருமக்களாகிய குந்தி, யுதிஷ்டிரன், வாசுதேவன், அருச்சுனன், துரோணன் முதலியோர் பெயர்களை எடுத்தோதுதலால் அம்முனிவர் அப்பாரத காலத்துக்கும் பிற்பட்டவர் என்பது தோற்றமாம். பாணினி

> விஷயமாகப் பிரபல ஆராய்ச்சி செய்து எழுதிய கோல்ட் ஸ்டக்கர் (Dr. Gold stucker) என்ற ஜர்மனாசிரியர், பாணினி பகவான் காலம் இற்றைக்கு 2700, 2800 வருஷங்கட்கு அஃதாவது கி.மு.8,9–ம் நூற்றாண்டுகள் முன்னாகும் என்று பலகாரணங்கள் காட்டி முடித்துள்ளார். இதனைப் பெரும்பாலும் ஆதரித்தே, ஸ்ரீரோமேச சந்திரதத்தரும் மற்றும் சரித்திராசிரியர் பலரும் கூறுவர். இஃது உறுதி பெறுவதாயின், அகத்தியனார் தெற்கே வேளிருடன் வந்தேறிய காலமும் அக்காலத்தை ஒட்டியதே என்று கொள்ளப்படும். இக்காலவரையறை, வேளிர் தென்னாடு வந்த காலமாக யான் வேளிர் வரலாற்றுள் காட்டிய 11–ஆம் நூற்றாண்டு முடிவோடு நெருங்கியிருத்தல் குறிப்பிடத்தக்கது.

(மு. இராகவையங்கார், 1938;86)

என்று கூறுகின்றார். இதனால் முதல் சங்கம் தொடங்கப்பட்ட காலமும், வடமொழியில் பாணினி தன் இலக்கண நூலை எழுதிய காலமும் பொருந்தி வருகிறதென்பதைப் பார்க்கிறோம். எனினும் அகத்தியர் குறித்து மு.இராகவையங்கார் தரும் கருத்து, இச்சங்கம் குறித்தக் கட்டமைப்பை மேலும் மேலும் கேள்விட்குட்படுத்துகிறது.

> இனி, அகஸ்தியமுனிவர் இருக்கு வேதத்தில் பல மந்திரங்கட்கு ஆசிரியராகக் காணப்படுகின்றார். இம்முனிவரே தலைச்சங்கத் தவறான அகத்தியனார் என்பதற்குப் பிராமணர்கள் கிடையாமையின், முற்கூறியபடி, அகஸ்திய கோத்திரத்தில் வந்த பெரியாருள் ஒருவராகப் பின்னவரிருந்திருக்கலாம் என்று சிலர் கருதுவர். இவ்வாறு கூறுதலை நம்மவரில் ஒருசாரார் ஒப்பாராயின், ஒரு முனிவரே தம் தபோமகிமையால் பன் நூற்றாண்டுகள் வாழ்ந்தவரெனல் வேண்டும்.

(மு. இராகவையங்கார், 1938;86)

என்று ஒருவாறு, முடிவுகட்டுகின்றார். இக்கருத்து எத்தகைய அளவுக்கு வலுவான தென்பதையும் அபத்தமானதென்பதையும் அறிவோம். மேற்கண்ட முடிவு மு.இராகவையங்காருக்கே ஐயம் ஏற்பட்டதாலோ என்னவோ, அடுத்த வரிகளைக் கீழ்வருமாறு அமைக்கிறார்.

> இதன் முடிவு எவ்வாறாயினும், தென்றிசையடைந்த நொய்ம்மை போகப் பொதியமலையைத் தம் ஆச்சிரமமாக்கிக் கொண்டு தென்னாட்டைச் செழிப்பித்தும், தலைச்சங்கத்தைத் தொடங்கி அந்நாட்டு மொழியினைச் சீர்ப்படுத்தியும் போந்த அகத்தியனார் பாரத காலத்தை ஒட்டியே, அன்றி அதற்கடுத்தோ

வாழ்ந்தவர் என்று முன் கூறியவற்றினின்று நாம் ஒரு படியாகக் கருதலாகும்.

(மேலது;86)

என்று அகத்தியர் குறித்தப் புரிதலை முடிக்கின்றார். இதிலிருந்து மு. இராகவையங்கார்ஆய்வு முடிவோடே கே.எஸ். சீனிவாச பிள்ளையும் தொன்ம நம்பிக்கையின் அடிப்படையில் பயணப்பட்டிருப்பது புலப்படுவதைக் காண்கிறோம்.

## 2.3.15.1. அகத்தியரும் தொல்காப்பியரும்

கே.எஸ். சீனிவாசப்பிள்ளையின் அகத்தியர் குறித்த நம்பிக்கையும் இவ்விடம் பதிவு செய்யதக்கதாகவேயுள்ளது. தலைச் சங்கத்தில் அரங்கேற்றப்பட்ட அகத்தியரின் அகத்தியம் என்னும் நூல் ஒப்பில்லாத அளவுக்குப் போற்றப்பட வேண்டியதென்பதை அகத்தியர் வாழ்ந்த காலம் குறித்து கூறுகையில்,

> நம்முனிவரவர் சங்கம் தோன்றுவதற்கு முன்னரே இருந்தவராவர். இம்மகான் சான்றோருள் தலைமை வகிப்பவராதலால் அவரது ஆயுளின் அளவை நிர்ணயிப்பது எம்மனோர்க்கடாத தொன்றாம். அவர் இன்னும் பொதியிற்கண் வசிக்கின்றனர் என்பது தமிழறிஞர் பலரின் துணிபாம் பலகதைகளும் அதற்காதராமாய் வழங்குகின்றன.
>
> (கே.எஸ். சீனிவாசபிள்ளை, 1922;6)

என்கிறார். இதன் மூலமாய் மரபார்ந்த புராண இதிகாசங்களின் வாயிலாகக் கிடைக்கப்பெறும் தகவல்களைக் கேள்விக்கு உட்படுத்தாமல் ஏற்கும் மனப்பாங்கு இவரிடத்தில் அமைந்திருப்பதை உணரமுடிகிறது. தொடர்ந்து தொல்காப்பியர் காலம் குறித்து கருத்துரைக்க முனைபவர், தொல்காப்பியரை சமயத்தின் அடிப்படையில் கால நிர்ணயம் செய்தவர்களின் கருத்துகளைக் கீழ்வருமாறு அணுகியுள்ளாரென்பதும் தெரிய வருகிறது.

> இவரைச் சிலர், ஜைனமதத்தினர் என்கின்றனர். அகத்தியமா முனிவரது மாணக்கரும், ஜமதக்னி முனிவரது புத்திரருமாகிய இவர் எக்காலத்து ஜைனர் ஆனாரென்பதை அவர் குறிப்பிடவில்லை. ஜைனமதம் தென்னாடு வந்தது கி.மு.மூன்றாம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் என்பர் சரித்திர ஆராய்ச்சியின் வல்லோர். ஜைனம், பௌத்தம் என்ற இம்மதங்களின் கொள்கையிலிருந்து, அம்மதத்தினர் ஒழுக்கங்களாவது தொல்காப்பியத்திற் காணப்படா.
>
> (மேலது;9)

என்று குறிப்பிட்டு தொல்காப்பியர் ஜைனர் அல்லர் என்று செந்தமிழ் இதழில் நிறுவப்பட்டதையும் சுட்டிக் காட்டியுள்ளார். மேலும் தொல்காப்பியர் காலத்தை கி.பி.4 நூற்றாண்டு என்றும் கி.பி.6 ஆம் நூற்றாண்டு என்றும் கூறுபவரின் நம்பிக்கை நிற்பதற்கு வாய்ப்பில்லை என்பதனை குறிப்பிடுவதற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்களையும் காரணமாகச் சுட்டிச் செல்கின்றார்.

## 2.3.15.2. சங்க காலத்தின் தொடக்கமும் முடிவும்

கே.எஸ்.சீனிவாசபிள்ளையின் மேற்கண்ட புரிதலிலிருந்து கி.பிக்குப் பின் தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியத்தையும் கொண்டுவரும் ஆய்வறிஞர்களை மறுத்து தொன்மை சார்ந்த அதாவது கி.மு.க்கு முற்பட்ட காலத்து நூல்களாகவும் அவற்றின் இறுதிகாலம் கி.பி.3 ஆம் நூற்றாண்டு என்றும் வரையறைப்படுத்திக் கொண்டதைக் காண முடிகிறது.

சங்க காலம் குறித்து ஆராய தொடங்கியவர்கள் முதல் 1930 இல் இலக்கிய வரலாறை எழுதும் கா. சுப்பிரமணியப் பிள்ளை வரைக்கும் பெரும்பாலான குறிப்பிடத்தக்க அறிஞர்கள் சங்க கால மென்பது கி.பி.3 ஆம் நூற்றாண்டு வரையில் என்ற கொள்கையை உடையவர்களாக இருந்துள்ளனர். அதன் தொடக்கம் கி.மு.12 நூற்றாண்டு என்றும் கி.மு.6 ஆம் நூற்றாண்டு என்றும் பேசப்பட்டிருப்பினும் கி.மு.12 என்றே அவர்களின் முடிவும் கே.எஸ்.சீனிவாசபிள்ளையின் முடிவும் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

## 2.3.16. ந .மு. வேங்கடசாமி நாட்டாரின் தொன்ம அடிப்படையிலான சங்க கால ஆய்வில் அகத்தியரும் தமிழ்ச்சங்கமும்

இம்முதல் பரலில் (தொகுதி) தமிழ்ப் புலவர் வரலாறு என்ற தலைப்பில் 'அகத்தியர்' குறித்து, பண்டிதர் நா.மு. வேங்கடசாமி நாட்டார் எழுதியுள்ளார். இம்முதல் பகுதியில் அகத்தியர் காலம் குறித்த ஆய்வினை நிறுத்தாமல் இவரே தமிழ் புலவர்களுக்கெல்லாம் முதன்மையானவரென்றும், காலத்தால் முந்தியவரென்றும் முத்தமிழுக்கும் இலக்கணம் செய்தவரென்றும் தமிழ்ச் சங்கம் நிறுவியவரென்றும் கூறத் தொடங்குகின்றார்.

இவற்றோடு அகத்தியர் பற்றின கதையாக விளங்கும் சிவபெருமான் திருமணத்தின் போது அகத்தியர் வடதிசையிலிருந்து வந்தாரென்ற குறிப்பையெல்லாம் தந்து இவற்றையெல்லாம் கந்தபுராணமும், திருவிளையாடற் புராணமும் காஞ்சிப் புராணமும் கூறுவதாக எழுதிச் செல்கின்றார்.

மேலும், தொல்காப்பியத்தின் பாயிர உரையில் நச்சினார்க்கினியரும் மேற்கண்டப் புராண கதையினைத் தந்திருப்பதைச் சுட்டிக்காட்டி,

வீரசோழியத்தின் “ஆய்வுங் குணத்தவ லோகிதன் பக்கலகத்தியன்” என்னும் செய்யுளின் வாயிலாக, முருக கடவுளிடம் தமிழ்க் கற்றதையும் தொகுத்துக் காட்டி, அகத்தியர் சிவபெருமான் மூலமாகத் தமிழ்க்கற்ற சான்றுகளே, மிகுதியாகக் கிடைக்கப் பெறுவதைக் குறிப்பிட்டு கம்பர் தமது இராமாயணத்திலும் இக்குறிப்பைத் தந்துச் சென்றுள்ளதால் சிவபெருமானிடமே தமிழ்ப் பயின்றார் என்பது முடிவாக ஏற்கலாமென்று இம்முதல் பகுதியை நிறைவு செய்கிறார்.

இரண்டாம் இதழான பிப்ரவரி – மார்ச்சு (மாசி) இதழில் இதன் தொடர்ச்சியிலும் காலம் குறித்துக் கூறாமல் இவரின் புராண வரலாற்றுக் கதையைக் குறித்தே சிந்தித்து சென்றுள்ளார்.

நகல் **3** இல் பங்குனித்திங்களிதழில், நா.மு. வேங்கடசாமி நாட்டார் தமிழ்ப் புலவர் வரலாற்றில் அகத்தியர் என்னும் பொருண்மையில் கட்டுரைத் தொடங்குகின்றார். இதில் அகத்தியர், சிவபெருமான் இடத்தும் (திருவிளையாடற் புராண, காஞ்சிப் புராணம், இராமாயணம்) முருகக் கடவுளிடத்தும் (சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம், தொல்காப்பியப் பாயிரவிருத்தி) தமிழ்க் கற்றார் என்ற முடிவைக் கூறி இறையனாரகப் பொருளுரையில் முச்சங்கம் குறித்துக் கூறப்படும் கருத்தினைத் தந்து, கீழ்வருமாறு கூறுகின்றார்.

*தலைச்சங்கப் புலவர்களில் திரிபுரமெரித்த*
*விரிசடைக் கடவுளுக்கும், குன்றெறிந்த*
*முருகவேளுக்கும் முன்பு அகத்தினார்*
*முதலில் வைக்கப்பட்டிருப்பது அறிஞர்*
*சிந்தனைக் குரிய தொன்றாம். இடைச்*
*சங்கப் புலவருள்ளும் அவர் முன்*
*வைக்கப்பட்டிருக்கின்றனர். சங்கம்*
*இரீஇயினர் பாண்டியர் என்றே கூறப்பட்டிருத்தலின்,*
*அகத்தியரால் சங்கம் நிறுவப்பட்டதென்று*
*கொள்ளுதற்கு இடனில்லை. எனினும் அவர்*
*சங்கப் புலவருள்ளே முதன்மையுற்றிருந்த மையானும்,*
*பிறவாற்றானும் அவ்வாறு கூறுதலும் அமையும் என்க.*
*ஆசிரியர் அகத்தியனாரால் இயற்றப்பட்ட*
*இலக்கணம் அகத்தியம் என்பது.*
*அது முச்சங்கத்தார்க்கும் நூலாயிருந்த தென்பது*
*களவியலுரையால் அறியப்படுகிறது.*

(நா.மு. வேங்கடசாமி நாட்டார், 1923;8)

என எடுத்துரைத்தலால், சங்கம் பாண்டியரால் தோற்றி வைக்கப்பட்டது, என்றுரைப்பதோடு, அதற்கு முதன்மையானவராக வீற்றிருந்தவர் அகத்தியர் என்கிறார். இப்பகுதியினை நிறைவு செய்யுமிடத்து அகத்தியரின் வருகைக்கு முன் தமிழ் இல்லையென்று புராணங்கள் குறிப்பிடும் கருத்திற்கே இசைந்து அதற்குச் சான்றாக, சிவபெருமான் அகத்தியருக்குத் தமிழையும், பாணிக்கு சமஸ்கிருதத்தையும் தந்தாரென்பதையெல்லாம் தந்து இது குறித்து மேலும் ஆராயாமல், பங்குனி இதழை முடிக்கின்றார். அடுத்த சித்திரை இதழில், மொழி அகத்தியரால் தோற்றிவைக்கப்பட்டதில்லை, அது மக்களின் வழக்கில் இயற்கையால் இயல்பாய் உண்டானதென்று தொல்காப்பியத்தில், வழக்கும் செய்யுளும் என்று சொல்லப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டுகின்றார். அடுத்து வைகாசி மாத இதழிலும் இவ்வாறே அகத்தியரைப்பற்றின புராண கதைகளைக் கவனத்திற்குள்ளாக்கி கட்டுரையை முடிக்கிறார்.

### 2.3.16.1. ந .மு. வேங்கடசாமி நாட்டாரின் சங்கம் பற்றிய கால ஆய்வும் சங்கம் பற்றிய முடிவும்

> "தமிழ் சங்க உண்மையினை இக்காலத்து சிலர் ஐயுற்றுத் திரிபுற எழுதி வருகின்றனர். ஆகலின் முதற்கண் அதனை ஆராய்ந்து உண்மை நிலை நாட்டுதல் கடனாகின்றது"
>
> (ந .மு. வேங்கடசாமி நாட்டார் 1921;5)

என்று தொடங்குபவர் சங்கம்பற்றி திருவிளையாடற் புராணம் கூறும் செய்திகளைப் (கதையை) பின்வருமாறு தொகுத்தளிக்கிறார்.

> "எல்லாருக்கு மெளிய நெல்லும் நீரும் முதலியன தோன்றும் பிறநாடு போலன்றி வரைய சாந்தமும் திரைய முத்தமும் தோன்றும் சிறப்புடைய செந்தமிழ்ப் பாண்டி நாட்டில் மதுரை யென்னுந் தலைநகரமர்ந்து திங்களின் வழித்தோன்றலான பாண்டியன் வங்கியசேகரன் செங்கோலோச்சி வருவானாயினன்"
>
> (மேலது;6)

என்று திருவிளையாடற்புராணம் தரும் செய்தியைச் சொல்லத் தொடங்குகிறார்.

> அந்நாளில் நான்முகப் புத்தேலானவர் காசித்திருப்பதின்கண் ஒருபது பரிமா வேள்வி செய்து முடித்து, நீராடும் பொருட்டு நாவின்செல்வி, சாவித்திரி, என்னும் நங்கையர் மூவருடனும் நெறிக்கண் நாவின் செல்வியானவள் விண்ணிடையியங்கும் விஞ்சைமாதொருத்தி பாடும் இசையினில் உள்ளம் போக்கிநின்று வரவு பாணித்தாளாக, நதியை யடைந்த மலர்மிசைக் கடவுள் ஏனை

நங்கைய ரிருவரோடும் நீராடிக் கடையேறினர். அப்பொழுது பாமகள் அங்குவந்து, என்னையன்றி நீர் நிராடியவாறென்னை என வெகுளாநிற்ப, அது கண்ட தாமரைக்கிழவர் குற்றம் நின்மேலதாகவும் நம்மை நீ சினவறுற்றமையின் பெருந்தீங்குடையை யாயினை இனைய தீங்கினை எண்ணறு மாக்களாகத் தோற்றமுற்று ஒழிக்கற்பாலை எனச்சமித்தனர். சபிக்க அப்பொற்றொடி மடந்தை அஞ்சிப்புலம்மி அவலமுற்று எம்பெருமானே நுமது ஆருயிர்த் துணையாகிய யானும் மக்களுடம்பெடுத்து மயங்குவேனே என்று பிரிந்து கூறினாள் அவரும் அன்னவள் இடரகலக் கருதப் பூங்கொம்பனையாய் நினக்கு உடம்பா யமைந்த ஐம்பத்தொரு முதலெழுத்துக்களில் ஆகாரம் முதல் ஹாகாரம் இறுதியாகவுள்ள நாற்பத்தெட்டும் புவியிடை நாற்பத்தென்புலவராய்த் தோன்றுவவாக, அவ்வெழுத்துக்கள் எல்லாவற்றினும் கலந்து நின்று, அவற்றை வேறுவேறாக இயங்குவிக்கும் தலைமையுடைய அகரத்திற்கு அதுபோன்று உயிர்பொருளும் அல்பொருளமாகிய யாவற்றினுங் கலந்து நின்று அவற்றை இயக்குவிக்கும் தலைமையுடைய ஆலவாடியகளே முதல்வராகலின் அம்முறையானே அவர் ஒரு புலவராய்த் திருவுருத்தரித்துப் புலவர் நாற்பத்தொண்பதின்ம தொன்னுமாறு சங்கமமர்ந்து அவரவர்க்கு உண்ணின்று அவ்வாறே நாற்பத்தெட்டெழுத்துக்களும் புவியின்கண் வேறு வேறு மக்களாய் தோற்றஞ் செய்ய அவரெல்லாம் ஆரியத்தொடு பதினொண்மொழிகளும் ஆராய்ந்து செவ்விய மதுரஞ் சேர்ந்த நாற்றமிழாம் சீரிய மொழியினையும் நன்காராய்ந்து பன்மணைகலையுந் தேர்ந்து புலமையிற் றலைமை சார்ந்தனர். அவர்கள் வயிரமணி முதலியன இழைக்கபெற்ற கலைன்களேயன்றிக் கண்டியென்னும் கொழு மணிக்கலனும் பூண்டவர், தண்ணிலாப் போலும் வெண்ணீறு அணிபவர் வழுவற ஆராய்ந்த செஞ்சொற்களாற்றெடுந்த பாமாலையும், பூமாலையுஞ் சூட்டிச் சிவனை வழிபடும் இயல்பினர் அவரெல்லாம் நாடுகடோறும் சென்று சென்று ஆங்காங்குள்ள புலவர்களை யெல்லாம் புலமையால் வென்று வென்று, பாண்டி நாட்டு மதுரை நோக்கி நண்ணுவாராயினர். அப்பொழுது ஆலவாயமர்ந்த அவிர்சடைக் கடவுளானவர். அப்பொழுது ஆலவாயமர்ந்த அவிர்சடைக் கடவுளானவர் மறைமுடியுந் தொடற்கரிய திருவடி நிலந்தேயப் போந்து ஆண்டு வருகின்றாரை நோக்கி நீவியர்யாவரோ எங்கு நின்று போதுகின்றனிர்? என்ன அன்னவர் யாங்கள் விஞ்சை வல்லேம் ஈண்டுப் பொருளை நாட்டின் வருகின்றோம் என்று கூறினர் கூற அவரும் நீவிர் அருட்பெருங்கடலாய ஆலவாய்ப் பெருமான் திருவடிகளை இறைஞ்சுதல் வேண்டும் என்று கூறி

அழைத்துச் சென்று நஞ்சக்கறை பொலிந்த திருமிடற்றிறையைப் பணியுமாறு புரிந்து மறைந்தருளினர். புலவர்கள் விம்மித மெய்தி விண்ணிழி விமானத்து மேவிய கண்ணுதலைப் பலப்பல செய்யுட்களாற் பரவி வணங்கி மீண்டு பாண்டியனைச் சென்று கண்டார்கள் மன்னவனும் அன்னவர்தம் அறிவும் செறிவும் ஒழுக்கமும் விழுப்பமும் நோக்கி இப்பெரியோர்கள் இவண் எய்தப் பெற்றோம் என்று உவகைபூத்த உள்ளத்தனாய் திங்களக்கண்ணி வேய்ந்த செஞ்சடைப் பரமர் கோயிலின் வடமேற்கில் ஓர் புடைச் சங்க மண்டபம் உண்டாக்கி அவர்களை அங்கிருக்கச் செய்து, வரிசை பல நல்கா நின்றனன் அது கண்ட முன்னைப் புலவரெல்லாம் உளம் புழுங்கி அவர்களை நெருங்கி வாது புரிந்து, தோற்றுத்துயருழந்தேகினார்கள் இங்ஙனமே வேறு புலத்திருக்கும் கேள்வி வல்லோரும் வந்து, வந்து தருக்கினாற் பற்பல வினாக்களை யெழுப்பிப் பட்டிமை புரிந்து தோல்வியுற் றேகினர் இங்ஙனம் யாவரையும் சொற்போரில் வென்று வைகும் அன்னவர், மலைமகளளொருபால் நீங்காத் தலைவரை யடைந்து, வணங்கி, எந்தாய் யாவரும் அடுத்தடுத்திங்கு வந்து எம்மொரு பட்டிமை புரிகின்றனர் ஆதலின் அவரவர் புலைமை ஆராய்ந்து அளந்து அறிவிப்பதாய சங்க குறையிரத்து நின்றனர். வேண்டுவார் வேண்டுவதையீந்தருளும் கருணை வள்ளலான கடவுளும் ஆண்டு ஓர் பலகையுடன் புலவராய்த் தோன்றிச் சதுரமாய் இருசான் அளவுள்ளதாகும் இப்பலகை மதியினுயீம வாலிது, மந்திர வலியது, புலத்துறை முற்றிய நும்மனோர்க் கெல்லாம். முழம் வளர்ந்து இருக்கை நல்குவது இது நுமக்கு அளவு கோலாயிருக்கும் என்றியம்பி அதனையீந்தனர். நாமகளுருவாய் வந்த நாவரெல்லாம் வெள்ளை தாமரையனைய அப்பலகையைப் பெற்றுப் கோயிலை வலம் வந்து கழகத்தை யடைந்தனர். அடைந்தபின் நறுமலர் தூவி நறும்புகை யெடுத்தும் பலகையை வழிபட்டு நக்கீரர் அதன்கண் ஏறினர், கபிலரும் பரணரும் ஏறினர் இருங்கலை வல்லோரெல்லாம் இம் முறையேறி யேறி ஒருங்கு இனிதிருந்தனர், பலகையும் சுருங்கி நின்று உரை செய்வார்க்கு விரிந்து தோன்றும் நூல்போல யாவார்க்கும் வளர்ந்து இடங்கொடுத்தது, மேதகு சான்றோர் நூலின் வளைபொருள் விளங்கத்தந்து எதுவு மெடுத்துக் காட்டும் எழுவகை மதமுங் போர்ந்து வாது செய்வார்கள் வந்தால் மறுத்துநேர் நிறுத்தும் மன்னோ.

இங்ஙனம் புலவர் நாற்பத்தெண்மரும் தாம ஆராய்தறிந்த கல்வியின் பயன் விளங்குமாறு தூய்மை மிக்க பாட்டுங்கண் பல பாடிக் கொண்டிருந்தனர். பாட்டுக்களும் பலவாயின, அவை ஒன்று

ஒன்றனோடு சொல்வளனும் பொருள் வளனும் ஒத்துத் தோன்றலின் அவற்றின் வேறுபாடறியாமல் நமது பாட்டு அது எமது பாட்டு இது என்று கூறிச் சங்கப் புலவரும் மாறுபாடுற்றனர். சொல்லும் பொருளுமாய் விளங்கும் சொக்கப் பெருமானும் அவரது மாறுபாட்டினை யகற்றக் கருதி, ஓர் நாவலராய்த் தோன்றி அவரவர் பாட்டுக்களை அவரவர்க்கு எடுத்தளித்தனர் அவைபெற்ற புலவர்கள். நீரும் எம்முடனொருவராய் உயர்வுற வாழ்வீராக என வேண்டிக் கொள்ள நாவலராய் வந்த இறைவரும் அக்கனமாப் பலகை யென்னும் பொன்னாரத்திற்சூழப் பதித்த மணிகள்போல் ஏனைப் புலவர்கள் விளங்காநிற்க நடுவிற் பதித்த குருமணி போன்று நண்ணி வீற்றிருந்தருளினர், புலவரெல்லாரும் நம் மதி நலம் தோன்றப் பின்னரும் பற்பல பாட்டுக்கள் பாடி வாழ்ந்து வந்தனர் என்பது

(மேலது;8)

என்று சங்கம் எவ்வாறு தோன்றியதென்ற செய்திகளைத் தொகுத்தளிக்கிறார். இச்செய்தியினையும் பின்னணியாகக் கொண்டே சங்கம் இருந்ததென்ற கருத்தினை நிறுமுயலுகின்றார். இதற்கடுத்தாக அவர் தொகுத்தளிக்கும் செய்தி இறையனார் களவியலுறைக் கூறுவதாகும். அதனுள் தெரிவிக்கபடும் செய்தியைக் கீழ்வருமாறு தருகின்றார். அதனையும் காண்போம்.

தலைமைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்மென மூவகைப் பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள், தலைச் சங்கமிருந்தார், அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றெறிந்த முருக வேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என இத்தொடக்கத்தர் ஐஞ்ஞூற்று நாற்பத்தென்பதின்மர் என்ப, அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப, அவர்களாற் பாடப்பட்டன, அத்துணையோ பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பத்திற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப.

இதனை யடுத்துப் புராணத்திற் கூறப்பட்ட தரமுக்குப் பொற்கிழியளித்தது முதலிய வரலாறுகள் நக்கீரர் என்னும் புத்தகத்திற் காண்க ரென்ப, அவர்களைச் சங்கம் இரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக என்பத் தென்பதின்மர் என்ப, அவருட் கவியரங் கேறினார். எழுவர் பாண்டியரென்ப, அவர்சங்கமிருந்து தமிழராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப, அவர்க்கு நூல் அகத்தியமென்ப.

இனி, இடைச்சங்க மிருந்தனர் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும், இருந்தையூர்க்கருங் கோழியும் மோசியும் (இருந்தையூர்க் கருங்கோழி மோசியாரும் என்பது சிலப்பதிகார உரைப்பாயிரம்) வெள்ளூர் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும் (மதுரையாசிரியன் மாறானாரும் என்பது சிலப்பதிகாரவுரைப்பாயிரத்து) துவரைக் கோமகனும், கீரந்தையும் என இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு முவாயிரத்தொரு நூற்றுவர் பாடினா ரென்ப, அவர்களால் பாடப்பட்டன கலியும் குருகும், வெண்டாளியும் வியாழமாலை யகவலும் என இத்தொடக்கத்தன என்ப அவர்க்கு நூல் அகத்தியரும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும் பூதபுராணமும் என இவையென்ப. அவர் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தா ரென்ப அவரைச் சங்கம் இறிஇயினார் வெண்டேர்ச் செழியன் (விண்டோர்ச்செழியன் என்றும் கூறுவர்) முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தென்பதின்பர் என்ப. அவருட் கவியரங் கேறினார் ஐவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாட புரத்தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டியநாட்டைக் கடல் கொண்டது.

இனிக் கடைச் சங்கமிருந்து தமிழராய்ந்தார் சிறு மேதாவியாரும் சேந்தம் பூதனாரும் அறிவுடையரனாரும் பெருங்குன்றூர் கிழாரும், இளந்திரு மாறனும், மதுரையாசிரியர் நல்லந்து வானரும், மருதனிள நாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் பாடினா ரென்ப அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகைநானூரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்காற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும் புறநானூறும், ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்தும், நூற்றம்பது கலியும் எழுபது பரிபாடலும், கூத்தும் வரியும் சிற்றிசையும் பேரிசையும் என்று இத்தொடக்கத்தன அவர்க்கு நூல் அகத்தியரும் தொல்காப்பியரும் என்ப, அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்து ஆயிரத் தொண்ணுற்றைம் பதிற்றியாண்டு என்ப, அவர்களைச் சங்கம் இரீகியினர் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்திதொன்பதின்மர் என்ப அவருட் கவியரப் கேறினார் மூவர் பாண்டியரென்ப அவர் சங்க மிருந்து தமிழாராய்தது உத்திர மதுரை யென்ப என்பது.

(மேலது;9)

என்று அவற்றுள் உரைக்கப்படும் செய்தியை எடுத்துதருபவர் பின்னர் இவ்விரு தகவல்களின் வாயிலாகத் தமது ஆய்வினை முன்னெடுக்கிறார். பழங்காலத்தில் தமிழ்ச்சங்கம் இருந்ததென்ற நம்பிக்கையினை நிறுவ பின்வருமாறு எழுதுகின்றார்.

> இவற்றுள் புராண கதையானது இற்றை நாள் ஆராய்ச்சியாளர்க்குப் புதுமை யுடைத்தாய்ந்தொன்றும் எனினும், உலகத்து வழங்கும் கதைகள் ஒவ்வொன்றும் யாதானும் ஓர் உண்மையை அடிப்படையாகக் கொண்டே யெழுந்தனவாம் என்பது ஆராய்ச்சியாற் பெறப்படுதலின் இதனின்று அறியலாகும் உண்மையினை அறிந்து கொள்ளுதல் கடனாம் பன்னூற்றாண்டுகளின் முன்னர் மதுரையின் தமிழ்ச்சங்கம் நடைபெற்றது எவராயினும் மறுக்க வொண்ணாததோருண்மையாகும்.

(மேலது;10)

என்று தமதாய்வின் தொடக்கத்திலேயே இத்தகைய முடிவினை முன்வைக்கிறார். மேலும், திருவிளையாடற் புராணக் கதைக் கூறுவதைக் கீழ்வருமாறு எடுத்துரைத்து சங்கம் இருந்தது உண்மையென்பதை நிறுவத் தொடங்குகின்றார்.

> இதனை (மேற்கண்டதை) அடிப்படையாகக் கொண்டே இக்கதை யெழுந்தது. வடமொழியிற் புராண மெழுதினோர்த் அக்காலத்துத் தமிழ்ச்சங்க நிகழ்ச்சி எவரானும் ஐயுறவின்றித் துணியப் பட்டிருந்தமையின், அதனை முதலாகக் கொண்டு செவி வழக்காகவந்த சில செய்திகளோடு தாம் புகுத்தக் கருதியவற்றை உருவகப்படுத்திக்கூறியுள்ளாரென்பது தேற்றம். கங்கை கரையிலிருந்த வடமொழி யெழுத்துக்களில் ஆகாரம் முதலிய நாற்பத்தெட்டும் நாற்பத்தெண் புலவராக, அப்புலவர்கள் தமிழாராய்ந்தனர் என்று கூறியவர் கருத்து வடமொழியின் தொடர்பு தமிழுக்கு உண்டென்றேனும் வடமொழி வாணர்கள் தென்னாடு போந்து தமிழை வளம் படுத்தினரென்றேனும் காட்டுவதாதல் வேண்டும். அவர் கருத்து யாதாயினும் ஆக.

(மேலது;10)

என்றுரைத்து அக்காலத்தில் வடவரும் தமிழரும் கொண்டிருந்த உறவினைக் காட்டுவதாகவே இவை அமைந்துள்ளதென்ற புரிதலோடு பின்வருமாறு மேலும் எழுதிச் செல்கின்றார்.

> வட நாட்டிற்கு ஆரியம் போன்று, தென்னாட்டிற்குறிய தொன்மொழி தமிழென்றும் தமிழானது வட நாட்டவரும் விரும்பிக்

> கற்குமாறு அத்துணை அழகும், திருத்தமுமுடையதாய் விளங்கிற்றென்றும் இக்கதையிலிருந்து புலனாகிறது. இங்ஙனம் தமிழ் பயின்ற வடமொழி வாணர்கள் தமது மொழிக்கு யாதேனும் நலம் புரியாவிடின் அன்னாரைத் தாய் மொழியிலும் மிக்க பற்றுடையரென யாங்ஙனம் கூறுவது? இனிக் களவியலுரையானது கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தால் நாற்பத்தொண்பதின்மர் என்றதற் கேற்பவே புராணமும் இறையனாருடன் சங்கப் புலவரை நாற்பத்தொண்பதின்மராக் கூறிற்று, இத்தொகை பெறுதற் பொருட்டே வடமொழி யெழுத்துக்களில் ஈற்றிலுள்ள சில எழுத்துக்கள் கழிக்கப்பட்டன போலும்?

(மேலது;11)

என்று இரு நூல்களின் தரவுகளைக் கூட்டிக் காட்டுகின்ற போதும் வடமொழி எழுத்துக்கள் குறித்துக் கீழ்வருமாறு எடுத்தாய்கிறார்.

> இனி, வடவெழுத்துக்கள் ஐம்பத்து மூன்று எனச்சில நூல்கள் கவறா நிற்கும், நன்னூலாரும் அங்ஙனமே கூறினார். ஐம்பத்தொன்று எனச் சில நூல்கள் கூறுகின்றன. இந்நூல் ஐம்பத்தொன்று கொண்டு அவற்றுள் இரண்டினைக் கழித்துத்து விட்டது. மாகேசி சுர சூத்திரங்கள் நாற்பத்திரண்டு எழுத்துக்களே கிளந்தெடுத்துக்கூறுகின்றன. கூட்டெழுத்து முதலியவைகளைக் சேர்த்தும் சேர்க்காதும் கணக்கிடுதலின் இவ்வேறுபாடுகள் நிகழ்கின்றன.

(மேலது;11)

என்று கூட்டெழுத்துக்களைப் பிரித்தறிந்ததன் விளைவே எழுத்துக்களின் எண்ணிக்கையில் வேறுபாடு தெரிவதைச் சுட்டிக்காட்டி திருவிளையாடற் புராணத்தில் குறிக்கப்படும் புலவர்களைச் சுட்டிச் செல்வதைப் பின்வருமாறு எடுத்துக்கூறுகிறார். அதாவது,

> நக்கீரர் கபிலர், பரணர் என்னும் மூவர் பெயரையும் புராணம் சிறத்தெழுத்துக் கூறுவது அவர்களது பெருமைக்குச் சான்றாகும். நம்பியாண்டார் நம்பிக்கும் மூவர் பெயரையே கிளைந்தோதினமை காண்க. புராணங்கூறுகிற வேறு சில தெய்வீக நிகழ்ச்சிகள் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவன வல்ல நம் ஆராய்ச்சியின் முடிபு யாதாயினும் பரஞ்சோதி முனிவரியற்றிய திருவிளையாடற் புராணம் கற்பவர்க்கு அன்பினைப் பெருகச் செய்த இன்பம் விளைக்குமென்பது ஒருதலை.

(மேலது;12)

என்று திருவிளையாடற் புராணம் தரும் சங்கம் பற்றிய செய்தியை முடிக்கிறார். இதில் வேறு சிலதெய்வீக ஆராய்ச்சிகள் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவனவல்ல என்று துண்டாக விட்டுவிடுவது இவர் தொடக்கத்தில் கூறிய எந்த ஒரு எழுத்துக்குப்பின்னாலும் சில உண்மை இருக்கும் என்ற கருத்து இவ்விடம் அறியமுடியாமால் செய்துவிடுவது ஒருபுறமிருக்க அடுத்ததாக, இறையனார் களவியலுரை கூறும் சங்கம் பற்றியவைகளைப் பின்வறுமாறு எடுத்துரைக்கிறார்.

> இனி, இறையனார் களவிய லுரையானது பெரிதும் மதிப்பிற்குரிய தென்று இவ்வுரை கூறும் முச்சங்க நிகழ்ச்சி யெல்லாம் வரலாற்று முறையான் அறியப்படவாதல் வேண்டும் இன்றேல் மூன்று சங்கத்தினு மிருந்த புலவர்களிற் சிலர் பெயரையும் அவர்களாற் பாடப்பட்ட பனுவல்களிற் அரசர்களும் இத்துனையை ரென்றும் சங்கம் நிலவிய ஆண்டுகள் இத்துனையவென்றும் வரையறுத்துக் கூறுதலும் அமையாவன்றே, அன்றியும் இவ்வுரை கூறும் சங்க வரலாற்றின் அறியலான நூல்களிற் சிற்சில நமக்குக் கிடைத்திருந்தாலும் இதனில் இடைச்சங்கமிருந்த இடமாகக் கூறியுள்ள கபாட புரமானது இராமாயண காலத்தில் பாண்டி நாட்டிலிருந்ததாக வான்மீக விராமாயணங் கூறுதலும், பாண்டி நாட்டைக் கடல் கொண்டதாக இதனிற் கூறப்படுஞ் செய்தி (ததோ ஹேமமயம் திவ்யம் முக்தாமணி விபூஷிதம் யுக்தம் கவாடம் பாண் டியனாம் கதாத்ருக்ஷ யத வாநரா; – வான்மீக விராமாயணம், கிஷ்கிந்தா காண்டம்)

(மேலது;12)

என்று சொல்லி சங்கம் இருந்தமைக்கான தமிழ்நூல் தரவுகளாகப் பின்வருவனவற்றையும் எடுத்துரைக்கிறார்.

> கலித்தொகை, மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின் மெலிவன்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப் புலியொடு வின்னீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன் – கலித்தொகை, முல்லைக்கலி

(மேலது;12)

> சிலப்பதிகாரம் (வடிவே லெறிந்த வான்பகை பொறாது பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடு கொடுங்கடல் கொள்ள – சிலப்பதிகாரம், காடுகாண் காதை) என்ற சிறந்த பழைய தமிழ் நூல்களிலும், பழைய வுரைகளிலும் கூறப்பட்டிருத்தலும், கடல்கோட் செய்தி பிறநாட்டுப் புலவர்களின் அரிய ஆராய்ச்சிகளானும் ஆதரிக்கப்படுதலும். இவ்வுரையின்

> மெய்ம்மையை விளக்குவனவாகும். இவ்வுரையின் மெய்ம்மை தெளிந் தன்றே பின் வந்த வுரையாளர் பலரும் இதனைப் பொன்னே போற் போற்றி மேற்கொள்வாராயினர்? எனினும் காலத்தாற் பெரிதும் சேய்மைப்பட்ட முச்சங்க வரலாறுகள் கூறுவாராயினும், எழுதுவாராயினும் சிறுபான்மையாகத் திரிந்து சிதைந் திருத்தலும் இயல்பே.
>
> (மேலது;13)

என்று சங்கம் இருந்தது தற்போது நாமிருப்பது எவ்வளவு நம்பத்தக்கதோ அவ்வளவு நம்பத்தக்கது என்னும் பொருளில் அழுத்தமாக உரைக்கிறார். இதனோடு இறைனாற் களவியல் உரைக் கண்டவர் நக்கீரர்தானா? என்ற கேள்வியிருப்பதைச் சுட்டிக்காட்டி, அதற்கும் பின்வருமாறு விளக்க மளிக்கிறார்.

> இவ்வுரை கண்டார் நக்கீரனா ரென்பதனை ஐயுறத்தக்க சில குறிப்புக்கள் உளவேனும், அவரேயென வலியுறுத்தும் சான்றுகள் பல வுளவாகலின், அவ்வையம் நிலைபெறா தொழிகின்றது.
>
> (மேலது;13)

என்று கூறி அவ்வாறு நிலைநிறுத்துவதற்கான காரணங்களாக,

> ‘வினையினீங்கி’ என்னும் மரபியற் சூத்திர வுரையில், கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனார் ‘மகனார் நக்கீரனார்’ எனப் பேராசிரியர் கூறினர். திணை மயக் குறுதலும் என்னும் அகத்திணையியற் சூத்திரவுரையில் இக்கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளும் களவு நிகழுமென்று கொண்டவாறுணர்க’ என நச்சினார்க்கினியர் கூறினர். சிலப்பதிகாரத்து வேனிற் காதை முதற்கண்; ‘கணக்காயனார் மகனார் நக்கீரனாருரைத்த இறையனார் பொருளுரை’ என அடியார்க்கு நல்லார் கூறினர். பலரானும் மதிக்கப்பட்ட பழைய பேருரையாளர் பலரும் இங்ஙனம் ஒரு படித்தாகக் கூறுமிதனினும் சிறந்த சான்று வேறென்ன வேண்டும்?
>
> (மேலது, ப.14)

என்று கேள்வியெழுப்பி முடிவுக் கட்டுகின்றார். இத்தகைய முடிவிற்கு மேலும் வலு சேர்க்கும் ஆதாரங்களாகக் கீழ் வருவனவற்றை அடுக்குகின்றார்.

> இனிப் பண்டை நாளிற் சங்கமிருந்து தமிழ் வளர்த்தமையைப் புலப்படக்கூறும் தெய்வப் பெற்றியாளர்களின் கூற்றுக்களை யீண்டு எடுத்துக் காட்டுதும்.

*சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்து மென்*
*சிந்தையுள்ளும், உறைவா னுயர்மதிற் கூடலினாய்ந்த*
*வொண்டீந்தமிழின் றுறை - திருக்கோவையார்*

என மாணிக்கவாசகரும், 'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்' – தேவாரம், திருப்புத்தூர் எனத் திருநாவுக்கரையரும், 'ஞானசம்பந்த னுரைசெய் சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்' – தேவாரம், தேவூர் எனத் திருஞானசம்பந்தரும், 'கோதை சொன்ன சங்கத்தமிழ் மாலை முப்பதும்' – திருப்பாவை என நாய்ச்சியாரும் கலியன் சொன்ன சங்கமுகத் தமிழ் மாலை பத்தும்; 'கலிகன்றி சொன்ன சங்கமலி தமிழ் மாலை பத்திவை' – பெரிய திருமொழி எனத் திருமங்கையாழ்வாரும்;

*'சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண் மூதூர்,*
*நூல்பாயிடத்தும் முளை செய்யுண்மிக்கேறு சங்கம்;*
*திருவாலவாயில் எம்மைப் பவநீர்ப்பவர் சங்கமிருந்தது'*

(பெரிய புராணம், மூர்த்தி)

*'சென்றணைந்து மதுரையினிற் றிருந்திய நூற்சங்*
*கத்துளன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்*

(பெரிய புராணம், திருநாவுக்கரசர்)

என சேக்கிழாரும்,

*'சங்கத்தமிழ் மூன்றுந்தா* (நல்வழி)

என ஔவையாரும் (இவர் கடைச்சங்க நாளில் விளங்கிய ஔவையாரல்லர்)

அருளிச் செய்துள்ளார்கள். இவற்றுள், அப்பர் தேவாரமும், பெரிய புராணமும் முறையே சிவபிரான் புலவராய்ச் சங்கமேறி வாதியற்றினதையும், அவர் சங்க மமர்ந்து தமிழாராய்ந் ததனையும் கூறுதலுங் காண்க.

(மேலது;15)

என்பதோடு நிறுத்தாமல்,

இறையனாரப் பொருளுரை கூறும் முச்சங்கவுண்மையை ஆதரித்து நிற்கும் மேற்கோள்கள் வருமாறு:

தலை, யிடை, கடைச் சங்கத்தாரும், பிற சான்றோரும் காற்சீரடியான் வரும் ஆசிரிமும், வெண்பாவும், கலியுமே பெரும் பான்மையுஞ்செய்தார்; வஞ்சிப்பா சிறு வரவிற் றெனக்கொள்க என்றும் இந்நூல் செய்த காலத்துத் தலைசங்கத்தாரும், இடைச்சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியாற் பயின்று வரச் செய்யுள் செய்தார்

என்றும் இடைச்சங்கத்தாரும், கடைச்சங்கத்தாரும் இவ்விலக்கணத்தாற் செய்யுள் செய்தார்

என்றும் செய்யுளியலுரையிலும்; அவ்வழக்கு நூல் பற்றி யல்லது மூன்று வகைச் சங்கத்தாரும் செய்யுட் செய்திலர்; என்று மரபியலுரையிலும் பேராசிரியர் கூறினர்.

(மேலது;16)

அவ்வாசிரியராவார் அகத்தியனாரும், மார்க்கண்டேயனாக 'தலைச்சங்கத்தார் முதலியோர்' என்று பாயிரவுரையிலும், ''இனித் தமிழ்ச் செய்யுட்கண்ணும், இறையனாரும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும், வான்மீகனாரும், கௌதமனாரும், போல் வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்தன இடையும்,

கடைச்சங்கத்தார் செய்தன கடையுமாகக் கொள்க என்று புறத்திணையியலுரையிலும், தலைச்சங்கத்தாரும் முதனூலாசிரியர்

கூறிய முறையே கரணம் ஒன்றாகச் செய்யுள் செய்தார் என்பதூஉங் கூறியவாறாயிற்று! என்று கற்பியலுரையிலும், 'அது மூவகைச் சங்கத்தாரும், பிற சான்றோரும் நாற்சீரடியானே மூன்று பாவும் வரப் பெரும்பான்மை செய்யுட் செய்து, வஞ்சிப்பா சிறுவரவிற்றாகச் செய்யுள் செய்தவாற்றாலுணர்க, என்றும் இந்நூல் செய்த காலத்திற்றலைச் சங்கத்தாரும் இடைச் சங்கத்தாரும் கட்டளையடி பயின்று வரச் செய்யுள் செய்தா ரென்பது இச்சூத்திரங்களாற் பெறுதும்; பின்பு கடைச்

சங்கத்தார்க்கு ஆஃதரி தாகலிற் சீர்வகையடி பயிலச் செய்தா ரென்றுணர்க, என்றும், அது தலைச் சங்கத்தாரை யொழித்தோர் சிறுபான்மை வழக்கும் பெரும்பான்மை செய்யுட் சொல்லுமாக இவ்விலக்கணத்தாற் செய்தவாறே இக்காலத்துச் செய்யினுமாம், என்றும் செய்யுளியலுரையிலும் நச்சினார்க்கினியர் கூறினர். இரண்டாம் ஊழியதாகிய கபாட புரத்தினிடைச் சங்கம் என்றும் 'கடைச் சங்க மிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த மதிவாணனார் நாடகத் தமிழ் நூல்' என்றும் சிலப்பதிகாரவுரைப் பாயிரத்தும், முதலூழியிறுதிக்கண் தென் மதுரையகத்துத் தலைச் சங்கம் என்று வேனிற் காதை யுரையிலும் அடியார்க்கு நல்லார் கூறினர். ''சாலு மேன்மையிற்றலைச் சங்கப் புலவனார் தம்முன்'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணத்தே சேக்கிழார் கூறினர்.

(மேலது;17)

என்று சங்கம் பன்னெடுங்காலம் நிலவியிருந்தது என்னும் கருத்தில் உறுதியோடு இருப்பவர், எம். சேஷகிரி சாஸ்திரி என்பவர் சங்கம் குறித்து

உரைத்த எதிர்க் கருத்தினைப் பின்வருமாறு எடுத்துரைத்து மறுத்துரைப்பதையும் காணமுடிகிறது.

> இன்னணம் பேரருட் புலமையாளரான பண்டைப் பெரியார் பலரியற்றிய நூல்களினும், உரைகளினும் தமிழ்ச் சங்க வரலாறு பரக்கக் கூறப்பட்டுக் கிடக்கவும், சென்னை இராசதானிக் கல்லூரியில் வடமொழிப் போத காசியராயிருந்து காலஞ்சென்ற எம். சேஷகிரி சாஸ்திரி அவர்கள் எம்.ஏ, வழுக்கள் மல்கத் தாமெழுதிய 'தமிழ்க் கவி சரிதம்' என்னும் சிறு புத்தகத்தில்
>
> பலவிடத்துப் பின்வருமாறு கூறிப்போயினர். முதலிரண்டு சங்கங்களையும் பற்றி யாம் ஆராயப்புகின், அவை ஏறக்குறையப்
>
> பொய்யுரையும் புனைந்துரையும் பொதிந்தளவாதலிற் சிறிதேனும் நம்புதற் பாலன வல்ல' இவ்வாறு கடைச் சங்கங்கூடிய புலவருட் பல்லோர், வெவ்வேறு காலங்களில் விளங்கின ரெனல் காட்டப்படிற் சங்கமென்பது தனாது மெய்ச் சரிதவியலிழந்து பொய்க்கதையினியலுடைத்தாய் விடும்' கடைசியிற் பார்க்கப் போனாற் சங்க நிகழ்ச்சியைப் பற்றிய யாவும் கற்பனா சாமர்த்தியங் காரணமாக விளைந்த பொய்க் கதையாய்க் கழியினும் கழியலாம்'
>
> போசராசனிருந்த காலமென்று வழக்கமாகக் குறிக்கப்படுங் கால வரையறைக்கு முற்பட்டவரும் தனித்தனி வெவ்வேறு காலங்களிலிருந்த வருமாகிய காளிதாசன், பாரவி, மாகன், பவபூதி, பாணன், தண்டி முதலாயினாரெல்லாம் அவ்வரசனதவைக் களத்தினை அலங்காரஞ் செய்தற் பொருட்டும், ஒருவரோடொருவர் முரணிப் போட்டியிட்டுத் தமது இறைவனை மகிழ்விக்கத் தக்க வடமொழிக் கவிகள் தக்கணமே சொல்லுதற் பொருட்டும் ஒரே காலத்தின ராக்கப்பட்டனர். இத்தகைய பொய்ம் மகிமையோடும் விளங்கா நின்ற இவ்வடநூற் புலவர் குழாம் நமது தமிழ்ச் சங்கத்திற்கு எவ்வாற்றானும் தக்க வினையாம்.

(மேலது;18)

என்று எம். சேஷகிரி சாஸ்திரி கூறியவைகளைத் தரும் வேங்கடசாமி நாட்டார் பின்வருமாறு அவற்றினை, மறுக்கவும் செய்கிறார்.

> இவர் கூறிய வழுவுரையெல்லாம் தமிழ்ப் பயிற்சி யுடையார் கண்டு நகையாடற்கேற்றனவேயன்றி எடுத்து மறுத்தற் கேற்றன வல்ல. உதாரணமாகச் சில காட்டுதும். இறையனா ரகப்பொருளுரை கூறும் முச்சங்க வரலாறு ஆலாசிய மான்மியத்திற்கு மாறாக இருத்தலின் பொய்யுரையாம் என்று கூறிவிட்டுப், பின் ஆலாசிய மான்மியம் கூறுவதும் பொய்யென்கின்றார். ஒரு பொய்க்கு மாறுபட விருக்கும் பிறிதொன்றும் பொய்யென்பது இவர் கருத்துப் போலும்!

(மேலது;19)

என்று மேலோட்டமாகச் சொல்லத் தொடங்குபவர் பின்வருமாறு சற்று அழுத்தமாக மறுக்கத் தொடங்குகின்றார்.

கரிகாலம் காலமும், சிலப்பதிகார, மணிமேகலைகளின் காலமும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு எனக் கூறிவிட்டுக், கடைச்சங்கம் தோன்றுதற்கு 760 ஆண்டுகட்கு முன் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் யாக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்கிறார். இஃது 9, 10ஆம் நூற்றாண்டுகளில் இவர் படைத்துக் கொண்ட தமிழ்ச் சங்கம் போலும்! சிலப்பதிகார காலத்தில் பரணர் முதலிய சங்கப் புலவர் பலர் இருந்தமையை ஓர்ந்திலர்.

கரிகாலன் 2ஆம் நூற்றாண்டினன் ஆகலானும், தொண்டைமான் இளந்திரையன் என்பான் 11ஆம் நூற்றாண்டிலிருந்த குலோத்துங்கனது வழியில் வந்தோனாகலானும், இவ்விருவரையும் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனார் இளந்திரையன் காலத்தில் இருந்திருக்க வேண்டுமேயன்றிக் கரிகாலன் காலத்தில் இருக்க முடியாது என்கிறார். இளந்திரையன் பிற்காலத்தவன் என்பதற்கு இவர் கண்ட ஆதாரம் இன்னதெனக் காட்டினாரில்லை.

முதற் குலோத்துங்கன் காலத்திருந்த சயங்கொண்டார், பரணியில், கரிகாற் பெருவளவன் உருத்திரங்கண்ணனார்க்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் கொடுத்துப் பட்டினப் பாலை பெற்றான் என்பார், 'தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர் பொன், பத்தொடாறு நூறாயிரம் பெறப் பண்டு பட்டினப் பாலை கொண்டதும் எனக் கூறியிருத்தலையும் ஓர்ந்திலர்.

(மேலது;19)

என்று பதிலுரையை மறுப்புரையாகத் தருபவர், அச்சங்க காலத்தில் இயற்றப்பட்ட நூல்களின் வரிசையைப் பின்வருமாறு தொகுத்தளிக்கிறார்.

சங்க நாளில் இயற்றப்பட்ட நூல்களும், பாட்டுக்களும் எண்ணிறந்தனவேயாகும். அகத்தியம், தொல்காப்பியம், மாபுராணம், பூதபுராணம், பனம் பாரம், பன்னிரு படலம், அவினயம் காக்கைபாடினியம், சிறுகாக்கை பாடினியம், சங்க யாப்பு, நற்றத்தம், பல்காயம், மயேச்அரம், வாய்ப்பியம், அணியியல் என்பனவும், இசை நுணுக்கே, பஞ்ச பாரதீயம், பரதம், முறுவல்,

சயந்தம், குணநூல், செயிற்றியம், பெருங்கலம், நூல், இந்திரகாளியம், பஞ்ச மரபு, பரத சேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்பனவும், பிறவுமாக, இயற்றமிழ்க்கும், இசை, நாடகங்கட்கும் இலக்கண நூல்கள் எண்ணிறந்தன வழங்கின வென்பது, பழைய உரையாளர்கள் அந்நூல் களிலிருந்து

சூத்திரங்கள் எடுத்துக்காட்டியும், அந்நூல்களைப் பற்றிச் சிற்சில குறிப்புக்கள் வரைந்தும் சென்றமையால் அறியக் கிடக்கின்றது.

(மேலது;20)

என்று தந்து முச்சங்கம் இருந்ததும், அதில் பற்பல நூல்கள் இயற்றப்பட்டதும் ஏற்கத்தக்க உண்மை என்பதை நிறுவுகின்றார். மேலும் சங்கம் என்னும் சொல் வடசொல்லென்று வாதிக்க வருபவர்களுக்குப் பதில் தருவதோடு சங்கம் என்பதற்குப் பதிலாக அவை என்றும் அவையத்து, மன்றம், பொதியில், பட்டி, தொகை என்றெல்லாம் சங்கச் செய்யுள்களில் கையாளப்படுவதைத் தந்து, மணிமேகலையுள், புலம்புரி சங்கம் பொருளொடு முழங்க' என்று கூறியுள்ளதையும் குறித்து,

*செந்தமிழ் நாடே*
*மன்றவாணன் மலர்திரு வருளால்*
*தென்றமிழ் மகிமை சிவணியசெய்த*
*அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்*
*படிலின்மாப் பெருமை பரவுறு சோழனும்*
*சைவமா தவரும் தழைத்தினி திருந்த*
*மையாறு சோழ வலி நாடென்ப*

(மேலது;22)

என்னும் சூத்திரத்தையும் எடுத்தாண்டு, தமிழைச் சங்கம் வைத்துத் தொடர்ச்சியாக வளர்த்தெடுத்தது, பாண்டிய நாடென்றுரைத்து, சங்கம் இருந்தமைக்கான சான்றுகளாகப் பின் வருவனவற்றை வரிசையமைக்கிறார்.

தமிழ் கெழு கூடற் றண்கோல் வேந்தே எனப் புறநானூற்றிலும், தமிழ் வையைத் தண்ணம் புனல் எனப் பரிபாடலிலும், தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின் மகிழ் நனை மறுகின் மதுரையும் எனச் சிறுபாணாற்றுப் படையிலும், தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை எனச் சிலப்பதிகாரத்திலும், தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பரவாய் என மணிமேகலையிலும், பாண்டி நாட்டையும், மதுரையையும், வையையாற்றையும் சிறப்பிக்கும் வழித் தமிழொடு புணர்த்துக் கூறியிருத்தல் காண்க. இவற்றுள் சிலப்பதிகாரத் தொடரானது, சோணாட்டிலிருந்த கவுந்தியடிகள் கோவலனை நோக்கி, யானும் மதுரைக்குச் செல்லுங் கருத்துடையேன் என்னுமிடத்துக் கூறப்பட்டதாகலின், சோணாடு சிறப்பு வகையால் தமிழ் நாடன்மை பெறப்பட்டது.

திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் 'செய்யனே' என்னும் திருவாலவராய்ப் பண்ணில் பாண்டி வேந்தைக் குறிக்குமிடத்து,

பட்டிமன்றென்னன் பாண்டியற்காகவே என்றும், பண்ணியற் றமிழ்ப் பாண்டியற்காகவே என்றும் அருளிச் செய்திருக்கின்றனர். செழியன் தமிழ் நாடன் என்று திவாகரம் கூறுகின்றது. 'ஈழமுந்தமிழ்க் கடலுஞ்சிதைத் திகல் கடந்ததோரிசைபரந்ததும்' என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது.

(மேலது;27)

என்று அடுக்கடுக்காக எடுத்துரைத்து, கம்பராமாயணத்தில் வால்மீகி ராமாயணத்திலும், குறிக்கப்படுவதையும் தந்து பின்வருமாறு சொல்லி முடிக்கிறார்.

*யாம் இதுகாறுஞ் செய்த ஆராய்ச்சியால்,*
*தமிழ் வளர்ச்சி கருதிப் பாண்டி நாட்டிற்*
*பன்னெடுங்காலம் தமிழ்ச் சங்கம் நிலவிய*
*செய்தி உறுதியுடைய மேற்கோள் பல*
*கொண்டு நிறுவப்படுவதாயிற்று.*

(மேலது;27)

என முடிக்கிறார். இதுவரைக் கண்ட சங்கம் குறித்த வாத விவாதங்கள், முதல் அதிகாரத்தில் அமைத்துக் கொண்டுள்ளார். தமது இரண்டாம் அதிகாரத்தில், தாம் எடுத்துக் கொண்ட ஆய்வு பொருண்மையான 'கபிலர்' குறித்து எழுதத் தலைப்படுகின்றனர்.

## 2.3.16.2. ந .மு. வேங்கடசாமி நாட்டார் குறிக்கும் கபிலரின் காலம்

கடைச்சங்கமானது, இந்நாயன்மார் காலத்திற்குப் பல நூற்றாண்டுகளின் முன்னர் நிகழ்ந்ததாகும். காலத்தை வரையறுத்தற்குரிய கருவிகளில், அக்காலத்துச் செய்யுணடைப் போக்கும் ஒன்று. சங்கச் செய்யுள்களுக்கும் தேவாரத்துக்கும் உள்ள நடை வேற்றுமையோ பெரிதாகின்றது. இஃதொரு புறமிருக்க, இவ்விருவேறு காலங்களின் சேய்மையைக் குறிக்கும் வேறு சான்றுகள் இங்கே காட்டப்படும். திருநாவுக்கரசு நாயனார், 'நன்பாட்டு புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினோன்காண்' என்று இறையனார்க்கும் நக்கீரனார்க்கும் வாது நிகழ்ந்தமை குறித்திருத்தலொன்றே, தமிழ்ச் சங்கமானது நாயன்மார் காலத்திற்குச் சிறிதேனும் முற்பட்டதாமென்று நாட்டப் போதியதாகும்.

(மேலது;70)

இதைச் சொல்லத் தொடங்கி, மதத்தின் அடிப்படையிலும், தமது கால ஆய்வினை மேலும் மேற்கொள்ளத் தலைப்படுகிறார்.

> கடைச்சங்க நாளிலோ, புகார், மதுரை போன்ற தலைநகரங்களில் பௌத்த, சமணக் கோட்டங்களும், பள்ளிகளும் நிறுவப்பட்டு, அம்மதங்கள் பரவுவதற்கான செயல்கள் செய்யப்பட்டு வந்தன என்று அறியப்படினும், தமிழரசர் யாரும் அக்கொள்கைகளை மேற்கொண்டனரில்லை. தமிழ்ப் புலவர்களும் அன்னர், சேரன் செங்குட்டுவனுக்குத் தம்பியராகிய இளங்கோவடிகளும், சாத்தனாரும் முறையே சமண, பௌத்தக் கொள்கைகளை விரித்துரைத்தார்களெனினும், அவர்கள் சைவ, வைணவக் கொள்கைகளையும் பாராட்டியிருத்தலின், எம்மதத்தினும் அவர்கட்கு வெறுப்பில்லையென்பது பெறப்படும்.
>
> (மேலது;72)

என்று அக்காலத்தில் சமண, பௌத்த சங்கங்களைப் பரவலாக்கும் முயற்சி நடைப்பெற்றிருப்பினும், தமிழர்கள் இவைகளைப் புறக்கணித்தனர் என்றுரைத்துப் பின்வருமாறு அழுத்தமும் தருகிறார்.

> எத்துணையோ பல அரசர்களையும் வள்ளல்களையும் பற்றிப் பன்னூறு புலவர்கள் பாடிய பாட்டுக்களைத் தொகுத்துள்ள எட்டுத்தொகை, பத்துப் பாட்டுக்களில் ஒரிடத்தேனும் சமண, பௌத்தக் கொள்கை காணப்படவில்லை.
>
> (மேலது;72)

என்று திட்டவட்டமாகத் தெரிவித்துக் கபிலரின் காலம் குறித்து எடுத்துரைக்கையில்,

> இவ்வாற்றால் மூன்றாம் நூற்றாண்டின் முற்பட்டது என நிறுவப்படும் கடைச் சங்கத்தில் விளங்கிய கபிலரது காலம் யாதென ஆராய்ந்திடுவோம். இதனை ஆராய்ந்து துணிதற்குச் சிறந்த கருவியாக உள்ளன சிலப்பதிகாரமும், இலங்கைச் சரித்திரங்களும் ஆகும். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயிலெடுத்து வழிபட்ட நாளில், அங்கு வந்திருந்த மன்னர்களில் கடல் சூழிலங்கைக் கயவாகு வேந்தனும் ஒருவன் என்றும், அவன் கண்ணகியால் வரம் பெற்றுச் சென்று, இலங்கையிலும் நங்கைக்கு விழாச் செய்தான் என்றும், சிலப்பதிகார வரந்தரு காதையாலும், உரை பெறு கட்டுரையாலும் அறியப்படுகின்றது. இலங்கைச் சரித்திரங்களில், கயவாகு என்னும் பெயருடையார் இருவருளரென்றும், அவருள் முதற் கயவாகுவே சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டவனென்றும் சரித வல்லுநர் யாவரும் ஒரு படித்தாகத் துணிகின்றனர்.

இக்கயவாகுவின் காலம், மகா வம்சம் கூறுகிறபடி கி.பி.113–135 ஆகும் என்றே கொண்டனர், 'ஆயிரத் தெண்ணூறு ஆண்டுக்கு முந்திய தமிழர்' என்னும் நூலியற்றிய வி. கனகசபைப் பிள்ளை முதலியோர் திரு. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், எம்.ஏ., மகாவம்சம் கி.பி.113–135 என்று கூறும் எனக் கூறித் தம்முடைய கொள்கையாக, முதற் கயவாகுவின் ஆட்சிக் காலம் கி.பி.179–201 ஆகும் என்று கூறியுள்ளனர். திரு. கே.ஜி. சங்கரையர், கயவாகுவின் காலம் கி.பி. 154–176 என்று கூறுவதோடு கோவலனிறந்தது 157 என்றும், கண்ணகிக்குக் கோயிலெடுப்பித்து விழா இயற்றியது 160–என்றும், சோதிடக் குறிப்பு முதலிய பல ஆதரவு கொண்டு விளக்குகின்றனர்.

(செந்தமிழ்த் தொகுதி 4–பக்–525)

இப்பொழுது இவ்விறுதிக் கொள்கையினை வைத்துக் கொண்டு, மேல் ஆராய்ச்சி நிகழ்த்துதும். செங்குட்டுவன் அரசு வீற்றிருந்த காலம் ஐம்பத்தைந்து ஆண்டு என்று பதிற்றுப்பத்து, ஐந்தாம் பத்தின் பதிகத்திறுதிக் கட்டுரையால் விளங்குகின்றது. அவன் கண்ணகிக்குக் கோயிலெடுப்பித்த காலத்தில், அவனது ஆட்சியில் ஐம்பதியாண்டு ஆயிற்றென்பதும், அவன் பிறந்து ஏறக்குறைய எழுபதியாண்டு ஆக வேண்டுமென்பதும், மாடல மறையோன் செங்குட்டுவனை நோக்கி,

*வையங் காவல் பூண்டநின் னல்யாண்*
*டையைந் திரட்டி சென்றதற் பின்னும்*
*அறக்கள வேள்வி செய்யாதியாங்கணும்*
*மறக்கள வேள்வி செய்வோ யாயினை'*

*(சிலப்பதிகாரம் நடுகற் காதை)*

என்றும்,

*நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை*

என்றும் கூறியிருத்தலாற் றெளியப்படும்.

இவ்வாற்றால், செங்குட்டுவன் அரசு கட்டிலேறியது கி.பி.110ஆம் ஆண்டென்று கொள்ளப்படும். படவே, அவன் தந்தையாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு அரசு வீற்றிருந்தானென்று பதிற்றுப் பத்தால் அறியப்படுதலின், அவன் அரியணை ஏறியது கி.பி.52ல் என்று கொள்ளலாம். செங்குட்டுவனைப் பதிற்றுப் பத்தில் ஐந்தாம் பத்தாற் பாடிய பரணர் என்னும் புலவர் பெருமான், அவன் தந்தையாகிய நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்ப்புறத்துப் பொழுது வீழ்ந்த காலையில் இரங்கிப் பாடிய பாட்டு ஒன்று புறநானூற்றில்

> காணப்படுகிறது. இவரே கரிகாலன் தந்தையாகிய உருவப் பஃறேரிளஞ் சேட் சென்னியைப் பாடியிருத்தலோடு கரிகாலன் மகளாகிய ஆதிமந்தியின் செய்தியைப் பலவிடத்துக் கூறுகின்றார். இவ்வாற்றால், சோழன் கரிகாலனும், செங்குட்டுவனும் ஒரு காலத்தவரென்று கருதலாம்.
>
> (மேலது;75)

என்று கூறி நிறுத்துகின்றார். மேற்கண்டவைகளுக்கு ஆதாரமாக செந்தமிழில் வந்த கட்டுரைகளையும் பயன்படுத்தி இருப்பதை அடிப்பகுதியில் தருகிறார். இதில் கவனிக்க வேண்டியது, சோழன் கரிகாலனும் செங்குட்டுவனும் ஒரு காலத்தவரென்று சுட்டியிருப்பதாகும். இவ்வாறு எழுதியப் பின் தமது முடிவினை அடுத்தப் பக்கத்தில் மாற்றிக் கொள்கிறார். அதாவது,

> எனினும், சிலப்பதிகாரத்தில் கரிகாலன் செய்திகள் இறந்த காலத்தவராகக் கூறப்பட்டிருத்தலும், மதுரைக் காண்டத்து இறுதிக் கட்டுரையில், நெடுஞ்செழியனையும், வஞ்சிக் காண்டத்து இறுதிக் கட்டுரையில் செங்குட்டுவனையும் கிளந்தெடுத்தோதிய இளங்கோவடிகள், புகார் காண்டத்து இறுதிக் கட்டுரையில் அரசர், பெயர் யாதும் கூறாது விட்டிருந்தாலும், கரிகாலன் மகளாய ஆதிமந்தி, தன் கணவனைக் காவிரி அடித்துக் கொண்டு போகத் தான் புனலின் புலம்பிச் சென்று, தன் கணவனை மீட்டும் எய்திய செய்திபைக், கண்ணகி, வஞ்சின மாலையுள், எடுத்துரைத்ததாகக் கூறுதலும், மணிமேகலையுள்ளும், அக்காலத்துப் புகாரி ஆண்டவன் நெடுமுடிக்கிள்ளியென்று கூறப்படுதலோடு, கரிகாலன் அவனுக்கு முற்பட்டவன் என்பது தோன்றக் கூறியிருத்தலும் ஆகியவற்றால், கரிகாலன் அக்காலத்து இருந்திலன் என்பது விளங்குதலின், செங்குட்டுவனது இளமையிலும், இமயவரம்பனது ஆட்சிக் காலத்திலும் அவன் விளங்கினான் எனல் பொருந்தும்.
>
> (மேலது;76)

என்று முடிவுக்கட்டி,

> இவற்றால், கரிகாலனது ஆட்சிக் காலம் கி.பி.55 அல்லது 60க்கு மேல் 110க்கு உட்பட்ட காலம் எனக் கொள்ளல் வேண்டும். கயவாகுவின் காலமும், செங்குட்டுவன் காலமும் இன்னும் இருபது முப்பது ஆண்டுகளின் முன்பென்று காட்டப்படின், கரிகாலன் ஆட்சி கி.பி.25க்கும் 40க்கும் இடைப்பட்ட காலத்தில் தொடங்கிற்றென்று கொள்ளலாம்.

(மேலது;76)

என வரையறைப்படுத்திக் கொள்ளினும் ஞானசாகரம் என்னும் இதழில் எழுதப்பட்டிருக்கும் திருக்குறளாராய்ச்சி யென்னும் அரிய பொருளுரை, கரிகாலன் கி.மு. முதல் நூற்றாண்டென்று கூறுவதை நினைவுறுத்திக் கொண்டு அம்முடிவு தவறுதலான புரிதலால் ஏற்பட்டதென்பதைப் பின்வருமாறு நிறுவுகின்றார்.

> அஃது அவ்வாறு கூறுதற்குக் காரணம், பதிற்றுப்பத்து பெற்ற சேர அரசர்களில், இமயவரம்பனுக்கு முன் பெருஞ் சேரலிரும் பொறையும், அவனுக்கு முன் செல்வக் கடுங்கோ வாழியாதனும் முறையே அரசு புரிந்தார்களென்றும், கரிகாலனொடு பொருத பெருஞ்சேரலாதன் செல்வக்கடுங்கோவுக்கு முன் ஆண்டவனென்றும் கொண்டமையே. மற்றும், அது 'கரிகாற் பெருவளத்தானுக்கும் சேரன் செங்குட்டுவனுக்கும் இடையே ஒரு நூற்றாண்டு கழிந்தமை இவற்றால் நன்கு தெளியப்படும்.' என்கின்றது.

(மேலது;78)

என்று அவ்வாறு கருதியமைக்கான காரணங்களைத் தந்துப் பின்னர் பின்வருமாறு அக்கருத்தினைக் கேள்விக்குட்படுத்துகின்றார்.

> செங்குட்டுவனைப் பாடிய பரணரே, கரிகாலன் தந்தையையும் பாடியிருக்கும்பொழுது, ஒரு நூற்றாண்டு எங்ஙனம் இடைப் பட்டிருத்தல் கூடும்? இமயவரம்பனும், செல்வக்கடுங்கோவும், வேளாவிக் கோமான் பதுமன் என்பவனுடைய மகளிரை மணஞ் செய்துள்ளார்களென்று பதிற்றுப் பத்தால் தெரிதலின், அவ்விருவரும் ஏறக்குறைய ஒரு காலத்தவரென்று கொண்டுவிடின், அவ்வாராய்ச்சியும் கரிகாலன் கி.பி. முதல் நூற்றாண்டினிடையில் விளங்கியவனென்றே காட்டுவதாகும். 'முதலாவது கரிகாலன்–என்னும் அரிய உரைநூலும், இவ்வாராய்ச்சியையே தனக்குரித்தாகக் கொண்டு, கரிகாலன் கி.மு. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்து அரசு கட்டில் ஏறினவன்' என்று முடித்திருத்தலின் இதுவும் பிழையெனல் கூறவேண்டா.

(மேலது;78)

என்று முடித்து உணர்த்திக் காட்டுகின்றார்.

மேலும் ஆய்வைத் தொடரும் நா.மு.வேங்கடசாமி நாட்டார், பரணரின் காலத்தை கி.பி.50–140 வரையென்று சுட்டிப் பரணரின் சம காலத்தவர்களாக உருவப் பஃறேரிளஞ்சேட் சென்னி, வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி, நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவன், வையாவிக்

கோப்பெரும் பேகன், அதியமான் நெடுமான் அஞ்சி, ஆய், ஓரி, திதியன், நள்ளி, நன்னன் என்று வரிசையமைத்துப் பின்வருமாறு தொடர்கிறார்.

> அதியமான் அஞ்சினார் பல பாட்டுக்களாற் பெரிதும் பாராட்டிய ஔவையார், அஞ்சியைப் பார்த்து, (புறம்.99) 'அன்றும் பாடுநர்க்கரியை இன்றும் பரணன் பாடினன்' என்று கூறியிருத்தலின், பரணரும் ஔவையாரும் ஒரே காலத்தவரென்பது பெறப்படும். அஞ்சியைப் பாடிய ஔவையார், அவன் மகன் பொகுட்டெழினியையும் சிறிது பிற்காலத்தவராகத் தெரிகிற உக்கிரப்பெருவழுதி, மாவெண்கோ இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்போரையும் பாடியிருத்தலால், அவர் நெடிது நாள் உயிர் வாழ்ந்தவரென்னுங் கொள்கை வலியுறுத்துகின்றது. அவர், அதியமான் கொடுத்த நெல்லிக்கனி யுண்டு நெடிது நாள் வாழ்ந்தவரென்பது, (புறம் 91) நீயே தொன்னிலைப் பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா, தாதனின்னகத்தடக்கிச், சாதல் நீங்க வெமக்கீத் தனையே' என்று அவரே அஞ்சியை நோக்கிக் கூறுதலாற் றெளியப்படும். இவற்றால், ஔவையார் கி.பி.65 முதல் 165 வரையிலாவது வாழ்ந்தவராதல் வேண்டும்.
>
> (மேலது;79)

என்று சொல்லி, வையாவிக் கோப்பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக, அவன்பாற் சென்று, அவனுக்கு இரக்கமுண்டாகும்படி பாடிய புலவர்களான கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் முதலானோர்களும் ஒரே காலத்தவர்களென்று காட்டி,

> செல்வக் கடுங்கோவைப்பாடிய கபிலர், மாந்தரஞ்சேரலிரும் பொறை இரங்கிக் கூறும்படி, அவனுக்கு முற்காலத்திலோ, அவனது இளம் பருவத்திலோ இவ்வுலகினை விட்டகன்றார் ஆதலின், அவரது காலம் கி.பி.50 முதல் 125 வரை என்று கொள்ளுதல் பொருத்தும்.
>
> (மேலது;80)

என்று இக்காலத்தில் வாழ்ந்தப் புலவர்கள் அனைவரையும் அவர்களால் பாடப்பட்டோர்களையும் சுட்டிக்காட்டி அவர்களின் காலத்தை, கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளுக்குள் என முடிவு தருவதைக் காண்கிறோம்.

### 2.3.17. கா. சுப்பிரமணியப் பிள்ளையின் தொன்ம அடிப்படையிலான ஆய்வில் திருவள்ளுவரின் காலம்

1924 இன் இரண்டாம் தொகுதியில் (பரல்) ஆடி மாத இதழில் (பரல் 7) 'திருவள்ளுவர்' என்னும் தலைப்பில் கா. சுப்பிரமணியப் பிள்ளை

கட்டுரை எழுதத் தொடங்கியிருப்பது தெரியவருகிறது. இதில் திருவள்ளுவரின் காலத்தை, கீழ்வருமாறு தருகின்றார்.

> சரித்திர ஆசிரியர் கிறிஸ்து பிறப்பதற்கு மூன்று நூற்றாண்டுகட்கு முன்னர் இந்நாட்டில் பன்னிரண்டாண்டு பஞ்சம் நீடித்திருந்த தென்று கூறுவதாலும் அப்பஞ்ச முடிவில் எழுந்த இறையனாரகப் பொருள் உரையுள் திருவள்ளுவர் நூல் மேற்கோள் காணப்படுவதாலும் கி.மு. முன்னூறுக்கு முன்னரே திருவள்ளுவர் நூல் எழுந்து நிலவியிருத்தல் வேண்டும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுந்த, மணிமேகலையுள் திருவள்ளுவர் மொழி விதந்தோதப்படுதலால் அதற்கு முற்பட்ட தென்பதும் தெளிவு.
>
> (கா. சுப்பிரமணியப்பிள்ளை, 1924;283)

என்று எழுதி அந்நூலின் கருத்துகள் சார்ந்த பார்வைக்குச் செல்கின்றார். தமிழ் இலக்கிய வரலாற்றினை எழுதப்போகுமிவர் வெளிப்படுத்தியிருக்கும் முதல் கட்டுரையாக இது தெரியவருகின்றது. இக்கட்டுரையில் கி.மு. 3 திருக்குறளின் காலமென்று கூறியிருப்பதைப் பார்க்கின்றோம்.

### 2.3.18. இ.மு. சுப்பிரமணியப் பிள்ளை தரும் சிலப்பதிகாரத்தின் காலம்

1925 –26 ஆம் ஆண்டின் செந்தமிழ் செல்வியின் மாசி மாத இதழில் (தொகுதி 3, பகுதி 2) பண்டிதர் இ.மு. சுப்பிரமணியபிள்ளை என்பவர். ‘சிலப்பதிகார காலம்’ என்ற தலையிட்டு சென்னையில் கீழ்த்திசை மாநாட்டில் ஆங்கிலத்தில் படிக்கப்பட்ட கட்டுரையென்று மொழிபெயர்ப்பின் அடைப்புக் குறிகளுக்குள் தந்திருக்கிறார்.

இக்கட்டுரையில் சிலப்பதிகாரகாலத்தை அறிய முயலுபவர் இளங்கோவடிகள் எழுதியிருக்கும் அடிகளில் இந்திரவிழா நடந்த நாளைக்குறிக்கும் (சிலப்பு 5–64) அடிகளும், மாதவியை நீங்கிய நாளாக வரும், (சிலம் 10–1–3) அடிகளையும், கண்ணிகியோடு சென்று, பின்பு, கோவலன் மதுரையில் மாண்ட நாளினைக் குறிக்கும் (சில.19–35–38) அடிகளையும், கண்ணகி சினத்தோடு சென்று, மதுரையை எரித்த நாளினையும் (சிலம்பு –223–133–136) எடுத்துக்காட்டி ஆராயப்புகுகின்றார். இங்கு இந்த நாள் என்று குறிப்பிட்டிருப்பது, அன்றைய கிழமையும், அந்நிகழ்வு நிகழ்ந்தது காலையா? மாலையா? என்ற செய்தியை மட்டும் கருத்தில் கொண்டு ஆராயப் புகுகின்றார். மேற்கண்டதையெல்லாம் சுட்டிக்காட்டிக் கீழ்வருமாறு மதுரை எரியுண்ட காலத்தைத் தீர்மானிக்கிறார்.

> மதுரை எரியுண்ட காலத்தைத் தீர்மானிப்பதற்கு இது மிகவும் உதவியாம். இதில் கார்த்திகை என்பது அழல் சேர்குட்டம் என்பதால்

விளங்கும். இவ்விடத்துப் பழைய உரையாசிரியர் காத்திகைபரணி என்று பொருள் குறித்திருக்கிறார். இதனால் அன்று கார்த்திகை பரணிக்கு மேல் வந்ததாமெனவும் அதுவும் மதுரையீற்றீப்பற்றிய அப்பொழுதேயாயிருக்கலாமெனவும் தீர்மானிக்கலாம். கி.மு.100 முதல் கி.பி. 400 வரை கணக்கிட்டுப் பார்த்ததில் கி.பி. 144 ல் மட்டுமே இவ்விதமான கணிதக்குறிப்பு காணப்படுகிறது.

(இ.மு. சுப்பிரமணியன், 1925–26;90)

இறுதியாகக் கீழ்வருமாறு தந்துமுடிக்கிறார்.

இலங்கைச் சரிதங்களிற் பழமையானதாகி தீபவம்சத்தில் கயவாகு மன்னன் புத்த நிர்வாணத்திலிருந்து 642 வது ஆண்டானெனத் தெரிகிறது. புத்தநிர்வாணம் கி.மு. 493லாம். இதனால் கயவாகு கி.பி.148 முதல் கி.பி. 170 வரை (641–663 –493) இருபதிரண்டு ஆண்டுகள் ஆண்டவனென அறியலாம். அவன் கி.பி. 148 ல் பட்டத்திற்கு வந்து கி.பி. 149 ல் வஞ்சி வந்ததவனாவன்.

இதுகாறுதானும் ஆராய்ந்தவற்றால் மதுரை யெரியுண்டது. கி.பி. 144 ல் என்பதும் கண்ணிகிக்குக் கோவிலெடுத்தது கி.பி. 149ல் என்பதும் நிலைபெறுகின்றன.

(மேலது;91)

என்று தந்து முடிக்கின்றார். முதலில் கி.மு. 100 முதல் கி.பி. 400 வரை எடுத்துக் கொண்டு கணக்கிட்டு ஆய்ந்தவர், பின்னர், முன்னவர்கள் வந்து நிற்கும் முடிவிற்கே வந்து சேர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

### 2.3.19. சோமசுந்தர பாரதியார் தரும் பொய்யில் புலவன் பொருளுரைத்த காலம்

(பகுதி 9) செந்தமிழில் 'திருவள்ளுவர்' என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள இப்பொருண்மை, 1926 ஜனவரி 25 இல் மதுரை யூனியன் கிறிஸ்தவ கலாசாலையில் ரெவண்டு H.A.பாப்புலி துரையவர்கள் தலைமை வகித்த பெருங்கழகத்தில், மதுரை உயர்தர நீதிமன்றத்து நியாயவதசதுரர் திருவாளர் சோம சுந்தர பாரதியார் M.A., B.L., அவர்கள் செய்த சொற்பொழிவின் விரிவு என்று அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

திருவள்ளுவரின் காலம், ஊர், குடிப்பிறப்பு, சமயம் பற்றியெல்லாம் உண்மை அறிய வேண்டுமென்ற சொற்களோடு தொடங்குபவர். முதற்கண் திருவள்ளுவரின் காலம் குறித்தும் திருக்குறளைப் பெரிதும் மெச்சிப் புகழும் 'திருவள்ளுவமாலை' யின் காலம் குறித்தும் ஆராய புகுகின்றார் கடைச்சங்கத்தை முற்றுவைத்ததை, அதாவது மதுரைத் தமிழ்ச்சங்கத்தை சபித்தது திருவள்ளுவரென்றால், அதனைப்பற்றிய எக்குறிப்பும் திருவள்ளுவ

மாலையில் காணப்பெறவில்லையென்பதால், திருவள்ளுவமாலை, திருக்குறள் காலத்தில் தோன்றியிருக்காது அது வெகுகாலம் கழித்தே இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்று உணர்த்தி திருவள்ளுவரின் காலம் குறித்தத் தெளிவிற்குப் பயணப்படுகின்றார்.

கடைச்சங்க நூலாகவும் இடைச்சங்க நூலாகவும் ஏற்கும் சங்க பனுவல்களுள் திருக்குறளின் செல்வாக்குக் காணப்படுவதால், திருக்குறள் இவ்விரு சங்க காலங்களுக்கும் முன் தோன்றியிருக்குமென்று வரையறுத்துத் தெளிவிக்கின்றார். இதற்குச் சான்றுகளாக,

*தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்*
*தன்னெஞ்சே தன்னைச் சுடும் **(293)***

என்னும் குறளோடு

*நெஞ்சறிந்த கொடியனு மரைப்பினு மறையாவா*
*நெஞ்வத்திற் குறுகிய கரியில்லை யாகலின் **(செய் 8)***

என்னும் கலித்தொகையின் நெய்தற்கலிச் செய்யுளைத் தந்து, ஒப்பிட்டுக் காட்டுவதோடு அவ்வாறே, நாலடியாரின் நட்பாராய்தல் 5 ஆம் செய்யுலோடு

*உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்*
*கூம்பலு மில்ல தறிவு **(425)***

என்னும் குறளைச் சுட்டி,

*இல்லாளை யஞ்சுவர னஞ்சுமற் றெஞ்ஞான்று*
*நல்லார்க்கு நல்ல செயல் **(905)***

என்றும் குறள்,

*இல்லாளை யஞ்சி விருந்தின்முக ங்கொன்றநெஞ்சிற்*
*புல்லாள னாக **(மண்மகளிலம்பகம் செய். 217)***

என்னும் தேவர் சீவக சிந்தாமணியுடன் காட்டுவதோடு,

*பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க*
*நாகரீகம் வேண்டு பவர் **(508)***

என்னும் குறலோடு

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனி நாகரீகர் *(355)*

என்னும் நற்றிணைச் செய்யுளடியை நினைவூட்டுவதாக ஒப்பிட்டுக் காட்டுகின்றார். இவ்வாறே, நற்றிணைச் செய்யுளின் முல்லைக்கலி (செய்யுள் 15) பாட்டோடு **928** குறளையும் **1138** ஆம் குறளையும் சுட்டுவதோடு, பலவற்றையும் தொட்டுக் காட்டிச் செல்பவர், திருக்குறளோடு பொருள் ஒத்துப்போகும் சங்க இலக்கிய நூல்களையும் சீவகசிந்தாமணி, திருவாய் மொழிப் பாசுரங்களையும் ஒப்பு நோக்குபவர், கீழ்வரும் சான்றின் மூலம் திருக்குறளிலிருந்து நேரடியாக எடுத்தாண்டுள்ளதைச் சுட்டி குறிப்பிடுகின்றார்.

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொருதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை *(55)*

என்னும் குறளைக் காட்டி,

தெய்வஞ் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்

பொய்யில் புலவன் பொருளுரை தேராய்*(காதை 22 வரி 59-61)*

என்னும் மணிமேகலை செய்யுளைத் தருகின்றார்.

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அது நோக்கி வாழ்வார் பலர் *(528)*

என்னும் குறளினை,

வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்
அது நற் கறிந்தனை யாயிற்
பொது நோக் கொழிமதி புலவர் பாட்டே *(121)*

என்னும் புறநானூற்றின் பாட்டைக் காட்டியிருப்பதை விட,

*பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று*
*நிலையாமை காணப் படும்* ***(349)***

*ஆரா வியற்கை யவாநீப்பி னந்திலையே*
*பேரா வியற்கை தரும்* ***(370)***

என்னும் இருகுறள்களும்,

*அற்றது பற்றெனி லுற்றது வீடு* ***(1-2-5)***

*........இன்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்*
*அன்றே யப்போதே வீடும் அதுவே வீடு வீடாமே''* ***(8.8.6)***

என்ற திருவாய்மொழிப் பாசுரங்களோடும் ஒப்பிட்டுக் காட்டியிருப்பதைக் காட்டிலும், தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள் என்னும் (55) குறளோடு மணிமேகலையின் (காதை 22 வரி 59–61) செய்யுளைக் காட்டி மணிமேகலைக்கும் முன்னது திருக்குறள் என்று வாதிட்டிருப்பது பெரும் பொருத்தமாக இருப்பதை உணர்கிறோம். இறுதியாகத் திருவள்ளுவரின் காலத்தை ஊகிக்க வருபவர், மணிமேகலை 'பொய்யில் புலவன் பொருளுரை' என்பதையும், ஆதனூர் கிழார் 'அறம் பாடிற்றே' என்பதனையும் தருவதோடு, இடைச்சங்கப் புலவரும் கடைச்சங்கப் புலவரும் திருக்குறளை எடுத்தாண்டு இருப்பதால், வள்ளுவர் காலத்தைக் கீழ்வருமாறு கூறுகின்றார்.

> வள்ளுவர் கடைச்சங்கக் கடைக்காலத்தவருமில்லை; முதலிடைக் காலத்தவருமில்லை, அச்சங்கத்துக்கு நெடும் பல்லாண்டுகட்கு முன் பிருந்தவராவரென்பது இனிது போதரும்
>
> (மேலது;344)

என முடிவுக்கு வருகிறார். சங்கத் செய்யுள்களில் காணப்படும் செய்யுள் அடிகளும் கருத்தும் திருவள்ளுவர் எடுத்தாண்டிருக்க வாய்ப்பில்லையென்பதால் திருவள்ளுவரிமிருந்தே அனைவரும் எடுத்துக் கொண்டிருப்பர் என்னும் அவரின் வாதமே, இம் முடிவுக்குக் காரணமாக இருக்கிறது. மேற்கண்ட முடிவோடு மற்றொரு முடிவையும் தருகின்றார். அதாவது தொல்காப்பியர் இலக்கணத்தில் 'ச' கரம் மொழி முதலாகாது என்று

கூறப்பட்டிருப்பதைக் கடைச்சங்க நூல்களும், திருக்குறளில் ஒரு சில இடங்களும் காணப்படுவதால் கடைச்சங்க காலத்திற்கும் முன்னும், தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னும் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்ற ஊகத்தையும் தந்து முடிக்கின்றார்.

### 2.3.19.1. தமிழர்களின் தொன்மையும் சங்க நூல்களின் காலமும்

இப்பன்னிரெண்டாம் தொகுதியில், கார்த்திகை மாத இதழில், அதாவது ஒன்றாம் பகுதியில் “தமிழ் நூல்களும் தமிழகமும்” என்னும் தலைப்பில் திருவாரூர் சோம சுந்தர தேசிகன் என்பவர் எஸ்.எஸ்.பாரதியார் எம்.ஏ,. பி.எல்., என்பவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டதை மொழிப் பெயர்ப்பு செய்து தந்துள்ளார்கள். இதில், தமிழர்கள் யாவர் என்ற வினாவின் பேரில் ஆராய்ந்த ஆராய்ச்சிகளின் சாரத்தையெல்லாம் தந்து, அவர்கள் தமிழ் மண்ணின் ஆத்ம குடிகளே என்ற கருத்தினை முடிவாகக் காட்டுகிறார். இதனை;

> எகிப்தை உரோமர் ஜயிப்பதற்கு முன்னும், பெதல்ஹெமில் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரும் தமிழர் இதே மாதிரி இந்த விடங்களிலேயே தென்பட்டனர். அஃதொன்றே கிரேக்கர் (யவனர்) போரஸைச் சந்திப்பதற்கு முன்னும் சாலமன் நமது பாக்களை யியற்றுவதற்கு முன்னருமே சுருங்கச் சொல்லில் தமிழர்கள் அநாதி தொட்டு பாலாற்றின் றெற்குமுதற் கடல் கொண்ட பஃறுளியின் வடக்குவரை பெருங் கீர்த்தியுடன் வாழ்ந்து வருகின்றனர்.
>
> (எஸ்.எஸ். பாரதியார், 1914;36)

என்று அவர்களின் தொன்மை குறித்தப் புரிதலை வெளிப்படுத்தி, தமிழ் இலக்கியங்களின் தொன்மைக் குறித்த சிந்தனையைக் கீழ்வருமாறு சுட்டிக் காட்டுகின்றார்.

> பர்னல், கால்டுவெல் பாதிரிமார்கள் தமிழருக்கு கி.பி.8, 9 நூற்றாண்டுகட்கு முன்னர்த் தமிழ் நூல்களில்லையென்று கூறியகூற்று காலற்றதாமென மிஸ்டர் கனகசபைப் பிள்ளையும் இந்திய கல்வெட்டு ஆராய்ச்சியாரும் செவ்வனே விளக்கியிருக்கின்றனர்; இதுவன்றி பிளைனி, ஸ்டிராபோ, தாலமி பெரிப்ளஸ் முதலியவர்கள் எழுதியதினின்றும் சிலப்பதிகாரம் முதல் நூற்றாண்டிலியற்றப்பட்டதெனப் பிள்ளையவர்கள் நிரூபணம் செய்திருக்கின்றனர். பேர் போன மிஸ்டர் சுந்தரம்பிள்ளையவர்கள் பத்துபாட்டைப் பற்றியெழுதிய வியாசத்தில் இவற்றின் காலவரையறையை வெகுதிட்டமாய்க் கூறியிருக்கின்றனர்.
>
> (மேலது;38)

இதனால், தமிழின் தொன்மை இலக்கியங்களின் காலம் கிறிஸ்து பிறப்பதற்கு வெகுமுன்னரே இயற்றப்பட்டுள்ளதென்ற கருத்தை உறுதிப்பட முன்வைப்பதைக் காணமுடிகிறது. இச்சான்றுகளைக் கொண்டு திட்டவட்டமான காலக் குறிப்பிடலைச் செய்ய முனையும் எஸ்.எஸ். பாரதியார்,

> இலங்கைச் சரித்திரங்களான மஹாவம்சமும், தீமவம்சமும் இலங்கையில் முதலிற் குடியேறிய ஆரியர்களான மகத ஏனியர்கள் கி.மு.6 ஆம் நூற்றாண்டில் பாண்டியனது மகளை வதுவை செய்தனரென்று கூறுகின்றன. தொல்காப்பியமும், புறநானூற்றிற் சிலசெய்யுட்களும் இதற்கு முந்திய தென்று நிச்சயமாய் கூறலாம். முதற்சங்கத்திலிருந்த முடிநாகராயராற்பாடப்பட்ட "அலங்குளை புரவி ஐவரொடு சினைஇருலந்தலைக் கொண்டபொலம்பூந் தும்பை, ஈரைம் பதின்மரும் பொருது களத்தொழியப் பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" என்று சேரமான் பெருந்சோற்று உதியன் சேரலாதனைப் பாடிய புறநானூற்றுச் செய்யுள் பொய்யாறன்றென்பது கிறிஸ்தவாப்பத வாரம்ப காலத்து நூலான சிலப்பதிகாரத்து 29வது காதையில் 'ஒரைவர் ஈரைம் மதின்மருடன் றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த, சேரன் பொறையன்மலையன் என்பது நிலை நிறுத்தும்.
>
> (மேலது;38)

என்பதோடு முடிக்காமல், இதன் தொடர்ச்சியை 'தை' மாதத்தின் மூன்றாம் பகுதியில் வெளிப்படுத்தியுள்ளார். இதில் மேலே குறிப்பிட்ட சிலப்பதிகார 29 ஆம் காதை பாடலடிகளைக் காட்டி, கி.மு.1400 ஆண்டகளுக்கு முன் அவர்களிருந்தனர் என்பதை நிறுவுகின்றார். மேலும், பாரத போர் நிகழ்ந்த காலத்தில் இத்தகைய மன்னரும், அதனைப் பாடியுள்ள முடிநாகராயரும் இருந்துள்ளனர் என்பது அவரது வாதமாகவும் கால வரையறையாகவும் வைக்கப்படுகிறது. இதனோடு புறம் 43 ஆம் பாடலும், சிலப்பதிகார 28 வது காதையின் 125, 126 அடிகளிலும் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடிய புறநானூற்றின் 9 ஆம் பாடலும், பஃறுளியாற்றுக் குறிப்பினைத் தருவதால், இதனை யியற்றிய புலவர்களும் இதில் குறிக்கப்படும் மன்னர்களும் இப்பஃறுளி ஆறு கடலால் விழுங்கப்படுவதற்கு முன் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை உறுதிபடக் கூறி கீழ்வருமாறு நிறுகின்றார்.

> முற்கூறப்பட்ட விடயங்களைக் கொண்டு, புறநானூற்றுச் செய்யுட்கள் சிலவற்றிற் பஃறுளி கூறுப்பட்டிருத்தலால் அவற்றையிற்றினோர் பஃறுளி நதியாயிருந்த காலத்திலிருந்தோரென

> கொள்ளுத லிழுக்காகாது . கடைச்சங்க காலம் கி.மு. முதலாவது நூற்றாண்டென்று கொள்ளினும், இக்காரியங்கள் கதையாக வழங்கப் பன்னாட்கள் சென்றிருக்க வேண்டுமாகலின், இப்பாக்கள் கி.மு.6,7 வது நூற்றாண்டுகளிற் கூறப்பட்டனவெனக் கொள்ளுதல் பொருத்த முடையதொன்றாம்.
>
> (மேலது;39)

இதிலிருந்து இதன் தொன்மை கி.மு.14 ஆம் நூற்றாண்டாக இருப்பினும் இது புலவர்களின் செய்யுளாக வடிவுப் பெற்றிருந்தாலும் இதன் பழமை கி.மு.6,7 நூற்றாண்டுகளிலேயே அமைந்திருக்க வேண்டுமென்று உரைப்பதைக் காண்கிறோம். இதனோடு, தொல்காப்பியமும் இக்காலத்தில் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்றும் ஊகிக்கின்றார். இவ்விலக்கன நூல், இரண்டாஞ் சங்கமான இடைச்சங்க காலத்துள் இயற்றப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுது கபாடபுரத்தில் தமிழ்ச்சங்கம் நிலவிவந்ததெனக் கூறி, கபாடபுரம் கடலுள் மாய்வதற்கு முன்னர், இராமன் காலத்தில் சிதாதேவியை அனுமன் இக்கபாடபுரத்து வழியாகவே தேடிச் சென்றான் என்ற குறிப்பு, வான்மீகி தமது இராமாயணத்தின் கிஷ்கிந்தா காண்டம் 41 வது ஸர்க்கம் 19 வது ஸ்லோகத்தில் குறிக்கப்பட்டிருப்பதை அடிக்குறிப்பில் (சமஸ்கிருத வடிவவோடு) தந்திருப்பதோடு, இவ்வான்மீகி முனிவர் வாழ்ந்த காலம், கி.மு.6 ஆம் நூற்றாண்டு என்று ஐரோப்பிய அறிஞர்களும் இந்திய அறிஞர்களும் ஏற்று கொண்டதைச் சுட்டிக்காட்டி, கபாடபுரத்தில் தமிழ்ச்சங்கம் நிலவியிருந்த காலம் இதுவாகவே இருக்குமென்று முடிவுக்கு வருகின்றார். மேலும் தொல்காப்பியர் காலத்தை வான்மீகருக்கும் முன்பென்று கூற விழைகிறார். இத்தொல்காப்பிய காலத்தைச் சுட்டிக்காட்டுவதற்குக் காரணம், இவ்விலக்கணத்தின் அடிப்படையிலும் தமிழின் சங்க இலக்கியங்களின் காலத்தைக் கணிக்க முயன்றுள்ள முயற்சி முன் வைக்கப்பட்டுள்ளது, மேலும், தொல்காப்பியத்தின் பாயிரத்தில், உடன் பயின்றவரான பனம் பாரணர் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் என்று குறிப்பிட்டுள்ளதால் பாணினிக்கு முற்பட்டது தொல்காப்பியம் எனும் புரிதலில் பாணினியின் காலம் கி.மு.4 ஆம் நூற்றாண்டு என்று ஏற்கப்படுவதால் இதற்கும் முன்னர் தொல்காப்பியம் இயற்றப்பட்டதைக் குறிப்பிட்டுக் காட்டி, கீழ்வருமாறு சங்கத்தின் காலத்தை எழுதியுள்ளார்.

> இயேசு பிறப்பதற்கு முன்னரே கடைச்சங்க முற்றி அதன் வயோதிக காலம் தலைப்பட்டு விட்டதென்பதும், கி.பி. முதனூற்றாண்டில், அது செல்லாகாலமாகக் கதப்பட்ட தென்பதும் சரித்திரவுண்மை. இதுகொண்டு அதன் மத்திய

காலமல்லது சிறப்புற்றேங்கிய காலம் இதற்கு 3, 4 நூற்றாண்டாவது சென்றிருக்க வேண்டுமென்றல் பொருத்த முடையதேயாம். இவைகளெயென்றி, சங்க நூல்களிற் பிற்காலத்தவற்றுள் ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத்துக்குப் புறம்பான பதங்கள் பல பயிலுதலைக் காண்கின்றோம். அவற்றிற் சில காட்டுவதும்.

(மேலது;94)

எனக் குறிப்பிடுவதால், தொல்காப்பியம் எழுதப்படுவதற்கு முன் சங்க இலக்கியப் பாடல்களுள் பல எழுதப்பட்டிருக்க வேண்டும். எனவே சங்க காலமும் இப்பாடல்களும் கி.பி.6 நூற்றாண்டிற்கும் முற்பட்டவையாகக் கருதுவதற்குப் பெரும் இடம் தருகிறது என்பதை உணர்த்த தலைப்படுபவர், தொல்காப்பிய எழுத்ததிகார சூத்திரங்களுள், 29 சூத்திரமும் 31, 32 வது சூத்திரமும் எடுத்துகாட்டி, சூத்திரப் பொருளிருந்து மாறுபட்ட சொற்களைச் சிலப்பதிகாரம் வரி 14 இல் சமைத்து என்றும் மதுரைக் காஞ்சி வரி 172 இல் சண்டி என்றும் திருமுருகாற்றுபடைவரி 225 இல் சதுக்கம் என்றும் சந்தி என்றும், இதே நூலின் 99 வரியில், சமம் என்றும், பெரும் பாணாற்றுப்படையில் 217 வரியில் சவட்டி என்றும், பதிற்றுப்பத்தின் செய்யுள் 84 இல் சவட்டி என்பது காணப்படுவதையும், மலைபடுகாடாகத்தின் 393 வரியில் சந்து என்றும், 74 ஆம் புறப்பாட்டில் ஞமலி என்றும் பட்டினப்பாலை 140 ஆம் வரியில் இஞ்ஞமலி என்றும் பதிற்றுப்பத்தின் 30 ஆம் வரியிலும் திருருமுருகாற்றுப்படை வரி 120 லும் ஞாலல் என்றும், பதிற்றுப்பத்தின் 2வது பதிகத்திலும் நெடுநல்வாடையின் 101 வரிலும் முல்லைப்பாட்டு 61வது வரியிலும் 'யவனர்' என்று குறிக்கப்பட்டிருப்பதையும் தருவதோடு, புறநானூற்றின் 15, 224, பாடல்களும், பதிற்று பத்தில் 67 வது செய்யுளிலும் மதுரைக் காஞ்சியின் 27 வரிகளிலும் 'யூபம்' என்ற சொல் காணப்படுவதும், இறுதியாக 'யூகம்' என்ற சொல் திருமுருகாற்றுப்படையின் 302 வரியில் கிடைக்கப்பெறுவதைத் தந்து, இதனால் தொல்காப்பியர் குறிப்பிடும் மொழி முதலாக வராத எழுத்தைக் கொண்டு சொல்வழக்கு ஆளப்பட்டுள்ளதால், இக்கடைச்சங்க காலத்திற்கு முன்பே தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வருகின்றார். இவற்றோடு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களும் கடைச்சங்க காலத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்று ஏற்பதால் இக்கடைச்சங்க காலத்திற்கு முன்பு தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று உறுதிபடுத்தியதையும் காணமுடிகிறது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து கூறி இக்கால வரையறையை முடித்து, பின்னர் அக்கால தமிழ்நாட்டின் பகுதிகளை அடையாளம் காணப்புகுவதற்கு

முன்பாக கால்டுவெல்லின் ஆய்வு பரிதலைக் கீழ்வருமாறு தந்து, கால ஆய்விற்கான இடத்தை நிறைவு செய்திருக்கின்றார்.

> தமிழர் கி.மு.7 வது நூற்றாண்டு முன்னரே நாகரீகப் பழுத்தவர்களாக யிருந்திருக்க வேண்டுமென்பது தொல்காப்பியத் தானும், புறநானூற்றுச் செய்யுட்களானு மினிது விளங்குகின்றது. இவர்களுடைய நாகரீகம் வெகு புராதன மானதாயிருக்க வேண்டும். தமிழுக்கும், தமிழ் நூல்கட்கும் புராதன மேம்பாடு கூறு மிஷ்டமில்லாத கால்டுவேல்பாதியாரும், தமிழர் நாகரீகமும், அவர்களது பாஷை முதிர்ச்சியும் கி.மு.6, 7 நூற்றாண்டு முன்னதாக ஆரம்பித்தே யிருக்க வேண்டுமென்பராயின் வேறு என்ன சொல்ல கிடக்கின்றது.
>
> (மேலது;98)

இதனால் தொல்காப்பியர் காலம் கண்டுரைக்கப் பட்டிருப்பதோடு அதனைக் கொண்டு கடைச்சங்க காலம் கி.மு.6 ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்கியிருக்கக் கூடும் என்று எழுதப்பட்டிருப்பதும், அது கிறிஸ்து பிறந்து இரண்டு மூன்று நூற்றாண்டுகள் நடைபெற்றிருக்குமென்றும் உணர்த்தி சென்றிருப்பதைத் தெளிவாகவே உணர முடிகிறது. தமிழ்மொழி குறித்தும், அதன் வழி தமிழரினம் குறித்தும் அவற்றோடு அவர்களின் நாகரீகத் தொன்மைக் குறித்தும் தொகுத்து ஆராய்ந்து எழுதியிருக்கும் குறிப்பிடத்தக்க ஆய்வுக் கட்டுரையாக எஸ்.எஸ். பாரதியாரின் இக்கட்டுரையை உணர முடிவதோடு, இதன் முக்கியத்துவம் உணர்ந்து இதனை மொழி பெயர்ப்பு செய்து வெளிப்பகுதியிருந்த திருவாரூர் சோமசுந்தர தேசிகனும் குறிப்பிடத்தக்கவர் என்பதற்கு மறுப்பில்லை. இக்கட்டுரையின் அடிக்குறிப்பில், இஃது எம்.ஏ. பரீஷைக்கு ஆங்கிலத்தில் மிஸ்டர் S.S. பாரதியார் M.A.,B.L., அவர்களால் எழுதப்பட்டது. தமிழர்க்குப் பெரிதும் பயன்தரத்தக்கதென்று கருதி மொழி பெயர்க்கப்பட்டதென்று கூறியிருப்பதால், தமிழ் இலக்கியம் குறித்து ஆங்கிலத்தில் ஆராய்ந்து, கற்ற கல்வி முறை அக்கால வழக்கத்திலிருந்ததும் வெளிப்படுகிறது.

### 2.3.20. சபாபதி நாவலரின் திராவிடப் பிரகாசிகை முன்வைக்கும் கால ஆய்வுச் சிந்தனை

இலங்கையில் பிறந்து வளர்ந்தவரான சபாபதி நாவலர் எழுதிய திராவிடப் பிரகாசிகை என்னும் நூல், தமிழின் தெய்வப்பழமை, மரபியல், இலக்கண மரபியல், இலக்கிய மரபியல், சாத்திரமரபியல், ஒழிபியல் என்னும் ஐந்து பிரிவாகப் பிரிக்கப்பட்டு எழுதப்பட்டுள்ளது.

இரண்டாம் தலைப்பான இலக்கணமரபியல் என்னும் பகுதியில் அகத்தியம் என்னும் இலக்கண நூல் இருந்தமைக்குச் சான்றாக, காஞ்சிபுராணத்தாலும், தொல்காப்பியர் வினையின் நீங்கி விளங்கியவறிவின், முனைவன் கண்டது முதனூல் ஆகும் என்றுரைத்திருக்கும் நூற்பாவையும் கூறி, கீழ்வருமாறு தந்திருக்கின்றார்.

> அகத்தியனார் அங்ஙனந் தனிமுதற்கடவுளான பரமசிவனை வழிபட்டு முக்குணங்களுங் கடந்து அவ்விறைவனருள் பெற்றுத் தலைமையெய்தியது பற்றியன்றே மாங்குடி மருதனார் "தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்றொன்முது கடவுட் பின்னர் மேய – வரைத்தாழருவிப் பொருப்பிற் பொருந" என்று அவ்வாறு மதுரைக்காஞ்சியுள் ஓதுவராயிற்றென்றுணர்க.

(சபாபதி நாவலர், 1927;29)

என்றுரைப்பதோடு கலித்தொகையுள், "முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்காலிப்பொழுது பொதுதென்றதுவாய்ப்பக் கூறிய வெக்கடவுள், மற்றக் கடவுள் இருடிகாலக் கடவுள், என நல்லந்துவனாருங் கூறினானென்பதையும் எடுத்துத் தருக்கின்றார். மேலும், தொல்காப்பியத்தின் எழுத்து சொல் பொருள் என்னும் முப்பகுதியின் உள்ளடக்கம் குறித்து தொட்டுக் காட்டி, அகத்தியரின் பன்னிருமாணவர்களும் சேர்ந்து பன்னிருபடலம் என்னும் பொருளிலக்கணம் செய்தமையைத் தந்துள்ளார். பன்னிருபடலம் என்னும் துணைத்தலைப்பினையொட்டி 'கடைச்சங்கம்' என்னும் தலைப்பினுள் கீழ்வருமாறு எழுதியுள்ளார்.

> இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேர்ந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்க் கீழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொண்பதின்மர். அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொண்பதின்மர் பாடினார். அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்குநூல் அகத்தியமும் தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழராய்ந்தது ஆயிரத் தொண்ணூற்றைம்பத்தியாண்டு. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி யீறாக நாற்பத்தொண்பதின்மர். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியர்.

(மேலது;105)

என்று இறையனார் அகப்பொருளுரைத் தரும் தரவினை வழங்குகின்றார். இச்சங்கங்களின் காலத்தைச் சுட்டவரும் பொழுதும்,

> அற்றேலஃதாக, தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங் மென்னு, முச்சங்கத்தாரும் முறையே நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டும், மூவாயிரத் தெழுநூற்றி யாண்டும், ஆயித்தெண்ணூத் றியாண்டுஞ் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் என்றும், அகத்தியம் அம் முச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றென்றும், தமிழாசிரியர் கூறுமுரைகள் மலையுயவாம்.

(மேலது;106)

என்று தந்திருப்பதைக் காண்கின்றோம். இதனையடுத்து களவியலுரைத் தோன்றியதைப் பற்றி எழுதிச்சென்று தொல்காப்பிய உரைகள், வெண்பாமாலை, அகப்பொருள் விளக்கம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்ற வரிசையில் இலக்கண மரபின் நீட்சியை எழுதிச் செல்கின்றார். எனது, சங்க காலம் இன்னதென்று அறுதியிட்டுக் கூறவில்லையென்றாலும் மேற்கண்ட மேற்கோளின் வழி முச்சங்க நம்பிக்கையும் அச்சங்கமிருந்த காலத்தில் இயற்றப்பட்ட நூல்கள் குறித்த சிந்தனையையும் தந்து சென்றிருப்பதைப் பார்க்கின்றோம்.

மூன்றாம் தலைப்பான 'இலக்கிய மரபியல்' என்பதில், பின்வருமாறு எழுத புகுவிருக்கும் திட்டத்தைத் தருகின்றார்.

> தமிழிலக்கியம் – திருமுறையிலக்கியம், சங்க இலக்கியம், காவிய இலக்கியம், புராண இலக்கியம், இதிகாச இலக்கியம், பல வகைப்பிரபந்த இலக்கியமெனப் பலதிறப்படும்.
>
> வேந்துணையோர் பரிபாடல் முதுநாரை, முதுகுருகு, களரியாவிரையென்று இத்தொடக்கத்துத் தலைச்சங்க இலக்கியங்களும் கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவல் என்று இத்தொடக்கத்து இடைச்சங்க இலக்கியங்களும் இறந்தனவாதலான் அவற்றின் வரலாரறிந்து கூறுமாறில்லை. கடைச்சங்க இலக்கியங்கள் – நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலி, எழுபது பரிபாடல், கூத்து, வரி, பேரிசை, சிற்றிசையென்றித் தொடக்கத்தன. இவற்றுட் சில இறந்தன, பல நிலவுகின்றன கிடையும் இன்னோரன்னவுமான கடைச்சங்க இலக்கிய வரலாறு தலைமுறையிலக்கியங்களின் பின்னர்த் தந்து கூறுதும்.

(மேலது;137)

எனத்தந்து திருமுறை இலக்கியங்களைத் தொகுத்துரைக்கின்றார். இப்பகுதியின் இறுதியாகப் பெரியபுராணம், திருப்புகழ் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் முதலியவற்றைக் கூறிப் பின்னர் திருக்குறள் குறித்து எழுதத் தொடங்குகின்றார். திருக்குறள் சங்க இலக்கியத்துள் சிறந்த நூலென்பதைத் தந்து, இதன் காலம் குறித்து எழுதவருகையில் பின்வருமாறு எழுதுகின்றார்.

> இவ்வுத்தரவேதங் கடைச்சங்கத்தார் காலத்து அவதரித்து அரங்கேறிய தென்பதற்கு அச்சங்கப் புலவர்களெல்லாந் தனித்தனி இதன் பெருமை நிலையிட்டு இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களே அமையுஞ் சான்றாம். அக்காலத்துக் கடைச்சங்கத்திலிருந்து இது கேட்ட பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, பாண்டியனுங் கடைச்சங்க புலவரும் வணங்கிக் கீழிருந்து கேட்பத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் உருத்திரசன் மனாரோடு சங்கப்பலகை வீற்றிருந்து திருக்குறள் அரங்கேற்றினார்.

(மேலது;211)

இதனைத் திருவள்ளுவமாலையின் துணைக்கொண்டு எழுதியுள்ளா ரென்பதை கபிலர், பரணர், நக்கீரர் முதலியரோடு, திருவள்ளுவமாலை என்னும் சிறப்புப் பாயிரத்தாலும் உணர்ந்து கொள்ளுமாறு சுட்டிக் காட்டி, இறையனார் களவியலுரையில் குறிக்கும் செய்திக்குறித்துப் பின்வருமாறு விளக்கமளிக்கிறார்.

> திருக்குறள் உருத்திரசன்மனாரும் நக்கீரனார் முதலிய சங்கப் புலவர்களுங் கேட்ப அரங்கேறியது வாய்மையே. அஃது அரங்கேறுதற்கு முன்னர் நக்கீரனார் இயற்றிய களவியலுரையுள் அஃது மேற்கோளாக எடுத்துக் காட்டப்படுதல் பொருந்துமா றென்னையெனின், திருக்குறள், நக்கீரனார் களவியலுரை இயற்று முன்னரே அவதரித்து உலகினிலவிப் பின்னர்ச் சங்கமிரீஇயற்றாதலின், அவ்வெடுத்துக் காட்டுப் பொருத்த முடையதேயாம்; காலமாறுபாடு ஆண்டுப் போதருமாறு இல்லையென்க.

(மேலது;212)

என்று தந்திருப்பதைப் பார்க்கிறோம். இதனைத் தொடர்ந்து திருக்குறள் குறித்தும் அதன் உள்ளமைப்பையும் கருத்து வலிமையையும் போற்றிப் புகழ்ந்துரைத்து எழுதிச் செல்கின்றார்.

மேற்கண்டதன் தொடர்ச்சியாக ‘கடைச்சங்க இலக்கியம்’ என்று தலைப்பமைத்துக் கொண்டு, பாண்டியர்கள் நான்மாடக்கூடன் மாநகரில் சிவபெருமான் உள்ளிட்ட பெரும் புலவர்கள் வீற்றிருந்து சங்கம் அமைத்துக்

கவிபுனைந்தனரென்பதைத் தந்து, பத்துப்பாட்டு என்னும் துணைத் தலைப்பின் கீழ் பின்வருமாறு எழுதுகின்றார்.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப்பாட்டாம். திருமுருகாற்றுப்படை முதலிய இப்பத்தும், அறம், பொருள் இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் ஒரோவொன்று நுதலியனவாயும், நல்லிசைப்புலவர் நாட்டியனவாயும், அகவற்பாவிலக்கணம் ஒத்தனவாயும் ஒற்றுமையுறுதலின், அவற்றைச் சங்கத்தார் பத்துப்பாட்டெனக் கோத்து ஒன்றாக்கினார். இவற்றுள், திருமுருகாற்றுப்படை உறுதிப்பொருள் நான்கனுள் இறுதிக் கண்ணதாய்ச் சிறந்த வீடுபேறு நுதலுத, அதனை ஏனை ஒன்பது பாட்டுக்குஞ் சிரத்தாணமாக்கி, முதற்கண் கோத்திட்டார். திருமுறை செய்தருளிய நம்பியாண்டார் நம்பி இது வீடுபேற்றிறுதிப் பெரும்பயன் கூறுந் தெய்வப்பட்டாதல் நோக்கிப் பதினொராந் திருமுறையில் எடுத்துக் கோத்துப் போற்றினார். இது கோத்தார் சங்கப் புலவரென்பது, நச்சினார்க்கினியர் மலைபடுகடாத்துள் “தீயினன்ன வொண்செங்காந்தள்” என்னுந் தொடர்க்கு எழுதிய உரையான் அறிக.

(மேலது;289)

இதனுடன், ஒவ்வொரு நூலையும் பற்றின சிறு அறிமுகமாக உட்பொருள்பற்றியே எழுதியுள்ளார். இதனையடுத்து ‘எட்டுத்தொகை’ என்னும் தலைப்பில், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத்தொகையாம் என்று தந்து ஒவ்வொரு நூலினைப் பற்றியும் ஒரு பத்தியளவு அறிமுகம் தந்து ‘கல்லாடம்’ என்னும் நூலையும் தனியாக அறிமுகம் செய்கிறார். அடுத்து ‘பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தலைப்பமைத்து,

*நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்*
*பால்கடுகங் கோவை பழமொழி-மாமூல*
*மிந்நிலைய காஞ்சியுடனேலாதி யென்பவே*
*கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு”*

(மேலது;285)

என்ற பாடலைத் தருகின்றார். அடுத்து ‘காவிய காலம்’ குறித்து எழுதுபவர்.

> தமிழ்காவியம் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, சூளாமணி, இரகுவமிசம், நைடதம் முதற் பலவுள, இக்காவியங்கள் தொல்காப்பிய இயல் வழிப்பட்டு மேற்கூறிய சங்கத் தமிழ்ச் சொற்பிரயோகம் பெரும்பாலும் மருவி நவரசங்களும் நிலவும் சிலவும் பலவுந் தங்கண் அடங்கக் கொண்டு உலகவியல், நீதி, வைராக்கியம் முதலியவைகளை நன்று அறிவுறுத்துவன.
>
> (மேலது;286)

இவற்றுள் சிந்தாமணி சங்க கால காவியம் என்று குறிப்பிடாமல் சிலப்பதிகாரம் குறித்து குறிப்பிடும் பொழுது,

> இது முத்தமிழ் இலக்கியமான ஓர் சைனகாவியம், கடைச்சங்கத் தமிழ்ப் புலவரான சீத்தலைத் சாத்தன் உளப்பாகுகொண்டு இளங்கோவடிகளியற்றி அவரைக் கேட்பித்த காவியமென்பது. இந்நூற்பதிகத்தான் உணரப்படும்.
>
> (மேலது;292)

அடுத்தடுத்து மணிமேகலை குண்டலகேசி, பௌத்த காவியம் என்பதையும், வளையாபதி, சூளாமணி, இரகுவம்சம் முதலானவற்றைப் பற்றியும் எழுதிச் செல்கிறார்.

### 2.3.21. உ.வே.சாமிநாதையர் குறிக்கும் சங்க இலக்கிய வரையறை

1927 களின் இறுதி இரண்டு மாதங்களில் பத்து சொற்பொழிவுகளை (உபந்யாசங்கள்) நிகழ்த்தி இருக்கும் உ.வே.சாமிநாதையர் தாம் பேச எடுத்துக் கொண்ட பொருண்மை ''சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும்'' என்பதாகும். இச்சொற்பொழிவை 7.11.1927 இல் தொடங்கி 21.12.1927 வரை நிகழ்த்தியிருக்கிறார். பின்னர் 1929 இல் இப்பொழிவுகளையெல்லாம் தொகுத்து சென்னையில் இயங்கி வந்த ஆனந்தா அச்சுக்கூடத்தால் பதிப்பிக்கப்பெற்று நூலாக வந்துள்ளது. இந்நூலில் தமிழ் சங்கம் இருந்தமைக்கான தகவல்கள் அனைத்தையும் சுட்டிக் காட்டி பின் முத்தமிழ் என்னும் கருத்தில் இரண்டாவது பொழிவினைச் செய்துள்ளார். இதில் தமிழ் இலக்கண நூல்களையெல்லாம் தொட்டுக்காட்டிச் சென்று இயற்றமிழ் இலக்கியம், இசைத்தமிழ், நாடகம் என்ற தலைப்புகளுள் தன் பொழிவை அமைத்துக் கொண்டுள்ளார். இத்தகவல்களைக் கூறக் காரணம், இயற்றமிழ் இலக்கியம் என்ற தலைப்பின் கீழ்ச் சங்கத் தமிழ் நூல்களைக் கீழ்வருமாறு அறிமுகம் செய்துள்ளார்.

> எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிற்றம்டகம், குணநாற்பது, முத்தொள்ளாயிரம், அரும்பை ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள், தகடூர் யாத்திரை, இருப்பல் காஞ்சி முதலிய பல சங்க நூல்களும் இயற்றமிழிலக்கியங்களுள் பழையனவாம்.

(உ.வே. சாமியாதையர், 1927;30)

என்றுகூறியிருப்பதோடு இடைக்காடனார் பாடிய ஊசிமுறி என்னும் ஒரு நூலையும் அறிமுகம் செய்து வைத்து மேற்கண்டவற்றை சங்க கால இயற்றமிழ் நூல்கலென்று வரையறைப் படுத்துகின்றார். இவற்றில் சங்கத் தமிழ் நூல்களென்பது எட்டுத்தொகை பத்துப்பாட்டு உட்பட மொத்தம் ஐம்பத்துமூன்று நூல்களை சங்க கால இலக்கியங்களாக அறிமுகம் செய்துவைத்திருப்பது தெரியவருகிறது. இவர் சொற்பொழிவு நிகழ்த்திய காலத்திற்குப் பின்னால் பல தமிழ் அறிஞர்களும் சங்ககாலம் குறித்த வரையறையில் பல கருத்துக்களைக் கொண்டு முரண்பட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாய் உடன்பட்டும் வந்துள்ளாரென்பதும் தெரியவருகிறது. தீர்க்கமான முடிவுக்கு வந்திடாத காலம் அது என்பதையே உ.வே.சா.வின் மேற்கண்ட கட்டமைப்புக் காட்டுகிறது. மேலும் அக்காலத்தில் சங்க இலக்கியம் குறித்த தர்க்கம் எவ்வாறிருந்ததென்பதையும் உ.வே.சா. வின் கீழ்வரும் கூற்றால் உணரமுடியும்.

> சங்க கால வரையறையைப்பற்றி இக்காலத்தில் ஆராய்ச்சியாளர் பலர் உழைத்து ஒருவரோடொருவர் தர்க்கித்து நிர்ணயிக்க முயன்று வருவதால் அதிற்றலையிட்டுக் கொள்ள எனக்குச் சிறிதும் விருப்பமில்லை.

(மேலது;21)

என்றதிலிருந்து அக்கால நிலைப்புரிய வருகிறது. சங்க காலம் குறித்த வரையறைக்கு வராததாலேயே ஓலைச் சுவடிகளில் பதிப்பிக்கப்பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெரும் ஐஞ்சிறுங் காப்பியங்கள், முத்தொள்ளாயிரம் உள்ளிட்ட நூல்களையும் சேர்த்து சங்க கால இலக்கியங்களாய் உரைக்க நேர்ந்திருக்கிறதென்று புரிந்து கொண்டாலும் உ.வே.சா.வைப் பொருத்தவரை சங்கக் காலம் என்பது திருவள்ளுவர் காலத்திற்குப் பிறகும் நீண்ட தூரம் பயணப்பட்டு வந்ததென்பதாகும். மேலும் விளங்க, கடைச்சங்க காலத்திற்குப் பின்பும் சங்கமிருந்திருக்க வேண்டுமென்ற கொள்கையில் இயங்கிய இலக்கிய அறிஞர்களின் கருத்தை ஏற்றவராகவே இவரும் இருந்திருக்கின்றாரென்பது கீழ்வரும் கூற்றால் விளங்கிக் கொள்ள முடிகிறது.

> கடைச் சங்ககாலத்திற்குப் பின்பும் இம்மதுரையில் சைன சங்கமும் பௌத்த சங்கமும் இருந்தனவென்றும் பெரியோர் சொல்லுவதுண்டு. அன்றியும், வடமொழிச் சங்கம் சேரன் ஆட்சியிலிருந்ததாக மதுரைக் காஞ்சி தெரிவிக்கின்றது. திருவள்ளுவர் திருக்குறளை யரங்கேற்றினமையால் சங்கம் அழிந்து விட்டதென்று சிலர் நினைக்கிறார்கள். அது பொருந்தாதென்பது சிலர் கருத்து

(மேலது;20)

அது பொருந்தாதென்பது சிலர் கருத்து என்றதில் வரும் சிலருள் உ.வே.சா.வும் அடங்குகிறார். எனவே தான் பரந்து விரிந்த இலக்கிய நூல்கள் அனைத்தையும் சங்க கால இலக்கியங்களாக வரிசைப்படுத்த முடிந்திருக்கிறது.

### 2.3.22. மறைமலையடிகளின் தனித்தமிழ்ச் சிந்தனையும் சங்க இலக்கிய மற்றும் கால வரையறையும்

கி.பி. 1916 இல் தனித்தமிழ்ச் சிந்தனையைத் தமிழ் இலக்கிய பரப்பில் விதைத்த மறைமலையடிகள் கி.பி.1930 வரையிலும் தமிழ் இதழ்களிலும் ஆங்கில இதழ்களிலும் மாணிக்கவாசகர் காலம் குறித்து எழுதி வந்த சிந்தனையைப் பெரு நூலாக வளர்த்தெடுக்கிறார். இந்நூலுள், இரண்டாம் பகுதியில் மாணிக்கவாசகர் காலம் என்னும் பகுதியின், ஐந்தாம் இயலில், திருவாசகமும் கல்லாடமும் புத்த சமண காலங்களில் இயற்றப்பட்டவை என்ற கருத்தினை நிறுவமுயலுபவர் “திருவாசகம் கல்லாடம் புத்த சமண சமயங்களில் தோன்றியமை” என்று தலைப்பிட்டு கீழ்வருமாறு தருகிறார்.

> இனிப் ‘பா’ வகையாலும் திருவாசகம் கல்லாடம் என்பன அப்பர் சம்பந்தர்க்கு முற்பட்ட காலத்தனவதால் காட்டுதும், செந்தமிழ் மொழிக்குப் பழைமையான உரிய பாக்கள் அகவலும் வெண்பாவுங்கலியும் வஞ்சியுமென நான்கேயாம் (தொல்காப்பியம், செய்யுளில், 81, 82, 83, 84) இவற்றுள்ளும் அகவற்பாவே மிகச் சிறந்ததாம்.

(மறைமலையடிகள் 1930;205)

இப்பாவடிவினை எடுத்துக்காட்டி, அதற்குத் தொல்காப்பியர் செய்யுளினைச் சான்றாக நிறுவி, அவற்றுள் அகவற்பா வடிவிலேயே அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங் கதை முதலான பழைய நூல்கள் அனைத்தும் எழுதப்பட்டுள்ளதைக் கூறி கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர், பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் வந்து

> கொள்ளுத லிழுக்காகாது . கடைச்சங்க காலம் கி.மு. முதலாவது நூற்றாண்டென்று கொள்ளினும், இக்காரியங்கள் கதையாக வழங்கப் பன்னாட்கள் சென்றிருக்க வேண்டுமாகலின், இப்பாக்கள் கி.மு.6,7 வது நூற்றாண்டுகளிற் கூறப்பட்டனவெனக் கொள்ளுதல் பொருத்த முடையதொன்றாம்.

(மேலது;39)

இதிலிருந்து இதன் தொன்மை கி.மு.14 ஆம் நூற்றாண்டாக இருப்பினும் இது புலவர்களின் செய்யுளாக வடிவுப் பெற்றிருந்தாலும் இதன் பழமை கி.மு.6,7 நூற்றாண்டுகளிலேயே அமைந்திருக்க வேண்டுமென்று உரைப்பதைக் காண்கிறோம். இதனோடு, தொல்காப்பியமும் இக்காலத்தில் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்றும் ஊகிக்கின்றார். இவ்விலக்கன நூல், இரண்டாஞ் சங்கமான இடைச்சங்க காலத்துள் இயற்றப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுது கபாடபுரத்தில் தமிழ்ச்சங்கம் நிலவிவந்ததெனக் கூறி, கபாடபுரம் கடலுள் மாய்வதற்கு முன்னர், இராமன் காலத்தில் சிதாதேவியை அனுமன் இக்கபாடபுரத்து வழியாகவே தேடிச் சென்றான் என்ற குறிப்பு, வான்மீகி தமது இராமாயணத்தின் கிஷ்கிந்தா காண்டம் 41 வது ஸர்க்கம் 19 வது ஸ்லோகத்தில் குறிக்கப்பட்டிருப்பதை அடிக்குறிப்பில் (சமஸ்கிருத வடிவவோடு) தந்திருப்பதோடு, இவ்வான்மீகி முனிவர் வாழ்ந்த காலம், கி.மு.6 ஆம் நூற்றாண்டு என்று ஐரோப்பிய அறிஞர்களும் இந்திய அறிஞர்களும் ஏற்று கொண்டதைச் சுட்டிக்காட்டி, கபாடபுரத்தில் தமிழ்ச்சங்கம் நிலவியிருந்த காலம் இதுவாகவே இருக்குமென்று முடிவுக்கு வருகின்றார். மேலும் தொல்காப்பியர் காலத்தை வான்மீகருக்கும் முன்பென்று கூற விழைகிறார். இத்தொல்காப்பிய காலத்தைச் சுட்டிக்காட்டுவதற்குக் காரணம், இவ்விலக்கணத்தின் அடிப்படையிலும் தமிழின் சங்க இலக்கியங்களின் காலத்தைக் கணிக்க முயன்றுள்ள முயற்சி முன் வைக்கப்பட்டுள்ளது, மேலும், தொல்காப்பியத்தின் பாயிரத்தில், உடன் பயின்றவரான பனம் பாரணர் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் என்று குறிப்பிட்டுள்ளதால் பாணினிக்கு முற்பட்டது தொல்காப்பியம் எனும் புரிதலில் பாணினியின் காலம் கி.மு.4 ஆம் நூற்றாண்டு என்று ஏற்கப்படுவதால் இதற்கும் முன்னர் தொல்காப்பியம் இயற்றப்பட்டதைக் குறிப்பிட்டுக் காட்டி, கீழ்வருமாறு சங்கத்தின் காலத்தை எழுதியுள்ளார்.

> இயேசு பிறப்பதற்கு முன்னரே கடைச்சங்க முற்றி அதன் வயோதிக காலம் தலைப்பட்டு விட்டதென்பதும், கி.பி. முதனூற்றாண்டில், அது செல்லாகாலமாகக் கதப்பட்ட தென்பதும் சரித்திரவுண்மை. இதுகொண்டு அதன் மத்திய

> காலமல்லது சிறப்புற்றேங்கிய காலம் இதற்கு 3, 4 நூற்றாண்டாவது சென்றிருக்க வேண்டுமென்றல் பொருத்த முடையதேயாம். இவைகளெயென்றி, சங்க நூல்களிற் பிற்காலத்தவற்றுள் ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத்துக்குப் புறம்பான பதங்கள் பல பயிலுதலைக் காண்கின்றோம். அவற்றிற் சில காட்டுவதும்.
>
> (மேலது;94)

எனக் குறிப்பிடுவதால், தொல்காப்பியம் எழுதப்படுவதற்கு முன் சங்க இலக்கியப் பாடல்களுள் பல எழுதப்பட்டிருக்க வேண்டும். எனவே சங்க காலமும் இப்பாடல்களும் கி.பி.6 நூற்றாண்டிற்கும் முற்பட்டவையாகக் கருதுவதற்குப் பெரும் இடம் தருகிறது என்பதை உணர்த்த தலைப்படுபவர், தொல்காப்பிய எழுத்ததிகார சூத்திரங்களுள், 29 சூத்திரமும் 31, 32 வது சூத்திரமும் எடுத்துகாட்டி, சூத்திரப் பொருளிருந்து மாறுபட்ட சொற்களைச் சிலப்பதிகாரம் வரி 14 இல் சமைத்து என்றும் மதுரைக் காஞ்சி வரி 172 இல் சண்டி என்றும் திருமுருகாற்றுபடைவரி 225 இல் சதுக்கம் என்றும் சந்தி என்றும், இதே நூலின் 99 வரியில், சமம் என்றும், பெரும் பாணாற்றுப்படையில் 217 வரியில் சவட்டி என்றும், பதிற்றுப்பத்தின் செய்யுள் 84 இல் சவட்டி என்பது காணப்படுவதையும், மலைபடுகாடாகத்தின் 393 வரியில் சந்து என்றும், 74 ஆம் புறப்பாட்டில் ஞமலி என்றும் பட்டினப்பாலை 140 ஆம் வரியில் இஞ்ஞமலி என்றும் பதிற்றுப்பத்தின் 30 ஆம் வரியிலும் திருருமுருகாற்றுப்படை வரி 120 லும் ஞாலல் என்றும், பதிற்றுப்பத்தின் 2வது பதிகத்திலும் நெடுநல்வாடையின் 101 வரிலும் முல்லைப்பாட்டு 61வது வரியிலும் 'யவனர்' என்று குறிக்கப்பட்டிருப்பதையும் தருவதோடு, புறநானூற்றின் 15, 224, பாடல்களும், பதிற்று பத்தில் 67 வது செய்யுளிலும் மதுரைக் காஞ்சியின் 27 வரிகளிலும் 'யூபம்' என்ற சொல் காணப்படுவதும், இறுதியாக 'யூகம்' என்ற சொல் திருமுருகாற்றுப்படையின் 302 வரியில் கிடைக்கப்பெறுவதைத் தந்து, இதனால் தொல்காப்பியர் குறிப்பிடும் மொழி முதலாக வராத எழுத்தைக் கொண்டு சொல்வழக்கு ஆளப்பட்டுள்ளதால், இக்கடைச்சங்க காலத்திற்கு முன்பே தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வருகின்றார். இவற்றோடு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களும் கடைச்சங்க காலத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்று ஏற்பதால் இக்கடைச்சங்க காலத்திற்கு முன்பு தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று உறுதிபடுத்தியதையும் காணமுடிகிறது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து கூறி இக்கால வரையறையை முடித்து, பின்னர் அக்கால தமிழ்நாட்டின் பகுதிகளை அடையாளம் காணப்புகுவதற்கு

முன்பாக கால்டுவெல்லின் ஆய்வு பரிதலைக் கீழ்வருமாறு தந்து, கால ஆய்விற்கான இடத்தை நிறைவு செய்திருக்கின்றார்.

> தமிழர் கி.மு.7 வது நூற்றாண்டு முன்னரே நாகரீகப் பழுத்தவர்களாக யிருந்திருக்க வேண்டுமென்பது தொல்காப்பியத் தானும், புறநானூற்றுச் செய்யுட்களானு மினிது விளங்குகின்றது. இவர்களுடைய நாகரீகம் வெகு புராதன மானதாயிருக்க வேண்டும். தமிழுக்கும், தமிழ் நூல்கட்கும் புராதன மேம்பாடு கூறு மிஷ்டமில்லாத கால்டுவேல்பாதியாரும், தமிழர் நாகரீகமும், அவர்களது பாஷை முதிர்ச்சியும் கி.மு.6, 7 நூற்றாண்டு முன்னதாக ஆரம்பித்தே யிருக்க வேண்டுமென்பராயின் வேறு என்ன சொல்ல கிடக்கின்றது.

(மேலது;98)

இதனால் தொல்காப்பியர் காலம் கண்டுரைக்கப் பட்டிருப்பதோடு அதனைக் கொண்டு கடைச்சங்க காலம் கி.மு.6 ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்கியிருக்கக் கூடும் என்று எழுதப்பட்டிருப்பதும், அது கிறிஸ்து பிறந்து இரண்டு மூன்று நூற்றாண்டுகள் நடைபெற்றிருக்குமென்றும் உணர்த்தி சென்றிருப்பதைத் தெளிவாகவே உணர முடிகிறது. தமிழ்மொழி குறித்தும், அதன் வழி தமிழரினம் குறித்தும் அவற்றோடு அவர்களின் நாகரீகத் தொன்மைக் குறித்தும் தொகுத்து ஆராய்ந்து எழுதியிருக்கும் குறிப்பிடத்தக்க ஆய்வுக் கட்டுரையாக எஸ்.எஸ். பாரதியாரின் இக்கட்டுரையை உணர முடிவதோடு, இதன் முக்கியத்துவம் உணர்ந்து இதனை மொழி பெயர்ப்பு செய்து வெளிப்பகுதியிருந்த திருவாரூர் சோமசுந்தர தேசிகனும் குறிப்பிடத்தக்கவர் என்பதற்கு மறுப்பில்லை. இக்கட்டுரையின் அடிக்குறிப்பில், இஃது எம்.ஏ. பரீஷைக்கு ஆங்கிலத்தில் மிஸ்டர் S.S. பாரதியார் M.A.,B.L., அவர்களால் எழுதப்பட்டது. தமிழர்க்குப் பெரிதும் பயன்தரத்தக்கதென்று கருதி மொழி பெயர்க்கப்பட்டதென்று கூறியிருப்பதால், தமிழ் இலக்கியம் குறித்து ஆங்கிலத்தில் ஆராய்ந்து, கற்ற கல்வி முறை அக்கால வழக்கத்திலிருந்ததும் வெளிப்படுகிறது.

### 2.3.20. சபாபதி நாவலரின் திராவிடப் பிரகாசிகை முன்வைக்கும் கால ஆய்வுச் சிந்தனை

இலங்கையில் பிறந்து வளர்ந்தவரான சபாபதி நாவலர் எழுதிய திராவிடப் பிரகாசிகை என்னும் நூல், தமிழின் தெய்வப்பழமை, மரபியல், இலக்கண மரபியல், இலக்கிய மரபியல், சாத்திரமரபியல், ஒழிபியல் என்னும் ஐந்து பிரிவாகப் பிரிக்கப்பட்டு எழுதப்பட்டுள்ளது.

இரண்டாம் தலைப்பான இலக்கணமரபியல் என்னும் பகுதியில் அகத்தியம் என்னும் இலக்கண நூல் இருந்தமைக்குச் சான்றாக, காஞ்சிபுராணத்தாலும், தொல்காப்பியர் வினையின் நீங்கி விளங்கியவறிவின், முனைவன் கண்டது முதனூல் ஆகும் என்றுரைத்திருக்கும் நூற்பாவையும் கூறி, கீழ்வருமாறு தந்திருக்கின்றார்.

> அகத்தியனார் அங்ஙனந் தனிமுதற்கடவுளான பரமசிவனை வழிபட்டு முக்குணங்களுங் கடந்து அவ்விறைவனருள் பெற்றுத் தலைமையெய்தியது பற்றியன்றே மாங்குடி மருதனார் "தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற்றொன்முது கடவுட் பின்னர் மேய – வரைத்தாழருவிப் பொருப்பிற் பொருந" என்று அவ்வாறு மதுரைக்காஞ்சியுள் ஓதுவராயிற்றென்றுணர்க.

(சபாபதி நாவலர், 1927;29)

என்றுரைப்பதோடு கலித்தொகையுள், "முத்தேர் முறுவலாய் நாமணம் புக்கக்காலிப்பொழுது பொதுதென்றதுவாய்ப்பக் கூறிய வெக்கடவுள், மற்றக் கடவுள் இருடிகாலக் கடவுள், என நல்லந்துவனாருங் கூறினானென்பதையும் எடுத்துத் தருக்கின்றார். மேலும், தொல்காப்பியத்தின் எழுத்து சொல் பொருள் என்னும் முப்பகுதியின் உள்ளடக்கம் குறித்து தொட்டுக் காட்டி, அகத்தியரின் பன்னிருமாணவர்களும் சேர்ந்து பன்னிருபடலம் என்னும் பொருளிலக்கணம் செய்தமையைத் தந்துள்ளார். பன்னிருபடலம் என்னும் துணைத்தலைப்பினையொட்டி 'கடைச்சங்கம்' என்னும் தலைப்பினுள் கீழ்வருமாறு எழுதியுள்ளார்.

> இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேர்ந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்க் கீழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொண்பதின்மர். அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொண்பதின்மர் பாடினார். அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்குநூல் அகத்தியமும் தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழராய்ந்தது ஆயிரத் தொண்ணூற்றைம்பத்தியாண்டு. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி யீறாக நாற்பத்தொண்பதின்மர். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியர்.

(மேலது;105)

என்று இறையனார் அகப்பொருளுரைத் தரும் தரவினை வழங்குகின்றார். இச்சங்கங்களின் காலத்தைச் சுட்டவரும் பொழுதும்,

> அற்றேலஃதாக, தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங் மென்னு, முச்சங்கத்தாரும் முறையே நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டும், மூவாயிரத் தெழுநூற்றி யாண்டும், ஆயித்தெண்ணூத் றியாண்டுஞ் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் என்றும், அகத்தியம் அம் முச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றென்றும், தமிழாசிரியர் கூறுமுரைகள் மலையுயவாம்.

(மேலது;106)

என்று தந்திருப்பதைக் காண்கின்றோம். இதனையடுத்து களவியலுரைத் தோன்றியதைப் பற்றி எழுதிச்சென்று தொல்காப்பிய உரைகள், வெண்பாமாலை, அகப்பொருள் விளக்கம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்ற வரிசையில் இலக்கண மரபின் நீட்சியை எழுதிச் செல்கின்றார். எனது, சங்க காலம் இன்னதென்று அறுதியிட்டுக் கூறவில்லையென்றாலும் மேற்கண்ட மேற்கோளின் வழி முச்சங்க நம்பிக்கையும் அச்சங்கமிருந்த காலத்தில் இயற்றப்பட்ட நூல்கள் குறித்த சிந்தனையையும் தந்து சென்றிருப்பதைப் பார்க்கின்றோம்.

மூன்றாம் தலைப்பான 'இலக்கிய மரபியல்' என்பதில், பின்வருமாறு எழுத புகுவிருக்கும் திட்டத்தைத் தருகின்றார்.

> தமிழிலக்கியம் – திருமுறையிலக்கியம், சங்க இலக்கியம், காவிய இலக்கியம், புராண இலக்கியம், இதிகாச இலக்கியம், பல வகைப்பிரபந்த இலக்கியமெனப் பலதிறப்படும்.
>
> வேந்துணையோர் பரிபாடல் முதுநாரை, முதுகுருகு, களரியாவிரையென்று இத்தொடக்கத்துத் தலைச்சங்க இலக்கியங்களும் கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவல் என்று இத்தொடக்கத்து இடைச்சங்க இலக்கியங்களும் இறந்தனவாதலான் அவற்றின் வரலாரறிந்து கூறுமாறில்லை. கடைச்சங்க இலக்கியங்கள் – நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலி, எழுபது பரிபாடல், கூத்து, வரி, பேரிசை, சிற்றிசையென்றித் தொடக்கத்தன. இவற்றுட் சில இறந்தன, பல நிலவுகின்றன கிடையும் இன்னோரன்னவுமான கடைச்சங்க இலக்கிய வரலாறு தலைமுறையிலக்கியங்களின் பின்னர்த் தந்து கூறுதும்.

(மேலது;137)

எனத்தந்து திருமுறை இலக்கியங்களைத் தொகுத்துரைக்கின்றார். இப்பகுதியின் இறுதியாகப் பெரியபுராணம், திருப்புகழ் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் முதலியவற்றைக் கூறிப் பின்னர் திருக்குறள் குறித்து எழுதத் தொடங்குகின்றார். திருக்குறள் சங்க இலக்கியத்துள் சிறந்த நூலென்பதைத் தந்து, இதன் காலம் குறித்து எழுதவருகையில் பின்வருமாறு எழுதுகின்றார்.

> இவ்வுத்தரவேதங் கடைச்சங்கத்தார் காலத்து அவதரித்து அரங்கேறிய தென்பதற்கு அச்சங்கப் புலவர்களெல்லாந் தனித்தனி இதன் பெருமை நிலையிட்டு இயற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களே அமையுஞ் சான்றாம். அக்காலத்துக் கடைச்சங்கத்திலிருந்து இது கேட்ட பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, பாண்டியனுங் கடைச்சங்க புலவரும் வணங்கிக் கீழிருந்து கேட்பத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் உருத்திரசன் மனாரோடு சங்கப்பலகை வீற்றிருந்து திருக்குறள் அரங்கேற்றினார்.

(மேலது;211)

இதனைத் திருவள்ளுவமாலையின் துணைக்கொண்டு எழுதியுள்ளா ரென்பதை கபிலர், பரணர், நக்கீரர் முதலியரோடு, திருவள்ளுவமாலை என்னும் சிறப்புப் பாயிரத்தாலும் உணர்ந்து கொள்ளுமாறு சுட்டிக் காட்டி, இறையனார் களவியலுரையில் குறிக்கும் செய்திக்குறித்துப் பின்வருமாறு விளக்கமளிக்கிறார்.

> திருக்குறள் உருத்திரசன்மனாரும் நக்கீரனார் முதலிய சங்கப் புலவர்களுங் கேட்ப அரங்கேறியது வாய்மையே. அஃது அரங்கேறுதற்கு முன்னர் நக்கீரனார் இயற்றிய களவியலுரையுள் அஃது மேற்கோளாக எடுத்துக் காட்டப்படுதல் பொருந்துமா றென்னையெனின், திருக்குறள், நக்கீரனார் களவியலுரை இயற்று முன்னரே அவதரித்து உலகினிலவிப் பின்னர்ச் சங்கமிரீஇயற்றாதலின், அவ்வெடுத்துக் காட்டுப் பொருத்த முடையதேயாம்; காலமாறுபாடு ஆண்டுப் போதருமாறு இல்லையென்க.

(மேலது;212)

என்று தந்திருப்பதைப் பார்க்கிறோம். இதனைத் தொடர்ந்து திருக்குறள் குறித்தும் அதன் உள்ளமைப்பையும் கருத்து வலிமையையும் போற்றிப் புகழ்ந்துரைத்து எழுதிச் செல்கின்றார்.

மேற்கண்டதன் தொடர்ச்சியாக ‘கடைச்சங்க இலக்கியம்’ என்று தலைப்பமைத்துக் கொண்டு, பாண்டியர்கள் நான்மாடக்கூடன் மாநகரில் சிவபெருமான் உள்ளிட்ட பெரும் புலவர்கள் வீற்றிருந்து சங்கம் அமைத்துக்

கவிபுனைந்தனரென்பதைத் தந்து, பத்துப்பாட்டு என்னும் துணைத் தலைப்பின் கீழ் பின்வருமாறு எழுதுகின்றார்.

> திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப்பாட்டாம். திருமுருகாற்றுப்படை முதலிய இப்பத்தும், அறம், பொருள் இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கனுள் ஒரோவொன்று நுதலியனவாயும், நல்லிசைப்புலவர் நாட்டியனவாயும், அகவற்பாவிலக்கணம் ஒத்தனவாயும் ஒற்றுமையுறுதலின், அவற்றைச் சங்கத்தார் பத்துப்பாட்டெனக் கோத்து ஒன்றாக்கினார். இவற்றுள், திருமுருகாற்றுப்படை உறுதிப்பொருள் நான்கனுள் இறுதிக் கண்ணதாய்ச் சிறந்த வீடுபேறு நுதலுத, அதனை ஏனை ஒன்பது பாட்டுக்குஞ் சிரத்தாணமாக்கி, முதற்கண் கோத்திட்டார். திருமுறை செய்தருளிய நம்பியாண்டார் நம்பி இது வீடுபேற்றிறுதிப் பெரும்பயன் கூறுந் தெய்வப்பட்டாதல் நோக்கிப் பதினொராந் திருமுறையில் எடுத்துக் கோத்துப் போற்றினார். இது கோத்தார் சங்கப் புலவரென்பது, நச்சினார்க்கினியர் மலைபடுகடாத்துள் "தீயினன்ன வொண்செங்காந்தள்" என்னுந் தொடர்க்கு எழுதிய உரையான் அறிக.

(மேலது;289)

இதனுடன், ஒவ்வொரு நூலையும் பற்றின சிறு அறிமுகமாக உட்பொருள்பற்றியே எழுதியுள்ளார். இதனையடுத்து 'எட்டுத்தொகை' என்னும் தலைப்பில், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத்தொகையாம் என்று தந்து ஒவ்வொரு நூலினைப் பற்றியும் ஒரு பத்தியளவு அறிமுகம் தந்து 'கல்லாடம்' என்னும் நூலையும் தனியாக அறிமுகம் செய்கிறார். அடுத்து 'பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தலைப்பமைத்து,

> *நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்*
> *பால்கடுகங் கோவை பழமொழி-மாமூல*
> *மிந்நிலைய காஞ்சியுடனேலாதி யென்பவே*
> *கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"*

(மேலது;285)

என்ற பாடலைத் தருகின்றார். அடுத்து 'காவிய காலம்' குறித்து எழுதுபவர்.

தமிழ்காவியம் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, சூளாமணி, இரகுவமிசம், நைடதம் முதற் பலவுள, இக்காவியங்கள் தொல்காப்பிய இயல் வழிப்பட்டு மேற்கூறிய சங்கத் தமிழ்ச் சொற்பிரயோகம் பெரும்பாலும் மருவி நவரசங்களும் நிலவும் சிலவும் பலபுந் தங்கண் அடங்கக் கொண்டு உலகவியல், நீதி, வைராக்கியம் முதலியவைகளை நன்று அறிவுறுத்துவன.

(மேலது;286)

இவற்றுள் சிந்தாமணி சங்க கால காவியம் என்று குறிப்பிடாமல் சிலப்பதிகாரம் குறித்து குறிப்பிடும் பொழுது,

இது முத்தமிழ் இலக்கியமான ஓர் சைனகாவியம், கடைச்சங்கத் தமிழ்ப் புலவரான சீத்தலைத் சாத்தன் உளப்பாகுகொண்டு இளங்கோவடிகளியற்றி அவரைக் கேட்பித்த காவியமென்பது. இந்நூற்பதிகத்தான் உணரப்படும்.

(மேலது;292)

அடுத்தடுத்து மணிமேகலை குண்டலகேசி, பௌத்த காவியம் என்பதையும், வளையாபதி, சூளாமணி, இரகுவம்சம் முதலானவற்றைப் பற்றியும் எழுதிச் செல்கிறார்.

### 2.3.21. உ.வே.சாமிநாதையர் குறிக்கும் சங்க இலக்கிய வரையறை

1927 களின் இறுதி இரண்டு மாதங்களில் பத்து சொற்பொழிவுகளை (உபந்யாசங்கள்) நிகழ்த்தி இருக்கும் உ.வே.சாமிநாதையர் தாம் பேச எடுத்துக் கொண்ட பொருண்மை ‘‘சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும்’’ என்பதாகும். இச்சொற்பொழிவை 7.11.1927 இல் தொடங்கி 21.12.1927 வரை நிகழ்த்தியிருக்கிறார். பின்னர் 1929 இல் இப்பொழிவுகளையெல்லாம் தொகுத்து சென்னையில் இயங்கி வந்த ஆனந்தா அச்சுக்கூடத்தால் பதிப்பிக்கப்பெற்று நூலாக வந்துள்ளது. இந்நூலில் தமிழ் சங்கம் இருந்தமைக்கான தகவல்கள் அனைத்தையும் சுட்டிக் காட்டி பின் முத்தமிழ் என்னும் கருத்தில் இரண்டாவது பொழிவினைச் செய்துள்ளார். இதில் தமிழ் இலக்கண நூல்களையெல்லாம் தொட்டுக்காட்டிச் சென்று இயற்றமிழ் இலக்கியம், இசைத்தமிழ், நாடகம் என்ற தலைப்புகளுள் தன் பொழிவை அமைத்துக் கொண்டுள்ளார். இத்தகவல்களைக் கூறக் காரணம், இயற்றமிழ் இலக்கியம் என்ற தலைப்பின் கீழ்ச் சங்கத் தமிழ் நூல்களைக் கீழ்வருமாறு அறிமுகம் செய்துள்ளார்.

> எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிற்றம்டகம், குணநாற்பது, முத்தொள்ளாயிரம், அரும்பை ஐம்பெருங் காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள், தகடூர் யாத்திரை, இருப்பல் காஞ்சி முதலிய பல சங்க நூல்களும் இயற்றமிழிலக்கியங்களுள் பழையனவாம்.
>
> (உ.வே. சாமியாதையர், 1927;30)

என்றுகூறியிருப்பதோடு இடைக்காடனார் பாடிய ஊசிமுறி என்னும் ஒரு நூலையும் அறிமுகம் செய்து வைத்து மேற்கண்டவற்றை சங்க கால இயற்றமிழ் நூல்கலென்று வரையறைப் படுத்துகின்றார். இவற்றில் சங்கத் தமிழ் நூல்களென்பது எட்டுத்தொகை பத்துப்பாட்டு உட்பட மொத்தம் ஐம்பத்துமூன்று நூல்களை சங்க கால இலக்கியங்களாக அறிமுகம் செய்துவைத்திருப்பது தெரியவருகிறது. இவர் சொற்பொழிவு நிகழ்த்திய காலத்திற்குப் பின்னால் பல தமிழ் அறிஞர்களும் சங்ககாலம் குறித்த வரையறையில் பல கருத்துக்களைக் கொண்டு முரண்பட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாய் உடன்பட்டும் வந்துள்ளாரென்பதும் தெரியவருகிறது. தீர்க்கமான முடிவுக்கு வந்திடாத காலம் அது என்பதையே உ.வே.சா.வின் மேற்கண்ட கட்டமைப்புக் காட்டுகிறது. மேலும் அக்காலத்தில் சங்க இலக்கியம் குறித்த தர்க்கம் எவ்வாறிருந்ததென்பதையும் உ.வே.சா. வின் கீழ்வரும் கூற்றால் உணரமுடியும்.

> சங்க கால வரையறையைப்பற்றி இக்காலத்தில் ஆராய்ச்சியாளர் பலர் உழைத்து ஒருவரோடொருவர் தர்க்கித்து நிர்ணயிக்க முயன்று வருவதால் அதிற்றலையிட்டுக் கொள்ள எனக்குச் சிறிதும் விருப்பமில்லை.
>
> (மேலது;21)

என்றதிலிருந்து அக்கால நிலைப்புரிய வருகிறது. சங்க காலம் குறித்த வரையறைக்கு வராததாலேயே ஒலைச் சுவடிகளில் பதிப்பிக்கப்பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெரும் ஐஞ்சிறுங் காப்பியங்கள், முத்தொள்ளாயிரம் உள்ளிட்ட நூல்களையும் சேர்த்து சங்க கால இலக்கியங்களாய் உரைக்க நேர்ந்திருக்கிறதென்று புரிந்து கொண்டாலும் உ.வே.சா.வைப் பொருத்தவரை சங்கக் காலம் என்பது திருவள்ளுவர் காலத்திற்குப் பிறகும் நீண்ட தூரம் பயணப்பட்டு வந்ததென்பதாகும். மேலும் விளங்க, கடைச்சங்க காலத்திற்குப் பின்பும் சங்கமிருந்திருக்க வேண்டுமென்ற கொள்கையில் இயங்கிய இலக்கிய அறிஞர்களின் கருத்தை ஏற்றவராகவே இவரும் இருந்திருக்கின்றாரென்பது கீழ்வரும் கூற்றால் விளங்கிக் கொள்ள முடிகிறது.

> கடைச் சங்ககாலத்திற்குப் பின்பும் இம்மதுரையில் சைன சங்கமும் பௌத்த சங்கமும் இருந்தனவென்றும் பெரியோர் சொல்லுவதுண்டு. அன்றியும், வடமொழிச் சங்கம் சேரன் ஆட்சியிலிருந்ததாக மதுரைக் காஞ்சி தெரிவிக்கின்றது. திருவள்ளுவர் திருக்குறளை யரங்கேற்றினமையால் சங்கம் அழிந்து விட்டதென்று சிலர் நினைக்கிறார்கள். அது பொருந்தாதென்பது சிலர் கருத்து
>
> (மேலது;20)

அது பொருந்தாதென்பது சிலர் கருத்து என்றதில் வரும் சிலருள் உ.வே.சா.வும் அடங்குகிறார். எனவே தான் பரந்து விரிந்த இலக்கிய நூல்கள் அனைத்தையும் சங்க கால இலக்கியங்களாக வரிசைப்படுத்த முடிந்திருக்கிறது.

## 2.3.22. மறைமலையடிகளின் தனித்தமிழ்ச் சிந்தனையும் சங்க இலக்கிய மற்றும் கால வரையறையும்

கி.பி. 1916 இல் தனித்தமிழ்ச் சிந்தனையைத் தமிழ் இலக்கிய பரப்பில் விதைத்த மறைமலையடிகள் கி.பி.1930 வரையிலும் தமிழ் இதழ்களிலும் ஆங்கில இதழ்களிலும் மாணிக்கவாசகர் காலம் குறித்து எழுதி வந்த சிந்தனையைப் பெரு நூலாக வளர்த்தெடுக்கிறார். இந்நூலுள், இரண்டாம் பகுதியில் மாணிக்கவாசகர் காலம் என்னும் பகுதியின், ஐந்தாம் இயலில், திருவாசகமும் கல்லாடமும் புத்த சமண காலங்களில் இயற்றப்பட்டவை என்ற கருத்தினை நிறுவமுயலுபவர் "திருவாசகம் கல்லாடம் புத்த சமண சமயங்களில் தோன்றியமை" என்று தலைப்பிட்டு கீழ்வருமாறு தருகிறார்.

> இனிப் 'பா' வகையாலும் திருவாசகம் கல்லாடம் என்பன அப்பர் சம்பந்தர்க்கு முற்பட்ட காலத்தனவதால் காட்டுதும், செந்தமிழ் மொழிக்குப் பழைமையான உரிய பாக்கள் அகவலும் வெண்பாவுங்கலியும் வஞ்சியுமென நான்கேயாம் (தொல்காப்பியம், செய்யுளில், 81, 82, 83, 84) இவற்றுள்ளும் அகவற்பாவே மிகச் சிறந்ததாம்.
>
> (மறைமலையடிகள் 1930;205)

இப்பாவடிவினை எடுத்துக்காட்டி, அதற்குத் தொல்காப்பியர் செய்யுளினைச் சான்றாக நிறுவி, அவற்றுள் அகவற்பா வடிவிலேயே அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங் கதை முதலான பழைய நூல்கள் அனைத்தும் எழுதப்பட்டுள்ளதைக் கூறி கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர், பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் வந்து

பரவியதால் தமிழ் இலக்கியங்களுள் வடமொழிக்கலப்பும் புதிய பாவடிவங்களான, கட்டளைத் கலித்துறையும், கலி விருத்தம், ஆசிரிய விருத்தம் முதலான பாக்கள் கி.பி.2 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலங்களில் காணப்படாமையைத் சுட்டிக்காட்டி இத்தகைய பாக்கள் சிலப்பதிகாரத்திலும் தொல்காப்பியத்திலும் காணப்படாமையால், இவ்விரு நூல்களும் முன்னர் வரிசைப்படுத்திய தொல் இலக்கியங்களின் காலத்திற்குரியனவாகவும், கி.பி.2 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவை என்றும் நிறுவுகின்றார். இவற்றையெல்லாம் சுட்டி வந்து திருவாசக காலம் கி.பி.3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.6 ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று வரையறைப்படுத்துகின்றார். சங்க இலக்கிய காலம் குறித்த ஆய்வில் இச்சான்றுகளையெல்லாம் காட்டியமைக்குக் காரணம், சங்க காலந்தொட்டு, தற்காலம் வரைக்கும் இலக்கிய வரலாற்றை ஆறு வகையாக வரையறைப் படுத்தியிருக்கும் மறைமலையடிகள் சங்ககால இலக்கியங்களைத் தனித்தமிழ் காலமென்று பெயரிடுகின்றார். இதற்குப் பா வடிவங்களைச் சான்றாகக் குறிப்பிடுகின்றார். அவ்வகையில் சங்க இலக்கிய காலமென்ற காலக்கட்டத்தைக் கீழ்வருமாறு வரையறைப்படுத்தியுள்ளார்.

> எமதாராய்ச்சிக்கு விளங்கிய அளவு, அக்காலத்தைத் தனித்தமிழ்க்காலம், புத்தகாலம், சமண காலம், சைவ வைணவ காலம், பார்ப்பன காலம், ஆங்கில காலம் என ஆறு கூறாக வகுக்கின்றோம். பாரதப்போர் நிகழ்ந்தபோது உடனிருந்த முரஞ்சியூர் முடிநாகராயர் காலஞ்தொட்டுக் கி.பி.முதல் நூற்றாண்டு வரையிற் சென்ற காலத்தைத் தனித்தமிழ்க் காலமென்றும், கி.பி.முதல் நூற்றாண்டு முதல் நான்காம் நூற்றாண்டு வரையிற் சென்ற காலத்தைப் புத்தக் காலமெனவும், நான்காம் நூற்றாண்டு முதல் ஏழாம் நூற்றாண்டு வரையிற் சென்ற காலத்தைச் சமண காலமெனவும்,
>
> (மேலது;223)

என்றவாறு தற்காலம் வரையிலும் வரையறுத்துச் செல்கின்றார். இப்பகுதியில் இலக்கியங்களை வரையறைப் படுத்தி பகுத்திருப்பதை அறியமுடிகிறது. சங்க காலம் குறித்த நேரடியான ஆய்வினை இவ்விரண்டாம் பகுதியின் எட்டாம் இயலில் “கடைச்சங்கம் இல்லையானப்போன காலம்” என்னும் தலைப்பமைத்துக் கொண்டு ஆய்ந்துள்ளார். இத்தலைப்பினை, கீழ்வருமாறு தொடங்குகின்றார்.

இனிப்பழைய சங்கத்தமிழ் இலக்கியங்களிற் சொல்லப்பட்ட இவ்வரலாறு பழைய கல்வெட்டுகளாலும் நிலை பெறுத்தப்படுதலை ஒரு சிறிது காட்டுமாம். தொண்டை நாட்டின் தலைநகரான காஞ்சியில் இளவரசனாய் அரசு புரிந்த ‘‘சிவஸ் கந்தவர்மன்’’ என்பான், ‘‘ஆந்திரபதம்’’ எனப்படும் வடுக நாட்டிலுள்ள ‘‘விரிப்புரை’’ என்னும் ஊரை நன்கொடையாக வழங்கியதைக் குறிப்பிட்டுக் கிருஷ்ணையாற்றங் கரையையடுத்துள்ள ‘‘தன்னகடம்’’ அல்லது அமராவதி நகர்க்கண்ணிருந்த தன் காவலாளர்க்கு ஒரு கட்டளை விடுத்தான்.

(மேலது;249)

இவ்வாறு அவன் கட்டளை விடுத்ததற்குச் சான்றாக, மயிடவேலு என்னும் ஊரில் குண்டூர்க்கூற்றம் என்னும் இடத்தை யொட்டியப்பகுதியில் பட்டயங்கள் கிடைக்கப்பெற்றதைக் கூறுகின்றார். இவ்வடுக நாட்டைக் குறித்துப் பேசியிருப்பமைக்கான காரணம், இப்பகுதியை அரசாண்டவர்களுள் சிறந்தவனாக அறியப்படும் இரண்டாம் ‘புளுமாயி’ என்பவன் காலத்தை அறியபடுத்துவதன் நோக்க மென்பதும் அதன் வாயிலாக சங்க காலத்தின் இறுதி எல்லைக் கண்டறிதலுக்கான பயணப்படலை நிகழ்த்த துணையாகக் கொண்டுள்ளதும் தெரியவருகின்றன. அக்கூற்றுக் கீழ்வருமாறு அமைகிறது.

தெலுங்காணத்தை (வடுக நாட்டை) அரசாண்ட ஆந்திரபிருத்திய அரசரில் மிகச் சிறந்தவனாகிய இரண்டாம் புளுமாயி என்னும் மன்னவன் புதல்வனைச் சிவஸ்கந்தன் என்பான் 177கி.பி ஆம்ஆண்டு முதல் 184 ஆம் ஆண்டு வரையில் அரசாண்டனன் (E.Jourear-Dubreuit’s The Pallavas’ Ch-1) இப்போது திரும்ப ஆராய்ந்து கணக்குச் செய்யப்பட்டபடி இலங்கையில் அரசாண்ட முதற் கயவாகுவின் காலம் கி.பி. 171 முதல் 193 வரையிலென்று துணியப்பட்டிருந்தலால் (Geiger’s Mahavamsa, Introduction, p.XXXVIII) அக்கயவாகுவின் காலத்தவனான சேரன் செங்குட்டுவனும், அவனுக்கு உறவினனான நாகப்பட்டினத்துச் சோழன் கிள்ளிவளவனும் வடுக நாட்டில் அரசாண்ட சிவஸ்கந்தன் காலத்தவரென்பது சொல்லாமே யமையும்.

(மேலது;249)

என்று கூறி கிள்ளிவளவன் நாகநாட்டை ஆண்ட சிவஸ்கந்தன் மகளை மணந்து கிள்ளிவளவனுக்குப் பிறந்தவனே தொண்டைமான் இளந்திரையன் என்றும், இவ்விளந்திரையனுக்கே தன் தாயைப்பெற்ற பாட்டனான

சிவஸ்கந்தனோடு வர்மன் என்பதுஞ் சேர்த்து சிவஸ்கந்தவர்மன் என்று பெயரிடப்பட்டதென்றும் விளக்கி இறுதியாகக் கீழ்வருமாறு கூறி இவன் காலத்தைக் கணிக்கின்றார்,

> இலங்கைப் பௌத்த அரசரின் வரலாறு கூறும் ''மகாவம்ஸத்'' தானும், மயிடவோலுப் பட்டயங்களானும், தனித்தனியே ஒரு காலத்தவராகத் துணியப்பட்ட முதற் கயவாகு. சேரன் செங்குட்டுவன் கிள்ளி வளவன், ஆந்திர சிவஸ்கந்தன் என்பவர்களெல்லாம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதியிலிருந்தவர்களென்பது ஐயுறுவின்றித் தெரியப்படுதலாற், கிள்ளிவளவன் ஆந்திர சிவஸ்கந்தன் என்பவர்களைளெல்லாம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டின் பிற்பாதிலிருந்தவர்களென்பது ஐயுறவின்றித் தெளியப்படுதலாற், கிள்ளிவளவன் மகனும் ஆரிய சிவஸ்கந்தன் பேரனும் ஆன தொண்டைமான் சிவஸ்கந்தவர்மன் கி.பி.இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் இளவரசனாய்க் காஞ்சிமாநகரைத் தலைநகராய்க் கொண்டு தெற்கே பாலாறு முதல் வடக்கே கிருஷ்ணையாறு வரையில் விரிந்து பரந்த நாட்டை அரசாண்டான னென்பதூஉம் மறைவின்றிப் பெறப்படும்.

(மேலது;246)

என்று எழுதி காட்டுகின்றார். இக்கூற்றோடு, இந்தத் தொண்டைமான் சிவஸ்கந்தவர்மன் அரசாளத் தொடங்கிய காலம் முதலே அந்நிலப்பரப்பு தொண்டைநாடு என்று வழங்கப்பட்டதையும் இவன் கடல் வழியே வந்ததால் திரை வழங்கப்பட்டதையும் இவன் வம்சாவளியினரைப் பல்லவ திரையனாயினர் என்பதையும் விளக்கித் தருகின்றார். இப்புரிதலுக்கும் இக்கருத்துகளுக்கும் சான்றாக, வி.கனகசபைப் பிள்ளை எழுதிய (The Tamils Eighteen Hundred Year's Ago (P.48) என்னும் நூலின் கருத்தினைக் காட்டியுள்ளார். இத்தொண்டைமான் வந்த மரக்கலம் கடலில் மூழ்கியதை மணிமேகலையில் சாரணன் கிள்ளிவளவனுக்குச் சொல்லிய (24, 60–61) ''ஆங்கப் புதல்வன் வருஉ மல்லதுபூங்கொடி வாராள் புலம்பல் இதுகேள்'' என்னும் வரிகளையும் மேலும் ஒரு ஆதாரமாகத் தருகின்றார். இவரது கூற்றுப்படி, சிலப்பதிகாரத்தை ஒட்டி எழுந்த காப்பியமாகக் கொள்ளப்படும் மணிமேகலையும் சான்று பகர்வதாக அறியமுடிகிறது. மேற்கண்ட சான்றுகளின் வாயிலாகத் தொண்டைமான் இளந்திரையன் காலத்தைத் தெரியப்படுத்தியதோடு, இக்காலத்தை ஒட்டியே மோரியர் தமிழ் நாட்டின் மேல் படையெடுத்து வந்ததும் மூவேந்தர்களையும் வெல்ல முடியாமல் சென்றதும் உண்மை நிகழ்வாக வரலாற்று ஆசிரியரான

கிருஷ்ணசாமி ஐயங்கார் எழுதியுள்ளதைக் காட்டி (Specially see the beginnings of South Indian History ch, 11) காவிரிப்பூம்பட்டினம் கடல் வயப்பட்டவுடன் சோழர்கள் வளம் குன்றியபோது அவ்வாரியர் கூட்டம் தமிழ் நாட்டினுள் நுழைந்ததென்றும் கண்ணகி அறுந்துயர் அடைய காரணமாகயிருந்த பாண்டிய நெடுஞ்செழியன் மாண்டபப்பின் உக்கிரப் பெருவழுதி பட்டத்திற்கு வந்தானென்றும், இவ்வுக்கிரப் பெருவழுதியோடு கடைச்சங்கம் முடிவெய்தியதென்றும் சொல்லி அவ்வாறு கடைச்சங்கம் முடிவெய்திய காலத்தை,

> வெற்றிவேற் செழியன் ஆட்சிக்கு இருபது ஆண்டும், உக்கிரப் பெருவழுதியின் ஆட்சிக்கு இருபது ஆண்டும் வைத்து, இலங்கை கயவாகு மன்னன் ஆட்சிகாலத்தின் இடையதாகிய கி.பி.180 (க அ0)ஆம் ஆண்டிலிருந்து கணக்குச் செய்ய உக்கிரப் பெருவழுதியும் கடைச்சங்கமும் இல்லையாய்ப் போன காலம் கி.பி.220 (உ உ0) ஆம் ஆண்டென்று முடிவுகட்டப்படும்.
>
> (மேலது;252)

என முடிவுரைக்கின்றார் . பாண்டிய நெடுஞ்செழியனை அடுத்து உக்கிரப் பெருவழுதி வந்த வரிசை முறைக்கு ஆதாரமாக இறையனார் களவியலுரையை முன்வைக்கின்றார். மேற்கண்ட கடைச்சங்கத்தின் இறுதி காலத்தையடுத்து வரகுணப் பாண்டியன் வாழ்ந்த காலம் கி.பி.9 ஆம் நூற்றாண்டா? கி.பி.4 ஆம் நூற்றாண்டா? என்னும் ஆய்வினை மேற்கொண்டு கி.பி.4 ஆம் நூற்றாண்டிற்குரியவனென்றும் இக்காலத்தில் வாழ்ந்தவரே மாணிக்கவாசகரென்றும் நிறுவி முடிக்கிறார். இவற்றுள், நமக்குத் தேவையானது கடைச்சங்க காலத்தின் இறுதியாகக் காட்டியிருப்பதும் இச்சங்கத்தின் தொடக்கம் பாரதப்போர் நடந்த காலமான முரஞ்சியூர் முடிநாகராயர் காலம் முதல் என்று வரையறைப் படுத்தியியிருப்பதுமாகும். இதனால் இக்காலக்கட்டத்திற்கு உட்பட்ட இலக்கியங்களைச் சங்க இலக்கியம் என்று வரையறைபடுத்தியிருப்பதைப் பெறுகிறோம்.

### 2.3.23. கா. சுப்பிரமணியப்பிள்ளையின் தொன்ம நம்பிக்கையும் வரலாற்று ஆய்வுகளை மறுத்த சங்கம் குறித்த கட்டமைப்பும்

> கடைச்சங்கத்தார் காலத்தில் பன்னூற்றுக் கணக்கான புலவர்கள் பாடற்றிறன் வாய்ந்தவர்களாய் விளங்கினர் என்பது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, முத்தொள்ளாயிரம், சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு என்பவற்றைப் பாடிய ஆசிரியர் கூட்டத்தின் வைத்துணரப்படும்.
>
> (கா. சுப்பிரமணியப்பிள்ளை 1930;172)

கா.சுப்பிரமணியப் பிள்ளைக் குறித்திருக்கும் முத்தொள்ளாயிரம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் முதலியனவும் 1930களுக்கு முன் சங்க இலக்கியங்களாகக் கருதபட்டிருப்பதைப் பார்க்கிறோம். கி.பி.3ஆம் நூற்றாண்டு வரை பழங்காலத்தை சங்க காலம் என்னும் கா.சு. பிள்ளை, பாட்டும் தொகையும் உணர்த்தும் அகபுற மரபு ஒரு புறம் நிகழ்ந்து முடியுறும் நிலையில் அதே சம காலத்தில் அற மரபும் கிளர்ந்தெழுந்துள்ளதென்பது அவரின் உள்மன கருத்தாக இருப்பதைக் காண்கிறோம். மேலும் மற்றொரு புறம் சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம் ஆகிய காப்பிய முயற்சிகளும் அரங்கேறியுள்ளனவாகவும் புரிந்து கொண்டிருக்கிறார். ஒரே காலத்தில் பல்வேறு விதமான படைப்பிலக்கிய வடிவம் நிகழுமென்பது அவரின் இம்முடிவுக்கு அடிப்படையாக அமைந்துள்ளதென்பதையும் அறிகிறோம்.

இத்தகைய புரிதலில் ஏற்பதற்கும் இடம் தரும் வகையில் இக்கால படைப்பிலக்கியத்தில் பல்வேறு வடிவங்கள் (இக்கால குறுநாவல், புதினம், வரலாற்றுப் புதினம், புதுக்கவிதை, வசனக்கவிதை, ஹக்கூ, லிமரிக் சென்ரியு, கட்டுரை) மெய்ப்பிக்கின்றன. ஒருபுறம் இவ்வாறு சமாதானம் அடைந்தாலும் மறுபுறம் சங்க இலக்கியப் பாடுபொருள் மரபிற்கும், இனக்குழு மரபிற்கும் சமுதாய பழக்கவழக்க நெறிமுறைகள் சார்ந்த இயங்குநிலை மரபிற்கும் அதே சமகாலத்தில் நீதி இலக்கியத்தின் தோற்று வாயிலாகக் கொள்ளப்படும் திருக்குறள் மரபிற்கும் இருவேறு நிலை நிலவுவதையும் காண்கிறோம். திருக்குறளுக்குப் பின் தோன்றியதாக ஏற்க முடிந்த சிலப்பதிகாரமும் மணிமேகலையும், சங்ககால இனக்குழு சமுதாயத்திலிருந்து அதே சங்க கால மரபின் மற்றொரு வடிவமான ஒரே மயமாக்கப்பட்டதோர் வளர்ச்சியடைந்த சமுதாய வழக்குகளை முன் வைக்கின்றன. சங்க இலக்கியப் பாடல்களின் அகலத்தைக் கொண்டு மொத்தமாய் எண்ணிப்பார்க்கையில் ஒரே மயமாதலும் அரசமைப்பு மரபும் தென்படுவதைப்போல இனக்குழு மரபும், செய்யுளைப் புரிந்து கொள்ள புலவர்கள் திணைக் கோட்பாட்டிற்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கும் முறைமையும் இருந்துள்ளதையும் காண்கிறோம். சங்க இலக்கியத்தில் காணக் கிடைக்கும் நீண்ட நெடிய சமூக அமைப்பு அப்பாடல்கள் அனைத்தும் சமகாலத்தில் தோன்றியிருக்காதென்ற எண்ணத்தைத் தோற்றி வைக்கின்றன. எனினும் அப்பாடல்களைத் தொகை என்றும் பாட்டு என்றும் தொகுத்தளித்திருக்கும் முறையின் அடிப்படையில் ஒருமித்த கருத்தோட்டத்தினை ஆதாரமாகக் கொண்டே அச்சங்ககால சமுதாயம் இயற்றியுள்ளதையும் உணரமுடிகிறது. இவ்விடத்தில் மிக முக்கியமான

கேள்வி யாதெனில் இவ்விலக்கியங்கள் தொகுக்கப்பட்ட காலம் என்ன என்பதும் 'பாட்டும் தொகையும்' என்கின்ற வழங்கின் மூலம் எங்கிருக்கிறது என்ற வினாவும் ஆகும்.

உ.வே.சா. 'தமது பிற்கால தமிழும் சங்க காலத்தமிழும்' என்னும் சொற்பொழிவினை **1927** இல் நிகழ்த்தி அது **1929** இல் நூலாக்கம் பெற்றதை முன்பே குறிப்பிட்டோம். இங்கு மீண்டும் அதனை நினைவு கூறுவதற்குக் காரணம், **1930**இல் கா.சு.பிள்ளை தன் இலக்கிய வரலாறை எழுதுகையில் உ.வே.சாமிநாதையரின் கருத்துகளையும் கட்டாயம் கவனித்திருப்பார். எனவே தான் பெரும்பாலும் ஒத்துப்போகுமளவிற்கு சங்க கால இலக்கியங்களை வரிசைப் படுத்தியிருக்கிறார். எனினும், உ.வே.சாமிநாதையர் கூறாத சில வரலாற்று தரவுகளை எடுத்துக் காட்டி சங்க கால நூல்களை வரையறைப்படுத்துகின்றார். அதாவது சங்க இலக்கிய காலத்தை ஓர் வரையறைக்குள் கொண்டுவர முயலும் கா.சு.பிள்ளை, சங்கம் என்று ஒன்று இருந்ததா என்ற கேள்விகளை எழுப்பி நம்ப மறுத்தவர்களின் கருத்துக்களை ஏற்க மறுத்திருப்பதோடு சங்கம் இருந்ததை முழுமனதோடு ஏற்றுமிருக்கிறார். இவ்வாதத்திற்கு சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய நூல்களில் கையாளப்பட்டுள்ள சங்கம் பற்றிய குறிப்புகளை எடுத்துத் தருகிறார். இறையனார் களவியல் உரையில் விளக்கப்பட்டுள்ள சங்க காலம் குறித்த செய்திகளை எடுத்தாண்டு அக்காலப் புரிதலுக்கு அடிப்படையாகச் சோதிட முறையைக் கையாண்டிருப்பதைக் கீழ்வரும் கூற்றால் தெரியமுடிகிறது.

> முச்சங்களுக்கும் களவியலுரையில், கூறப்பட்டிருக்கும் கால அளவு சோதிவட்டக் கணக்கு என்பதில் வைத்துத் தீர்மானிக்கப்பட்டதாகும். அக்கணக்கு யாதெனில் கூறுதும், கதிரவனோடு ஒரே நேரத்தில் கீழ்த்திசையில் சோதி என்கின்ற விண்மீன் ஆயிரத்து நானூற்றியென் பதாண்டுகளுக்கொருமுறை தோன்றுமென்று வான நூலார் கூறுகின்றார்கள். அச்சோதி விண்மீனை "Sirius" என்று ஆங்கிலத்தில் கூறுவர்; **1480** என்ற கணக்கு ஒரு மாதத்திற்கு **30** நாள் என்ற சந்திர மானத்தின் படியாகும். சூரியனை வைத்துக் கணிக்கின்ற கால முறைப்படி (சௌரபாண்படி) அது **1460** க்கு ஒரு முறையாகும். களவியலுரைகாரரும் சந்திர மானப்படியே சோதி வட்டத்தின் ஆண்டுகளைக் கணித்து, சோதிவட்டக் கணக்கின்படி முச்சங்க காலங்களைக் கணக்கிட்டுரைத்தார். முதற் சங்கம் இருந்த காலம் **4440** என்பது மூன்று சோதிவட்டமாகும்.

> இரண்டாவது சங்கம் நிலவியகாலம் 2½ சோதி வட்டமாகும். மூன்றாவது சங்கம் நிலவிய காலம் 1¼ சோதி வட்டமாகும். இச்சோதி வட்டக் கணக்குப் பண்டைத் தமிழருக்கும் எகிப்தியர்களுக்கும் வழக்கிலிருந்தது.
>
> அக்காலத்து மன்னர் நீடித்த ஆயுள் உடையராயிருந்தனரென்று கோடல் தவறாயிராது. ஆதலால் இச்செய்திகள் புனைந்துரையாகக் கருத வேண்டியதில்லை.
>
> (மேலது;43)

என்று விளக்கி தருகின்றார். இதில் முதற் சங்கத்திற்கு மூன்று சோதி வட்டம் என்ற விதத்தில் 4440 ஆண்டுகள் என்று குறித்திருப்பதும் அதன் பிறகு இரண்டாவது சங்கம் 2½ சோதிவட்டமென்றும் மூன்றாவது சங்கம் நிலவிய காலம் 1¼ சோதிவட்டமென்றும் கூறி அக்காலத்து மக்கள் நீடித்த ஆயுளைவுடையவர்களாக இருந்திருப்பார்கள் என்பதை நம்பவும் செய்கிறார். இக்கருத்து இயல்பான வாழ்வியலுக்கு ஏற்புடையதாக இருக்க வாய்ப்பில்லை. எனினும் சங்கம் வைத்து தமிழாராய்ந்து படைப்பிலக்கியங்களை அவை முன்னர் அரங்கேற்றியிருப்பார்களென்பதில் ஐயமில்லை. கடல்கோள் ஏற்பட்டு தலைச்சங்கம் இடம் மாறி அமைக்கப்பட்டு இடைச் சங்கமானதும், மீண்டும் ஒருமுறை கடல்கோள் ஏற்பட்டு இடைச் சங்கம் இடம் மாறி, கடைச்சங்கமானதும் ஏற்கத் தக்கதாகவேயிருக்கின்றன.

சங்ககாலத்தின் ஆண்டுகள் புனைவு கலக்காதவை என்று நம்பும் கா.சு.பிள்ளை, இறையனார் களவியலுரைக் கூறும் மற்றுமொரு இயல்புக்கு மீறிய கருத்தையும் ஏற்றுக் கொள்கிறார். விரிசடை என்னும் கடவுளும் குமரவேல் என்னும் கடவுளும் தலைச்சங்கத்தில் புலவர்களாய் வீற்றிருந்து கவிதைகளை இயற்றி அரங்கேற்றினர் என்றுரைப்பதைச் சொல்லவரும் கா.சு.பிள்ளை,

> முதற் சங்கத்தை நிறுவிய முதல் மன்னன் பெயர் காய்சின வழுதியென்றும் இறுதி மன்னன் பெயர் கடுங்கோன் என்றும் கூறப்பட்டுள்ளன. சங்க மிருந்தார் ஐந்நூற்று நாற்பத் தொன்பதின்மர். ஆனால், அவர் யாவரும் ஒரே காலத்தவரென்று கூற முடியாது. அவருள் விரிசடைக் கடவுளும் குமரவேளும் சேர்க்கப்பட்டிருப்பதை நோக்குமிடத்து அக்கடவுளர் மக்களுடன் ஒருங்கிருந்து தமிழாராய்ந்திருத்தல் கூடுமா வென்கிற ஐயம் நிகழ்ற்பாலதே. புராணத்தின்படி இவர்களே, சூரன் முதலியோர் திகழ்ந்த காலத்திலே, முறையே முப்புரமெரித்தும் குன்ற மெறித்தும்

> மன்னுயிர்களை உய்யக் கொண்டரைதான், அக்கடவுளர் தம்மால் அன்புரைத்த அடியார்கட்குத் தோன்றியருளி மெய்யறிவு, கலை ஞானம் முதலியவற்றை நல்கியிருத்தல் கூடுமேயன்றி, அவர்களே மக்களைப் போலச் சங்க மிருந்து தமிழாராய்ந்தாரென்று கொள்ளுதல் பொருந்துவதன்று.
>
> (மேலது;44)

என்று கூறும் கா.சு.பிள்ளை புலவர்களோடு புலவர்களாய் வீற்றிருந்திருக்க வாய்ப்பில்லை, புலவர்களுக்குத் தலைமைப் பூண்டு அறிவை விரிவு செய்ய செயல்பட்டிருப்பார்களென்பதில் ஐயமில்லை என்று ஏற்கிறார். கடவுளர்கள் பாண்டியர் அவையில் வந்து தமிழ்ப்புலவர்களுக்குத் தலைமையேற்றனர் என்பது இவரின் நம்பிக்கையாக இருந்ததைக் கீழ்வரும் கூற்று மேலும் மெய்ப்பிக்கிறது.

> சிவபெருமான் மிகப் பழமையான காலத்தே நான்மறை இயற்றுவித்த பின் மகேந்திர வெற்பினில் அகத்தியர் முதலிய ஐம் முனிவர்க்கும் அறிவு நூலாகிய ஆகமங்களை அறிவுறுத்தினார். “மற்றவை தம்மை மகேந்திரர்திருந்து உற்ற ஐம்முகங்களாற் பணித்தருளியும்” என்ற மணிவாசகத்தை நோக்க, அப்பரம்பொருள் குருந்த மரத்தடியில் மணிவாசனாருக்கு அறிவுறுத்த (ஞானஉபதேசம் செய்ய) எழுந்தருளியிருப்பது அடியார் குலத்திற்குத் தலைமை பூண்டு திகழ்ந்தனரென்று தெரிகின்றோம். அவ்வாறே தலைச் சங்கம் தொடங்கிய காலத்தும் விரிசடைக் கடவுளும் முருக வேளும் தக்க அறிஞர்க்குத் தோன்றியருளித் தமிழறிவினை நல்கியிருத்தல் கூடும். அகத்தியனார் இருவரிடமும் தமிழறிவு பெற்றாரென்று புராணம் கூறுகின்றது. அவரும் அவர் போன்ற பெரியாரும் முதற் கழகத்தில் உறுப்பினராயிருந்திருத்தல் கூடும்.
>
> (மேலது;45)

என்று கூறுவதோடு வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும் என்ற தொல்காப்பிய சூத்திர வரிகளையும் “ஆலடைந்த நீழன் மேவியருமரை சொன்ன தென்னே” என்ற சம்பந்தர் தேவாரத்தையும் “அறம் பொருளின்பம் வீடாறங்க வேதம் தெரித்தானை” என்ற அப்பர் வரிகளையும் மேற்கோள்களாய் எடுத்தாண்டு கடவுளர்கள் சாமான்ய மனித பிறவிகளுக்குக் காட்சி தருவார்கள். புலவர்களுக்குத் தலைமையேற்று மொழியும் அதனால் விளங்கப் பெரும் அறிவையும் தருவார்கள் என்று ஆதாரமாக முன் வைக்கிறார். கா.சு.பிள்ளையின் இந்த நம்பிக்கைக்கு முழுக்க முழக்க காரணமாக இருந்திருப்பது தேவாரம்,

திருவாசகம் என்னும் பக்தி பனுவல்களும் அவற்றுள் காணக் கிடைக்கும் கடவுள் தன்மை கோட்பாடுகளும் என்பது தெரியவருகிறது. இக்கருத்தை ஏற்பதா? மறுப்பதா? என்றால், ஏற்கவும் மறுக்கவுமான இடமாக இவையிருப்பதாகப் புரிந்துகொள்ளலாம். அதாவது, புராண இதிகாச நம்பிக்கை மேலாங்கியிருந்த காலத்தில் அத்தன்மைகளை முன்னிருத்தி வரலாற்றினைக் கட்டமைக்கும் ஒரு சூழல் நிலவிய கட்டத்தில் இறையனார் அகப்பொருளுரைக்கு நக்கீரரால் உரையெழுதப்பட்டிருக்கிறது. அவர் காலத்தில் தான் இத்தகைய சிந்தனைகள் தோன்றி ஒரு உருவமாக எழுகின்றதாயென்றால், சங்க காலத்திற்கு முன்பிருந்தே புராணகளும் இதிகாச வேதங்களும் இந்தியா முழுவதும் நிலவி வந்திருப்பதைக் காண்கின்றோம். எனவே தான் இராமாயணக் கதையும் மகாபாரதக் கதையும் மிகவும் தொன்மை வாய்ந்த கதைகளாக விளங்கி சங்க இலக்கியத்தின் சில பாடல்களிலும் குறிக்கப்பட்டுள்ளன. இராமாயண மகாபாரதக் கதைகள் தம் கற்பனைக்கு எட்டிய அளவு கதைகளைப் புனைந்துள்ள தன்மையினையும் காண்கின்றோம். இத்தகைய கற்பனை மரபு சார்ந்த புனைவுகளைக் கிரேக்கத்தின் தொன்மை இலக்கியங்களிலும் மிகுதியாகக் காணப்படுவதை அறிகிறோம். இதிகாசப் புராணங்களைச் சார்ந்தும் அதிலுள்ள கற்பனைகளை ஏற்றும் தத்தம் வரையரையைக் கட்டமைத்திருக்கும் இலக்கிய வரலாறுகள், மொழித் தோன்றிய வரலாற்றினை உருவாக்கியிருப்பதைக் காணும்பொழுது இத்தகைய அதீத கற்பனைச் சார்ந்து படைக்கப்பட்டிருப்பது இயல்பானதாகவே கொள்ள வேண்டியிருக்கிறது. அத்தோடு, இக்கற்பனைப் புனைவுகளுக்கு இடம் தரும் அடிப்படையாக எல்லா இதிகாச, புராண, கதை, வரலாற்று உருவாக்கங்களிலும் உண்மை தன்மை நிலவியிருக்கும் என்பதும் உண்மை. இந்த உணர்தலின் அடிப்படையில் ஒரு புறம் ஏற்கவும் மறுபுறம் கற்பனைகளை இனம் கண்டறிந்த மறுக்கவுமான இடமாக இருக்கிறது. எவ்வாறெனின் அப்பருக்கும், ஞானசம்பந்தருக்கும், மாணிக்க வாசகருக்கும் கடவுளே நேரில் வந்து காட்சியளித்ததும், ஞானப்பால் ஊட்டியதும் உண்மையாவென்றால், அவைகள் அவரவர்களின் மன ஈடுபாட்டிற்கு ஏற்பட்டதோர் உண்மைப் போன்றதொரு உணர்வுநிலை. சான்றாக, ஆண்டால், கனாக்கண்டேன் தோழிநான் என்று உரைக்கவில்லையென்றால் எல்லாம் உண்மை என்று, அதாவது பந்தங்கீழ் இறைவன் வந்து கைத்தலம் பற்றிய தெல்லாம் நடந்த நிகழ்வாக இன்றுவரையிலும் நம்பிக் கொண்டிருப்பார்கள். எனவே, தாம் மனத்தால் இயல்பை மீறி ஈடுபாட்டால் உணர்ந்தவைகளையே இறைவன் வந்ததாகவும், காட்சியினால் பெற்றதாகவும் கூறி பாடல் புனைவதற்குக் காரணமாக இருந்திருக்கிறது.

இதனைக் கடவுள் நம்பிக்கையில் பிடிப்போடு இருப்பவர்கள் உண்மையென்று போற்றி கொண்டாடுவதும் இயல்பான நிலைக்கு ஒத்துவராதென்று கூறுபவர்கள் அதிலிருக்கும் உண்மையும் புனைவும் பிரித்தறிவதும் நிகழ்ந்த வண்ணமிருப்பதைக் காண்கிறோம். மேலும், சங்க காலம் குறித்த வரையறையை நிகழ்ந்த முயலும் கா.சு. பிள்ளை,

> தலைச்சங்க காலத்தவராக இறையனாரகப் பொருளுரையுள் முரஞ்சியூர் முடிநாகராயர் என்பார் குறிக்கப்பட்டுள்ளார். பாரதப் போரின் பெருஞ்சோறு வழங்கிய உதியஞ் சேரலாதனை முடி நாகராயர் பாடிய பாட்டொன்றுள்ளது. அவர் தலைச்சங்கத்தைச் சார்ந்தவரெனின் தலைச்சங்கம் பாரத காலத்திற்குக் சற்று முன்பு என்று கருதக் கூடும். பாரத காலம் கி.மு.பன்னிரெண்டாம் நூற்றாண்டினதென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றார்கள்.

(மேலது;46)

என்று கூறி பாரதப் போர்க்குறித்து புறநானூற்றுப் பாடலில் இடம் பெரும் குறிப்பினை வைத்து பாரத காலத்தில் எழுதப்பட்டதாக முரஞ்சியூர் முடிநாகராயர் பாடலை ஏற்கின்றார். பாரத காலம் கண்டறிந்ததன் மூலமாக இச்சங்கப் பாடலின் காலம் அறிந்து கொள்ள முடியும் என்பது அவரின் ஆய்வாக இருந்திருப்பதைக் காண்கின்றோம். இக்கருத்தினை அவர் நன்கு உறுதிபடுத்திக் கொள்வதற்கு வி.கனகசபைப் பிள்ளையின் 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் என்ற நூலில் குறித்துள்ள பாரத காலம் குறித்தக் குறிப்பினைக் கீழ்வருமாறு எடுத்தாண்டுள்ளார்.

> உதயணன் கதையினாலே அவன் பாண்டவர் மரபிலே இருபதாவது தலைமுறைக்கு அரசாண்டவன் என்று தெரிகிறது. உதயணன் கி.மு.ஏழாவது நூற்றாண்டில் அரசாண்டாதாகத் திரு.வி.கனகசபைப் பிள்ளையவர்கள் கூறுவதால், பாண்டவர் காலம் கி.மு.பன்னிரண்டாம் நூற்றாண்டுக் டென்று கருத வேண்டும்.

(மேலது;46)

என்று சுட்டி இக்கருத்தினை மறுத்துரைக்கும் சோதிட முறையை நினைவுறுத்துவதோடு. 'செந்தமிழ்' முதல் இதழில் ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை என்பவர் எழுதிய கட்டுரையின் சாரத்தையும் எடுத்தாண்டு அதனை மறுப்பான் உளரென்று முடித்து, எவ்வாறாயினும் பாண்டவர் காலம் கி.மு.12 நூற்றாண்டுக்குப் பின்னில்லை என்று உறுதிபட நிற்கின்றார். இங்கு நாம் விளங்கிக் கொள்ள வேண்டியது பாரத காலத்திலிருந்து உதியஞ் சேரலாதனைப் பாடிய முடிநாகராயரைக் களவியலுரைக் குறிக்கின்றது.

அவ்வாறெனில் இப்பாடல் எழுதப்பட்ட காலத்தில் தலைச் சங்கமிருந்த இடம் எதுவாக இருந்திருக்கும் என்ற வினா எழுகிறது. இது குறித்துக் கூறவரும் கா.சு.பிள்ளை, இராமாயணக் கதையில் குறிக்கப் பெரும் பாண்டியர் குறித்தக் குறிப்பினை எடுத்துக் காட்டி அதன் காலம் குறித்தப் புரிதலுக்குச் சென்று வான்மீக இராமாயண காலம் கி.மு.7 ஆம் நூற்றாண்டு என்று வடமொழி இலக்கிய வரலாற்றாசிரியர்கள் கூறும் கருத்து முன்னுக்குப் பின் முரணானது என்றுரைத்து இராமாயணக் கதை பாரதகதைக்கு முற்பட்டதென்று கூறுகின்றார். மேலும், தலைச் சங்கமிருந்த தென்மதுரையைக் கடல் உள்வாங்கிக் கொண்டது எக்காலம் என்ற வினாவையும் எழுப்பி,

> தலைச்சங்கம் கடல்கோட்டு முன்னிருந்த நாட்டில் நிலவியதென்பதும் கடல்கோள் நிகழ்ந்த பின் கபாடபுரம் என்னுமிடத்தில் இடைச்சங்க மிருந்ததென்றும் அதற்குப் பின்னும் கடல்கோள் நிகழ்ந்த கடைசங்கம் நிறுவப்பட்டதென்பதும் களவியலுரை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களால் வெளிப்படும். அதனை மறுப்பதற்குப் போதிய சான்று ஒன்றுமில்லை.

(மேலது;47)

என்று முச்சங்கங்களிருந்த இடத்தை நிறுவுகின்றார். எனினும் உதியஞ் சேரலாதனைப் பாடிய முடிநாகராயர் பாரத காலத்தைச் சார்ந்தவரின் வேறொன்றின் என்ற குறிப்பையும் தருகின்றார். அதனைக் கீழ்வருமாறு பெறுவதை நோக்குவோம்.

> ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை யென்பார் செந்தமிழில் வெளியிட்ட "ஈழமும் தமிழ்ச்சங்கமும்" என்னுமொரு கட்டுரையின் கி.மு.ஐந்நூற்று நாற்பத்து மூன்றாவது ஆண்டின் விசயன் என்னும் அரசன்சிங்கள அரசினை நிலை பெறுத்துவதற்கு முன், தமிழரது அரசு இலங்கையில் இருந்ததென்றும் ஈழநாட்டு வேந்தர்க்கு முடிநாகரென்று பேர் இருந்ததென்றும், அந்நாட்டிற்கு நாகத்தீவு என்ற பேர் வழங்கியதென்றும், நாகர்கோயில், முசிறி என்ற பெயர்கள் ஈழநாட்டில் விளங்கின வென்றும் சோரவன் மணந்த நாககன்னிகை அந்நாட்டு அரசன் மகளென்றும், இளநாகன் என்னும் ஆண் கி.பி.38ல் அரசாண்டனனென்றும் கூறுதலாக, உதியஞ் சேரலாதனன் பாடிய முடிநாகராயர் ஈழ மன்னர் மரபினராகியிருத்தல் கூடுமென்று கருதுவதற்கு இடமுண்டு.

(மேலது;48)

என்று கூறுகின்றார். இந்த முடிநாகராயர் இராவணன் குலத்திலிருந்து வந்தவரென்று கூறி முடிக்கின்றார். இதற்கு முன் பாரதகாலம் குறித்துக்

கூறுகையில் கி.மு.12 ஆம் நூற்றாண்டு என்று கூறினர். பின்னர் இம்முடிநாகராயர் இலங்கை மரபில் வந்தவனென்ற கருத்தையும் தருகின்றார். இவ்விருவேறு கருத்துக்களையும் தந்துவிட்டுப் பின்பு கடல்கோள் நிகழ்ந்த காலம் குறித்து ஸ்காட் எலியட் என்பவர் தரும் கருத்திற்குத் தாவுகின்றார். பின்னர் மதுரைக் காஞ்சி (761–3) பாடலையும் புறநானூற்றின் ஒரு பெரிய பொழுதில் அப்பாடல்களில் தரும் பஃறுளி ஆறு கடல்கோளுக்கு முன்னிருந்த சான்றுகளாக விளங்குகின்றன என்று நிறுவி; கடைச்சங்கஞ் தொடங்கிய காலமென்பது பாரதம் நிலவிய கி.மு.12ஆம் நூற்றாண்டென்று நிறைவு கூட்டுகின்றார். அதாவது,

> கடைச்சங்கத்தார் காலம் மூன்றாவது நூற்றாண்டில் முடிவு பெற்றதாக விளங்கும். அதற்கு முன் ஆயிரத்தெண்ணூறு ஆண்டு கடைச்சங்கம் நிலவியதாகக் களவியலுரைக் கூறுவதால் கி.மு.12 வது அல்லது 15வது நூற்றாண்டிலேயே கடைச்சங்கம் தொடங்கியிருத்தல் வேண்டும். திருவிளையாடற் புராணத்திற் கூறுகின்ற முறைப்படி பாண்டியர் 74 பேர் திருவாதலூரடிகள் காலத்திற்கு முன்னே அரசாண்டதாகக் கேட்கப்படுவதால், அந்நூலும் போந்த முதற்பாண்டிய மன்னர் காலமும் கி.மு.12வது நூற்றாண்டிற்கு முற்பட்டதென்பது போதரும், மணபூர் என்பதே பாரதத்துள்ளுங் கேட்கப்படுவதால், கடைச்சங்கத் தொடங்கிய காலமே பாரத காலமாகக் கருதலாம். அக்காலத்திற்கு முன்னே 3700 ஆண்டு இடைச் சங்கமிருந்தது. ஆகவே ஏறக்குறைய கி.மு.5000 ஆண்டுகட்கு முன்னே தலைச்சங்கம் நிலவியிருத்தல் வேண்டும். சுமார் கி.மு.3000 ஆண்டுகட்குமுன் நிகழ்ந்த ஒரு வெள்ளாற்றின் பின்னேயே இலங்கையானது தமிழ் நாட்டினின்றும் பிரிவுபட்டதென்ப அங்ஙனமாயின், அவ்விலங்கையை யாண்ட பெருமன்னன் இராவணனாகலின், இராமாயணம் கி.மு.3500 ஆண்டுகட்குப் பின்னும், கி.மு.1300 ஆண்டுகட்கு முன்னும் நடைபெற்றிருத்தல் வேண்டும். தலைச்சங்க காலத்து நிலவிய நூல்களுள் ஒரு சிறு நூலின் பகுதியே இப்போது வெளியாகியிருக்கின்றது. அது செங்கோன்றரைச் செலவு என்பது அதற்குப் பின் தோன்றிய நூல்களின் தொல்காப்பிய மொன்றே முதன்மையானது. தலைச் சங்கத்தார் காலத்ததாகக் கூறப்படும் அகத்தியம் இப்போது கிடைக்கப் பெறவில்லை.
>
> (மேலது;51)

இவ்வாறு மூன்று சங்கங்களின் காலங்களையும் தெளிவாக வரையறுத்துக் கொள்கிறார். இதில் கடைச்சங்க காலமாக கி.மு.12 அல்லது அதற்கும்

மூன்று நூற்றாண்டுக்கு முற்பட்டதென்பது அதன் தொடக்கமாகவும் கி.பி.3ஆம் நூற்றாண்டு அதன் முடிவாகவும் கொண்டு தற்போது சங்க நூல்களாகக் கிடைக்கப்பெற்றிருப்பவற்றை வரிசைப்படுத்தியிருப்பதைப் பார்க்கிறோம். இக்கால வரையறை, தெளிந்த முடிவா அல்லது இதிலிருந்து மாறுபட்ட அறிஞர்கள் சங்கமென்பதே ஒன்று தான் என்பதையும் முச்சங்கமில்லையென்றும் வாதித்திருக்கும் வாதங்களும் அவர்களின் கால வரையறைக் குறித்தப் புரிதல்களையும் கவனிக்கவேண்டியிருக்கிறது.

உ.வே.சா வரையறை செய்திருக்கும் நூல்களும் அதிலிருந்து ஒத்துப்போய் கா.சு.பிள்ளை ஏற்றிருக்கும் நூல்களும் பெரும்பாலும் காலவரையறையின் அடிப்படையில் நோக்கும் பொழுது பொருத்தமாகவேயிருக்கிறது. ஆயினும் இன்றைக்கு சங்க இலக்கியம் என்றாலே பத்துப்பாட்டையும் எட்டுத் தொகையும் குறிப்பிடவும் அதனை மட்டும் சங்க காலத்து இலக்கியங்களாக ஏற்றுக் கொள்ளவும் காரணமாயிருந்த தமிழறிஞர்கள் யாவர்? அவர்கள் இவ்விருவகை நூல்களையும் அதாவது இப்பதினெட்டு நூல்களையும் சங்க கால இலக்கியங்களாக அடையாளம் கண்டு கொண்டதற்கான புரிதல் எவ்வாறு இருந்தது, இத்தகைய முடிவிற்கு காரணமான அறிஞர்கள் யாவர் இத்தகைய சங்க இலக்கிய நூல்களினை வரையறை செய்வதில் ஈடுபட்டிருந்த அறிஞர்களையும் அவர்களின் நூல்களையும் கண்டோம்.

தமிழ் ஆராய்ச்சி என்கின்ற துறை பெருமளவு வேகத்தோடு தொடங்கப்பெற்றதும் செயல்பட்டதுமாகத் தெரியவரும் காலம் 20 ஆம் நூற்றாண்டின் தொடக்க காலமாகும். மிகச் சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் 1902 க்குப் பிறகே ஆகும். இதற்குக் காரணம் யாதெனில், இக்காலக்கட்டத்தில் பெரும்பாலான சங்க இலக்கிய நூல்கள் பதிப்பிக்கப்பட்டுவிட்டதேயாகும். இதனைக் குறிப்பிடக் காரணம், பதிப்பினைத் ஒட்டியே ஆய்வு என்கிற துறை தமிழறிஞர்களுள் பெரும் கவனத்திற்குறியதாக மாறுகிறது. இவர்களுக்கு முன்பாகவே தமிழ் இலக்கியங்கள் குறித்த ஆய்வு தொடங்கப்பட்டு விட்டிருப்பினும் இக்காலக் கட்டத்திலிந்தே பெரிதும் எழுச்சியுறத் தொடங்கியிருக்கிறதென்பதையும் மேற்கண்ட ஆய்வின் மூலம் உறுதிப்பட்டிருப்பதைப் பார்த்தோம்.

1881 இல் சி வை. தாமோதரம்பிள்ளை வீரசோழியத்தைப் பதிப்பிப்பதற்கு முன்பாகத் தமிழ் இலக்கியங்களின் வரலாறு குறித்தும், அவ்விலக்கியங்களின் காலம் குறித்தும் தமிழ் ஆய்வுலகத்திடம் எவ்விதமான பார்வையோ, அத்தகைய பார்வையை நோக்கிய மெனக்கிடலோ இருந்ததாகத் தெரியவில்லை. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A comparative Grammar of the Dravidan languages 1856) என்னும் நூலை எழுதும் கால்டுவெல் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு வரை மதுரை தமிழ் சங்கக் காலமாக குறித்திருப்பினும் சி.வை. தா.வைப்போல் சரித்திரத்திற்கு முந்தைய காலம் தொடங்கி கி.மு. 10 ம் நூற்றாண்டிலிருந்து சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுகின்றன என்ற சிந்தனையைச் செலுத்தினாரில்லை. கால்டு வெல் தமிழ் இலக்கியங்களின் தொன்மையே கி.பி. 8 ஆம் நூற்றாண்டென்ற முடிவிலிருந்திருப்பதைப் பார்க்கிறோம். எனவே சி.வை. தாமோரம் பிள்ளையின் ஆய்வே தமிழ் இலக்கியங்களின் வரையறை குறித்த ஆய்விற்கும் அவ்விலக்கியங்களின் காலம் பற்றிய ஆய்விற்கும் இட்டுச் செல்லும் தொடக்க முயற்சியாகத் தெரியவருகிறது. சி.வை. தாமோதரம் பிள்ளை தமக்கிருந்த பரவலான வாசிப்பு அனுபவத்தின் அடிப்படையாகவும், சுவடிகளின் மேல் கொண்ட ஈடுபாட்டின் அடிப்படையிலும் தமிழ் இலக்கியங்களின் வரலாற்றினைக் கட்டமைத்திருக்கிறார்.

இவற்றில் கவனிக்கவேண்டியவை யாதெனில் 1881க்குள் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் எவை என்பனவாகும். இக்காலத்திற்குள் பதிப்பிக்கப்பெற்ற நூல்களாக 1812இல் ஞானப்பிரகாசனால் திருக்குறளும் நாலடியாரும், முகவை இராமாநுசக் கவிராயரால் 1844இல் பதிப்பிக்கப்பட்ட இனியவை நாற்பதும் 1848இல் மழவை மகாலிங்கையரால் பதிப்பிக்கப்பெற்ற தொல்காப்பியமும், 1856இல் ஆறுமுகநாவலரால் பதிப்பிக்கப்படும் திருமுருகாற்றுப்படையும், தில்லையூர் சந்திரசேகர கவிராஜப் பண்டிதரால் 1857இல் பதிப்பிக்கப்படும் ஆசாரக்கோவையும், 1868இல் நல்லூர் சதாசிவப் பிள்ளையால் பதிப்பிக்கப்படும் திரிகடுகமும் தி.ஈ. ஸ்ரீநிவாச ராகவாசாரியரால் 1872இல் பதிப்பிக்கப்படும் நான்மணிக் கடிகையும், 1874இல் பழமொழியை சோடசாவதான சுப்புராய செட்டியாரும், 1875இல் சண்முகசுந்தர முதலியாரால் பதிப்பிக்கப்படும் சிறுபஞ்சமூலம் களவழி நாற்பதும், இதே ஆண்டில்

தி. சபாபதிபிள்ளையால் பதிப்பிக்கப்படும் கார் நாற்பதும், 1881இல் சண்முக சுந்தர முதலியாரால் பதிப்பிக்கப்படும் இன்னா நாற்பதும் என்பனவாகும்.

மேற்காட்டப்பட்டவைகளில் தொல்காப்பியம் திருமுருகாற்றுப்படை தவிர்த்த மற்ற அனைத்தும் அற இலக்கியங்கள் என்பதை அறிவோம். மேற்கண்ட நூல்கள் மட்டுமே பதிப்பிக்கப்பட்டிருந்ததொரு காலத்தில் வீரசோழியத்தைப் பதிப்பித்த (1881இல்) சி. வை. தாமோதரம் பிள்ளை அதன் முன்னுரையில் அபோதகாலம், அக்ஷரகாலம், இலக்கண காலம்., சமுதாய காலம், அனாதர காலம், சமண காலம், இதிகாச காலம், ஆதிர காலம் என்று வகை தொகைப் படுத்தியிருக்கிறார். தமிழின் தொன்மை இலக்கியங்கள் வெளிப்படக் காரணமாக இருந்த முச்சங்கங்கள் குறித்த தகவலைத் தரும் இறையனார் அகப்பொருளுரை 1883 இல் தான் பதிப்பிக்கப்படுகிறது, ஆயினும் இறையனார் அகப்பொருளுரை தரும் செய்தியின் அடிப்படையிலும் சங்ககால தொன்மை குறித்தும் அதன் இலக்கியங்கள் குறித்தும் சி.வை.தா. வால் எழுத முடிந்திருக்கிறதென்றால், 1881லேயே இவர் இறையனாரகப் பொருளுரையைக் கற்றிருக்கிறாரென்பது வெளிப்படுகிறது. இந்நூல் வெளிப்பட்டு இத்தகைய நம்பிக்கை முன்னெடுக்கப்படுவது ஒரு புறம் நிகழ, மறுபுறம் அன்றைக்கு சங்க நூல்களாகக் கொள்ளப்படும் திருமுருகாற்றுப்படையை (1857) ஆறுமுகநாவலரும் கலித்தொகையை (1887) சி. வை. தாமோதிரம் பிள்ளையும் பத்துப்பாட்டு (1889) புறநானூறு (1894) ஐங்குறுநூறு (1903) பதிற்றுப்பற்று, பரிபாடல் (1918) முதலிய நூல்களை உ.வே. சா. வும், முதுமொழிக் காஞ்சியை உறையூர் மதுரை நாயக முதலியாரும் மணிமேகலையை (1894) திருமயிலை சண்முக பிள்ளையும் ஐந்திணை ஐம்பது (1903) திணைமாலை நூற்றைம்பது, முத்தொள்ளாயிரம் (1905) அகநானூற்று நித்திலக்கோவைப் பகுதி (1927) முதலிய நூல்களை ரா. இராகவையங்காரும் நற்றிணையை (1915) பின்னத்தூர் நாராயணசாமி ஐயங்காரும் குறுந்தொகை (1915) திருகண்ணபுரத்து சௌரி பெருமாளரங்கனாரும் திணைமொழி ஐம்பதினை (1931) ஸ்ரீ சோமசுந்தர தேசியரும் கைநிலையை (1931) இ.வை. அனந்தராம ஐயரும் பதிப்பிக்கின்றனர்.

இத்தகைய முயற்சிகள் மும்முரமாக ஒரு புறம் நிகழ்ந்து கொண்டிருக்க சங்க கால இலக்கியங்களின் ஆய்வுகளுள் சிலப்பதிகாரத்தின் காலம் பற்றிய ஆய்வு அழுத்தம் பெற்று Tamils Eighteen Hundred Years Ago என்னும் தலைப்பில் வி. கனகசபைப் பிள்ளையால் மெட்ராஸ் ரிவீவ்வில் எழுதப்பட்ட தொடர் ஆய்வு, 1904இல் நூலாக்கம் பெறுகிறது. இந்நூல் தமிழ் இலக்கியங்களில் தொன்மை வாய்ந்த இலக்கியங்களையும் அதன் காலத்தையும் கண்டறிந்து வெளிப்படுத்துவதோடு இன்றுவரையிலும் ஒரு முக்கியமான ஆய்வாகவும் இருந்து வருகிறது.

1902இல் தொடங்கப்பட்ட செந்தமிழ் இதழ், தமிழ்இலக்கியங்கள் குறித்த ஆய்வில் ஈடுபட தொடங்கும் காலத்திற்குள்ளாகவே வி. கனகசபைப்பிள்ளை தமது ஆய்வினை முடித்து வெளிப்படுத்தியிருப்பது கவனத்தில் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இவ்வாய்வு, சேரன் செங்குட்டுவனின் காலத்தைக் கண்டறிந்து அதனை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியங்களின் காலத்தை ஒருவாறு உணரச் செய்கிறது. எனினும் சங்க இலக்கியங்களைத் தனித்தனியாகவும் அவ்விலக்கியங்களைப் பாடிய புலவர்களைப் பற்றியும் அப்பாடல்களுள் குறிக்கப்படும் மன்னர்கள் குறித்தும் ஆராயும் ஆய்வு போக்கு 1904க்கு பிறகே விவேக சிந்தாமணி, விவேக போதினி, செந்தமிழ் போன்ற இதழ்களின் வழி தமிழ் ஆய்வாளர்களால் கவனப்படுத்தப்படுகிறது.

இத்தகைய சூழலில் தான் து. அ. கோபிநாதராவ் 1904இல் செந்தமிழ் இதழின் வழியாகத் தமிழ் மொழியின் தோற்றம் குறித்த மாற்றுச் சிந்தனையை முன்வைக்கிறார். அதாவது, வட இந்திய மன்னனான அசோகன் காலத்து எழுத்துருவிலிருந்தே தமிழ் மொழிக்கான எண்ணுருக்களும் வரி வடிவங்களும் தோன்றியதென்ற முடிவினை வெளிப்படுத்துகின்றார். இந்தக் கருதுகோளுக்கு எதிர்வினையாகத் தமிழ் மொழியும் அதன் இலக்கியங்களும் தொன்மை தன்மைகொண்டதென்ற கருத்தினைத் தொன்ம சான்றுகளின் வழி ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை எடுத்துரைக்கிறார். ஆ. முத்துத்தம்பிப் பிள்ளைக்குப் பதிலுரையாகவும் து.அ. கோபிநாதராவுக்கு ஆதரவாகவும் கோ. வெங்கோபராவ் கட்டுரை ஒன்றை எழுதுகிறார். து.அ. கோபிநாதராவ், இந்தியாவில் கிடைக்கப்பெற்ற கல்வெட்டு எண்ணுருக்களிலேயே தொன்மை மிக்கது அசோகன் காலத்து எண்ணுரு என்பதை மறுத்துரைக்க வரும் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை, அசோகனுக்கும் இருநூறு ஆண்டிற்கு முற்பட்ட சிலாசாசனம் நேபாளத்திற்கு அருகில் கிடைக்கப் பெற்றக் குறிப்பையும் தருகிறார்.

து.அ. கோபிநாதராவ்வின் ஆய்வு வீழ்ந்து போனதற்கான காரணங்களாகப் பின்வருவனவற்றை சுட்டிக்காட்ட முடியும். மணிமேகலை ஒரு பௌத்த காப்பியம் என்பதை அறிவோம். அதன் காலம் சிலப்பதிகாரத்தின் காலமான கி.பி. 2ம்நூற்றாண்டு என்று கருதப்பட்டு வருவதையும் காண்கிறோம். து.அ. கோபிநாதராவ் கருத்துப்படி, அசோகன் காலத்திற்குப் பிறகுதான் பௌத்தமும் எண்ணுருவும் தென்னிந்தியா முழுவதும் பரவலாக்கப்படுகிறது. அசோகனை அடுத்து ஐந்து நூற்றாண்டில் மணிமேகலை தமிழகத்தில் தோன்றுகிறது என்றால் து.அ. கோபிநாதராவ் முன்வைத்த எண்ணுரு குறித்தக்

கருத்தை இவ்விடம் எண்ணிப்பார்க்கத் தோன்றுகிறது. அதாவது, அசோகன் காலத்து எழுத்துருவின் பிரிவுதான் தமிழ் எண்ணுரு எழுத்துரு என்பவர் மணிமேகலை மற்றும் தமிழ் இலக்கியங்களின் காலம் குறித்துக் கருதப்பட்டு வந்த முடிவினைச் சுட்டிக்காட்டி மறுக்கவும் இல்லை, தானும் அவ்விலக்கியங்களின் காலம் குறித்து கருதி வந்தவைகளை எடுத்துரைக்கவுமில்லை. து.அ. கோபிநாதராவின் இவ்வாய்வு முடிவு, அசோகன் எழுத்துரு தமிழகம் வந்த பின்பு புத்தமதம் தமிழகம் வந்ததா? அல்லது புத்தமதம் காலூன்றிய பின்பு எண்ணுருக்கள் வந்தனவா? என்ற கேள்விகளை எழுப்புகின்றன. மேலும் தொல்காப்பியத்தில் எழுத்தின் வரிவடிவம் குறித்து வெளிப்பட்டிருக்கும் சிந்தனையும் கவனத்தில் கொள்ள வேண்டும். தொல்காப்பியத்தின் காலம் கி.மு.6 ஆம் நூற்றாண்டு அல்லது கி.மு.3 ஆம் நூற்றாண்டு என்ற இருவேறு முடிவு நிலவுவதைக் காண்கிறோம். அத்தோடு, அசோகன் காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் என்பதையும் அறிவோம். இந்நூற்றாண்டிற்குள் தமிழில் பற்பல இலக்கியங்கள் எழுதி முடிக்கப்பட்டுவிட்டன என்பதன் விளைவே தொல்காப்பியம் எழ காரணமாகயிருக்கும் என்பதை எண்ணிப்பார்க்கையில் து.அ. கோபிநாதராவின் தமிழின் எண்ணுரு, வரி வடிவம் குறித்த ஆய்வு வலுவிழந்து போவதைக் காண்கிறோம்.

சங்க இலக்கியங்களின் காலம் குறித்த ஆய்வு வரலாற்றிலும் தமிழின் தொன்மை குறித்த நம்பிக்கை வரலாற்றிலும் மேற்கண்ட இடமே மிகவும் கவனிக்க வேண்டிய இடமாக இருக்கிறது. சான்றாக, மேற்காட்டப்பட்ட ஆய்வு முடிவுகளுக்குப் பிறகே, சங்க இலக்கியங்களின் தொன்மை குறித்து அது வரையிலும் கொண்டிருந்த முடிவுகளை மறு விசாரணை செய்யும் போக்கு ஆரம்பமாகிறது.

த. சரவண முத்துப் பிள்ளை, அயோத்தியதாசர் போன்றோர்கள் சங்கம் குறித்து இறையனார் அகப்பொருளுரைத் தரும் கருத்து, 'கட்டுக்கதை' என்றுரைக்கும் சிந்தனை நிகழத் தொடங்குகிறது. மேலும், முச்சங்க வரலாறு குறித்தும் அகத்தியர் வந்து தலைச்சங்கம் நிறுவியதும் சங்கப் புலவர் அவையில் சிவபெருமான், முருகன், உட்பட்ட தெய்வங்கள் இருந்ததுமான தொன்ம நம்பிக்கைகள் கேள்விக்குட்படுத்தப்பட்டன. இதன் வாயிலாக முச்சங்கங்களின் கால நீட்சி கற்பனை கலந்த புனைந்துரையாக உணரப்பட்டதொருபுறமும் சங்க இலக்கியத்தின் பின் எல்லையாகக் கருதப்பட்டு வந்த கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகள் என்ற முடிவும் மறு ஆய்விற்கு உட்படுத்தப்படுகிறது. எடுத்துகாட்டாக, 1915 வரையிலும் மூச்சங்க நம்பிக்கையில் பிடிப்போடு இருந்து தொன்ம நம்பிக்கையில் இயங்கி வந்த மு. இராகவையங்கார் கடைச்சங்கத்தின்

பின்னெல்லை கி.பி ஐந்தாம் நூற்றாண்டு என்று தம் முடிவை மாற்றிக் கொள்கிறார். இத்தகைய மாற்றத்திற்கான காரணங்களை எடுத்துரைக்க முற்படுபவர். சேரன் செங்குட்டுவன் காலம் கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று வி.கனகசபைப் பிள்ளையும், எஸ். கிருஷ்ணசாமி ஐயங்காரும் தரும் முடிவுகளைப் பின்வருமாறு குறித்துக் காட்டி அம்முடிவிலிருந்து தாம் புதிய முடிவுகளைக் கண்டிருப்பதாகக் கூறுகின்றார்.

வி. கனகசபைப் பிள்ளையின் ஆய்வு முடிவிற்கு ஆதாரமாக, இலங்கைச் சரித்திரத்தால் அறியவரும் 'கயவாகு' என்ற மன்னன் கி.பி113–முதல் 135 வரை ஆட்சி புரிந்தவனாகத் தெரியவருவதால் இவன் காலமே நம் சேரன் செங்குட்டுவனின் காலம் என்று அவர் தரும் முடிவை எடுத்துரைத்து, இம்முடிவை முதல் முடிவாகவும் 'செந்தமிழ்' இதழின் நான்காம் தொகுதியில் (பக்கம்–525–27) ஸ்ரீமாந் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் இளங்கோவடிகள் குறித்திருக்கும் மகதநாடாண்ட சாதகர் கரி, என்ற ஆந்திர அரசனின் காலம் மச்சப் புராணத்தில் குறிக்கப்பட்டிருக்கிறபடி கி.பி.77–133 என்று தருவதையும் எடுத்துரைத்து இலங்கை வரலாற்றில் குறிக்கப்படும் கயவாகுவின் காலத்தோடு இம்முடிவு ஒத்திருப்பதைக் சுட்டிக்காட்டுவதோடு இளங்கோவடிகள் தரும் நூற்றவர் கன்னர் பற்றிய வரலாற்றுக் குறிப்போடும் பொருத்திக் காண்கிறார். இத்தகைய சான்றுகளின் அடிப்படையில் தரும் முடிவை எடுத்துக் காட்டும் மு. இராகவையங்கார் தமக்கு மாறுபட்டதோர் தரவுகள் கிடைக்கப் பெற்றிருப்பதாகவும், இம்முடிவுகளிலிருந்து வேறுபட்டதோர் முடிவினைக் கண்டடைய முடிந்திருப்பதாகவும் குறிப்பிடுகிறார்.

'சமீபத்தில் நிகழ்ந்த எமதாராய்ச்சியில் அம் 'முடிந்த' கொள்கையை விரோதித்து நிற்கும் முக்கியமான விஷயங்கள் சில எதிர்ப்படலாயின. இவற்றினின்று, நம் சேரன் மேற்குறித்த காலத்துக்கும் இரண்டு மூன்று நூற்றாண்டு வரை பிற்பட்டவனாகத் தோற்றுகின்றது.' (ப.164) என்று முற்ற முடிவாக கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று கொண்டிருப்பவர்களின் முடிவிலிருந்து மாறுபட்டு சொல்லத்தொடங்குபவர். மேலும், 'கடைச்சங்க காலத்தில் விளங்கிய புலவர்களுள், கபிலர், பரணர், நக்கீரர், மாமூலர், சாத்தனார் முதலியோர் சிறந்தவர்களென்பதை எடுத்துரைத்து அகநானூற்றின் மாமூலனாரின் பாடலைக் கொண்டு தம் ஆய்வைத் தொடங்கும் மு. இராகவையங்கார், 265 ஆம் பாடலில் மாமூலனார் கொடுத்திருக்கும் வரலாற்றுக் குறிப்பை கணக்கில் எடுத்துக்கொண்டு, வி. கனகசபைப்பிள்ளை S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் முடிவுகளிலிருந்து விலகி, தம் ஆய்வு முடிவினைக் கூறுகின்றார். இதற்கு, ''பல்புகழ் நிறைந்த

வெல்போர் நந்தர் சீர்மிகு பாடலின் குழிஇக் கங்கை நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ'' (அகநானூறு–265) என்ற பாடல் வரிகளை எடுத்துக் காட்டி, நந்தர்களுடைய புராதனமாகிய பாடலிபுத்திரத்துள் கங்கை நதி பாய்ந்து அதன் வளங்களை அழித்துப் போன குறிப்பு இம்மாமூலனாரின் பாடலில் கிடைப்பதால் பாடலிபுத்திரம் அழிந்த காலத்தில் மாமூலனார் வாழ்ந்திருக்கிறாரென்பது தெரிய வருவதாகக்கூறி, இவர்காலத்தில் வாழ்ந்தவர்களாகக் கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனார், சாத்தனார் முதலியப் புலவர்களும், சோழன் கரிகாலன், சேரலாதன், கள்வர் கோமான், புல்லி முதலிய அரசர்களும் பாடலிபுத்திரம் அழிந்த காலத்தில் வாழ்ந்தவர்களாக உணர்த்துகின்றார்.

மேற்குறித்துக்காட்டிய எல்லோரும் சம காலத்தவர்களென்றால், பாடலிபுத்திரத்தைக் கங்கைப் பாய்ந்து அழிந்தக் காலத்தையும் அவர்கள் கண்டிருக்க வேண்டுமென்பதோடு அப்பாடலிபுத்திரம் அழிந்த காலமே அவர்களின் காலமாக முடிவுக் கட்டுகின்றார். அவ்வாறு அப்பாடலிபுத்திரம் அழிந்த காலம் யாது என்ற வினாவிற்கு விடைக் கூறவருபவர். 'பழைய பாடலிப்புரமானது, சேரணை நதியின் (Son) வடகரையிலும், கங்கைக்குச் சிறிது தூரத்தும் அமைந்திருந்ததென்றும், 64 வாயில்கள் 54 கோபுரங்களும், சேரணை நதியின் ஜலத்தால் நிரம்பிய அகமும் உடைத்தாதயிருந்ததென்றும் (V.A.Smith's Early History of India, p.119-20) V.A.Smith குறிப்பிட்டிருக்கும் தகவலை அடிக்குறிப்பில் தந்து, சீனஅறிஞன் பாஹியான் அப்பாடலிபுத்திரத்தைக் கண்டுக் கூறிய செய்திகளாக, மௌரிய அரசருள் முதல் மன்னனாகக் குறிக்கப்படுபவனும் சந்திரகுப்தன் என்பவனும் அவனின் பெயரனாகக் குறிக்கப்படும் அசோக சக்கரவர்த்தியும் வீற்றிருந்த காலமான, கி.பி.4ஆம் நூற்றாண்டு வரையிலும் பாடலிபுத்திரத்து அரண்மனை யாதொரு சிதைவுமின்றி இருந்து வந்தது அக்குறிப்பால் கிடைப்பதால், அந்நகரம் கி.பி.4 ஆம் நூற்றாண்டு வரையிலும் எவ்விதமான அழிவிற்கும் உட்படாமல் இருந்துவந்துள்ளதாக முடிவுக்கு வருகிறார். எனவே, இக்காலம் வரையில் மாமூலனார் பிறந்திருக்க மாட்டார் என்ற கருத்தினை வலியுறுத்துவதோடு இவர்காலப் புலவர்களும் மன்னர்களும் தோன்றியிருக்க வாய்ப்பு இல்லை என்று கூறியுள்ளதையும் காணமுடிகிறது.

இதனோடு, கி.பி.4 ஆம் நூற்றாண்டு வரையிலும், பாடலிபுத்திரம் அழியாமலிருந்திருந்ததென்பதை உறுதியாக நம்புவதற்கு போதிய தரவுகள் கிடைப்பதைப் போல் அதற்குப் பிறகு எக்காலத்தில் கங்கை சீற்றம் நிகழ்ந்து அந்நகரம் அழிந்தது என்ற கேள்விக்கு விடை கிடைக்கப் பெறவில்லையென்று குறிப்பிடுகின்றார். ஆயினும், கி.பி.4 ஆம்

நூற்றாண்டிற்குப் பிறகும் கி.பி.7 ஆம் நூற்றாண்டிற்கு முன்பும் அத்தகைய நிகழ்வு நடைப்பெற்றிருக்க வாய்ப்பிருக்கிறது என்று ஊகிப்பவர், அவ்வூகத்திற்குக் காரணங்களாக, சீனதேசத்து அறிஞனான யுவான்–சுவாங் (Hiuen-Tsung) கி.பி.7 ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்து பாடலிபுத்திரத்தைக் கண்டபோது, அவ்விடம் 200, 300 வீடுகளும் அவைகளில் 1000 ஜனங்களுக்கு மிகாமல், வசித்து வந்தார்களென்றும் குறிப்பிட்டுச் சென்றுள்ளதைக் கூறி இதனால் கி.பி.4க்கும் 7க்கும் இடைப்பட்ட காலத்தில் கங்கை சீற்றம் நிகழ்ந்து பாடலிபுத்திரம் அழிவுற்றிருக்குமென்று உறுதி படுத்திக் கொள்கிறார்.

இம்முடிவிற்கு மேலும் வலுசேர்க்கும் விதமாக யவன தூதரான மெகஸ்தனிஸ், சந்திரகுப்தன் காலத்தில் வந்ததற்கான சான்றினை, V.S.Smith'Early History of India (P.120-note) என்ற நூலிலிருந்தும், Civilization in Ancient India (Part I P.217) என்ற நூலிலிருந்தும் பெறப்பபட்டதாக அடிக்குறிப்பில் தந்துள்ளார்.

சீனதேச யாத்திரிகரான பாஹியான் அவ்விடம் வந்து பார்த்தபோது பாடலிபுத்திரத்து அரண்மனையின் பெரிய சுவர்கள் அழியாது இருந்ததையும் கூறி இக்குறிப்பினையும் V.A.Smith's தமது Early History of India என்ற நூலில் இப்பழைய அரண்மனை பாங்கியூர் (Bankipore) பாட்னா (Patna) நகரங்கட்கு இடைப்பட்ட ரயில்வேயின் தென் பாரிசத்து, குமாராஹார் (Kumarahar) கிராமத்தின் வீடுவயல்களில் கீழ்ப் பாஹியான் காலத்திற்குப்பின் புதைவுண்டிருந்ததாகக்கூறி, இவ்வாறு கொள்வதற்கு கி.பி.7ஆம் நூற்றாண்டில் ஹை–யூந்த்ஸாங் என்ற மற்றொரு சீன அறிஞன் வந்து தந்திருக்கும் குறிப்பால் அப்பாடலிபுத்திரம் 200, 300, வீடுகள் கொண்ட சிறு கிராமமாகக் காணப்பட்டதாகக் கிடைக்கப்பெறுவதால் இது 7ஆம் நூற்றாண்டிற்கு முன் பாஹியான் வந்து சென்ற 5ஆம் நூற்றாண்டை ஒட்டியே அழிந்திருக்க வேண்டுமென்ற இம்முடிவிற்கான தரவுகளை Civilization in Ancient India part-I (P.217) என்ற நூலிலிருந்து பெற்றதாக அடிக்குறிப்பில் குறித்துள்ளார். இத்தரவுகளின் அடிப்படையில் பாடலிபுத்திரம் கி.பி.5 ஆம் நூற்றாண்டிற்கும், 7 ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் அழிவுற்றிருக்க வேண்டும் என்பது மு.இராகவையங்காரின் கணிப்பாக இருக்கிறது. இத்தோடு நிறுத்தாமல் இம்மாமூலனாரின் காலம்தான் சேரன் செங்குட்டுவனின் காலமென்றும் கூறுகின்றார்.

V.A.Smith's Early History of India (P.278) நூலில் குறிக்கப் பெற்றுள்ள “சமுத்திரகுப்தனுக்குப் பிந்திய அரசர், பாடலிபுரத்தைத் தங்கள் ராஜஸ்தானியிலிருந்து நெகிழ விட்டதாகத் தெரிதலாலும், அந்நகரம்

அக்காலத்தே நிலைமாறிய செய்தி ஊகிக்கப்படுகிறது" என்பதையும் அடிக்குறிப்பாகத்தந்து, எடுத்துரைத்து, காலம் கி.பி.2 ஆம் நூற்றாண்டு என்று கூறியுள்ள கருத்திலிருந்து கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்ற கருத்திற்கு வந்துள்ளாரென்பதை அறிகிறோம். எனினும் கடைச்சங்க காலத்தின் இறுதி எல்லையென்பது கி.பி.3 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாக கொள்ள வேண்டுமென்ற அறிஞர்களின் கருத்தும் இச்சங்க காலம் முடிவுற்றதும் பல்லவர் காலம் வந்திருந்ததென்ற கருத்தும், சங்கத்திறுதி காலத்திற்கும் பல்லவர் காலத்திற்கும் இடையில் களப்பிரர் என்போர் ஆட்சி புரிந்ததாக நிலவும் கருத்தும் இவரால் சுட்டிக்காட்டி விளக்கப்படவில்லை.

பல்லவர்காலம் குறித்த ஐயத்தை மட்டும் எழுப்பிக் கொள்ளும் மு.இராகவையங்கார். நம் நாட்டில் கிடைக்கப்பெற்ற பல்லவர்களின் கல்வெட்டுகளில் சங்க காலத்து மன்னர்களைப்பற்றி ஒரு குறிப்பும் கிடைக்கப்பெறவில்லை என்பதால் பல்லவர் காலத்தைச் செங்குட்டுவனின் காலத்திற்குப் பின்னரே தோற்றி வைக்கப்படுகிறதென்று கூறி பல்லவர்கள் 4, 5ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் பிரவேசித்திருப்பினும் பல்லவர் தனது வலிமையால் ஆட்சியமைத்துப் பரவலாக்கும் நிலையை கி.பி.6 ஆம் 7 ஆம் நூற்றாண்டுகளிலேயே நிகழ்த்தினர் என்கிற முடிவினைத் தருகிறார். எனவே, சங்க காலம் கி.பி.5 ஆம் நூற்றாண்டு வரை நடந்திருக்கவேண்டும் என்று உறுதியாக முடிவுகட்டிக் கொள்கின்றார். இம்முடிவிற்கு மேலும் ஒரு சிறு ஆதாரமாக, திகம்பரதரசனமென்னும் ஜென நூலுள் வச்சி நந்தி என்பவரால் கடைச்சங்கம் நிறுவப்பட்ட தென் மதுரையில், கி.பி.470 இல் (விக்கிரமங்தம் 526) ஒரு திராவிட சங்கம் நிறுவப்பட்டதென்ற தகவலைக் காட்டுகின்றார். இத்திராவிடச் சங்கத்தின் தோற்றத்திற்குக் காரணம், கடைச்சங்கம் முடிந்து போனதே என்பது மு. இராகவையங்காரின் வாதமாக இருக்கிறது. இச்சான்றினை, Bombay Asiatic Society's Journal, Vol. XVII Journal: Vol.XVII.No.XLIV: (pp.74)இல் கண்டெடுக்கப் பட்டதாக அடிக்குறிப்பிலும் கூறியுள்ளார்.

ஆகவே, கடைச்சங்கம் கி.பி.5 க்கும் முற்பட்டதென்பதோடு, சேரன் செங்குட்டுவன் காலம் கி.பி.4க்கும் 5க்கும் இடைப்பட்ட காலம் என்கிற முடிவினை வலியுறுத்தியதையும் பெறமுடிகிறது.

செங்குட்டுவனின் காலத்தை அறிய, இலங்கை சரித்திரத்தைக் கூறும் 'மகாவம்சம்' என்னும் நூலில் கயவாகு என்ற மன்னன் கி.பி.2 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தான் என்ற செய்தி கிடைப்பதைக் கூட்டிப் பார்த்து இவன் காலம் கி.பி.2ஆம் நூற்றாண்டு என்று அறுதியிட்டுக் காட்டியப்

பின்பும், மு. இராகவையங்கார் ஆய்வுப் போக்கை மாற்றி அமைக்கத் தூண்டிய முதல் ஆதாரம் மாமூலனார் எழுதிய 265 ஆம் பாடலில் வரும் “பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர் சீர்மிகு பாடலில் குழிகிக் கங்கை நீர்முதற் கரந்த நிதியங்கொல்லோ” (அகம் 265) என்ற அடிகளில் பாடலிபுத்திரம் கங்கைப் பாய்ந்து அழித்தது என்ற குறிப்பைக் கிடைக்கப் பெற்றதாலேயாகும். இக்குறிப்போடு சீன அறிஞன் பாஹியான் தரும், மௌரியரின் முதல் மன்னனான சந்திரகுப்தன் காலம் முதல் பௌத்த அரசனாக விளங்கி பெரும் எழுச்சியை ஏற்படுத்திய அசோகனின் காலம் வரையிலும் பாடலிப்புத்திரம் சிறப்புற்றிருந்தது என்பதும் இக்காலம் கி.பி.4 ஆம் நூற்றாண்டு என்ற முடிவையும், மற்றொரு சீன அறிஞனான யுவான் சுவாங் கி.பி.7 ஆம் நூற்றாண்டில் வந்த போது பாடலிபுத்திரத்தில் முன்னூறுக்கு மிகாமல் குடியினர்களும் ஆயிரத்துக்கும் மிகாமல் மக்களும் வசிக்கும் பகுதியாகச் செழுமை வற்றிக் காணப்பட்டதாக ஏற்றுக் கொண்டதையும் முறையே அடுத்தடுத்தச் சான்றுகளாகக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

இவற்றினைக் கொண்டு மௌரியர் யார் என்ற கேள்வியை மு. இராகவையங்காரிடம் முன் வைத்தால், கி.மு.321 இல் பட்டமெய்திய சந்திரகுப்தன் தோற்றிவந்த மௌரியர் கி.மு.184 வரை ஆட்சி செய்துள்ளனர் என்று கூறி, எனினும், இந்த மௌரியர் குறித்த வரலாற்றுத் தரவை மாமூலனார் கூறவில்லையென்று மறுத்துரைப்பதோடு V.A.Smith’s தமது Early History of India நூலுள் தஹிணதிற் கொங்கனம் முதலிய பகுதிகளில் கி.பி.6, 7 ஆம் நூற்றாண்டில் மௌரியர் வாழ்ந்துள்ளனர் என்ற தரவையும் எடுத்துக்காட்டி இவர்களும் மாமூலனாரால் கூறப்படும் மௌரியர் அல்லர் என்று உறுதிபடக் கூறிவிடும் மு. இராகவையங்கார், மாமூலனார் கூறும் மௌரியர்கள் கி.பி.4 ஆம் நூற்றாண்டு பாடலிபுத்திரத்தில் சந்திரகுப்தன் பெயர் பூண்டு தோற்றிவைக்கப்பட்ட வம்சம் என்றும் இவரையடுத்து சமுத்திரகுப்தன் சந்திரகுப்த விக்ரமாதித்தன் தலைமுறை எழுச்சியுறத் தொடங்கியது என்றும் சொல்லி அம்மௌரியரே மாமூலனார் குறிப்பிடும் மௌரியர் என்றுரைக்கின்றார். இம்முடிவு வலுவான ஆதாரத்தைக் கொண்டு நிறுவப்படாமலிருப்பதை அறிய முடியும். இன்னொரு பெரும் ஊகம் செங்குட்டுவன் முதன் முதலாக நிறுவிய பத்தினி தெய்வ வழிபாடு எனப்படும் கண்ணகிக்குக் கோட்டம் அமைத்தப் பொழுது இலங்கை அரசன் கயவாகு என்பவன் சேரநாடுவந்து இவ்விழாவைக் கண்டு மகிழ்ந்தான் என்று இளங்கோவடிகள் கூறியிருப்பதைக் ஆதாரமாகக் கொண்டு, அக்கயவாகுவின் காலம் இலங்கை வரலாறு நூலின்படி கி.பி.2

என்பதையும் இக்கயவாகுவின் காலமே செங்குட்டுவன் காலம் என்று வி. கனகசபைப் பிள்ளை நிறுவிய முடிவை தக்க ஆதாரமின்றி மறுத்திருப்பதோடு, இக்கயவாகு கி.பி.4 ஆம் நூற்றாண்டிற்கும் 5 ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்துள், வாழ்ந்தவனாக இருக்கலாம் என்று புதிதாக ஒருவனை ஊகித்துக் கொண்டு கூற வருவது அடிப்படைச் சான்று எதுவுமின்றி ஊகித்தலாக மட்டுமே இருப்பதைக் காணமுடிகிறது. இத்தகைய நிலை இருந்தாலும் இந்நூலின் 1929இன் இரண்டாம் பதிப்பு தொட்டு 1947 இன் ஆறாம் பதிப்பு வரையிலும் இம்முடிவை மாற்றிக் கொள்ளவில்லை என்பதையும் அறிய முடிகிறது.

இக்காலக் கணிப்பினைக் கொண்டு கடைச்சங்ககாலத்தின் இறுதி கி.பி.5 ஆம் நூற்றாண்டின் தொடக்கமாக முடிவு செய்திருக்கிறார். இதனோடு அவர் சங்க காலத்திற்குள் இயற்றப்பட்ட இலக்கியங்களாகச் சுட்டிக்காட்டும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகியவற்றின் காலங்களையும் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு வரை கொண்டு வந்திருக்கிறார் என்பதையும் உணர்கிறோம்.

1915 இல் வெளியிட்டுள்ள முதல் பதிப்பில் தந்துள்ள இக்காலக் கணிப்பு விளக்கங்களை 1929 இல் வரும் இரண்டாம் பதிப்புத் தொட்டு வெளிவரவில்லையென்பதையும் ஒன்றரைப்பக்க அளவில் மட்டும் தந்து அதிலும் சான்றுகளும் விளக்கங்களும் ஏதுமின்றி கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்பது மட்டும் உறுதி என்பதை திரும்பத் திரும்பக் குறிப்பிட்டு வந்திருக்கிறாரென்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டியிருக்கிறது.

முதல் பதிப்பில் கொடுக்கப்படாத கூடுதலான தகவலொன்றை 1929 இன் இரண்டாம் பதிப்பின் முகவுரையில் இணைத்திருக்கிறார். அஃதாவது 'சமகாலத்தவர்' என்னும் தலைப்பில் பின்வரும் செய்தியைக் காட்டி கி.பி.5ஆம் நூற்றாண்டு செங்குட்டுவன் காலம் என்பதற்கு மேலும் முடிசொன்றைப் போடுவதைப் போல் தருகிறார். அதாவது, 'கயவாகு என்பான் இலங்கா தீவத்தை ஆண்டு வந்த அரசன், இவன் செங்குட்டுவனது பத்தினிப் பிரதிஷ்டைக்கு வந்திருந்து, தன்னாட்டிலும் எழுந்தருளி அருள் புரிய வேண்டுமென்பது பிரார்த்தித்தும், அக்கடவுட்குத் தன் தலைநகரில் கோட்டமெடுத்து வழிபட்டும் போந்தவனென்பது சிலப்பதிகாரத்தில் அறியப்பட்டது. இலங்கையின் இன்னகோயிற்கு உரியதென்று அறியப்பெறாத அத்தெய்வப் படிவமொன்று காணப்படுதல் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாம். இதன் மாதிரிகைப் படமொன்று இந்நூன் முகப்பில், அமைக்கப்பட்டுள்ளது. மாளுவநாட்டில் 'பத்தினிக்' கோட்டத்தைப் போலவே, இப்படிவமும் 5ஆம் நூற்றாண்டு குப்த சக்கரவர்த்திகள் காலத்துச்

சிற்பவமைதியுடையதாகும் என்று அத்துறைவல்லோர் கருதுவர். இதனால், மாளுவக் கோயிலும் இலங்கைப் படிவமும் செங்குட்டுவன் காலத்தில் அந்நாட்டரசர்களால் அமைக்கப்பட்டவையாக வேண்டும் என்று கருதுதல் பொருத்தமேயாம். (ப.112, 2ஆம் பதிப்பு) என்று கூறியிருக்கின்றார். இத்தகவலுக்கு ஆதரவாக Dr.V.A. Smith vGâa Selected Examples of Indian Art" plate, XXXIII என்னும் நூலிலிருந்து மேற்கோள் கருத்தினைப் பெற்றுள்ளாரென்பதும் தெரியவருகிறது. மேற்கண்டுள்ள தரவின் அடிப்படையிலும் அம்முடிவில் மாறாமலிருந்திருக்கிறார் என்பதைப் பார்க்கிறோம்.

இறுதியாகக் காட்டியுள்ள அவரின் கருத்தின் அடிப்படையில் குப்த சக்கரவர்த்திகளின் காலத்துச் சிற்பக்கலை வடிவமைப்பின் மூலமாக அப்படிவம் அமைக்கப்பட்டிருப்பதால் குப்தச் சக்கரவர்த்திகளின் காலமுறையான சிற்ப முறையே கண்ணகிக்குக் கோட்டம் அமைந்த முறையாக இருப்பதால், செங்குட்டுவன் காலமும் கி.பி.5 ஆம் நூற்றாண்டு என்பது பொருத்தமாகுமென்று கருதியிருப்பதையும் காண்கிறோம்.

இத்தகையத் தீர்மானத்திற்குச் சான்றாக, வடபகுதியில் ஆந்திர மன்னர்களின் வீழ்ச்சியையடுத்து குப்த சமூகம் தோன்றுவதும், அவ்வம்சத்துள் சமுத்திரகுப்தன் என்பவன் இந்தியா முழுவதும் தன்னாட்சியின் கீழ்க் கொண்டுவர முயன்றான் என்பதும், இம்மன்னனின் காலம் கி.பி.326 என்பதும் இவனின் படைப்யெடுப்பினால் சேர மன்னன் மாந்தராஜா என்பவன் தோல்வியுற்றான் என்பதும் சாஸனங்களில் காணப்படுவதாக, Gupta Inscriptions, P.12, 13, Dr.Fleet's Dynosties of the Kanarese Districts, P.280; Indian Antiquary, Vol.XIV P.181 ஆகிய நூல்களுள் காணப்படுவதைக் கூறி, இமாந்தராஜா என்பவன் செங்குட்டுவனுக்கு முன் அரசாண்டவன் என்பதை நிறுவி, பரணர் தமது சங்கப்பாடலில் (அகம் 142) இவனையே பாடியுள்ளார் என்றும் முடிவுக்கட்டுகின்றார். எனவே தான் இம்மாந்தராஜாவைப் பாடியதோடு, இவனை அடுத்து ஆட்சிப் பொறுப்பினை ஏற்கும் சேரன் செங்குட்டுவனையும் பாட முடிந்தது என்பதும் அவரின் எண்ணமாக இருக்கிறது. மேலும் 265 ஆம் பாடலைப் பாடி ஆய்வுப் போக்கை மாற்றியமைக்க வழிபடுத்ததாக மு. இராகவையங்கார் கூறும் மாமூலனாரே அகநானூற்றின் 281 ஆம் பாடலில் "முரண்மிகு வடுகர் முன்னுறமோரியர் தென்றிசை மாதிர மூன்னிய வரவிற்கு விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத் தொண்கதிர்ந்த திகிரி யுருளிய குறைத்த,...வரை" என்று கூறியிருப்பதனாலும் அவரின் மற்றொரு பாடலான (251) "வெல்கொடித் –

/துணைகாலன்ன புனைதேர்த் கோசர் / தொன்மூதாலத் தரும்பணைபொதியில் / இன்னிசை முரசங் கடிப்பிருந்திரங்கத் / தெம்மனை சிதைத்த ஞான்றை மோகூர் / பணியாமையிற் பகைதலை வந்த / மாகெழுதானை வகும் மோரியர் / புனைதேர் ரேமி யுருளிய குறைத்த அரைவாய்'' / என்று பாடியிருத்தலாலும் தன்னாய்வு போக்கு மிகச் சரியானதே என்று தீர்மானித்து பயணிக்கத் தொடங்குகின்றார்.

மேற்கண்ட 281 பாடலின் சாரமாகத் தெரியவருவது. வடவாரிய மன்னனொருவன் தென்னாடு நோக்கிப் படையெடுத்து வந்து திக்விஜயம் செய்ததும் அதனால் சேரமன்னனிடையே பெரும் கோபம் எழுந்ததென்பதுமாகும். இரண்டாவதாகச் சுட்டும் 251 ஆம் பாடலின் கருத்துள், மோரியர் தென்னாட்டை நோக்கி படையெடுத்து வந்தபோது, அவரை எதிர்த்துப் மோகூர் என்னும் பழையன் மாறன் என்று குறிக்கப்பெறும் பாண்டிய படையின் பெருவீரன் கடும்போர் புரிந்தான் என்ற தகவலும் கிடைக்கப் பெறுவதைச் சுட்டிக் காட்டும் மு. இராகவையங்கார் இவன் காலத்தே வாழ்ந்த செங்குட்டுவன், இப்பாண்டியனைப் போரில் வென்றான் என்று பதிற்றுப்பத்து 44 ஆம் பாடலில் பரணர் குறித்திருப்பதாலும், இப்போரையே இளங்கோவடிகளும் தம் சிலப்பதிகாரத்தில், (27.124.26) ''பழையின் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு / வேம்புமுதல் தடிந்த ஏந்துவாள் வலத்துப் / போந்தைக் கண்ணிப் பொறைய'' என்று குறிப்பிட்டிருப்பதாலும் இக்காலத் தீர்மானத்தில் பிழையிருக்க வாய்ப்பில்லை என்று கருதிக்கொள்கிறார். மோகூர் என்பவன் பாண்டிய படைத்தலைவனாகிய மாவீரன் என்பதனை மதுரைக் காஞ்சியிலும், பதிற்றுப்பத்து 44 ஆம் பாடலிலும், அகநானூறு 251 ஆம் பாடலிலும் காணக் கிடைக்கும் சான்றுகளையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

மேற்கண்ட குறிப்புகளின் வாயிலாக மோரியரின் தென்னாட்டு வருகையின் காலமும் பாண்டிய படைவீரன் அவர்களோடு போர் புரிந்த காலமும் பின்னொரு சந்தர்ப்பத்தில் இதே பாண்டிய மன்னனைச் செங்குட்டுவன் வென்ற காலமும், சமுத்திர குப்தனிடம் தோற்றுப்போன மாந்தரஞ் சேரலின் காலமும் இவர்களுள் சேரனைப் பாடியவர்களான மாமூலனார், பரணர் ஆகிய புலவர்களின் காலமும் ஒத்துப் போவதாகக் கூறி நிறுவி முடிவுக் கட்டுகிறார்.

மோரியர்களின் வருகையைக் கூறும் இருப்பாடல்களுள் பரணரால் பாடப்பட்ட அகநானூற்றில் 19 ஆம் பாடலினையும் ''விண்பொரு நெடுவரை யியறேர் மோரியர் / பென்புனை திகிரி திரிதரக் குறைத்தவரை'' என்பதனையும், மாமூலரோடும் பரணரோடும் நிற்காமல் கள்ளில்

ஆத்திரையனார் எனும் புலவரால் புறநானூற்றின் 175 ஆம் பாடலுள் "விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர் திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த உலகவிடைகழி" எனவும் பாடப்பட்டுள்ள பாடலையும் எடுத்துக் காட்டுகின்றார், தமது கருத்திற்கு முரண்பட்ட தோர் தகவலையும் அடிக்குறிப்பில் கொடுத்திருப்பது இவரின் ஆய்வு நேர்மைக்குக் சாட்சியாக இருக்கிறது. அம்முரண் யாதெனில், ஒன்று, மலையைக் குடைந்து கொண்டு மௌரியர்கள் தென்னாட்டிற்கு வந்தனர் என்ற மாமூலர், ஆத்திரையனார், பரணர், குறிப்பிடும் தமிழர்த் தென் பகுதியில் எங்கும் கிடைக்கப்பெற வில்லை என்பது, மற்றொன்று இப்பாடலின் பொருளாக உரையாசிரியர் மோரியரை "ஓரியர்" என்று விளக்கம், தந்திருப்பது. இரண்டாவது பொருத்த மின்மைக்கூட ஏற்கலாமெனினும், முதல் முரணான, அக்குடையப்பட்ட மலைப்பகுதி கிடைக்கப் பெற வில்லையே என்பது கவனிக்க வேண்டிய கேள்வியாக உள்ளதை உணர்கிறோம். அதிலும் இராகவையங்காரின் கணக்குப்படி முதலில் சேரன் மாந்தரக்சேரலை வென்று பின்னரே பாண்டியனோடு பொதியப்போர் நடந்தது என்பதாகும்.

இத்தகைய தெளிவோடு தரவினைக் கையாள முடிந்த இவ்விடம் அவ்வழியுண் டாக்கப்பட்ட மலை இன்னதென்பதை அறிய முடியவில்லையென்று இம்முரணை முரணாகவே தொக்கி நிற்கச் செய்துள்ளார். இவை ஒரு புறமிருக்க, மற்றுமொரு பெருமுரணைத் தன் ஆய்வுப் போக்கில் காட்ட வேண்டிய நெருக்கடியில், இம் மோரியர் என்பவர் யாராக இருப்பர் என்ற அடிப்படையான கேள்வியைக் கிளப்பிக் கொண்டு, கொடுத்திருக்கும் பதில் மீண்டும் ஆய்வுக்குரியதாக இருப்பதைக் காண முடிகிறது. இத்தனைத் தூரம் அவர் நிறுவ முயன்ற கருத்துகளெல்லாம் ஆட்டம் காணத் தொடங்கிய இடமும் இதுவாகத்தானிருக்குமோ என்றும் எண்ணத் தோன்றுகிறது.

அதாவது, மோரியர் என்ற இனத்தவரைப் பற்றி குறிக்கப்பட்டிருந்த தரவுகளை எடுத்து நோக்கும் மு. இராகவையங்கார் கீழ்வருமாறு தருகின்றார். மகதவேந்தராய்ப் பாடலிபுரத்திருந்தாண்ட மௌரிய சக்கரவர்த்திகளுள் ஆதி முதல்வனானவன், கி.மு.321 இல் பட்டமெய்திய சந்திரகுப்தன் என்பான். இவன் காலத்து உற்பத்தியாகிய மௌரிய வம்சம், சுறக வமிசத்தவனாய் கி.மு.184 இல் பட்டமெய்திய புஷ்ய மித்திரனால் முடிவடைந்ததென்பது புராணங்களாலும், சரித்திர ஆராய்ச்சியாலுந் தெளியப்பட்டது. (ப–174) என்று தருகின்றார். இதனால் கி.மு.4 ஆம் நூற்றாண்டு முதல் கி.மு.1 ஆம் நூற்றாண்டு வரையிலும் மௌரியர் என்பவர்கள் வாழ்ந்ததாகக் கூறும் கருத்தினை ஏற்கிறாரென்பது தெரிகின்றது. இவ்வாறு ஏற்பது இதுவரையிலும் அவர் நிறுவமுயன்ற முடிவில் முரண்படுவதோடு மேலும் இவர் முடிவிலிருந்து ஒத்துப்போகாத

மற்றொரு தரவினையும் தருகின்றார்.

அதாவது, V.A. Smith தனது Early History of India (P.183) எனும் நூலில் மௌரியவம்சத்தினருள் சிலர் கி.பி.6, 7 ஆம் நூற்றாண்டுகளில் தக்ஷிணதிற் கொங்கணம் முதலிய பகுதிகளிலிருந்துள்ளனர் என்பதாகும். இவ்விருவகைச் செய்திகளாலும் மு. இராகவையங்கார் குறிப்பிட்டுத் தீர்மானித்த கி.பி.4, 5 ஆம் நூற்றாண்டுகாலம் தொடர்பற்றுக் காணப்படுகிறது. முன்னது கி.மு 4–1 காலத்தில் இருப்பதும் பின்னது கி.பி.6,7 இல் இருப்பதுமான முரணை ஒப்பு நோக்கி எடுத்துக் கூறுபவர், இவ்விரு நிலைகளிலிருந்து புதியதொரு விடையினைத் தோற்றி வைக்கிறார்.

மேற்கண்ட இருநிலைகளிலிருந்து மாறபட்டதோர் நிலைக் காணப்படுவதால், மாமூலனாரும் பரணரும், கள்ளில் ஆத்திரையனாரும் குறிப்பிட்ட மோரியர்கள் குறித்துக் கீழ்வருமாறு உரைகிறார். ஆயினும், மௌரியர் பிரஸ்தாபத்துக்கு இடமே கிடையாததும், ஆந்திர வம்சத்தினரசர் பிரபலங்குன்றியதுமான கி.பி.4ம் நூற்றாண்டின் தொடக்கத்தில், மௌரிய முதல்வனான சந்திரகுப்தனது பெயர்பூண்டு அவன் தலைநகரான பாடலிபுரத்தில் பிரசித்த வேந்தனொருவன் தோன்றினானென்று சொல்லப்படுகின்றது. இவனையடுத்து மஹாவீரர்களாகச் சமுத்திரகுப்தனும், அவன் மகன் சந்திரகுப்த – விக்ரமாதித்தனும் விளங்கினர். இவர்களைக் குப்தவம்சத்தவர் என்று பொதுவாகக் சாஸனம் குறிக்கின்றதாயினும் இன்ன மரபினரென்பதைத் தெளிவாக அறியவிடமில்லை.

மேற்குறித்த புதிய சந்திரகுப்தனரின் தலைமையாகக் கொண்டு பாடலியையாண்ட குப்தமரபினரையே மாமூலனார் மோரியரென்று குறித்தனர் போலும், இதற்கேற்ப, அப்புலவர், இவர்களை "வம்ப மோரியர்" என்கின்றார். இதற்குப் 'புதிய மோரியர்' என்பது பொருளாதலால், பழைய மோரியரை விலக்கற்கே இவ்விடை கொடுக்கப்பட்டதாகலாம். (ப–175) இதனோடு, பிற்பட்ட சந்திரகுப்தன் மகன் சமுத்திரகுப்தன் என்பவன் இந்தியா முழுவதும் தன் ஆட்சியின் கீழ்க் கொணர முயன்றான் என்பதைக் கூறி காகுஸ்தன் என்பவன் சேர நாட்டை அடுத்திருந்த கடம்ப நாட்டை ஆண்டு கொண்டிருந்த பொழுது சிவனின் மகளைச் சமுத்திரகுப்தன் மணந்தான் என்ற குறிப்பு "Mysire and Coorg" (P.28) என்ற நூலுள் காணப்படுவதை அடிக்குறிப்பில் கொடுத்துள்ளார். இக்கணிப்போடு மாமூலனாரின் பாடல் சாரத்தைத் தந்து தான் கண்டறிந்த முடிவினை நிலைப்படுத்துகின்றார். இவற்றோடு அவர் சோழ மன்னர்களைக் குறித்தும் பாண்டிய மன்னர்கள்

குறித்தும் கொடுத்திருக்கும் செய்தியும் அவரின் ஆய்வுப் போக்கின் தன்மைக்குறித்து கவனிக்கத் தூண்டுகிறது.

சமுத்திரகுப்தன் காலத்தில் வாழ்ந்த சோழன் கரிகாலனென்றும் பாண்டியன் நெடுஞ்செழியன் என்றும் மாறன் வழுதி என்றும் தந்து கரிகாலனை, சிலப்பதிகாரம் 5ம் காதையின் (99–104) பாடல் குறிப்பிடுவதையும், நெடுஞ்செழியனை மதுரைக் காண்டத்திறுதிக் கட்டுரைக் குறிப்பிடுவதையும், மாறன் வழுதியை புறம் 52 ஆம் பாடல் சுட்டுவதையும் அடிக்குறிப்பில் தந்துள்ளார்.

இச்சமுத்திரகுப்தனின் இறுதி காலம் கி.பி.375 ஆகக் காட்டி, இறுதியாகச் சீன அறிஞன் பாஹியான் குறிப்பினை V.A.Smith's தனது Early History of India (P.119–20), நூலில் குறித்திருப்பதைச் சுட்டி இத்தகவலோடு மாமூலனாரின் அகநானூற்று (265ஆம்) பாடலில் கிடைக்கப்பெறும் தரவினையும் ஆதாரமாகக் கொண்டே ஸ்ரீகனகசபைப் பிள்ளையின் முடிவினையும் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரின் முடிவினையும் மறுத்து இப்புதிய முடிவிற்கு வந்திருப்பதைக் காணமுடிகிறது. எனினும் வி.கனகசபைப் பிள்ளை எடுத்துரைத்த இலங்கை கயவாகுவின் காலம் பற்றிய ஆதாரத்தை மறுத்துரைக்கப் போதிய சான்றுகள் இல்லாததும் வம்ப மோரியர் என்பது புதிய மோரியர் என்றும் அவர்கள் 5–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும் ஊகத்தின் அடிப்படையில் வலியுறுத்தப்பட்டிருப்பதும் ஆய்வு வலுவிழந்து போவதற்கான காரணங்களாகத் தெரிய வருகின்றன.

1922இல் தமிழ் வரலாறு என்னும் பொருண்மையில் இலக்கிய வரலாற்றினை எழுத முயலும் கே. எஸ். சீனிவாசப்பிள்ளை இறையனார் அகப்பொருளுரையின் முச்சங்க கட்டமைப்பினை எடுத்துரைத்துத் தமிழ் மொழியின் தொன்மையினையும் தமிழ் இலக்கியங்களின் வரையறையினையும் எழுதிச் செல்கின்றார். 1921 இல் நா.மு. வேங்கடசாமி நாட்டார், 'கபிலர்' என்னும் நூலில் திருவிளையாடற்புராணத்தையும் இறையனார் அகப்பொருளுரையினையும் ஆதாரமாகக் கொண்டு அதில் உரைக்கப்படும் தொன்ம நம்பிக்கை உண்மை என்றுரைத்து சங்க காலப் புலவகளின் காலத்தை நிறுவுகின்றார்.

தொன்ம நம்பிக்கையிலான அனைத்தும் கற்பனை கலைந்த புனைவு என்பதனை மறுப்பதற்கில்லை, எனினும் அத்தகைய தொன்ம ஆய்வாளர்கள் அனைவரும் கடைச்சங்க காலம் என்பது வி. கனகசபைப்பிள்ளைக் கண்டுரைத்த சிலப்பத்திகாரத்தின் காலத்தினை அடிப்படையாகக் கொண்டே, கடைச்சங்கத்தின்

முன் எல்லையாக, கி.முக்கு முற்பட்ட ஐந்து நூற்றாண்டுகளையும் பின் எல்லையாகக் கி.பிக்கு பின்னர் இரண்டு, மூன்று நூற்றாண்டுகளையும் அமைத்துக் கொண்டு ஏற்றுக் கொள்கின்றனர். எனவே, தொன்ம நம்பிக்கையை வரலாற்று பூர்வமானதுமாக மாற்றியமைக்கும் தன்மை ஒருபுறம் வெளிப்பட்டாலும் வி. கனகசபைப் பிள்ளையின் ஆய்வு முடிவினைத் தொன்ம நம்பிக்கை சார்ந்தவர்களும் ஏற்றுக் கொண்டு தம் தொன்ம நம்பிக்கையை அதில் கலந்துள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.

இவர்களுக்கு அடுத்து கவனிக்கத்தக்க ஆய்வாளராக பி.டி. சீனிவாச ஐயங்காராக இருக்கிறார். கால ஆய்வு வரலாற்றில் பி.டி. சீனிவாச ஐயங்காரின் தமிழர் வரலாறு (கி.பி. 600 வரை) என்னும் நூல் 1929 வரையிலும் வந்த வரலாற்று ஆய்வினையும் தொன்ம அடிப்படையிலான ஆய்வையும் புறக்கணித்து பண்பாட்டு அடிப்படையிலான பார்வையைச் செலுத்துகிறது. தொன்மை வாய்ந்த சங்க இலக்கியங்களாக புறநானூறு, அகநானூறு. நற்றிணை, குறுந்தொகை முதலியவற்றையும் பிற்கால நூல்களாக ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை முதலியவற்றையும் பகுத்தறியும் பார்வை இவரிடமே வெளிப்படுகிறது. இதனால் இவருக்கு முன்னர் ஆராய்ந்த அறிஞர்களின் கால கட்டமைப்பு முடிவுகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டதோர் கோணத்தையும் வரையறையும் இவர் கொண்டிருந்ததைப் பார்க்கிறோம்.

கி.பி.1ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழின் தொன்மை இலக்கியங்களின் காலம் என்று சொல்லியிருப்பதும், அவற்றில் பெரும்பாலான நூல்கள் கி.பி.5 ஆம் நூற்றாண்டிலும் கி.பி.6ஆம் நூற்றாண்டிலும் தோன்றியவையென நிறுவியிருப்பதும் கவனத்திற்குட்படுத்த வேண்டியவையாக இருக்கின்றன. இக்காலத்திலிருந்ததாகக் கருதப்படும் பல்லவர்கள் குறித்து யாதொரு கருத்தும் கூறாமல் பல்லவர்களுக்கு முன்பும் சங்க காலத்திற்கு பின்பும் வந்தவர்களாகக் குறிக்கப்படும் களபிரர் குறித்து கூறுகையில் கல்வெட்டாய்வாளர்கள் புகுத்தியதே இக்களப்பிரர் இடையீடு என்றுரைத்து இக்காலத்தில் முற்றிலும் சங்க காலம் ஒழிந்தது என்று கருதுவது தவறென்றும் கூறுகின்றார். (தி. வை. சதாசிவ பண்டாரத்தார் களப்பிரர்களைப் பற்றி வேள்விக்குடி செப்பேடு கூறுவதாக தமது தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250 – கி.பி. 600) எனும் நூலில் குறிப்பிடுவார்).

கி.பி. 2,3ஆம் நூற்றாண்டுகளில் இறுதிநிலை அடைந்ததாக ஏற்கப்படும் கடைச்சங்கம், களப்பிரரின் வருகையாலும் பாண்டியர்களை வென்றதாலும் நிகழ்ந்தவை என்ற அறிஞர்களின் கருத்தினை ஏற்க மறுத்துக் களப்பிரர் மிக குறைந்த காலமே ஆட்சி செய்தனர் என்றும் முற்றிலும் அழியாமல் குறுகியிருந்த பாண்டியர்கள் அதையும் மீட்டனர் என்பதும் பி.டி. சீனிவாசையங்காரின் முடிவுகளாக இருக்கின்றன. மேலும் திருக்குறள் காலம் கி.பி.6ஆம் நூற்றாண்டு

என்பதோடு இதே காலத்தில்தான் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டிருக்கிறதென்றும், மணிமேகலை கி.பி.7ஆம் நூற்றாண்டு நூல் எனவும் எழுதி செல்கின்றார்.

பத்துப்பாட்டுள் நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம், சிறுபாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை, ஆகியவை கி.பி.6ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை என்கிறார். கடல்கோள் நிகழ்ந்ததை ஏற்றுக் கொள்பவர் பத்துப்பாட்டில் ஆறு நூல்களையும் எட்டுத்தொகையில் 4 நூல்களையும் திருக்குறள், சிலப்பதிகாரம் முதலான நூல்களையும் கி.பி.6ம் நூற்றாண்டில் கொண்டு வந்து நிறுத்துவது எவ்வாறு பொருந்தும் என்பது தெரியவில்லை. இதனோடு வி. கனகசபைப் பிள்ளை தந்திருக்கும் கால முடிவினை எடுத்துரைத்து மறுக்காமல் சென்றிருப்பதும் தெரிகிறது.

மேற்கண்ட வற்றால் சங்க இலக்கிய கால ஆய்வினை மேற்கொண்ட அறிஞர்களுள் இறையனார் அகப்பொருளுரைத் தரும் நம்பிக்கையிலான முடிவினை வழிமொழிந்து சி. வை. தாமோதரம் பிள்ளை முதல் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி, ரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார், வா. குலாம் காதிரு நாவலர் ஆ. முத்துத்தம்பி பிள்ளை, எஸ்.கிருஸ்ணசாமி ஐயங்கார் ஆ. சதாசிவம் பிள்ளை ந.க. வைத்திய நாத தேசிகர், சி.வி. வெங்கட்ராமஐயர் நாகை ஸி.கோபால கிருஷ்ணன், நாராயணையர், எஸ், சுப்பிரமணிய சாஸ்திரி, த. கனகசுந்தரம்பிள்ளை, அ. குமாரசாமிப்புலவர் வீரசாமிசெட்டியார், 1922இல் இலக்கிய வரலாற்று முயற்சியினை மேற்கொண்ட கே.எஸ். சீனிவாசப்பிள்ளை இ.மு. சுப்பிரமணியபிள்ளை, ந.மு. வேங்கடசாமி நாட்டார். சோம சுந்தரபாரதியார், சபாபதி நாவலர், உ.வே.சாமிநாதையர், மறைமலையடிகள், கா. சுப்பிரமணியப்பிள்ளை, முதலியோர்கள் செயல்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இவர்களுள் தொடக்கத்தில் தொன்ம நம்பிக்கையிலிருந்து பின்னர் தம்முடிவை மாற்றிக் கொண்டவராக மு. இராகவையங்கார் தெரியவந்ததைக் கண்டோம்.

வரலாற்று அடிப்படையிலான அணுகுமுறையில் வி. கனகசபைபிள்ளை, து.அ. கோபிநாதராவ், தி.வை.சதாசிவ பண்டாரத்தார், மு. தம்பையா, நா. சுப்பிரமணியன், கே.ஜி. சங்கரன், பண்பாட்டு அடிப்படையில் வரலாற்று ஆய்வினை முன்னிறுத்தும் பி.டி. சீனிவாசையங்கார் முதலியோர்களாகத் தெரியவருகின்றனர். இவ்விருவேறு பிரிவினரையும் மேற்கண்டவாறு அடையாளப்படுத்தினாலும் தொன்ம நம்பிக்கையை முன்னெடுத்த ஆய்வாளர்களுக்கும் வி.கனகசபைப் பிள்ளைக்கும் ஒத்துப்போன நிலை இருந்துள்ளதையும் காணமுடிகிறது.

இறையனார் அகப்பொருள் தரும் முச்சங்க நம்பிக்கையை முன்னெடுக்கும் அறிஞர்கள் 1904க்குப் பிறகு முச்சங்க நம்பிக்கையை நம்பும் அதே நேரத்தில் வி. கனகசபைப்பிள்ளை வரலாற்று சான்றுகளோடு நிறுவிய செங்குட்டுவன் காலத்தை ஏற்று வந்தே இருக்கின்றனர். எனவே சங்கம் பன்னெடுங்காலம் நடைபெற்று வந்தது உண்மை என்பதோடு அம்முச்சங்களில் கடைச்சங்கத்தின் இறுதிகாலமே சிலப்பதிகாரத்தின் காலம் என்று முடிவு கட்டிக் கொண்டிருப்பதும் புலப்படுகிறது. அதே போல தமது ஆய்வு முடிவினைத் தரும் வி. கனகசபைப்பிள்ளை இலங்கை வரலாறு நூலோடு கிரேக்க அறிஞர்களான, பிலினி, டாலமி முதலிய அறிஞர்களோடு செங்கடல் பயண விபரத்தொகுதி என்னும் நூலையும் பயன்படுத்துவதோடு தம்முடிவினை நிலைநிறுத்த மத்ஸ்ய புராணத்தில் வரும் ஆந்திர மன்னனைப் பற்றிய குறிப்பினையும் எடுத்தாண்டிருப்பதையும் காண்கிறோம்.

இப்புராணத்தை எடுத்தாண்ட பொழுதும் தமது முடிவிற்குப் பெரும் ஆதாரங்களாக வரலாற்று சான்றுகளையே துணைப்படுத்திக் கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. இவ்வாய்வுகளிலிருந்தும் மேற்கண்ட நம்பிக்கை ஓட்டங்களிலிருந்தும் முழுதும் வேறுபடும் து.அ. கோபிநாதராவின் ஆய்வு வெளிப்படல் வடஇந்திய, தென் இந்திய பகுதிகளுக்கிடையே நிகழ்ந்து வந்த உயர்வுத் தாழ்வினை வலியுறுத்துவது போல் அமைந்துவிடுகிறது. இதேபோல் பி.டி. சீனிவாசையங்காரின் ஆய்வும் போதிய வரலாற்றுத் தரவுகளின்றி ஆரிய திராவிட பண்பாட்டினை மையமாகக் கொண்டு செயல்பட்டு, சங்க இலக்கியங்களுள் பெரும்பாலானவை வெளிப்பட்டது ஆரியப்பண்பாடு கலப்பிற்குப் பின்னே என்று கூறி அவ்விலக்கியங்களின் தொடக்கமே கி.பி. 1ஆம் நூற்றாண்டுதான் என்று வலியுறுத்திச் செல்கிறது. மேற்கண்ட அனைத்தையும் உள்வாங்கிக்கொண்டுவரும் கா. சுப்பிரமணியப்பிள்ளை 1930ல் தமது இலக்கிய வரலாற்று கட்டமைப்பில் கி.பி.க்கு பின் என்று சுட்டப்பட்ட பெரும்பாலான கால முடிவுகளையும் முரண்பட்டவர்களின் கருத்துக்களையும் புறக்கணித்து முச்சங்க நம்பிக்கையின் அடிப்படையில், அதாவது இறையனார் களவியல் உரை தரும் செய்திகளின் அடிப்படையில் சங்க இலக்கியங்களையும் அச்சங்கம் நிகழ்ந்துவந்த காலங்களையும் ஒரு தலையாக நம்பி, வழி மொழிந்திருக்கிறார்.

மேலும், இவ்வாய்வின் தொடர்ச்சியாகக் கவனிக்க வேண்டியவைகளாக, பின்வருவனவற்றைச் சுட்டலாம். தமிழ் இலக்கிய உலகிலும் ஆய்வு உலகிலும் தமிழ் இலக்கிய வரலாற்று முயற்சியை எம். எஸ். பூரணலிங்க பிள்ளை, சுன்னகம் குமாரசாமிப்புலவர், கே.எஸ். சீனிவாசப்பிள்ளை முதலானோர்கள் முயன்றிருப்பினும் கா. சுப்பிரமணியப்பிள்ளையின் இலக்கிய வரலாற்றை முதல்

இலக்கிய வரலாறாக ஏற்கிறோம். இது ஒரு புறம் இருக்க இலக்கிய வரலாற்று நிலையினை அடையாளம் காண முயலும் அறிஞர்கள் இன்று வரையிலும் நடத்திய முயற்சிகள் அனைத்தும் ஒன்று, கிடைக்கப்பெற்ற இலக்கியங்களின் பொருண்மையின் அடிப்படையில் அவ்விலக்கியங்கள் உணர்த்தவரும் மதங்களை முன்நிறுத்தி, அதன் காலங்களை அடையாளப்படுத்தும் போக்கும் அக்காலங்களில் ஆட்சிப்புரிந்த மன்னர்களின் அடிப்படையில் இலக்கிய வகைகளைப் பகுத்துணர்த்தும் போக்குமாக இருந்து வருகின்றன.

இவ்விரு நிலை தொடர்ந்து வந்திடினும் இலக்கிய வரலாற்றுக் கட்டமைப்பில் போதிய தெளிவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. சான்றாக, திருக்குறளின் காலத்தை கி.மு.31 என்றும் கி.பி.1 ஆம் நூற்றாண்டு என்றும் கூறும் நாம் திருக்குறளை சங்க இலக்கியங்களுள் ஒன்றாகக் கருதாமல் பதினொண் கீழ்க் கணக்கு வகைமைக்குள் நிறுத்தியிருக்கிறோம். இந்த நிலைகளுக்கு ஆதாரமாக நமக்கு கிடைக்கப்பெற்ற எட்டுத்தொகை பத்துப்பாட்டை உணர்த்தும் குறும் பாடலும் பதினொண் கீழ்க் கணக்கை எடுத்துரைக்கும் குறும் பாடலும் இருந்து வருகின்றன. நாம் சுட்ட வரும் காலம் ஒன்றாகவும் இலக்கிய வகையை ஒன்றாகவும் இருந்து வரும் முறணைக் களைந்த நிலையில் இதுவரை வந்த எந்த இலக்கிய வரலாறும் செய்ததாகத் தெரியவில்லை.

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சங்க காலத்திற்குள் குறிப்பிடப்பட்டு வந்தாலும் வடிவத்தின் அடிப்படையில் காப்பிய வகைமைக்குச் சென்று தனித்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. இம்மையத்தைக் களைய ஒரே வழி எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினொண் கீழ்க்கணக்கு முதலான நூல்களை அடையாளப்படுத்தும் பாடல்கள் பன்னிரெண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகே இயற்றப்பட்டுள்ளன என்ற உண்மையாகும். அத்தோடு பதினொண் கீழ்க்கணக்கு நூல்களை வரிசைப்படுத்தும் பாடலுள் திருக்குறளை இணைத்திருப்பதற்கு அதன் அறச்சிந்தனையே காரணமாக இருக்கிறது. திருக்குறள் சங்க கால இலக்கியம் என்பதை நிறுவ முயலும் முயற்சியாகத் திருவள்ளுவமாலை பாடல்கள் தெரியவருகின்றன. இத்திருவள்ளுவமாலை பாடல்கள் குறித்து 1930க்கு முன் திருவள்ளுவமாலை சங்க கால நூலாக எண்ணப்பட்டு வந்துள்ளதை அறிய முடிகிறது.

திருவள்ளுவமாலையில் இடம்பெறும் புலவர்களுள் இறையனார், உக்கிரபெருவழுதியார், நக்கீரர், மாமூலனார், கல்லாடர், சீத்தலைச்சாத்தனார், அரிசில்கிழார், பொன்முடியார், ஆசிரியர் நல்லந்துவனார், கீரந்தையார், தொடித்தலை விழுத்தண்டியார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்,

வெள்ளிவீதியார், மாங்குடி மருதனார், மோசிகீரனார், காவிரிப்பூட்டினத்துக் காரிக்கண்ணனார், பெருஞ்சித்திரனார், மதுரைப் பெருமருதனார், கோவூர்கிழார், நம்பாலத்தனார், ஆலங்குடிவங்கனார் கபிலர், பரணர், நரி வெரூஊத்தலையார் முதலானோர்கள் சங்க இலக்கிய புலவர்கள் என்பதை அறிவோம். இவர்களெல்லாம் போற்றிப் பாடும் அளவிற்கு திருக்குறள் புகழ் பூத்திருந்தது என்றால் அது இப்புலவர்களின் சம காலத்து நூலா ? அல்லது இவர்களுக்கும் முற்காலத்து நூலா ? என்பதும் விளங்கிக் கொள்ளவேண்டும். சங்க இலக்கிய ஆய்வாளர்களுள் பலர், திருக்குறளை சங்க நூலாகக் கருதும் இலக்கிய வரலாற்றுக் கட்டமைப்பாளர்கள் அதனைப் பதினொண்கீழ்க்கணக்கு நூல் வரிசையில் இடம்பெற செய்வதற்கும் பாடலே காரணமாக இருந்திருப்பதோடு சங்க இலக்கிய நூல் வரிசையில் இடம்பெற செய்வதற்குத் தடையாகவும் இருந்திருக்கிறது.

1930க்குப் பிறகு இலக்கிய வரலாற்றை எழுதவரும் அறிஞர்களிடம் நீதி இலக்கிய காலம், அற இலக்கிய காலம், சங்கம் மறுவிய காலம் என்ற பெயர்களில் குறிப்பிடப்பட்டு அதன் காலத்தை கி.பி. 6 ஆம் நூற்றாண்டு என்றும் குறிப்பிட்டு தந்துள்ளனர். இத்தகைய இடரை முழுவதுமாக உணர்ந்ததாலே 1930 இல் கா. சுப்பிரமணிய பிள்ளையும் அதற்கு முன்னாள் இலக்கிய வரலாற்றை இயற்றியவர்களும் பதினொண் கீழ்க்கணக்கு உட்பட சிலம்பு, மணிமேகலை ஆகிய நூல்களையும் சங்க இலக்கியங்களாக வரையறை படுத்தியிருப்பதன் காரணமாக புலப்படுகிறது. இதனோடு அற இலக்கியங்களாகச் சொல்லப்படும் பதினொண்கீழ் கணக்கு ஐந்து நூல்களும் அக மரபைப் பாடுகின்றன. இதுவும் சங்க இலக்கிய மரபின் நீட்சியாகவே இருக்கிறது. பக்தி இலக்கிய கால கட்டத்திற்குள் வைத்து எண்ணப்படவேண்டிய திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டுள் குறிப்பிடபடுவதற்கு அந்நூலை இயற்றிய ஆசிரியர் பெயரும் அப்பழம்பாட்டும் காரணங்களாக அமைந்திருக்கின்றன. பதினொண் கீழ்க் கணக்கில் பல நூல்கள் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்திற்குள் இயற்றப்பட்டிருப்பினும் இக்காலம் வரைக்கும் சங்கம் நிகழ்ந்துள்ளதாக நம்பப்பட்டு இவைகளும் சங்கத்து நூல்களாக வரையறை படுத்தப்பட்டுள்ளன.

இச்சிந்தனையோடு எண்ணிப்பார்க்க வேண்டியவையாக இருப்பது, இறையனார் அகப்பொருளுரைத் தரும் முச்சங்கம் பற்றிய குறிப்புகளாகும். அதில் கொடுக்கப்பட்டிருக்கும் முச்சங்க நூல்களாகத் தெரியவருவன பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் அகத்தியமும் எனத் தொடக்கத்தன என்பதும், தலைச்சங்கத்திற்கும், கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலையகவலும், அகத்தியமும், தொல்காப்பியமும்,

மாபுராணமும், இசை நுணுக்கமும், பூதபுராணமும் எனத் தொடக்கத்தன என்றும் இடைச்சங்க நூல்களையும் காட்டி மேற்கண்ட இரண்டு சங்கத்தின் இறுதிக்கும் கடல்கோள் காரணம் என்கிறது.

இடைச்சங்கத்தின் நூல்களாக, நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் அகத்தியமும், இத்தொடக்கத்தன என்று கூறுகிறது. இதிலிருக்கும் முரண்களைத் தொட்டுக் காட்டினாலே புனைந்துரை மிகுந்திருப்பது புலப்படும். இதில் பரிபாடலும், என்ற சொல்லாட்சி, தலைச்சங்கத்திற்கும், எழுபது பரிபாடலும் என்று கடைச்சங்கத்திலும் வருகின்றன. அத்தோடு, இடைச்சங்கத்து நூல்களுள் தொல்காப்பியம் குறிக்கப்படுகிறது. தலைச்சங்கமும் இடைச்சங்கமும் கடல்கோளால் அழிந்தும், தொல்காப்பியம் அழியாமல் இன்றுவரைக் கிடைக்கிறது. அத்தோடு இரண்டு கடல்கோளினும் தப்பித்து அகத்தியர் தலைமைப்பெற்றிருந்ததோடு முச்சங்கத்திற்கும் அகத்தியமே ஆதார நூலாக இருப்பதாகச் சுட்டுவது எவ்வாறு பொருந்தும்.

கடல்கோள் ஏற்பட்டதற்கான சான்றை, கலித்தொகை (148) யிலும், 'வடிவே லெறிந்த வான்பகை பொறாது எனவரும் சிலப்பதிகார பாடலிலும் சிலப்பதிகாரத்தின் அரும்பத உரையிலும் (11ஆம் காதை, 16 அடி) சொல்லப்படுகிறது. இச்சான்றினையும் இறையனார் அகப்பொருளுரை தரும் கடல்கோள் சான்றினையும் ஆதாரமாகக் கொண்டு மூன்று கடல்கோள் நிகழ்ந்தது உண்மையென்று சி.வை. தாமோதரம் பிள்ளை, மு.இராகவையங்கார், பி.டி. சீனிவாசையங்கார் முதலியோர்கள் ஏற்கின்றனர். இதில் மு. இராகவையங்கார், இறையனார் களவியலுரையில் கூறும் கடல்கோள் தலைச் சங்கத்தில் நிகழ்ந்ததென்று அடியார்க்கு நல்லார் தவறுதலாகக் கூறிவிட்டாரென்பதோடு இறையனார் களவியலுரை கூறுவது இடைச்சங்க கடல்கோளையே என்றும் உரைப்பர்.

கடல்கோள் குறித்த ஆய்வைப் பொருத்தவரை, கிறிஸ்துப் பிறப்பதற்கும் 2387 ஆண்டுகளுக்கு முன் ஒரு கடல்கோள் நடந்ததை இ. டென்னன்டு என்னும் ஆங்கில அறிஞர் (Ceylon (Tennent's Ceylon) என்னும் நூலின் முதல் தொகுதியில் தருவதை வி. கனகசனபப் பிள்ளையும் தமது ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் என்னும் நூலில் (பக்–21) காட்டுகின்றார். குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட

தென்னாடு என்ற நூலிலும் கா. அப்பாதுரை குமரி முனைக்குத் தெற்கில் கடல்கோள் நிகழ்ந்தது உண்மை என்று ஏற்றுக் கொள்கிறார். அதிலும் மூன்று கடல்கோள் நிகழ்ந்தது உண்மை என்றும், அதற்கு சிலப்பதிகாரத்தின் உரையையும் ஆதாரமாகக் காட்டுவார். 'தமிழகம்' என்ற நூலில் ந.சி. கந்தையா பிள்ளையும் ஸ்காட் எலியட் (W. Scot Elliot) என்பவர் தரும் கடல்கோள் குறித்த தகவல்களைத் தொகுத்துத் தருவதோடு, புறம் 9 ஆம் பாடல் தரும் குமரி ஆறும் பற்றுளி ஆறும் கன்னியாகுமரிக்குத் தெற்கே இருந்ததும், அவ்வாற்றினை ஒட்டிய நிலப்பகுதியான 49 நாடுகள் கடல்கொள்ளப்பட்டதும் ஏற்கத் தக்கதே என்றுரைப்பார். இத்தகையதோர் கடல்கோள் நிகழ்ந்திருக்கும் என்பதற்கு சிலப்பதிகாரம், கலித்தொகை, புறநானூறு ஆகிய நூல்களின் குறிப்புகளும் உரையாசிரியர்களிடம் கிடைக்கும் குறிப்புகளும் ஆதாரங்களாக இருக்கின்றன. மேலும் ஒரு சான்றாக 2004 இல் வந்த ஆழிப்பேரலையும் மெய்ப்பிக்கிறது. ஆயினும் இந்நிகழ்வோடு சிவனும், முருகனும் பாண்டியர்களின் சங்கத்தில் வீற்றிருந்தார்கள் என்ற புனைந்துரை இணைக்கப்பட்டிருக்கின்றது.

இதனோடு, மூன்றுச் சங்கமும் மதுரையில் இருந்தது என்பதும், அங்கு புலவர்கள் தம் பாடலைப் பாண்டியன் அவையில் அரங்கேற்றினர் என்பதும், ஏற்புடையதாகப்படவில்லை. சான்றாக, பதிற்றுப்பத்து கடைச்சங்க நூலென்று இறையனார் களவியியல் உரையே குறிப்பிடுகிறது. இது சேரமன்னர்களைப் பற்றிய நூலென்பதும், பாண்டியனை வென்ற சேரனைப் பற்றியும் பாடும் நூலென்பதும் அறிவோம். அவ்வாறிருக்க, எவ்வாறு பாண்டியன் அவையில் அரங்கேற்றம் கண்டிருக்கும்? என்ற அடிப்படையான கேள்வி இந்நூல் பாண்டியன் அவையில் அரங்கேற்றப்பட்டதென்ற கருத்தை வீழ்த்துகிறது. அத்தோடு, இம்முச்சங்கங்களிலும் திருக்குறளைப் பற்றியோ திருவள்ளுவரைப் பற்றியோ குறிக்கப்படவில்லை, பிற்காலத்தில் கடைச்சங்கம் அழிந்ததற்குக் காரணம் திருக்குறள் அரங்கேற்றம் பாண்டிய, அவைப் புலவர்களால் தடைச்செய்யப்பட்டதே என்ற கதை எவ்வாறு ஏற்புடையதன்றோ அவ்வாறே இறையனார் அகப்பொருள் தரும் முச்சங்கங்களின் கால நீட்சியும் ஏற்க முடியாததாக இருக்கிறது. மேலும் சுட்டிக்காட்ட வேண்டியவை தலைச்சங்கத்தில் தலைமையேற்று வீற்றிருந்த புலவர்களாகத் தெரியவருபவர்கள், திரிபுரமெரிந்த விரிசடைக் கடவுள் (சிவன்), குன்றெறிந்த முருகவேளும் ஆகும். கடவுள்கள் வந்து தமிழ் புலவர்கள் அவையில் வீற்றிருந்தது என்பது கற்பனைக் கலந்து அவ்வவையை உயர்த்திப் பிடிக்கும் கவித்துவமுயற்சி மட்டுமே.

மேலும், புராணத்தில் கூறப்படும் தருமிக்குச் சிவன் (இறையனார்) கொங்குதேர் வாழ்க்கைப் பாடலை எழுதித் தந்து நக்கீரரோடு வாது புரிந்தது எப்படி ஒரு கற்பனைக் கலந்த கதையோ, அவ்வாறே இறையனார் அகப்பொருள் உரையும், சங்க காலத்தை வலியுறுத்தவும், அக்கால இலக்கியங்களைச் சுட்டிக்காட்டவும் சொல்லப்பட்ட கதையாகும். இவ்வாறு சங்கத்தை முன்னெடுத்து வந்த கதைகள் நான்காகத் தெரிய வருகின்றன. முதலாவதாக, முச்சங்க வரலாறு பற்றிய கதை. இரண்டாவதாக, வள்ளுவர் குறள் அரங்கேற்ற மறுத்ததால் கடைச்சங்கம் அழிந்தது என்ற கதை. மூன்றாவதாக தருமிக்காகக் கொங்குதேர் வாழ்க்கை என்ற பாடலை சிவன் இயற்றினாரென்ற கதை. நான்காவது, இறையனார் அகப்பொருளையைத் தருமிக்குப் பாடிய அதே சிவனே பாண்டிய மன்னன் விருப்பிற்கு ஏற்ப பாடினார் என்று சொல்லப்பட்டுவரும் கதை. இக்கதைகள் புராணங்களிலும் வாய்மொழியாகவும் முன்னெடுக்கப்பட்டு வந்துள்ளன. இது ஒருபுறமிருக்க, இறையனார் களவியலில் கவனிக்க வேண்டிய மற்றொன்று, இம்முச்சங்க நூல்களிலும் பத்துப்பாட்டுள் ஒரு நூலும் குறிக்கப்படவில்லை. ஆனால் எட்டுத்தொகை என்று சொல்லப்படும் நூல்கள் தனித்தனியாக அதனதன் பெயர்களாலேயே குறிக்கப்பட்டுள்ளன. இதனால் இக்காலத்தில் எட்டுத்தொகை என்ற பெயர் வைப்பு இல்லை என்பது புலப்படுகிறது. ஆனால், பாடல்களின் பாங்கறிந்து நானூறு பாடல்களாகத் தொகுத்துள்ளனர் என்பது மெய்ப்படுகிறது.

இக்கருத்து தொகுத்தோன், தொகுப்பித்தோன் குறிப்போடு ஒத்துப்போவதாகவும் இருக்கிறது. எனவே பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற பெயர்வைப்பு பன்னிரெண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகே நிகழ்ந்திருக்கும். இது ஒரு புறமிருக்க, சங்க இலக்கியங்களாகக் கருதப்பட்டு வரும் நூல்களுள் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் பிற்கால நூல்கள் என்று பெரும்பாலான அறிஞர்கள் குறிப்பிட்டு வந்திருக்கின்றனர். 1930க்குள் இம்முடிவினைத் தெரிவித்தவர் பி.டி. சீனிவாசையங்காராகத் தெரிய வருகிறார். இவரின் கூற்றினைச் சீர்தூக்கிக் காண்பதோடு, திருமுருகாற்றுப்படையின் காலம் குறித்த விசாரணைத் தொடர்ந்து நடைப்பெற்று வந்துள்ளதால் அதனையும் இவ்விடம் நோக்குவோம்.

கி.பி.12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதும் நம்பியாண்டார் நம்பி என்ற சைவர், பன்னிரு திருமுறையைத் தொகுத்தளித்தார் என்பது ஆய்வாளர்கள் காட்டிய முடிவு. அத்திருமுறைகளில் பதினொன்றாம் திருமுறையாகத் திருமுருகாற்றுப் படையைச் சேர்த்துள்ளது, அதன் காலம் குறித்த முடிவுகளை மறுஆய்விற்கு உட்படுத்துகிறது. முருகு, பொருநாறு,

பாணிரண்டு முல்லை... என்ற பழம் பாடல் அதனைச் சங்க இலக்கிய நூல்களோடு வைத்து எண்ணும்போது நம்பியாண்டார் நம்பி பன்னிரு திருமுறைகளில் வைத்து எண்ணப்படுவதால், பன்னிரு திருமுறைகளிலிருந்து எடுத்து பத்துப்பாட்டுக்குள் சேர்க்கப்பட்டதா? அல்லது பத்துப்பாட்டிலிருந்து எடுத்து பன்னிருதிருமுறைகளில் இணைக்கப்பட்டதா? என்ற கேள்விகள் மேலும் இதனை ஆராயத் தூண்டுகின்றன.

சங்க இலக்கிய நூல்களுள் தெய்வத்தைப் பாடிய பாடல்கள் கிடைக்கவில்லை, மாறாக, தெய்வமே வந்து மனிதர்களின் காதலைப் பாடிய பாடல்கள் இருப்பதாகக் கருதப்படுகிறது. அக்காலத்தில் நக்கீரர் என்ற புலவர் வாழ்ந்திருப்பதாலும், அவர் நெடுநல்வாடையும் இன்னும் சில தனி பாடல்களும் பாடியிருப்பதால், இவரே ஐந்து ஆற்றுப்படை நூல்களில் ஒன்றாகக் கருதப்படும் திருமுருகாற்றுப்படையையும் பாடியிருக்கிறார் என்ற கருத்து இந்நூல் சங்க கால நூலென்று எண்ணுவதற்கு காரணமாக இருக்கின்றது. இத்தோடு, இந்நூல் தொல்காப்பியர் கூறும் ஆற்றுப்படை இலக்கணத்திற்குள்ளும் இயங்கவில்லை. மாறாக கி.பி.11ஆம் நூற்றாண்டின் புறப்பொருள் வெண்பாவிலும் இதற்குப் பிறகும் வந்த இலக்கண நூல்களே புலவரை தெய்வத்திடம் ஆற்றுப்படுத்தும் இலக்கணத்தை எடுத்துரைக்கின்றன என்று மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுவார்.

எனவே, இது பன்னிருதிருமுறை தொகுக்கப்படுவதற்கும் சற்று முற்பட்ட நூலா என்றால் கி.பி.6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் காரைக்காலம்மையார் பாடலும் இதில் சேர்த்து வைத்து எண்ணப்படுகிறது. இது ஒரு புறமிருக்க பத்துப்பாட்டினை முழுவதுமாக முதன்முதலாகப் பதிப்பித்த உ.வே. சாமிநாததையருக்குக் கிடைத்தப் பெரும்பாலான ஏடுகளில், திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டுள் சேர்ந்து இருந்ததுபோன்று பெரும்பாலான ஏடுகளில் கிடைக்கப்பெறவில்லையென்று எஸ். வையாபுரிபிள்ளைக் கூறுவார். அவ்வாரெனில், சங்க காலத்திற்குப் பிறகு தோன்றிய நூலை சங்க இலக்கியமாக உ.வே. சாமிநாதையர் பதிப்பித்து விட்டாரா? என்ற கருத்திற்கு இடம் தராமல் முருகு பொருநாரு என்ற பாடல் நிற்கிறது. அவ்வாறெனில் அப்பழம்பாடல்களின் காலம் என்ன?

இறையனார் அகப்பொருளுரையின் காலம் 8ஆம் நூற்றாண்டு என்பது பெரும்பாலான ஆய்வாளர்களின் முடிவாகும். இந்நூலுள் கடைச் சங்க நூல்களாகக் குறிக்கப்படுவனவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு முதலிய நூல்கள் தனித்தனியாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவே யொழிய அவைகளைச் சேர்த்து

எட்டுத்தொகை என்று சொல்லும் முறை இல்லை. எனவே எட்டுத்தொகை என்று பகுத்துரைக்கும் முறையும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை கீழ்க்கணக்கு முதலிய நூல்களை எடுத்துரைக்கும் பழம்பாடலும் இக்காலம் வரையில் தோன்றியிருக்க வாய்ப்பில்லை என்பது ஆய்வாளர் முடிவாக இருக்கிறது.

இறையனார் அகப்பொருளுரையுள் முச்சங்க வரலாற்றை முதன் முதலாக எடுத்துரைக்கும் பத்துப்பாட்டினைப் பற்றிய சிறு குறிப்பும் காணப்படவில்லை. எனவே பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றும் கி.பி. 8ஆம் நூற்றாண்டு வரையில் எழுதப்பட்டிருக்காதா? என்ற கேள்வி அம் முடிவை மறு ஆய்வை எண்ணி நோக்குகிறது. இது ஒருபுறமிருக்க, பேராசிரியரே பத்துப்பாட்டினை உணர்த்தும் 'பாட்டு' என்ற சொல்லாடலை முதன்முதலாகப் பயன்படுத்துகிறார். இவர் கி.பி. 13ஆம் 14ஆம் நூற்றாண்டுகளுக்குள் வாழ்ந்தவராகச் சொல்லப்படுகிறது. பேராசிரியருக்கும் முன்னவராகக் கருதப்படும் பவனந்தியாரின் நன்னூலுக்கு கி.பி.14ஆம் நூற்றாண்டில் உரையெழுதிய மயிலை நாதரே இந்நூலின் 387ஆம் நூற்பாவிற்கு விளக்கமளிக்கையில் 'பத்துப்பாட்டு' என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறார். எனவே, பத்துப்பாட்டு என்று வழங்கும்முறை பேராசிரியருக்கு முன்பும் இளம்பூரணர் இதனைச் சுட்டாததால் இளம்பூரணருக்குப் பின்பும் தோன்றியிருக்கும் என்று டாக்டர் மா. இராசமாணிக்கனார் கூறுவார். அவ்வாறெனில், கி.பி.12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் நம்பியாண்டார் நம்பி பன்னிரு திருமுறைகளுள் பதினொன்றாம் திருமுறையினுள் திருமுருகாற்றுப்படையை வைத்திருப்பதால், திருமுறைகளுள் ஒன்றாகத் தொகுப்பட்ட திருமுருகாற்றுப்படையை எடுத்து பத்துப்பாட்டினுள் ஒன்றாக இணைத்திருக்கிறார்கள் என்பதும் தெரிய வருகிறது. இதனால் பத்துப்பாட்டிற்கு முன்பே பன்னிரு திருமுறை தொகுக்கப்பட்டிருக்கும் உண்மையும் வெளிப்படுகிறது.

பக்தி இலக்கியங்கள் தொகுத்ததன் விளைவுகளே மேற்கணக்கு, கீழ்க்கணக்கு நூல்களைப் பிரித்தறிய தூண்டியிருக்கும் என்று கருதுவது பொருத்தமாகவே படுகிறது. எனவேதான், பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரையில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று சொல்லும் முறைஇல்லாமலிருந்து பின்னர் வரும் உரையாசிரியர்களால் எடுத்துரைக்கப்பட்டு வந்திருக்கிறது. இவ்விடம் எழும் இன்னுமொரு கேள்வி, பன்னிரு திருமுறைகளில் தொகுக்கப்பட்ட ஒரு நூலை, பத்துப்பாட்டினுள் வைப்பதற்கான நியாயம் என்ன என்பதாகும். சைவ

நூல்களின் தொகுப்பு தான் திருமுருகாற்றுப்படையைத் திருமுறைகளில் சேர்க்க காரணமென்றால், பரிபாடலை இதனுள் சேர்த்து வைத்து எண்ணாமைக்குக் காரணமென்ன என்று மா. இராசமாணிக்கனார் கேள்வியெழுப்புவார். திருமுருகாற்றுப்படை முழுக்க முழுக்க சைவ நூல், பரிபாடல் திருமாலையும் பாடும் நூல், எனவேதான் பன்னிரு திருமுறைகளுள் தொகுத்தளிக்கவில்லையென்பது எண்ணிப் பார்க்க தவறியதால் எடுத்த கேள்வியாகும். இது ஒருபுறமிருக்க, சங்க இலக்கிய பாடல் மரபில் ஒட்டாமல் இருக்கும், பரிபாடலும், திருமுருகாற்றுப்படையும், எட்டுத் தொகையுள்ளும் பத்துப்பாட்டினுள்ளும் வைக்கக் காரணம் திருமுருகாற்றுப்படை நக்கீரர் வேறு, புறநானூற்றின் கொங்குதேர் வாழ்க்கை அஞ்சரைத்தும்பி என்ற பாடலின் கதையில் குறிக்கப்படும் நக்கீரர் வேறு என்ற புரிதலில்லாமலிருந்திருக்கும் என்பதேயாகும். பரிபாடலில் வையையும் பாடப்படுவதால் அது சங்கமரபென்று ஏற்கப்பட்டிருக்கிறது. இதனோடு, இத்தொகுக்கும் பணியைச் செய்தவர் சைவம் சார்ந்தவராகவும் இருந்திருக்கிறார். எனவேதான் திருமுறைகளிலிருந்த திருமுருகாற்றுப்படையை எடுத்து பத்துப்பாட்டினுள் முதலாவதாக முன் இணைத்தல் செய்திருக்கிறார்.

இலக்கியங்களின் தொகுப்பு மரபை நோக்கும்பொழுது, நெடுந்தொகை, குறுந்தொகை, கலித்தொகை, புறநானூறு, பதிற்றுப்பத்து முதலிய நூல்கள் கடைச்சங்க காலத்திலேயே தொகுக்கப்பட்டிருக்கின்றன. எனவேதான், தொகுத்தோர், தொகுப்பித்தோர் குறிப்புகள் கிடைக்கின்றன. எனவே, இதுவே தமிழ் இலக்கிய உலகின் முதல் தொகுப்பு நிலை என சுட்டலாம். கடைச்சங்க காலம் முதல் தனித்தனிப் பெயர்களாலேயே வழங்கப்பட்டு வந்த நூல்கள், நம்பியாண்டார் நம்பியை அடுத்து வரும் உரையாசிரியர்களின் காலத்தில்தான், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என்று பிரித்தறிந்து பெயர் வைக்கும் முறை உருவாகியிருக்கிறது. ஆக, கி.பி. 13–14ஆம் நூற்றாண்டுகளுக்கிடையில் தொகுத்து மேற்கணக்கு (பத்துப்பாட்டு, எட்டுத்தொகை) கீழ்க்கணக்கு என்று பெயர் அமைத்து, அதனைக் குறிக்கும் பொருட்டு குறிப்பிற்காக எழுதப்பட்டதுதான் முருகாறு பொருநாறு... என்ற குறிப்பும், நற்றினை நல்ல குறுந்தொகை... என்ற குறிப்பும் நாலடி நாண்மணி... என்ற குறிப்பும் பிற்காலத்தில் பழம் பாடல்களாக மலர்ந்திருக்கின்றன. அக்குறிப்பினை ஏடு பெயர்த்து எழுதியவர்களுள் சிலர் எழுதியும் சிலர் அதனை எழுதாமலும் வந்ததன் விளைவும், திருமுருகாற்றுப் படையைப் பன்னிரு திருமுறைகளிலும், பத்துப்பாட்டு பதிப்பிற்கு முன்பு தனியாகவும் எடுத்துப்

பதிப்பித்ததன் விளையும், உ.வே.சாமிநாதையர் கண்ட பெரும்பாலான பத்துப்பாட்டு ஏடுகளில் திருமுருகாற்றுப்படை இல்லையென்று எஸ். வையாபுரிப்பிள்ளை குறிப்பிடக் காரணங்களாக இருந்திருக்கின்றன. மேற்கண்ட முடிவுகளுக்கு ஆதாரமாக, உ.வே. சாமிநாதையர் தாம் கண்டெடுத்த பத்துப்பாட்டு சுவடிகளுள், ஆறுமுக மங்கலத்துப் பிரதியில் மட்டும் திருமுருகாற்றுப்படை மூலமும் பொரு நராற்றுப் படை மூலமுமிருந்தன என்றுரைப்பதோடு சென்னைச் சருவ கலாசாலையைச் சார்ந்த கையெழுத்துப் புத்தக சாலையில் பாணாற்றுப்படை மூலமும் முல்லைப் பாட்டு மூலமும் கிடைக்கப் பெற்றதோடு பத்துப்பாட்டை உணர்த்தும் அப்பழப்பாடல் குறிக்கப்பட்டிருந்ததைப் பத்துப்பாட்டு முகவுரையில் குறிப்பிட்டுக் காட்டியிருப்பதையும் காண்கிறோம்.

மேற்கண்டவற்றால், மேற்கணக்கு என்று அடையாளப் படுத்தப்பட்ட பத்துப்பாட்டு எட்டுத்தொகையை உணர்த்தும் பழம் பாடலும் பதினெண்கீழ்க்கணக்கை உணர்த்தும் பழம் பாடலும் கி.பி.13 ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.14 ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் தோன்றியிருக்கும் என்பது மெய்ப்படுகிறது.

சைவத் திருமறையில் திருமுருகாற்றுப்படையை வைத்திருப்பதோடு சங்க இலக்கியத்திலும் இந்நூலை வைத்து இதற்கு இரண்டு முக்கியத்துவம் தருகிறோமென்றால், இவ்வாறே திருக்குறளை சங்க இலக்கியத்துள்ளும் வைத்துப் பின்பு கீழ்க்கணக்கு நூல்களிலும் வைத்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யவில்லை. சங்க இலக்கியங்கள் தோன்றிய காலமாகக் கருதப்படும் காலத்திற்குள் திருக்குறளின் காலம் இன்றைக்கு நிலைபெற்றுவிட்டாலும், சங்க கால சமுதாய பழக்கவழக்கங்களிலிருந்து திருக்குறள் வலியுறுத்தும் அறம் விலகி நிற்பதைப் பார்க்கிறோம். இதனால் தான் திருக்குறளின் காலத்தையும் கி.பி.5ஆம் நூற்றாண்டென்று பி.டி. சீனிவாசையங்கார் கருதினார் போல், அவ்வாறு கருத தடை இல்லாமல் இருக்க சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையும் கி.பி.5க்குப் பிறகு கொண்டு வருகின்றார்.

இங்கு கவனிக்கப்படும் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் கடைச்சங்கம் முடிவுற்றபிறகு வந்திருப்பினும் இந்நூற்களையும் சேர்த்து சங்க இலக்கிய நூலென்று அப்பழம்பாட்டு உரைக்கவில்லை. அப்பாடல் சொல்ல வருவதெல்லாம் பத்துப்பாட்டு என்று பத்து நூல்களை வரையறுத்திருப்பதும் எட்டுத்தொகை என்று எட்டு நூல்களை ஒருசேர கட்டியிருப்பதும் தான். பின் எவ்வாறு இவைகள் சங்க நூல்களாகக் கருதப்பட்டனவென்றால்

கடைச்சங்க இலக்கிய நூல்களாக, இறையனார் பொருளுரைத்தரும் எட்டுத்தொகை நூல்கள்தான் இதற்குக் காரணம். இவைகள் எவ்வாறு காரணமெனின் பாட்டு, தொகை, கீழ்க்கணக்கு என்று பிரித்தரிந்து பகுத்தவர்களுக்குப் பின்வந்தவர்கள், இப்பகுப்பையும், இறையனார் பொருளுரைத் தரும் கடைச்சங்க நூல்களையும் ஒருசேர எண்ணிப் பார்த்தவர்கள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் சங்ககால இலக்கியங்கள் என்று புரிந்துகொண்டு எடுத்துரைக்கத் தொடங்கியிருப்பார்கள். எட்டுத்தொகையில் பாடிய புலவர்கள் பத்துப்பாட்டிலும் பாடியிருப்பதால் இவை இரண்டும் சங்ககாலத்திற்கு உரியவை என்று எண்ணியிருக்கிறார்கள். திருக்குறளைக் கீழ்க்கணக்கில் சேர்ப்பதற்கு தடையாக இருந்திருக்கவேண்டியது திருவள்ளுவமாலை பாடல்களாகும். ஆனால் அவர்கள் தொகுத்த காலம் வரையில் திருவள்ளுவமாலை இயற்றப்பட்டிருக்காது. திருவள்ளுவமாலை, பிற்கால நூலென்று அறிஞர்கள் நிறுவியதை இவ்விடம் பொருந்தி வருவதைக் காணலாம். ஆகவே, சங்க காலப் புலவர்களின் பெயரில் திருவள்ளுவமாலைப் பாடியவர்கள் கி.பி.14க்கும் பிற்பட்ட காலத்தவர்களாக இருந்திருக்க வேண்டும்.

காப்பியங்களைப் பொருத்தவரை அக்காலத்திற்குரியனவாக ஆராயப்பட்டவை சிலம்பும் மேகலையுமே ஆகும். ஐம்பெரும் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம் என்று பெயர் வைத்ததெல்லாம் தற்கால தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர்களின் பகுப்பென்பதை அறிவோம். எனவே, இவை சங்க இலக்கியங்களாகக் கருதப்பட்டமைக்குக் காரணங்களாக, இறையனார் அப்பொருளுரையும், கி.பி.14ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாக எண்ணப்படும் பன்னிருபாட்டியலில் வரும் 'பத்துப்பாட்டு' என்ற சொல்லாகும். இது ஒருபுறமிருக்க 1930க்கு முன் பதினெண்கீழ்க்கணக்கையும் சேர்த்து சங்க இலக்கியங்கள் என்று எண்ணியதற்குக் காரணங்களாக, பத்துப்பாட்டையும், எட்டுத்தொகையும், கீழ்க்கணக்கையும் வலியுறுத்தும் பாடல்கள் ஒருபுறம் நின்று செயல்பட்டுள்ளன. வேறொரு புறம் கீழ்க்கணக்கு நூல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் சங்க காலப் புலவர்களின் பெயர்களைத் தாங்கியிருப்பதாகும். சான்றாக, கபிலர், பரணர், நக்கீரர் போன்ற பெயர்களில் வாழ்ந்தவர்கள் இயற்றியிருப்பதே ஆகும். 1930க்குப் பிறகு தான்அவ்வையார் பல்வேறு பட்டவரென்பதும் நக்கீரர் ஒருவரல்ல என்பதும், பாரியோடு நட்புக்கொண்டிருந்த கபிலர் வேறொருவர் என்பதும், இன்னா நாற்பதை இயற்றிய கபிலர் வேறொருவர் என்பதுமான புரிதல்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆக 1930க்கு முற்பட்ட சங்க இலக்கிய வரையறை

புரிதலில் நிகழ்ந்த குழப்பத்தைப் பொருத்தவரை அது அப்பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர் ஒற்றுமை செய்த வேலை என்பதை அறியமுடியும். இப்பெயர் மயக்கத்தில் குழம்பி போகாமல் பாடல்களின் பொருண்மையின் அடிப்படையில் ஆழ்ந்ததால்தான், பி.டி. சீனிவாசையங்காரால், கீழ்க்கணக்கில் பெரும்பாலான நூல்களை சங்க மரபின் தேய்ந்து போனவடிவங்கள் என்று பிற்காலத்திற்குக் கொண்டுவர முடித்திருக்கிறது. பி.டி. சீனிவாசையங்காரின் ஆய்வைப் பொருத்தவரை பண்பாட்டு அடிப்படையில் அவர்முன் வைக்கும் கருத்தை ஒருபுறம் ஏற்றாலும் இலக்கியங்களின் காலக்குறிப்பிடுதல் என்பது வலுவிழந்து போவதாகவே இருந்திருக்கிறது. இத்தகைய மாற்று சிந்தனைகளையெல்லாம் கருத்தில் கொள்ளாமல், இறையனார் அகப்பொருளுரையின் அடிப்படையிலும் சங்கம் பன்னெடுங்காலம் நடந்திருக்குமென்ற புரிதலிலே 1930இல் கா. சுப்பிரமணியப்பிள்ளை தமது இலக்கிய வரலாற்றை எழுதி முடிக்கிறார். இதனால், சுன்னகம் குமாரசுாமிப் புலவர் எழுதிய இலக்கிய வரலாறும், 1922இல் கே.எஸ். சீனிவாசப்பிள்ளை இயற்றிய இலக்கிய வரலாறையும் 1927இல் உ.வே.சா. சங்க இலக்கிய வரையறைக் குறித்துக் கொண்டிருந்த கருத்தையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றின் நம்பிக்கைகளை முன்னெடுத்திருப்பதே முடிவாக தெரிய வருகின்றன.

இனி, இச்சங்ககால ஆய்வுத்துறையிலும், சங்க இலக்கிய வரையறை சிந்தனையிலும் மேற்கொள்ள வேண்டிய ஆய்வுகளாகக் கீழ்வருவனவற்றை சுட்டலாம்.

1930க்கு முன் தமிழக வரலாற்றை ஆங்கிலத்தில் எழுதிய அறிஞர்களை ஆய்வுப்பொருளாகக் கொண்டு அவ்வாய்வு தமிழ் இலக்கிய வரலாற்று கட்டமைப்பில் ஆற்றிய பங்களிப்பைக் குறித்து ஆராயலாம்.

இரண்டாவதாக, 1930யிலிருந்து 1970 வரைக்கும் இப்பொருண்மையை மையமாகக் கொண்டு ஆராய்ந்த ஆய்வாளர்கள், இதில் செழுமையடைந்து பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமே சங்க இலக்கியங்களாக நிறுவப்பட்டதற்கான காரணங்களையும், இச்சிந்தனையை முன் வைத்த அறிஞர்களையும் அவர்களின் அணுகுமுறைகளையும் பிரித்தறியலாம்.

மூன்றாவதாக, 1970 முதல் தற்காலம் வரையிலும் திகழ்ந்து வரும் ஆய்வுப்போக்குகளையும் இன்றைக்குக் கிடைக்கப்பெற்றிருக்கும் பெரும்பாலான தொல்லியல் தரவுகள் தரும் செய்திகளையும் ஆதாரங்களாகக் கொண்டு ஆய்வு நிகழ்த்தலாம்.

இராகவையங்கார், இரா., **முச்சங்கம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 1 – இதழ் 1. 1902.

இராகவையங்கார், இரா., **நல்லிசைப்புலமை மெல்லியலாளர்கள்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 2 – பகுதி 4, 1903.

இராகவையங்கார், இரா., **வெள்ளி வீதியார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், , தொகுதி 2 – பகுதி 5, 1903.

இராகவையங்கார், இரா., **ஔவையார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 2 – பகுதி 6. 1903.

இராகவையங்கார், இரா., **பூதப்பாண்டியன் தேவியார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 2 – பகுதி 7. 1903.

இராகவையங்கார், இரா., ***வஞ்சிமாநகர்,*** சென்னை: தமிழ்ச்சங்க முத்திரா சாலையிற் பதிப்பிக்கப்பெற்றது, 1917.

இராகவையங்கார், மு., **ஆராய்ச்சி,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 2 – பகுதி 4, 1903.

இராகவையங்கார், மு., **வேளீர் வரலாறு,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 7, 1905

இராகவையங்கார், மு., **இடைச்சங்கம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 8, 1905.

இராகவையங்கார், மு., **தலைச்சங்கமும் பாரத காலமும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 9, 1905.

இராகவையங்கார், மு., **வேள் அண்டிரன்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4– பகுதி 5, 1906.

இராகவையங்கார், மு., **நன்னன் வேண்மாண்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4 – பகுதி 7, 1906.

இராகவையங்கார், மு., **நக்கீரனார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 12, 1908.

இராகவையங்கார், மு., **சாஸனமும் தமிழ்ச் சரிதங்களும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 13 – பகுதி 8, 1915.

இராகவையங்கார், மு., **சேரன் செங்குட்டுவன் காலம்,** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 8 – பகுதி 1, 1915–16.

இராகவையங்கார், மு., ***ஆராய்ச்சி தொகுதி,*** சென்னை: ஆர்.ஜி.அச்சகம், (1902 முதல் 1930 வரை இதழ்களில் வந்த கட்டுரைத் தொகுப்பு) 1938.

இராகவையங்கார், மு., ***சேரன் செங்குட்டுவன்,*** சென்னை: தமிழ்ச்சங்க முத்திரா, சாலைப்பதிப்பு, 1916.

இராகவையங்கார், மு., ***சேரன் செங்குட்டுவன்,*** சென்னை: தமிழ்ச்சங்க முத்திரா, சாலைப்பதிப்பு, 1929.

கனசுந்தரம்பிள்ளை, த., **திருவள்ளுவர்,** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 9, ஜூலை இதழ், 1916–17.

கனகசபைப் பிள்ளை, வி., **சோழ சக்கரவர்த்திகள்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 1 – இதழ் 1, 1902.

கனகசபைப்பிள்ளை, வி., ***1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்,*** சென்னை: பூம்புகார் பதிப்பகம், மொழிபெயர்ப்பாளர்: கா. அப்பாதுரை, 2003.

கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ்., **கடைவள்ளலார் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4 – பகுதி 7, 1906.

கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ்., **கடைவள்ளலார் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4 – பகுதி 8, 1906.

கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ்., **கடைவள்ளலார் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4 – பகுதி 9, 1906.

கிருஷ்ணசாமி ஐயங்கார், எஸ்., **கடைவள்ளலார் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 4 – பகுதி 10, 1906.

குமாரசாமிப்புலவர், அ., ***தமிழ்ப்புலவர் சரிதம்,*** கொக்குவில்: சோதியரிபாலனமடம் ச.இ. சிவராமலிங்கையால், சோதிடப் பிரவாயந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது. 1916.

குலாம் காதிறு நாவலன், வா., **தமிழ்ச் சங்கம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 1 – பகுதி 3, 1902

கோபிநாதராவ், து.அ., **தமிழிலக்க வரலாறு,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 10, 1904.

கோபிநாதராவ், து.அ., **பாரதம் பாடிய பெருந்தேவனார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 2, 1908.

கோபிநாதராவ், து.அ., **இறையனாரகப் பொருளுரை,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 2, 1908.

கோபிநாதராவ், து.அ., **பாண்டியர்களும் தமிழ்ப்புலவர்களும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 10, 1908.

கோபால கிருஷ்ணன், ஸி., **தெய்வப்புலமை நக்கீரனார்,** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 5 – பாகம் 1, 1912–13.

கோபால கிருஷ்ணன், ஸி., **பண்டைக்காலத் தமிழ்ப்புலவர்கள் (திருவள்ளுவர்),** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 6 – பாகம் 8, 1913–14.

கோபால கிருஷ்ணன், ஸி., **பண்டைகாலத் தமிழ்ப் புலவர்கள் (பெருந்தேவனார்),** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 7 – பாகம் 2, 1914–15.

சரவணமுத்துப்பிள்ளை, த., **தமிழ்ப்பாஷை** சென்னை: திருவல்லிகேணி ஆபீஸ், விவேக சிந்தாமணி, தொகுதி 1 – இலக்கம் பகுதி 2, 1892.

சரவண முத்துப்பிள்ளை, த., **தமிழ்ப்பாஷை,** சென்னை: திருவல்லிகேணி ஆபீஸ், விவேக சிந்தாமணி, தொகுதி 1 – இலக்கியம் 3, சென்னை, 1892.

சங்கரன், கே.ஜி., **முச்சங்க வரலாறு,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 17 – பகுதி 10, 1919.

சங்கரன், கே,ஜி., **களப்பிரரும் சங்க காலமும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 21 – பகுதி 10, 1923.

சதாசிவம் பிள்ளை, ஜி., **கல்லாடம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 4. 1908.

சதாசிவப்பண்டாரத்தார், டி.வி., **சோழன் கரிகாலன்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 12 – பகுதி 2, 1914.

சதாசிவப் பண்டாரத்தார், டி.வி., **அதியமான் நெடுமானஞ்சி,** செந்தமிழ், தொகுதி 12 – பகுதி 9, 1914.

சதாசிவபண்டாரத்தார், டி.வி., **சோழர் குடி,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 13 – பகுதி 5, 1915.

சபாபதி நாவலர், ***திராவிட பிரகாசிகை,*** சாது அச்சுக்கூடம், சென்னை, 1927.

சாமிநாதையர், உ.வே., **சங்க நூல்கள்,** சென்னை: திருவல்லிகேணி ஆபீஸ், விவேக சிந்தாமணி, தொகுதி 3 – இலக்கம் 6. 1894.

சாமிநாதையர், உ.வே., ***சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்,*** ஆனந்தா அச்சுக்கூடம், சென்னை, 1929

சிவஞான சித்தியார், ஸ்ரீ., **பௌத்தமத விசாரணை,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 3. 1905.

சீனிவாசப்பிள்ளை, கே.எஸ்., ***தமிழ் வரலாறு,*** சென்னை: தமிழ்ச் சங்க முத்திராசாலையிற் பதிப்பிக்கப்பெற்றது. 1922.

சீனிவாசன், பி.டி., **தமிழர் வரலாறு (கி.பி.600 வரை),** சென்னை: தமிழ்மண் பதிப்பகம், மொழியாக்கம், ம. இராமநாதன் க.மு.ச.இ., 2004.

சுப்பிரமணியப்பிள்ளை, கா., **இலக்கிய வரலாறு,** சென்னை: பூம்புகார் பதிப்பகம், 2009.

சுப்பிரமணியன், நா., **நாலடியார் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 19 – பகுதி 4, 1921.

சுப்பிரமண்ய சாஸ்திரி, எஸ்., **தமிழ் நாடுகள்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 13 – பகுதி 11, 1915.

சுப்பிரமண்ய சாஸ்திரி, எஸ்., **தமிழ் நாடுகள்**, மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 13 – பகுதி 12, 1915.

சூரிய நாராயண சாஸ்திரியார், வி.கோ., **முச்சங்கம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 1 – இதழ் 1, 1902.

சூரியநாராயண சாஸ்திரியார், வி.கோ. **தமிழ் மொழிவரலாறு,** வி.சூ. சுவாமிநாதன் வெளியிட்டது, 1927.

சோமசுந்தர பாரதியார், **திருவள்ளுவர்**, மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 24 – பகுதி 9, 1926.

தம்பையா, மு., **முச்சங்க வரலாறு,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 18 – பகுதி 4, 1920.

தம்பையா, மு., **களப்பிரர்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 21 – பகுதி 5, 1923.

தாமோதிரம்பிள்ளை, சி.வை., ***வீரச்சோழியம்,*** பெருந்தேவனார் உரை, சென்னை: சின்னையா நாடார் அச்சுக்கூடம், 1895.

நாராயணையங்கார், **சோழர் தமிழ்ச் சங்கம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 13 – பகுதி 1, 1915.

பாரதியார், எஸ்.எஸ்., **தமிழ் நூல்களும் தமிழகமும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், மொழிபெயர்ப்பு :

திருவாரூர் சோமசுந்தர தேசிகன். தொகுதி 12 – பகுதி 1, 1914.

பாரதியார், எஸ்.எஸ்., **தமிழ் நூல்களும் தமிழகமும்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், மொழிபெயர்ப்பவளர் : திருவாரூர் சோமசுந்தர தேசிகன், தொகுதி 12 – பகுதி 3, 1914.

பெயர் விழையான், **காக்கைப்பாடினியார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 19 – பகுதி 9, 1921.

பெயர் விழையான், **அரிசில்கிழார்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 21 – பகுதி 2, 1923.

பொன்னம்பலம் பிள்ளை, தா., **சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரு பெரும் காப்பியங்கள் பிறப்பிடம் யாது?** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி, 1924.

மணியம், க.வி.ஸீ., **சிலப்பதிகாரக்கால ஆராய்ச்சி,** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 2 – பாகம் 12, 1909 – 10 ஜூலை முதல்.

மறைமலையடிகள், ***மாணிக்கவாசர் வரலாறும் காலமும்,*** டி.எம். அச்சுக்கூடம், 1930.

முத்துத்தம்பி பிள்ளை, ஆ., **தமிழ் நாட்டின் பூர்வநிலை,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 2 – பகுதி 7, 1903.

முத்துத்தம்பி பிள்ளை, ஆ., **செந்தமிழ் சான்றோர் திருப்பெயர்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ்ச் சான்றோர் திருப்பெயர், தொகுதி 2 – பகுதி 1, 1903.

முத்துத்தம்பி பிள்ளை, ஆ., **தமிழிலக்க வரலாறு,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 5. 1905.

முத்துத்தம்பிப்பிள்ளை, ஆ., **பாண்டவர் காலம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 10, 1905.

முத்துத்தம்பிப்பிள்ளை, ஆ., **தமிழே அநேக பாஷைகளுக்கு இலக்கம் கொடுத்தது,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 10, 1904.

வீராசாமி செட்டியார், **விநோதரச மஞ்சரி,** சென்னை: பார்க் டவுன் வெளியீடு, 1921.

வேங்கடராம ஐயங்கார், தி. **வான சாஸ்திரம்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 7, 1905.

வேங்கோபராவ், கோ., **தமிழிலக்க வரலாற்றுச் சர்ச்சை,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 3 – பகுதி 7, 1905.

வெங்கட்ராமய்யர், சி.பி., **சோழன் கரிகாலன்,** சென்னை: மைலாப்பூர் ஆபீஸ், விவேக போதினி, தொகுதி 4 – பாகம் 7, 1911–12.

வேங்கடசாமி நாட்டார், ந.மு., **தமிழ்ப்புலவர் வரலாறு** சென்னை: தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ்ச் செல்வி, தொகுதி–1, பரல்–2, 1923.

வேங்கடசாமி நாட்டார், ந.மு., **கபிலர்,** தஞ்சாவூர்: கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப்பெற்றது, Trichinopoly, Jegam & Co., Dodson Press, 1921.

வைத்தியநாத தேசிகர், அ.க., **கல்லாடர்,** மதுரை: மதுரை தமிழ்ச் சங்கம், செந்தமிழ், தொகுதி 6 – பகுதி 11, 1908.

அப்பாத்துரை, கா., **குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு,** சென்னை: திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1941.

அருணாசலம், மு., **தமிழ் இலக்கிய வரலாறு**, ஒன்பதாம் நூற்றாண்டு பாகம் –1, சென்னை: தி பார்க்கர், தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம், 1975.

ஆசிரியர் குழு, **நற்றிணை,** சென்னை: எஸ். ராஜம், மர்ரே அண்டு கம்பெனி, 1957.

ஆசிரியர் குழு, **பத்துப்பாட்டு,** சென்னை: எஸ். ராஜம் மர்ரே அண்டு கம்பெனி, 1957.

ஆசிரியர் குழு, **பாட்டும் தொகையும்**, சென்னை: எஸ். ராஜம் மர்ரே அண்டு கம்பெனி, 1958.

இராசமாணிக்கனார், மா., **பத்துப்பாட்டு ஆராய்ச்சி**, சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, 1970.

ஈரோடு தமிழன்பன், **தனிப்பாடல் திரட்டு ஓர் ஆய்வு**, சென்னை: பூம்புகார் பதிப்பகம், 1987.

கந்தையா பிள்ளை, ந. சி., **தமிழகம்**, சென்னை: ஒற்றுமை ஆபீஸ், 1934.

சண்முகம், செ. வை., **இலக்கண ஆய்வு**, சிதம்பரம்: மெய்யப்பன் பதிப்பகம், 2004.

சதாசிவப்பண்டாரத்தார், தி.வை., **தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி.250–கி.பி.600),** சிதம்பரம்: அண்ணாமலை பல்கலைக் கழகம், 1955.

சுப்ரமணியன், ச.வே., (ப.ஆ.), **சங்க இலக்கியம் மூலம் முழுவதும்** சென்னை: மணிவாசகர் பதிப்பகம், 2006.

சாமிநாதையர், உ.வே., (ப.ஆ.), **பத்துப்பாட்டு**, சென்னை: நச்சினார்க்கினியர் உரை, த. கோவிந்த ஆசாரியாரது அச்சுக்கூடம் திராவிடரத்நாகர 1889.

சாமிநாதையர், உ.வே., (ப.ஆ.), **புறநானூறு மூலமும் உரையும்,** சென்னை: வெ.நா. ஜூபிலி அச்சுக்கூடம், 1894.

சாமிநாதையர், உ.வே., (ப.ஆ.), **ஐங்குறு நூறும் பழைய உரையும்,** சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடம், 1903.

சாமிநாதையர், உ.வே., (ப.ஆ)., **பதிற்றுப் பத்து**, சென்னை: வைஜயந்தி அச்சுக் கூடம், 1904.

சாமிநாதையர், உ.வே., (ப.ஆ)., **பரிபாடல்,**சென்னை கமர்ஷியல் அச்சுக் கூடம், 1918.

சோமசுந்தர பாத்தியாயரர், **திருக்குறள்** சென்னை: பரிமேலழகர் உரையும் சரவணப் பெருமாளையரின் உரை, பாரதி விலாச அச்சு கூடம், 1847.

சௌரிப்பெருமாளரங்கன் (உரையும் பதிப்பும்) – **குறுந்தொகை** உரை, வித்தியாரத்னாகர அச்சுக் கூடம், வேலூர், 1915.

தாமோதரம் பிள்ளை, சி.வை., **(ப.ஆ.) கலித்தொகை**, நச்சினார்க்கினியார் உரை, Madras : Scottish Press, 1887.

நாராயணசாமி ஐயர், அ., (ப.ஆ.), **நற்றிணை,** சென்னை: சைவ வித்தியா நுபாலனந்திரசாலை அச்சுக்கூடம், 1915.

பெரியண்ணா, ப.ஏ., **திருவள்ளுவர் வாழ்க்கை வரலாறு**, சென்னை, வானதி பதிப்பகம், 1968.

வையாபுரிப்பிள்ளை, எஸ்., தொகுப்பும் பதிப்பும், **சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்)**, சென்னை: பாரி நிலையம், 1940.

வையாபுரிப்பிள்ளை, எஸ்., **இலக்கியச் சிந்தனைகள்,** நூற்றாண்டு நினைவு வெளியீடு–1, வையாபுரிப் பிள்ளை நினைவு மன்றம், 1989.

1. தமிழே அநேக பாஷைகளுக்கு இலக்கம் கொடுத்தது – **ஆ. முத்துதம்பிப்பிள்ளை,** (1904).
2. தமிழலக்க வரலாற்று சர்ச்சை – **கோ. வெங்கோபராவ்,** (1905).
3. அசோகன் காலத்திற்கு முந்தியும் சிலாசாசன முண்டென்பது – **ஆ. முத்துதம்பிப்பிள்ளை,** (1905).
4. இறையனார் அகப்பொருளுரை – **து.அ.கோபிநாதராவ்,** (1908).
5. கல்லாடம் – **ஜி. சதாசிவப்பிள்ளை,** (1908).
6. கல்லாடர் – **அ.க. வைத்தியநாத தேசிகர்,** (1908).
7. களப்பிரரும் சங்க காலமும் – **கே.ஜி. சங்கரன்,** (1923).

## கால ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை மற்றும் துணைமை ஆதாரங்களின் முகப்புப் பக்கங்கள்

1.1.செந்தமிழ் (1903–04)

1.2.விவேகபோதினி (1918–19)

1.3.செந்தமிழ் (1920–21)

1.4.செந்தமிழ் (1924–25)

1.5.செந்தமிழ் (1926–27)

2.1.திருக்குறள் (1812)

2.2.கார் நாற்பது (1875)

2.3.சிலப்பதிகாரம் (1876)

2.4.இறையனார் அகப்பொருள் (1883)

2.5.கலித் தொகை (1887)

2.6.புறநானூறு (1894)

2.7.ஏலாதி (1887)

2.8.நற்றிணை (1915)

2.9.பரிபாடல் (1918)

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

## இருபத்துமூன்றாந்தொகுதி.




**VOL. XXIII.**

ரக்தாக்ஷி—குரோதன வருடம்

**1924-1925.**

பத்திராதிபர்:—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

உ

சிவமயம்.

# மதுரைக்

கண்ணங்கூத்தனார் செய்த

# கார் நாற்பது.



இஃது

உரையுடன்

சண்முகசுந்தரமுதலியா

ரவர்களாற் பரிசோதித்து

திரிசிரபுரம் புத்தகவியாபாரம்

சபாபதிபிள்ளை

யவர்களது

மட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

மிதுனரவி.

சிந்தாத்திரிப்பேட்டைசாமிநாயக்கர்வீதி-௬௧ - நெம்பர்

ஸ்ரீ.

# சிலப்பதிகாரம்.

முதலாவது

## புகார்காண்டம்.

இஃது

சென்னை பிரெஸிடென்ஸி காலேஜ்

தமிழ்ப்பிரதம பண்டிதராகிய

ஈ ஸ்ரீநிவாசராகவாசாரியாரவர்களால்

ஊ - புஷ்பரத செட்டியாரவர்களது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்தில்

பிரசுரஞ் செய்யப்பட்டது.

1876

# இறையனாரகப்பொருள்

இஃது

மதுரைக் கடைச்சங்கத்துக்

கணக்காயனார்மகனார் நக்கீரனார்

கண்டருளிய உரையோடு

யாழ்ப்பாணம்

சி. வை. தாமோதரம்பிள்ளையால்

பலதேசப் பிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து

ஷை யவர்

தி. குமாரசாமிச்செட்டியாரால்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்,

சுபானு ௵ சித்திரை ௴

PRINTED AT THE SCOTTISH PRESS,
BY GRAVES COOKSON AND CO.,

௨

# நல்லந்துவனார்

# கலித்தொகை.

மதுரை-பாரத்துவாசி

## நச்சினார்க்கினியர்

உரையோடும்

யாழ்ப்பாணம்

## சி. வை. தாமோதரம்பிள்ளையால்

பலதேசப்பிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து

தொண்டைமான் புதுக்கோட்டை மகாராசாவின்

மந்திரியும் பிரதிகாவலருமாகிய

## ஸ்ரீமத். அ. சேஷையாசாஸ்திரிகள்

C. S. I.

சர்வஜனோபகார திரவியத்தைக்கொண்டு

பதிப்பிக்கப்பட்டது.

சர்வசித்து௵ ஆடி மீ



MADRAS.

THE SCOTTISH PRESS, BY GRAVES, COOKSON AND CO.

1887.

கணபதி துணை.

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# புறநானூறுமூலமும் உரையும்.

---

இவை

கும்பகோணம் காலெஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

பல பிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து,

சென்னை:

வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன.

---

1894.



விலை—ரூபா ௬.

உ

கடவுள்துணை.

கணிமேதையார்செய்த

# ஏலாதி

மூலமும் உரையும்.




இஃது

ஸ்ரீ - புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1887.

உ

கணபதிதுணை.

எட்டுத்தொகையுளொன்றாகிய

# நற்றிணை


பின்னத்தூர்

அ. நாராயணசாமிஐயர் அவர்கள்


எழுதிய உரையுடன்


சென்னபட்டணம்

சைவவித்தியா நுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

[illegible] வைகாசி.] [விலை ரூபா [illegible].

உ

கணபதி துணை.

எட்டுத்தொகையுள்

ஐந்தாவதாகிய

# பரிபாடல் மூலமும்

## ஆசிரியர் பரிமேலழகரியற்றிய உரையும்.

---

இவை

சென்னை,

பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு

பரிசோதித்து,

தாம் நூதனமாக எழுதிய

பலவகையான குறிப்புக்களுடன்

சென்னை:

கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

விலை ரூபா. 2-8-0.

1918.